# திருப்பூவணப் புராணம் – ஓர் ஆய்வு

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை**
**முனைவர் (Ph.D) பட்டத்திற்காக**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


*ஆய்வாளர்*
*திரு. கி. காளைராசன்*
**(பதிவு எண் – 1212)**

*நெறியாளர்*
*முனைவர். நா. வள்ளி*
**முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி**





**தமிழ்த்துறை**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
**காரைக்குடி 630 003**

**திருவள்ளுவர் ஆண்டு 2040, வைகாசி மாதம்**
**மே 2009**

**கி. காளைராசன்,** பி.எஸ்சி. எம்.ஏ., எம்ஃபில்., பி.ஜி.டிசி.ஏ.,
**முனைவர் பட்ட ஆய்வாளர்,**
**தமிழ்த்துறை,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003**

**நாள் –**

# *ஆய்வாளர் உறுதிமொழி*

**"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப் பெற்ற இந்த ஆய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(கி. காளைராசன்)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

**முனைவர். நா. வள்ளி,** எம்.ஏ.(தமிழ்), பி.எட்., பி.எச்.டி., தொல்லியல் கல்வெட்டியலில் முதுநிலை பட்டயப்படிப்பு,
**முதல்வர்,**
**இராமசாமி தமிழ்க் கல்லூரி**
**காரைக்குடி – 630 003**

**முனைவர் நா. வள்ளி,** எம்.ஏ.(தமிழ்), பி.எட்., பி.எச்.டி., தொல்லியல் கல்வெட்டியலில் முதுநிலை பட்டயப்படிப்பு,
**முதல்வர்,**
**இராமசாமி தமிழ்க் கல்லூரி,**
**காரைக்குடி – 630 003**

**நாள் –**

# *நெறியாளர் சான்றிதழ்*

**"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் திரு.கி.காளைராசன் அவர்கள் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

(முனைவர். நா. வள்ளி)
நெறியாளர்

## நன்றியுரை

**"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் இவ்வாய்வினைச் செய்ய எனக்கு அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் எனது முதற்கண் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செய்ய என்னுள்ளத்தில் ஆதாரங் கொடுத்தருளிய திருப்பூவணநாதரின் திருவடிகளுக்கு என்றும் அடியேன். என்னை ஆன்மிகத்திற்கு நல்வழிப்படுத்திய, மானாமதுரை வேதியாரேந்தல் விலக்கு அருள்மிகு ஸ்ரீபஞ்சமுக பிரத்தியங்கிராதேவி திருக்கோயில் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமிகளுக்கும், 'குமுதம் ஜோதிடம்' வாரஇதழ் ஆசிரியர் அ.மு.இராஜகோபாலன் அவர்களுக்கும், களப்பணியின் தொடர்ச்சியாக நடைபெற்ற ஆடித்தபசு மண்டபத் திருப்பணிக்கு நிதியுதவி அளித்து எனக்கு நல்லாசிகள் வழங்கிய தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியின் முன்னாள் ஆங்கிலத்துறைப் பேராசிரியர் இராம. திண்ணப்பன் ஐயா அவர்களுக்கும் என்றும் அடியேன்.

திருப்பூவணம் தொடர்பான நூல்கள் பல கொடுத்தும் சிறந்த கருத்துக்களை எடுத்துக்கூறியும் இந்த ஆய்விற்கு உதவிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். மு. பாண்டி அவர்களுக்கும் என் நன்றி.

என்னை, தமிழ் படிக்கச் சொல்லி, முனைவர் பட்ட ஆய்விற்குத் தூண்டிய அழகப்பா பல்கலைக்கழக முன்னாள் தமிழ்த்துறைப் பேராசிரியர் மற்றும் தலைவர், அமரர். இரா.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கு எனது நன்றி கலந்த கண்ணீர் அஞ்சலியைக் காணிக்கை யாக்குகிறேன்.

என் ஆய்விற்குத் தேவையான பழமையான நூற்கள் பல கொடுத்து உதவியும், ஆய்வேடு செம்மையுற நெறிப்படுத்தியும், ஆய்வேட்டினைத் திருத்தியமைத்தும், என்னை ஊக்கப்படுத்தியும் வழிகாட்டிய ஆய்வுநெறியாளர், இராமசாமி தமிழ்க்கல்லூரி முதல்வர், முனைவர். நா. வள்ளி அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

புராணங்கள் தொடர்பான ஆய்வேடுகளைக் கொடுத்தும், இந்த ஆய்வேடு பிழைகள் ஏதுமின்றி அமைந்திடவும் உதவிசெய்த அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர். இராசாராம் அவர்களுக்கு எனது நன்றி.

சுமார் 111 வருடங்களுக்கு முன்னர் திருப்பூவணப் புராணம் அடங்கிய ஏடுகள் கிடைப்பது அரிதாக இருந்துள்ளது. அப்பொழுது, மதுரைத் திருஞானசம்பந்த தேசிக சுவாமிகளது ஆதீனத்துக் குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண சுவாமிகளின் விருப்பத்தின்படித் தேவகோட்டை உத்தமன் செட்டியார் வகையறாவினரின் பொருளுதவி பெற்று இ.இராமசுவாமிப்பிள்ளை அவர்களால் திருப்பூவணப் புராணம், புத்தகமாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இவர்களது முயற்சியால்தான் திருப்பூவணப் புராணம் பாதுகாக்கப்பட்டுள்ளது. இம்முன்னோர்களுக்கும் இவர்களது வம்சாவழி யினருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தேவகோட்டை ஸ்ரீசேவுகன் அண்ணாமலைக் கல்லூரி இயற்பியல் துறைப் பேராசிரியர் முனைவர். ரெ. சந்திரமோகன் அவர்கள், இவ்வாய்வு நன்முறையில் முடிவடைய வேண்டுமென என்னைவிட மிகுந்த ஆர்வமாய் இருந்து என்னை ஊக்கப்படுத்தினார். இவருக்கும் இவரது குடும்பத்தினருக்கும் எனது நன்றி.

கணினியில் அச்சேற்றுவது, பிழைத் திருத்தம் செய்வது என ஆரம்பம் முதல் இறுதிவரை எனக்குப் பெரிதும் உதவியாய் இருந்த எனது உறவினர் திரு.க.பழனியப்பன் (உதவிப் பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்) அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருப்பூவணப் புராணம் புத்தகம் கிடைப்பது அரிதாகிவிட்டதால் எங்குதேடியும் கிடைக்கவில்லை. அப்போது மிகவும் பழமையான நிலையிலிருந்த புராணப் புத்தகம் ஒன்றைக் கொடுத்து உதவியும், புராணம் தொடர்பான எனது ஐயப்பாடுகளை நீக்கும் பொருட்டுத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசியபோதெல்லாம் மிகவும் மகிழ்ச்சியுடன் எனது ஐயங்களை அகற்றி எனது சிற்றறிவினில் தெளிவு ஏற்படுத்திய இராமசாமி தமிழ்க்கல்லூரியின் முன்னாள் முதல்வர் உயர்திரு. முருகசாமி ஐயா அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கான சான்றொண் விளக்கங்கள் அடங்கிய புத்தகங்களுக்காகப் பெரிதும் பாடுபட்டு அவற்றைச் சேகரித்து வழங்கிய காஞ்சிபுரம் பெரியவர் கமலக்கண்ணன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வினை நல்லமுறையில் விரைவில் முடிக்கவேண்டும் என என்னை நல்லாற்றுப் படுத்திய அழகப்பா பல்கலைக்கழகப் பேராசிரியர் ஆர் எம். சிதம்பரம் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த ஆய்விற்கு திருப்பூவணநாதருலா (உ.வே.சா.பதிப்பு,1904) புத்தகத்தையும், மன்னர் முத்துவடுகநாதரைப் பற்றிய குறிப்புக்களையும் கொடுத்து உதவிய அழகப்பா பல்கலைக்கழகத் தொழில் வேதியியல் துறையில் ஆய்வுஅலுவலராகப் பணியாற்றிவரும் நண்பர் திரு.இரா.இரவிச்சந்திரன் அவர்களுக்கும், திருவாப்பனூர் தலபுராணம் வாங்கிக் கொடுத்து உதவிய அழகப்பா பல்கலைக்கழகத்தில் இளநிலை உதவியாளராகப் பணியாற்றிவரும் நண்பர் திரு.சு.முத்துக்குமார் அவர்களுக்கும், என்னுடைய ஆய்வு விரைவில் முடிவடைவதற்கு உதவிய சகோதரி சுப.கீதா, (கண்காணிப்பாளர், அழகப்பா பல்லைக்கழகம்) அவர்களுக்கும், இசுலாத்தைபற்றி எடுத்துக் கூறிய நண்பர் நூர்முகம்மது மற்றும் உதுமான்அலி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்வாய்வினை மேற்கொண்ட எனது உழைப்பில் சரிபாதி எனது மனைவி நாகலெட்சுமிக்கும் மற்றையபாதி எனது மகள் நித்தியாவிற்கும் உண்டு.

*'கைம்மாறு வேண்டா கடப்பாடு இவர்மாட்*
*டென்னாற்றுங் கொல்லோ யான்'*

எவ்வித பிரதிபலனையும் எதிர்பாராமல் பல்லாற்றானும் உதவி செய்த மேற்கண்ட அன்பர்களுக்கு இப்பிறப்பிலும், இனிப் பிறக்கும் எப்பிறப்பிலும் நன்றியுடையோனாய் இருப்பேன். மேலே குறிப்பிடப்பட்டோர் அனைவரும், திருப்பூவணநாதரின் திருவருளாலும், மின்னம்மையின் திருவருளாளும், திருப்பூவணத்தில் வதிக்கும் பிற தெய்வங்களின் திருவருளாளும், மற்றும் சவுனக முனிவர்கள், சூதமுனிவர்கள், பொன்னனையாள், கந்தசாமிப் புலவர் இவர்களது திருவருளாலும் இன்மையில் நன்மைகள் யாவும் பெற்றிடவும், மறுமை இருப்பின் இவர்கள் திருப்பூவணத்திற் பிறந்து வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வநிலை பெற்றிடவும் திருப்பூவணநாதரின் திருவடியருளை நினைந்து வேண்டுகிறேன்.

(கி. காளைராசன்)

# பொருளடக்கம்



**குறிப்பு - திருப்பூவணப் புராணப் புத்தகம் தனியே இணைக்கப்பட்டுள்ளது.**

**இயல் – 5. புலவரின் புலமைத் திறன்**

**பின்னிணைப்புகள்**

உ

# திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு

## முன்னுரை

அண்டத்தில் பூமியைத்தவிர வேறெங்கும் உயிரினங்கள் இருப்பதாக இதுநாள் வரை கண்டறியப்படவில்லை. உயிரினங்கள் வாழ்வதாலேயே சூரிய மண்டலத்தில் உள்ள பூமி சிறப்புடையதாகிறது. பூமியில் எண்ணிறந்த உயிரினங்கள் தோன்றி வாழ்ந்து வந்தாலும் அவற்றுள் அறிவினால் மேம்பட்டதாக மனிதஇனம் உள்ளது. மற்றபிற கண்டங்களில் மனிதர்கள் இனக்குழுக்களாக வாழ்ந்த காலத்திலேயே, இமயம் முதல் குமரிவரை உள்ள இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்த மக்கள் திருக்கோயிலைச் சார்ந்து வாழும் பண்பாடு உடையவர்களாய் இருந்துள்ளனர். மனிதர்களின் மனங்களை நல்வழிப்படுத்த இறைவழிபாடு உதவியது. இறைவழிபாட்டிற்குச் சமயங்கள் அடித்தளமாகின்றன. "*கடவுள் ஒருவரே, அவரை ஒவ்வொருவரும்*

*ஒவ்வொருவிதமாக உணர்ந்து வழிபடுகின்றனர். ஒவ்வொரு சமயத்தினரும் வெவ்வேறு கடவுளரை வணங்குகின்றனர். ஒரு சமயத்திலேயே பல தெய்வங்களை வழிபடுகின்றனர். இதனை, 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி'- அதாவது 'மெய்ப்பொருள் ஒன்று, அதற்குச் சான்றோர் பல பெயரிட்டு அழைக்கின்றனர்' என்று ரிக்வேதம் கூறுகிறது. அதனால்தான் 'உலகில் எத்தனை மனிதர்களோ அத்தனை சமயங்கள் உள' என்று ராமகிருட்டிண பரமகம்சர் கூறியுள்ளார்*"[1].

சமயங்கள் பல. அவற்றுள் மிகவும் பழமையான சமயமாகத் திகழ்வது இந்து சமயமே ஆகும். இம்சமயத்தில் சிவன், திருமால் மற்றும் பிரமன் ஆகிய மூன்று பெரும் தெய்வங்கள் உள்ளனர். இவர்களில் பிரமனுக்கு முறையான கோயில்களோ வழிபாடோ இல்லை. இந்தியத் திருநாட்டில் கைலாயம் முதல் கன்னியாகுமரிவரை திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் அதிகமான கோயில்களும் முறையான வழிபாடுகளும் உள்ளன. மிகவும் தொன்மை நாகரீகமான சிந்துசமவெளி நாகரீகத்தில் எருது வழிபாடு இருந்துள்ளது. மேலும் ஏசுகிருத்துவின் காலத்திற்கு முன்பே பாலத்தீனர்கள் எருதுகளை வழிபட்டுள்ளனர் என்றும் அறியப்பட்டுள்ளது. இந்தியாவில் ஆதிகாலந்தொட்டு சிவபெருமானின் வடிவமாக எருது வழிபடப்பட்டு வருகிறது.

இந்தியா முழுமையும் பழங்காலந் தொட்டே சிவலிங்க வழிபாடு இருந்து வந்திருக்கிறது. அவ்வகையில் தமிழ் நாட்டில் உள்ள மிகவும் பழமையான தலங்கள் எல்லாம் ஏதேனும் ஒருவகையில் சிவலிங்க வழிபாட்டுத் தலங்களாகவே உள்ளன.

**தமிழரின் ஆன்ம நெறி**

"*கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்*"
- என்கிறார் ஔவையார்.

*"திருக்கோயில் இல்லாத திருவி லூரும்*
*திருவெண்ணீறணியாத திருவி லூரும்*
*பருக்கோடிப் பத்திமையாற் பாடாத வூரும்*
*பாங்கினொடு பலதளிகள் இல்லாத வூரும்*
*விருப்போடு வெண் சங்கம் ஊதா வூரும்*
*விதானமும் வெண்கொடியும் இல்லா வூரும்*
*அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்*
*அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே "*
- என்று அப்பரடிகள் பாடியுள்ளார்.

தமிழருடைய வாழ்க்கையில் 'திருக்கோயில் வழிபாடும் தெய்வங்கள் வழிபாடும்' முக்கியத்துவம் பெற்றுள்ளன. வரலாற்றிற்கு முற்பட்ட காலத்திலிருந்தே தமிழர், மொழி கலை இலக்கியம் சமயம் முதலிய பல்வேறு துறைகளில் வளர்ந்து புகழுடன் வாழ்ந்து வருகின்றனர்.

இந்திய மொழிகளிலேயே தமிழில் பக்தி இலக்கியங்கள் அதிகமாக உள்ளன. தமிழகத்தில் தான் திருக்கோயில்களும் அதிகம் உள்ளன. தமிழ்மொழியைப் 'பக்தி மொழி' என்று கூறும் அளவிற்கு ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்திப் பாடல்களைப் பாடி இறைவனை வழிபட்டு மக்களை நல்வழிப்படுத்தியுள்ளனர்.

உலக மொழிகளில் எல்லாம் எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே இலக்கணம் இருக்கிறது. தமிழர், சங்கம் வைத்து இறைவன் தலைமையில் தமிழ் ஆராய்ந்துள்ளனர் என்கிறது இறையனார் களவியல் உரை. இதனால் தமிழில் மட்டுமே எழுத்து, சொல் என்ற இவை இரண்டிற்கும் மேலாகப் பொருளிலக்கணமும் உள்ளது. இவ்வாறான சிறப்புகளால், தமிழ் தனிச் செம்மொழியாய் விளங்குகிறது. தமிழ் என்றால் மதுரை என்றும், மதுரை என்றால் சோமசுந்தரப் பெருமான் என்றும், பிரிக்கமுடியாத அளவிற்குத் தமிழ் இலக்கியங்கள் இறைவனையும் மதுரையையும் ஒன்றாக்கிக் கூறுகின்றன. மதுரையின் கிழக்கு எல்லையாக விளங்கிய திருப்பூவணமும் மதுரையைப் போலவே சிறப்புற்றுத் திகழ்கிறது.

## பூவணத்துச் சிறப்புகள்

இறைவன் தலைமையில் சங்கம் வைத்துத் தமிழ் ஆராய்ந்த மதுரையில் சைவத்தையும் மீறிச் சமணர்களின் ஆதிக்கம் ஓங்க ஆரம்பித்தது. மன்னனைச் சைவத்திற்கு மீண்டும் மாற்றவேண்டி மங்கையர்க்கரசியார் அழைப்பை ஏற்றுத் திருஞானசம்பந்தர் மதுரை செல்கிறார். திருஞானசம்பந்தர் மதுரை செல்லும் வழியில் திருப்பூவணத்தின் வைகை ஆற்றின் வடகரையில் அம்பாள் ஆடிமாதம் தவம் செய்த இடம் இருப்பதை அறிந்து அங்கே வருகிறார். அங்கிருந்து தென்கரையில் உள்ள திருப்பூவணநாதர் கோயிலுக்குச் செல்லவேண்டி ஆற்றைக் கடக்க எண்ணும்போது ஆற்றின் மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்துள்ளன. எனவே

திருஞானசம்பந்தப் பெருமான் ஆற்றில் காலை வைக்காமல் 'ஆடித்தபசு மண்டபம்' உள்ள இடத்திலிருந்தபடியே பதிகம்பாடித் திருப்பூவணநாதரை வணங்குகிறார்[2]. இறைவன் நந்தியைச் சாய்ந்திருக்கச் சொல்லி காட்சியருளுகிறார். திருப்பூவணநாதரின் திருவருளைப் பெற்ற பின்னர் திருஞானசம்பந்தர் மதுரை மாநகர் சென்று சமணர்களை வெற்றி கொள்கிறார். மதுரையிலிருந்து வைகை ஆற்றின் தென்கரை வழியே மீண்டும் திருப்பூவணத் திருக்கோயிலுக்கு வந்து திருப்பூவணநாதரைப் பதிகம்பாடி வணங்கி வழிபட்டுள்ளார் [3].

இதனால் மதுரையில் சைவத்தையும் தமிழையும் தழைக்கச் செய்த பெருமையில் திருப்பூவணநாதருக்குப் பெரும்பங்குண்டு.

சிவலிங்கம் தோன்றிய முறைகொண்டு அதனை ஐந்தாக வகைப்படுத்த இயலும். தானே பூமியில் தோன்றிய சுயம்புலிங்கங்கள் முதலாவது வகையாகும். பிற தெய்வங்கள் வானவர் முதலானவர் பிரதிட்டை செய்து வணங்கி வழிபட்ட சிவலிங்கங்கள் இரண்டாவது வகையாகும். மன்னர்கள், சமயத்தலைவர்கள் ஆகியோர் பிரதிட்டை செய்து வணங்கி வழிபட்ட சிவலிங்கங்கள் மூன்றாவது வகையாகும். சாதாரண மக்கள் சமூகமாகச் சேர்ந்து வாழ்ந்திடும் நோக்கத்துடன் பிரதிட்டை செய்து வழிபட்ட சிவலிங்கங்கள் நான்காவது வகையாகும். சீவசமாதி அல்லது உடல் அடக்கம் செய்யப் பெற்ற இடத்தில் பிரதிட்டை செய்து வணங்கப்பெற்ற சிவலிங்கங்கள் ஐந்தாவது வகையாகும்.

இச்சிறப்புகள் அனைத்தையும் கொண்டது திருப்பூவணம். இவற்றுள் சுயம்புவாகத் தோன்றிய திருப்பூவணநாதரைத் தேவரும் மனிதரும் வணங்கி இறையருள் பெற்றுள்ளனர். தாழம்பூவும் பொய்சொன்ன பாவம் நீங்க வழிபட்டு உய்வடைந்ததாகப் பூவணப் புராணம் கூறுகிறது.

இங்கு *"சராசரமே*[4] சிவலிங்க வடிவமாக எழுந்தருளியுள்ளது என விண்ணில் உள்ள நாள்களும் கோள்களும் நினைந்து திரிகின்றன[5] என்றும், இந்திரன் மற்றும் கதிரவன் முதலான பலகடவுளர் பூசைகள் செய்து வேண்டிய வரங்கள் அடைந்துள்ளனர் என்றும் இத்திருத்தலத்தின் பெருமைகளைப் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம் கூறுகிறது[6].

திருஞானசம்பந்தர் வழியில் அப்பரும், சுந்தரரும், மாணிக்கவாசகரும், கரூர்த் தேவரும், அருணகிரிநாதரும் திருப்பூவணம் வந்து இறைவனைப் பாடிப் பணிந்துள்ளனர்.

இவ்வருளாளர்களைப் போன்றே வடமொழி நூலோர் பலரும் திருப்பூவணம் வந்து திருப்பூவணநாதரை வணங்கிச் சென்று, இத்தலத்தின் பெருமைகளைப் பதினெண் புராணங்களில் ஒன்றான பிரமகைவர்த்த புராணத்தில் சிறப்பித்துக் கூறியுள்ளனர். "*பிரமகைவர்த்தம், சூரியனது புராணமாகும்*"[7]. "*பிரமகைவர்த்தம் பன்னீராயிரங் கிரந்தமுடியது*"[8].

உலக இலக்கியங்களில் மிகவும் தொன்மையானதாகக் கருதப் பெறுவன இந்தியாவின் நான்கு வேதங்கள் ஆகும். இவற்றிற்கு அடுத்தாற் போல் மிகவும் தொன்மையான இலக்கியங்களாகக் கருதப்படுவன பதினெண்புராணங்கள் ஆகும். சிவபெருமான் சுயம்புலிங்கமாகத் தோன்றி அருள் வழங்கிய காரணத்தையும், வரலாற்றையும், தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி இவற்றின் பெருமைகளையும், நைமிசாரண்யத்தில்[9] முனிவர்கள் ஒன்றுகூடி ஆராய்ந்து பதினெண்புராணங்களாக வகைப்படுத்திக் கூறியுள்ளனர். இத் தொன்மையான இலக்கியங்கள் கடவுளரின் பெருமைகளையும், அக்கடவுளர் எழுந்தருளும் தலங்களின் பெருமைகளையும், அங்குள்ள தீர்த்தங்கள் மற்றும் விருட்சங்களின் சிறப்புகளையும் மக்களுக்கு எடுத்துக்கூறி மக்களை அத்திருத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு நற்பலனை அடையுமாறு ஆற்றுப்படுத்துவனவாக அமைந்திருக்கின்றன.

## ஆய்வுத் தலைப்பு

தமிழில் மொழிபெயர்த்துக் கந்தசாமிப் புலவர் பாடியுள்ள திருப்பூவணப் புராணத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை ஆய்ந்தறிந்து எடுத்தியம்பும் வகையில், **"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்ற தலைப்பில் இந்த ஆய்வு செய்யப் பெற்றுள்ளது.

## ஆய்வுப் பொருள்

திருப்பூவண நாதரின் தோற்றம், சிறப்பு, பெருமை இவற்றை எடுத்துக் கூறுமுகமாக திருப்பூவணப் புராணத்தின் 1437 (ஆயிரத்து நானூற்று முப்பத்தேழு) செய்யுட்களைக் கொண்ட திருப்பூவணப் புராணம் என்ற நூல், மதுரை இ.இராமசுவாமிப் பிள்ளை என்று அழைக்கப்பட்ட ஞானசம்பந்தப் பிள்ளையால் சென்னை இந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்தில் மன்மதவருடம் (1896ம் ஆண்டு) மாசிமாதம் வெளியிடப்பெற்றுள்ளது. இந்நூல் இப்போது கிடைப்பது அரிதாகி விட்டது. இதைக் கருத்திற்கொண்டு, புராணப்பாடல்களுடன் அவற்றிற்கான உரைச்சுருக்கம் எழுதி இணைத்துத் **'திருப்பூவணப் புராணம்'** [10] என்ற தலைப்பில் நூலாக்கம் செய்து ஆய்வாளரால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலே ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளது.

## ஆய்வு நோக்கம்

(1) கி.பி. 1621ஆம் ஆண்டு பாடப்பெற்ற இத்திருப்பூவணப் புராணத்தை இதுகாறும் யாரும் ஆய்வு செய்யாத காரணத்தைக் கருத்திற் கொண்டும், திருப்பூவணநாதர் மற்றும் மின்னம்மையார் விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் அருளும் தன்மைகளையும் புராணக் கதைகளின் வழிநின்று வெளிப்படுத்தும் நோக்குடனும், **"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ளப் பெற்றது.

(2) திருப்பூவணத் தலத்திற்கான திருமுறை பாடல்களுடனும், திருவிளையாடற் புராணத்துடனும், அருணகிரிநாதரின் பாடல்களுடனும் ஒப்பிட்டு வெளிக்காட்டுதலும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

(3) *"பன்னு மிப்புரணந் தன்னைப் படிக்குநர் தம்மை யன்பான்*
*மன்னிய வாசனத்தன் வைத்தருச்சனை செய்வோர்க்குப்*
*பொன் னுலகேத்துந் தொல்சீர்ப் பூவணத்தரனைப் பூசை*
*தன்னை நன்கியற்றினோர் கடாம் பெறும் பலன்களுண்டாம்" (பாடல் 1433)*
*"தேட ரும்பலன்க ணல்குந் தென் றிருப்பூவணத்து*
*நீடுசேர் புராணந் தன்னை நிகழ்த்திடுஞ் செவிநிறைத்து*
*நாடிய பொருள்கள் யாவு நண்ணலானவிற்றுஞ் செஞ் சொற்*
*பாடலை வருந்தியேனும் பரிவுடன் கேட்கப் பண்ணே" (பாடல் 1434)*

*புவனமெங்கணுஞ் சீர் போற்றும் பூவண மான்மியத்தை*
*நவிலுறச் செவிக்கு நாளு நல்விருந் தளிக்குநர்க்குச்*
*சிவபிரன ருளினாலே தேடு பேருவகை கூடுஞ்*
*சவுநக முநிவ வீது சத்தியஞ் சத்தியங்காண்" (பாடல்1435)*

என்று திருப்பூவணப் புராணத்தினைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்களை முனிவர்கள் சத்தியம் கூறி எடுத்தியம்பி உள்ளனர். மக்கள் புராணத்தைப் படிக்கவும் கேட்கவும் செய்யவேண்டும். இதனால், முனிவர்களால் அருளப்பட்ட பலன்களை அடையவேண்டும் என்பதும் இந்த ஆய்வின் நோக்கமாகும்.

(4) 'திருப்பூவணப் புராணம்' புத்தகம் கிடைப்பதும் அரிதாகிவிட்ட நிலையில், இவ்வரிய புராணத்தைக் காக்கும் இந்த ஆய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுச் சிக்கல்**

திருப்பூவணம் பற்றிய தொன்மைச் சான்றாதாரங்களாக இலக்கியம் தவிர வேறு ஆதாரங்கள் ஏதும் முழுமையாகக் கிடைக்கப்பெறவில்லை. குறிப்பாகக் கோயிலின் தொன்மையான கல்வெட்டுக்கள் பலவும் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. கோயிலமைப்பு, சிற்பங்கள், செப்புத் திருமேனிகள், திருமலை நாயக்கரோடு தொடர்புடைய வரலாற்றுச் செய்திகள், தொல்பொருள் ஆய்வாளர்களிடம் உள்ள திருப்பூவணத்துச் செப்பேடுகள் ஆகியன அனைத்தும் 17ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டனவாக உள்ளன. திருஞானசம்பந்தர் மற்றும் அப்பர் பாடல்கள் 7ஆம் நூறாண்டைச் சேர்ந்தவை. எனவே மிகவும் பழமையான திருப்பூவணப் புராணத்தில் கூறப்பட்டுள்ள திருப்பூவணநாதரின் வரலாற்றையும் சிறப்பையும் வேறுபிற சான்றாதாரங்களுடன் ஒப்புநோக்கி எடுத்துக் காட்டுவதில் ஆய்வுச் சிக்கல்கள் உள்ளன. மேலும் கந்தசாமிப் புலவர் எழுதிய திருப்பூவணநாதர் வண்ணம், திருப்பூவணம் தலவகுப்பு மற்றும் திருப்பூவணம் மூர்த்தி வகுப்பு ஆகிய மூன்று நூல்களும் கிடைக்காத காரணத்தினால் புராணக் கூறுகளை சமகால இலக்கியங்களுடன் ஒப்பிட்டுக்காண்பதில் ஆய்வுச் சிக்கல்கள் உள்ளன.

## ஆய்வின் கருதுகோள்

பதினெண் புராணங்கள் உலகின் பழமையான இலக்கியங்களாகும். அவற்றில் ஒன்றான பிரமகைவர்த்த புராணத்தில் கூறப்பட்டுள்ள திருப்பூவணச் சருக்கங்களில் அடங்கியுள்ள கதைகள் மிகவும் பழமையானவையாகவும், கருத்துக்கள் யாவும் அன்றைய மக்களின் சிந்தனைகளையும் சிந்தாந்தங்களையும் உள்ளடக்கியனவாகவும் இருக்கும். எனவே திருப்பூவணப் புராணம், புராணகாலத் திருப்பூவணத்தையும், அன்றைய தமிழரின் நாகரீகத்தையும், இந்திய மக்களின் பக்தி நெறியையும், மக்களின் பண்பாட்டையும், மதவழிபாட்டையும் நன்கு விளக்கும் என்று கருதப்படுகிறது. இக்கருத்தே இந்த ஆய்வின் கருதுகோளாகும்.

'**கூறியது கூறாமை வேண்டும்**' எனத் தொல்காப்பியர், நூலுக்கு இலக்கணம் கூறியுள்ளார்[11]. சிறப்புக் கருதி ஒருபொருளைக் கூறும் சொற்களே திருப்பூவணப் புராணத்திலும், திருப்பூவணத் திருமுறைகளிலும் ஒன்றுக்கும் மேற்பட்ட இடங்களில் பாடப் பெற்றுள்ளன. அவற்றைப் போன்றே இவ்வாய்விலும் ஒருசில சொல்லும் பொருளும் தேவையான இடங்களில் மீண்டும் கூறப்பெற்றுள்ளன.

## முன்னைய ஆய்வுகள்

புராணங்கள் பற்றிய பல ஆய்வுகள் பல்கலைக் கழகங்களில் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. அவற்றுள், "தமிழில் தலபுராணங்கள்"[12], "திருவிளையாடற்புராணம் ஓர்ஆய்வு", "மதுரைத் தலபுராணம்-ஓர் ஆய்வு", மயூரகிரிப் புராணம்- ஓர் ஆய்வு"[13], தணிகைப் புராணம்-ஓர் ஆய்வு"[14], கோவிலூர் புராணம் - ஓர் ஆய்வு"[15], "மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் படைப்புகள் சிறப்பாகப் புராணங்கள் - ஒரு மதிப்பீடு"[16] எனபன குறிப்பிடத்தக்கன.

திருப்பூவணத் திருக்கோயிலைப்பற்றியும் கோயில் நிருவாகம் பற்றியும் திருவாளர்கள் கா.காளிதாசன் மற்றும் கா.கணநாதன்[17] ஆகியோர் ஆய்வுகள் செய்துள்ளனர். முனைவர். மு.பாண்டி அவர்கள் திருப்பூவண நாட்டுப்புறக் கதைகளைத் தனது ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக ஆய்வு செய்துள்ளார். இவர்கள் இலக்கியங்களின் அடிப்படையில் திருப்பூவணத்தை ஆய்வு செய்யவில்லை. எனவே இவ்வாய்வாளர், தனது ஆய்வியல் நிறைஞர்(M.Phil.) பட்டத்திற்காக,

இத்திருத்தலத்தை இலக்கியங்களின் வழிநின்று "திருப்பூவணத் திருத்தலமும் திருப்பூவணநாதர் சுவாமி பெருமையும்" என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளார்[18]. இந்த ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு **"திருப்பூவணக் காசி"** என்ற பெயரில் நூலாக ஆய்வாளரால் வெளியிடப் பெற்றுள்ளது. இவை இத்திருத் தலத்தைப் பற்றிய முன்னைய ஆய்வுகளாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

திருப்பூவணம், புராணம் பற்றி விளக்கும் தன்மையில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive approach), திருக்கோயிலுக்கும் சமூகத்திற்குமான தொடர்புகளைக் கண்டறியும் வகையில் சமுதாயவியல் (Sociological approach) அணுகுமுறையும் இவ்வாய்விற்குரிய அணுகுமுறையாக அமைகின்றன.

**முதல் ஆய்வு**

கி.பி.1621ஆம் ஆண்டு, 1437 விருத்தப் பாடல்களால் பாடப்பெற்ற திருப்பூவணப் புராணத்தைக் கி.பி.1896ஆம் ஆண்டு ஏட்டுச் சுவடியிலிருந்து புத்தகமாக அச்சிட்டுள்ளனர். பாடல்களைப் பதம்பிரித்து உரை செய்யவில்லை. எனவே இப்பாடல்கள் அனைத்தையும் இயன்றவரை வாசித்தும், பொருளுணர்ந்து ஆராய்ந்தும் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. திருப்பூவணநாதரைச் சூரியன் வழிபாடு செய்வதைக் குறிப்பிடும் 'சூரியன் பூசனைச் சருக்கம்' முதலான சருக்கங்களிலே இறை வழிபாட்டில் பயன்படுத்தப்படும் குறியீட்டுச் சொற்களும் கலைச்சொற்களும் (Technical Words) அதிகமான எண்ணிக்கையில் **வடமொழியில்** உள்ளன. **இவ்வடமொழிச் சொற்கள்** இயன்றவரையில் **தமிழாக்கம்** செய்யப் பெற்றுள்ளன. ஆய்வேட்டின் பக்கங்களின் அளவு மிகாமல் இருக்கும் வகையில் திருப்பூவணப் புராணத்தில் உள்ள 1437 பாடல்களில் குறிப்பிட்டத்தக்க பாடல்கள் மட்டுமே இந்த ஆய்வேட்டில் மேற்கோள்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன.

**சான்றாதாரங்கள்**

**முதன்மைச் சான்றாதாரங்கள்-** கந்தசாமிப் புலவரால் தமிழில் மொழிபெயர்த்து எழுதப் பெற்ற 'திருப்பூவணப்புராணம்' என்ற நூலே முதன்மைச் சான்றாதாரமாகும்.

**துணைமைச் சான்றாதாரங்கள் -** இத்திருத்தலத்தைப் பற்றிய மூவர் தேவாரம், மாணிக்கவாசகர் பாடல்கள், கருவூர்த் தேவர் பாடல்கள், அருணகிரிநாதர் பாடல்களும், திருவிளையாடற் புராணமும், கந்தசாமிப்புலவர் எழுதிய திருப்பூவணநாதர் உலா, திருவாப்பனூர் புராணம், இவ்வாய்வாளரால் எழுதப் பெற்ற 'திருப்பூவணக் காசி' என்ற நூலும் மற்றும் இக்கோயிலைப் பற்றிய பிறநூல்களும், பிற செய்திகளும், பிறதலபுராணங்களும் ஆய்வுக் கட்டுரைகளும், இந்துமதம் மற்றும் வழிபாடுகள் தொடர்பான கட்டுரைகளும், நூல்களும் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**விடுபட்டுள்ள சான்றாதாரங்கள்** - திருப்பூவணப் புராணத்துடன் தொடர்புடைய, சிறந்த துணைமைச் சான்றாதாரங்களாகக் கருதத்தக்க கந்தசாமிப் புலவர் எழுதிய திருப்பூவணநாதர் வண்ணம், மூர்த்தி வகுப்பு, தலவகுப்பு ஆகிய நூல்கள் கிடைக்கப் பெறவில்லை. ஏட்டுப் பிரதிகளிலிருந்து இந்நூல்கள் அச்சிடப் பெற்ற விபரங்களும் ஆய்வாளரால் அறியப் பெறவில்லை. இந்நூல்கள் அனைத்தும் கந்தசாமிப்புலவரால் எழுதப் பெற்றுள்ளதால், இவைகளே சிறந்த துணைமைச் சான்றாதாரங்கள் ஆகும். இந்நூல்கள் ஏடுகள் வடிவிலோ நூல்கள் வடிவிலோ கிடைக்காமையால் இவ்வாய்வில் எடுத்தாளப் பெறவில்லை.

**இயல் பகுப்பு**

கோயிலின் வரலாற்றையும், இறைவன் இறைவி இவர்களின் அருமை பெருமைகளையும், தலம் தீர்த்தம் விருட்சம் மூர்த்தி இவை மக்களுக்கு வழங்கும் நன்மைகளையும் புராணத்தின் வழி எடுத்துக்கூறும் இந்த ஆய்வானது முன்னுரை முடிவுரையிடையே ஐந்து இயல்களைக்கொண்டமைந்துள்ளது. அவ்வைந்து இயல்களாவன,

1) தலபுராணங்கள் அறிமுகம்
2) திருப்பூவணப் புராணமும் நூலாசிரியரின் வரலாறும்
3) தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி

4) திருப்பூவணப் புராணமும் பூவண இலக்கியங்களும்

5) புலவரின் புலமைத் திறன்

**இயல்- 1 : தல புராணங்கள் அறிமுகம்**

தமிழ் மொழியில் 382 தலபுராணங்கள் பாடப்பெற்றுள்ளன[19]. 484 தலபுராணங்கள் உரைநடை நூல்களாக உள்ளன[20]. தலபுராணங்களின் நோக்கம், தோற்றம், கதைகூறும் முறை ஆகியவைபற்றியும், பிறநாடுகளில் பிறமொழிகளில் பிறசமயங்களில் உள்ள தலபுராணங்கள் பற்றியும், சிவத்தலப் புராணங்கள் வைணவத்தலப் புராணங்கள் பற்றியும், பாண்டியநாட்டுத் திருத்தலங்கள் மீது பாடப்பெற்றுள்ள தமிழ் மற்றும் வடமொழித்தலபுராணங்கள் பற்றியும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

மற்றைய தலபுராணங்களுடன் திருப்பூவணப் புராணம் கொண்டுள்ள ஒற்றுமை வேற்றுமைகளும் இவ்வியலில் சுட்டப் பெற்றுள்ளன.

**இயல் - 2 : திருப்பூவணப் புராணமும் நூலாசிரியரின் வரலாறும்**

பிரமகைவர்த்த புராணத்தில் எழுபதாம் அத்தியாயம் துவங்கி எண்பத்துநான்காம் அத்தியாயம் முடியவுள்ள பதினைந்து அத்தியாயங்களில் கூறப்பெற்றுள்ள கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துக் கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணம் பாடியுள்ளார். இந்நூலில் 1.சூரியன் பூசனைச் சருக்கம், 2.திரணாசனன் முத்தி பெற்ற சருக்கம், 3.மணிகன்னிகைச் சருக்கம், 4.துன்மனன் சருக்கம், 5.தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கம், 6.உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கம், 7.பாற்கரபுரச் சருக்கம், 8.சர்வ பாவ விமோசனச் சருக்கம், 9.பிரம சாப விமோசனச் சருக்கம், 10.இலக்குமி சாபவிமோசனச் சருக்கம், 11.உமாதேவி திருஅவதாரச் சருக்கம், 12.திருக்கலியாணச் சருக்கம், 13.தக்கன் வேள்வியழித்த சருக்கம், 14.உமைவரு சருக்கம், 15.சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம், 16.சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம், 17.தீர்த்தச் சருக்கம், 18.நளன் கலிமோசனச் சருக்கம், 19.திருவிழாச் சருக்கம், 20.சிதம்பர உபதேசச் சருக்கம் ஆகிய இருபது சருக்கங்களில் புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

இந்த இருபது சருக்கங்களில் கூறப் பெற்றுள்ள இறைவன் இறைவியின் சிறப்புகளும், வழிபட்டோர் அடைந்த பயன்களும், வழிபட்ட முறைகளும், வழிபடவேண்டிய முறைகளும் இப்பகுதியில் விரிவாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

திருப்பூவணப் புராணத்தைத் தமிழில் எழுதிய கந்தசாமிப் புலவரின் ஊர், வாழ்ந்த காலம் ஆகியனவும் இப்பகுதியில் கண்டறியப்பட்டுள்ளன.

## இயல் - 3 : தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி

திருப்பூவணப் புராணத்தில் காப்பு, நூற்பயன், கடவுள் வாழ்த்து, அவையடக்கம், நைமிசாரணியச் சருக்கம், சவுநகர் சூதரை வினவிய சருக்கம், திருக்கைலாயச் சருக்கம், ஆற்றுச் சருக்கம், திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம், பாயிரம் முடிய உள்ள தலைப்புகளின் பாடல்களில் சொல்லப்பெற்றுள்ள செய்திகள் இவ்வியலில் முதலில் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

திருப்பூவணத் திருத்தலம் வைகை ஆற்றின்கரையில் வயலும் வயல் சார்ந்த இடத்திலும் அமையப் பெற்றுள்ளதால் இயற்கையாகவே பல்வேறு தீர்த்தங்கள் அமையப் பெற்றுள்ளன. நீர்வளமும் நிலவளமும் பெற்றதனால் இயற்கையாகவே பொழில் திகழும் பூவணமாக விளங்குகிறது. இந்த இயலில் தலம், தீர்த்தம், மூர்த்தி, விருட்சம் ஆகியவற்றின் சிறப்புகள் இடம் பெற்றுள்ளன.

### தலம்

மதுரைக்குத் தென்கிழக்கே சுமார் 18 கி.மீ. தூரத்தில் உள்ள திருப்பூவணத்தின் பெயர்க்காரணம், இத்தலப்பெயரில் உள்ள மற்ற ஊர்கள் இவ்வியலில் எடுத்துரைக்கப் பெறுகின்றன. திருப்பூவணத்தின் சிறப்புகள் திருப்பூவணப் புராணத்தின் வழிநின்று ஆராயப் பெறுகின்றன.

### தீர்த்தங்கள்

திருப்பூவணப் புராணத்தில், பதினேழாவதாகத் தீர்த்தச் சருக்கம் பாடப்பெற்றுள்ளது. இச்சருக்கத்தில் மொத்தம் பதினெட்டுப் பாடல்கள் உள்ளன. இதில் பாவநாசம் என்ற வைகையாறு, மணிகர்ணிகை அல்லது மணிகுண்டம், அல்லது

தேவிகுண்டம், பிரமதீர்த்தம், இலக்குமி தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், நளதீர்த்தம், விட்ணு தீர்த்தம், வசிட்ட தீர்த்தம், சந்திர தீர்த்தம் போன்ற தீர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. மற்றபிற சருக்கங்களிலும் தீர்த்தங்கள் தோற்றுவிக்கப்பட்ட வரலாறு அவற்றின் சிறப்புகள் பாடப்பெற்றுள்ளன. இச் செய்திகள் ஆய்ந்து விளக்கப் பெறுகின்றன.

**மூர்த்தி**

உமா தேவியார் பாரிசாதத் தாரு ஒன்றை வளர்த்து அதன் நிழலிலே தவம் செய்யும் போது, அந்த மரத்தினடியில் சிவலிங்கம் ஒன்று தோன்றியது. அதனை உமாதேவி பூசித்து வழிபட்டார். இதுவே சிவபெருமான், திருப்பூவணத்தில் திருப்பூவணநாதர் சுயம்பு இலிங்கமாய்த் தோன்றிய வரலாறு ஆகும். திருப்பூவணநாதர், சௌந்தரநாயகி மற்றும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அனைத்துத் தெய்வங்களின் சிறப்புகள் விரிவாக ஆராயப் பெற்றுள்ளன.

**விருட்சம்**

உமையம்மை வளர்த்த மந்தார (பாரிசாத) மரத்திற்குக் கீழே ஈசன் சுயம்புலிங்கமாய்க் காட்சியளித்ததாகத் திருப்பூவணத் தலபுராணம் கூறுகிறது. இதனால் இத்தலவிருட்சம் "*பாரிசாத மரம்*" என்று கூறப்படுகிறது. கோயிலில் பாரிசாதமரம் இப்போது இல்லை. தற்போது கோயிலின் இராசகோபுரத்திற்கு அருகே பலாமரம் ஒன்று உள்ளது (படம்-2). திருப்பூவண நாதர் உலாவில் இறைவன் பலாப்பழமாக உருவகஞ் செய்யப் பட்டுள்ளார். இதனால் இத்தலத்தின் விருட்சம் "*பலாமரம்*" என்றும் கூறுவர். தலம், தீர்த்தம், மூர்த்தி, விருட்சம் போன்றவற்றை விளக்கிக் காண்பதாக இவ்வியல் அமைகிறது.

## இயல் - 4 : பூவணப் புராணமும் பூவண இலக்கியங்களும்

திருப்பூவணம் தொடர்பாகத் திருப்பூவணப்புராணம், திருப்பூவணநாதர்உலா மற்றும் மூவர் தேவாரம், மாணிக்கவாசகர் பாடல்கள், கருவூர்த்தேவர் பாடல்கள், அருணகிரி நாதர் பாடல்கள், திருவிளையாடற் புராணப் பாடல்கள் கிடைக்கப்

பெற்றுள்ளன. கிடைக்கப் பெற்றுள்ள இலக்கியங்களைத் திருப்பூவணப் புராணத்துடன் ஒப்புமை செய்து கூறுவதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் - 5 : புலவரின் புலமைத் திறன்**

கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணத்தை எழுதிய நோக்கம், எழுதிய ஆண்டு, இவர் இயற்றிய வேறுபிற நூல்கள், இவர்காலத்தில் அந்நூல்களுக்கு இருந்த சிறப்புக்கள், அந்நூல்களின் பாயிரச் செய்யுள்கள் தரும் சான்றுகள் ஆகியன இவ்வியலில் ஆராயப் பெற்றுள்ளன. கந்தசாமிப் புலவரின் **வடமொழிப் புலமையும்**, **தமிழ்மொழிப் புலமையும்**, இவரது பாடல்களில் திருக்குறள், தேவாரம், திருவாசகம் ஆகியவற்றிலுள்ள செய்யுளடிகள் எடுத்தாளப் பெற்றுள்ளமை கொண்டு இவரது புலமைத்திறனைக் கூறுவதும் இவ்வியலில் நோக்கமாகும்.

ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையாக இடம் பெற்றுள்ளன. முடிவுரையை அடுத்து துணைநூற் பட்டியல் அமைந்துள்ளது.

*****

சான்றெண் விளக்கம்

[1] சுவாமி சித்பவானந்தர், **ஞானயோக விளக்கம்,** பக்கம் 9
[2] **ஒன்றாம் திருமுறை,** திருப்பூவணம், திருஞானசம்பந்தர் இயற்றிய 'தென்திருப்பூவணமே' என்று முடியும் 11 பாடல்கள்
[3] **மூன்றாம் திருமுறை,** திருப்பூவணம், திருஞானசம்பந்தர் இயற்றிய 'அடிதொழ நன்மையாகுமே' என்று முடியும் 11 பாடல்கள்
[4] "சராசரங்கள் - அசையும் பொருளசையாப் பொருள்களடங்கிய வுலகம், இதிலுள்ள உயர்திணை அஃறிணைப் பொருள்களைப் பற்றிக் கூறப்புகின் மனிதர் முதல் கண்ணிற் கெட்டாச்சிறிய பிராணிவரை அளவிடக் கூடாதவை பலவகையுள. ... ... ... . இவற்றின் தன்மை, உணவு, தொழில் முதலிய வெடுத்துக்கூற அவன்(சிவன்) மானிடச் சட்டை சாத்திவந்து அறிவித்தாலன்றிக் கூடாத காரியம் ஆதலின் அறிவுடையோர் எழுதிய அளவுகளி கொள்வர் என்று எண்ணுகிறேன்." **அபிதான சிந்தாமணி** பக்கம் 599
[5] 'இலங்குவ' என்ற சொல்லிற்கு - 'விளங்குவ' எனப்பொருள்
[6] "எண்ணி லங்குறை சராசர மிலிங்மென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்" **36வது திருவிளையாடற் புராணம்,** மூன்றாம் பாடல்
[7] அ) **அபிதான சிந்தாமணி** பக்கம் 1169
ஆ) **கலைக்களஞ்சியம்,** தொகுதி-7, பக்கம் 436
[8] **அபிதான சிந்தாமணி** பக்கம் 1170
[9] 'இத்தலம் 108 வைணவத்தலங்களில் ஒன்றாகும்'
ஆற்காடு கா.வெ.சீதாராமய்யர் சுத்த வாக்கிய சர்வமுகூர்த்த பஞ்சாங்கம் 2006-07, பக்கம் 116,
[10] கந்தசாமிப்புலவர், **திருப்பூவணப்புராணம்,** (உரைச்சுருக்கம் கி.காளைராசன்), டிசம்பர் 2008
[11] "*சிதைவு எனப்படுபவை வசை அற நாடின்*
*கூறியது கூறல், மாறுகொளக் கூறல் ... ...*
*அன்ன பிறவும் அவற்று விரி ஆகும்"* - **தொல்காப்பியம்** பொருளதிகாரம் நூற்பா எண் 1608,
[12] வே.இரா.மாதவன், **தமிழில் தலபுராணங்கள்,** இரண்டாம் பதிப்பு, நவம்பர் 1995
[13] சே.கண்மணி, ஆய்வாளர், எம்ஃபில் ஆய்வு, பதிவு எண் 046070020, அழகப்பா பல்கலைக்கழகத் தொலை நிலைக்கல்வி இயக்ககம், ஜூன் 2007,
[14] உ.ஹேமா, ஆய்வாளர்
[15] ம.உசாராணி, ஆய்வாளர், பதிவுஎண் 036070143, அழகப்பா பல்கலைக்கழகத் தொலை நிலைக்கல்வி இயக்ககம், எம்ஃபில் ஆய்வு
[16] ப. ஆறுமுகம், முனைவர் பட்ட ஆய்வாளர்
[17] கா. கணநாதன், பதிவு எண் 6002, ஏப்ரல்1991, "**திருப்பூவணம் பூவணநாதர் சுவாமி கோயில்**", அழகப்பா பல்கலைக்கழக முதுகலைப் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு.
[18] கி. காளைராசன், **திருப்பூவணத் திருத்தலமும் திருப்பூவணநாதர் சுவாமி பெருமையும்** - அழகப்பா பல்கலைக்கழம், ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்கான ஆய்வேடு, டிசம்பர் 2004
[19] வே. இரா. மாதவன், **தமிழில் தலபுராணங்கள்** - பக்கம் 187 முதல்209 முடிய
[20] மேலது, பக்கம் 210 முதல்239 முடிய

# 1. தலபுராணங்கள் அறிமுகம்

**முன்னுரை**

தலபுராணங்கள் முனிவர்களால் மனிதர்களுக்குக் கூறப்பெற்ற சமயவழிபாட்டு முறையாகும். மனிதனுக்கும் சமயத்திற்கும் உள்ள தொடர்பு, சமயத்திற்கும் வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பு, வழிபாட்டிற்கும் புராணத்திற்கும் உள்ள தொடர்பு, மற்றும் புராணங்கள் தலபுராணங்கள் போன்றவற்றின் வளர்நிலைகளைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

- 1. மனிதர்களின் நம்பிக்கைகள், முன்னோர்கள் வழிபாடு செய்தமை பற்றிய செய்திகள் ஆகியன மற்றும் சமயங்களின் தோற்றம், வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள்
- 2. புராணம், சொற்பொருள் விளக்கம், புராண ஆசிரியர், புராணம் கூறப்பட்ட இடம், காலம், நோக்கம்
- 3. புராணங்களின் இலக்கணம்
- 4. புராணங்களின் வகைகள்
- 5. தலபுராணங்கள், தலபுராணங்களின் பயன்கள், பிறநாடுகளில் தலபுராணங்கள், பிறசமயங்களில் தலபுராணங்கள்
- 6. திருப்பூவணத் தலபுராணம்
- 7. புராணத்தைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்கள்

என்பனவும் இத்தலைப்புகளில் உள்ளடங்கும் கருத்துக்களும் இந்த இயலில் விளக்கப்படுகின்றன.

## 1.1. மனிதர்களும் சமயங்களும்

*"புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவை*
*மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள் எண்ணுங்கால்*
*ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்*
*தீ தொழிய நன்மை செயல்"[21]*

"*புண்ணியத்தால் வாழ்வும், பாவத்தால் தாழ்வும் உண்டாகும். ஒருவன் செய்யும் புண்ணிய பாவங்களே அவன் எதிர்காலச் சேமிப்பு ஆகும். எல்லாச் சமயத்தார்களும் சொல்வது இக்கருத்தே. ஆதலால் பாவத்தை நீக்கிப் புண்ணியம் செய்க*" என்கிறார் ஔவையார். இக்கோட்பாடுகள் மனிதசமுதாய முன்னேற்றத்திற்குத் தூண்டுகோலாய்

இருக்கின்றன. இதுபோன்ற தத்துவங்கள் (Philosophy) எப்பொழுதும் மனிதர்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன. (Religion is philosophy in action.) இத்தகைய கோட்பாடுகளுள் "*சமய வழிபாடுகள்* " மிகவும் சக்தி வாய்ந்தன. இறைவழிபாடுகள் சமயங்களின் பெயரால் உள்ள நூல்களில் கூறப்பட்டுள்ளவாறு நடத்தப்படுகின்றன. சமய அமைப்புகள் அனைத்துக்கும் பொதுவான அடிப்படையாக வழிபாடு திகழ்கிறது. மனிதர்களுக்கிடையில் ஒற்றுமையை வளர்ப்பதற்குச் சமயங்கள் உதவி புரிந்திருப்பது போன்று வேறு எந்த இயக்கமும் இதுவரையில் உதவி புரிந்ததில்லை. ஒரே நாடு, ஒரே இனம், ஒரே குடும்பம் என்ற உணர்வுகள் உண்டுபண்ணுகின்ற ஒற்றுமையைவிட மிகப் பலத்த ஒற்றுமையைச் சமயம் செய்கிறது. இவ்வளவு வல்லமை வாய்ந்த சமயத்தின் பிறப்பிடத்தை அறியப் பலநாடுகளிலும் பலகாலங்களில் ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

சமயங்கள் தோன்றியதற்குக் காரணமாக இரண்டு கொள்கைகள் கூறப்படுகின்றன. ஒன்று "*காலம் சென்ற முன்னோர்களை வணங்குவதிலிருந்து சமயம் உருவெடுத்தது*". மற்றொன்று "*இயற்கை சக்திகளைத் தெய்வங்களாகக் கருதி வணங்குவதிலிருந்து உருவெடுத்தது*". இவ்விரண்டு கருத்துக்களையும் சேர்த்துக் கூறுவதும் உண்டு. இக்கருத்துக்கள் பின்வரும் பகுதியில் ஆராயப்படுகின்றன.

**1.1.1. முன்னோர் வழிபாடு -** மாண்டு போன முன்னோர்களை நினைவில் வைத்திருக்கும் மனிதர்கள், உடல் அழிந்து போன பின்பும் அவர்களது உயிர் வாழ்கிறது என்றும், அவ்வுயிர் மீண்டும் பிறக்கிறது என்றும் நம்புகின்றனர்.

*"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்*
*கெழுமையு மேமாப் புடைத்து"*[22]

*"இன்மை யெனவொரு பாவி மறுமையு*
*மிம்மையு மின்றி வரும்"*[23]

என்ற குறட்பாக்களில், ஒருவன் கற்ற கல்வியானது அவனது அடுத்தடுத்த பிறவிகளிலும் பயன்படும் என்றும், ஒருவனது நல்குரவு அவனது மறுபிறப்பிலும் வரும் என்றும் திருவள்ளுவர் கூறுகிறார். இதனால் திருவள்ளுவர் காலத்திலேயே, தமிழர்கள் இம்மை மறுமை இவற்றில் முழு நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பது

தெளிவாகிறது. இறந்தவர்களுக்காக உணவு படைக்கின்றனர், வணங்குகின்றனர். இத்தகைய வழிபாட்டிலிருந்து சமயம் தோன்றியது. மனிதனுக்கு இரண்டு உருவங்கள் உண்டு. ஒன்று உடலென்றும், மற்றொன்று ஆன்மாவென்றும் நம்புகின்றனர். (The Body is Hard ware and the Soul is Soft ware.) மனிதன் இறந்தபின்னர் உடல் அழிந்துவிடும், ஆன்மா அழிவதில்லை என்றும் நம்புகின்றனர். எகிப்து, பாபிலோனியா, சீனா போன்ற நாடுகளின் சமயக் கோட்பாடுகளில் இத்தகைய நம்பிக்கைகள் உண்டு. முன்னோரை வணங்குவது சீனர்களின் சமயத்துக்கு அடிப்படைத் தத்துவங்களில் ஒன்று. எகிப்தியர்கள் சற்று மாறுபட்ட நம்பிக்கையைக் கொண்டிருந்தனர். *"உடல் அழிந்தால் ஆன்மாவும் அழிந்துவிடும்"* என்று எண்ணினர். இதனால் எகிப்து நாட்டவர்கள், பிணத்தைப் பாதுகாக்க எல்லாவிதமான முயற்சிகளையும் மேற்கொண்டனர். உடலையும் அதன் ஒவ்வொரு உறுப்பையும் பாதுகாத்து வைத்தனர். இறந்தவர்களின் உறுப்புகளில் ஏதேனும் ஒன்றுக்குப் பழுது ஏற்படுமானால், அந்த உடலுக்குரிய ஆன்மாவிற்கும் அதே பழுது ஏற்பட்டு விடும் என்று எகிப்தியர்கள் நம்பினர். கிருத்துவர்கள், இக்கருத்திற்குச் சற்று மாறுபட்டு, இறந்தவர்களின் உடல்களைப் பெட்டியில் வைத்துப் புதைத்து வைக்கின்றனர். என்றேனும் ஒருநாள் தேவன் நேரில் வந்து இறந்தவர்களை உயிர்ப்பித்து மீட்பார் என்று நம்புகின்றனர்.

இந்துக்கள், இப்பிறவியின் முடிவில் உயிரானது, அதுவிருந்த உடல் செய்த பாவபுண்ணியங்களுக்கு ஏற்பச் சொர்க்கத்திற்கோ அல்லது நரகத்திற்கோ அல்லது இறைவனிருக்கும் இடத்திற்கோ செல்கிறது என நம்புகின்றனர்.

ஆன்மா இறைவனிடம் செல்ல வேண்டுமானால் பாவங்கள் அறவே நீங்கப் பெற்று, புண்ணியங்கள் செய்திருக்க வேண்டும். எனவே பாவங்கள் நீங்கிப் புண்ணியம் அடைய அவ்வுடல் ஒருமுறையேனும் புனித தீர்த்தங்களில் மூழ்கியிருக்க வேண்டும். அவ்வாறு இல்லையேல், இறந்த பின்னராவது உடலை, மோட்சம் கொடுக்கக்கூடிய தீர்த்தத்தில் சேர்க்க வேண்டுமென்று இந்துக்கள் நம்பினர். *"பகீரதன் அவனது முன்னோர்கள் மோட்சம் அடையும் பொருட்டுத் தேவலோகத்தில் ஓடிய கங்கையைப் பூமிக்கு வரவழைத்து, அதில் அவனது முன்னோர்களின் அஸ்தியைக் கரைத்து அவர்களை*

*மோட்சம் அடையச் செய்தான். அதிலிருந்து இந்துக்களும் கங்கையில் கரைக்கப்பட்ட உடலுக்கு உரிய ஆன்மா பாவம் நீங்கப் பெற்று மோட்சம் அடையும் என நம்புகின்றனர். எனவே தங்களது முன்னோர்கள் மோட்சம் அடையும் பொருட்டு, அவர்களின் அஸ்தியைக் கங்கையில் கரைத்து வருகின்றனர்.*[24] **இறந்தவர்களின் உறுப்புகளின் ஏதேனும் ஒரு சிறு பகுதியையாவது திருப்பூவணத்திலுள்ள மணிகுண்ட தீர்த்தத்தில் சேர்க்க வேண்டும் எனத் திருப்பூவணப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது.**

*"முந்தொரு காலந்தன்னின் மொழியினோர் கங்கமங்கந்*
*தந்தி டந் தணனங்கத்தைத் தசையென நசையிற் கொண்டே*
*யந்த நற்றீர்த்தத் திட்டாங்க கன்ற தக்கணத்தினன்னோ*
*னிந்த நற்றீர்த் தந்தன் னாலிருங் கதியே றினானால் "*(பாடல் 446)

**ஓர் அந்தணனின் அங்கமானது ஒரு கழுகினால் தூக்கிவரப்பட்டு இத்தீர்த்தத்தில் வீழ்ந்தது. அதனால் அந்த அந்தணன் மோட்சம் பெற்றான். அறியாமல் அங்கம் சேர்ந்தவருக்கே மோட்சம் என்பதால், அறிந்து திதி செய்தால், நீத்தார்கள் நற்கதி அடைவது நிச்சயம் என்று திருப்பூவணப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இறந்தவர்களின் ஓர் உடலுறுப்பாவது இங்குள்ள மணிகன்னிகா தீர்த்தத்தில் சேருமானால் அதன் உடலுக்கு உடையவன் நற்கதி அடைவான் என்ற இந்த நம்பிக்கை எகிப்தியர்களின் நம்பிக்கையோடு இயைபுடையதாக உள்ளது.**

**நீத்தார்களைப் போற்றும் பண்பு பண்டைக் காலந் தொட்டு இந்துக்களிடம் இருந்துவருகிறது. இறந்தவர்களைப் புதைத்த இடத்தில்** *"நடுகல்"* **வைத்து வணங்கும் வழக்கம் தமிழகத்தில் உள்ளது. நிரைகவர்ந்த வெட்சியாரிடமிருந்து ஆநிரைகளை மீட்கும் போது இறந்துபட்ட வீரர்கட்கு நடுகல் இட்டு பெயரும் பீடும் எழுதி வைத்து வழிபட்டுள்ளனர். வழிபாட்டில் கள் வைத்துப் படைத்தலோடு உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கமும் இருந்துள்ளது. இதனை,**

*"முனையாத் தந்து முரப்பின் வீழ்ந்த*
*வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்*
*வல்லான் பதுக்கைக் கடவுட் பேண்மார்*
*நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்"*[25]

**என்பது உணர்த்தும், இவ்வழக்கத்தை,**

*" என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை*
*முன்நின்று கல்நின்ற வர்"*[26]

என்ற திருக்குறளும் உறுதிப்படுத்துகிறது. இந்து சமயத்தில், ***சீவசமாதி***யின் மீதும் சிவனடியார்களைப் புதைத்த சமாதிகள்மீதும் ***சிவலிங்கம்*** வைத்து வழிபாடு செய்வதும் இக்கோட்பாட்டின் ஓர் வடிவமே. ஆக மடிந்தவரைப் போற்றுவதும் உணவளிப்பதும் வணங்குவதும் ஆகிய செயல்கள் சமயங்களில் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ளன.

*"கதிர்விடு மணிகுண்டத்தின் கரையினிற் கடவுண் முன்னர்ப்*
*பிதிர் மகிழ் சிராத்தத்தோடும் பிண்ட நற் றிலோதகத்தை*
*விதிமுறை பிதிர் கட்காற்றின் வெஞ்சுடர்ப் பரிதிவானோன்*
*மதி தரு வாழ்நாள்காறு மனமிக மகிழ்ச்சி யுண்டால் "* (பாடல் 443)

என்ற பாடலில் இக்கருத்து வலியுறுத்தப்படுவதைக் காணமுடிகிறது. திருப்பூவணத்தில் நீத்தார்களுக்கு எள் ஆகியவற்றை முறைப்படி வழங்கினால் நீத்தார்களது மனம் மிக மகிழ்ச்சி அடையும் என்று கூறப்பட்டுள்ளது. திருப்பூவணம் ***பிதிர்மோட்சபுரி*** என்று புகழ்ந்து பாடப்பெற்றுள்ளது. இக்கருத்துக்கள் சமயம் தோன்றுவதற்கான காரணிகளாக அமைகின்றன. இவற்றால் முன்னோர் வழிபாடு, சமயங்கள் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணிகளுள் ஒன்று என்பது தெளிவாகும்.

## 1.1.2. இயற்கை வழிபாடு

*"தொடக்க காலத்தில் இயற்கை மனிதனுக்கு ஒரு புதிராகத் தோற்றமளித்தது. இருள், சூரியன், பாம்பு ஆகிய இயற்கைப் பொருள்கள் மனிதனுக்கு புதிராகவும் இருந்தன. அதே நேரத்தில் அச்சத்தையும் ஊட்டின. ஆயினும் மனிதன் இயற்கையே தனக்கு உணவை அளிக்கிறது என்று அறிந்து கொண்டான். அச்சமும் உணவுத் தேவையும் கொண்ட மனிதன் இயற்கையின் பேராற்றலை வணங்கத் தலைப்பட்டான். கூட்டு உழைப்பினால் உணவைத் தேட மனிதன் முற்பட்டபோது ஆற்றல் மிகுந்த இயற்கையை தனக்கு இணங்க வைக்க முயன்றான்."*[27]

இயற்கை வழிபாட்டிலிருந்து சமயம் உருவெடுத்தது என்பதும் ஒரு கோட்பாடாகும். இக் கோட்பாட்டிற்கு, இந்தியாவின் பழமையான வேதங்களில் நிறையச் சான்றுகள் உள்ளன. மிகப் பழமையானதாகக் கருதப்படும் ரிக்வேதம் இது பற்றிக் குறிப்பிட வில்லை.[28] சூரிய உதயம் மற்றும் மறைவு, புயற் காற்று, மின்னல், இடி, இயற்கையின் வனப்பு ஆகியவை மனிதனிடம் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. பஞ்ச பூதங்கள், மித்திரன், வருணன், இந்திரன், சூரியன், சோமன் ஆகிய தெய்வங்கள் இயற்கையைப் பின்பற்றியே வழிபாடு செய்யப்படுகின்றன. அவர்களின் குணம்,

தோற்றம், உணவு, ஆற்றல், மக்களுக்கு அருளும் தன்மை போன்ற விளக்கங்களும் தோன்றலாயின. இயற்கைச் சக்திகளைப் பிரித்துப் பார்த்துப் பெயரிட்டு அழைத்தனர். அச்சக்திகளைக் குறிப்பிட்ட தெய்வங்கள் ஆட்சி செய்கின்றன என்று நம்புகின்றனர். இது ஒருபுறமிருக்க, அத் தெய்வங்களின் மகிமைகளை உணரஉணர அவற்றை வெவ்வேறு தத்துவங்களாகவும் கோட்பாடுகளாகவும் அக்காலத்திய முனிவர்கள் கூறியுள்ளனர்.

இதைப் போன்றே பண்டைய கிரேக்கர்கள் தங்கள் சமயத்தை உண்டாக்கியிருந்தனர். பண்டைய ஜெர்மானியர்களும் ஸ்காட்லாந்து நாட்டவர்களும் இம்முறையில்தான் சமயங்களை வளர்த்து வந்துள்ளனர்.[29]

இந்து சமயத்தில், குறிப்பாகத் தமிழகத்தில், மரங்களின் கீழே தெய்வங்கள் உறைகின்றன என்ற நம்பிக்கை சங்ககாலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது.

*"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பின்*
*கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப்*
*புலவுப் புழுக்குண்ட வான்கண் அகலறை"*[30]

என்ற பாடலில் வெட்சிவீரர்கள் வேம்பினடியிற் குடி கொண்டிருந்த தெய்வத்திற்குக் கொழுப்பா எறிந்து வழிபட்டனர் என்று கருவூர் கதப்பிள்ளைச் சாத்தனார் குறிப்பிடுகிறார்.

*"கள்ளி நீழற் கடவுள் வாழ்த்தி"*[31]

என்ற புறநானூற்றுத் தொடரில் கள்ளிச்செடியின் நிழலில் கடவுள் நிலை கொண்டிருந்தமையையும் அதனை மக்கள் வழிபட்டமையையும் அறியமுடிகிறது.

"*அப்பரிசந்த வருந்தவ முழந்தே யாயிரமாண்டு மாண்டதற்பி*
*னொப்பரிதாய வுமையவள் வளர்த்த வோங்கு* ***மந்தார மூலத்திற்***
*பைப்பெரும் பாந்தட் பாதலத் துதித்துப் படியினைக் கீண்டு மேன் முளைத்துத்*
*திப்பியமாகத் திருவருளுருவாய்ச் சேர்ந்த தோர் திகழ் சிவலிங்கம்*" (1162)

என்று திருப்பூவணத்தில் ***பாரிசாத மரத்தின்*** அடியிலேயே சிவலிங்கம் தோன்றியது என்ற கருத்தும் இத்துடன் தொடர்புடையதாய் உள்ளது.

இவற்றால், இயற்கையை வணங்கும் முறையால் சமயங்கள் தோன்றின என்ற கருத்து ஏற்புடையதாகிறது.

காலப்போக்கில் முன்னோர்களை வணங்குதல், இயற்கையை வணங்குதல் ஆகிய இவ்விரு தத்துவங்களும் இணைந்து 'வணங்குதல்' என்னும் புதிய தத்துவமாக மலர்ந்துள்ளது.

### 1.1.3. வணங்குதல் - "தென்புலத்தார் தெய்வம்" எனத் திருவள்ளுவர் குறிப்பிடுவதுபோல்[32], இறந்தவரை வணங்குதல், இயற்கையை வணங்குதல் ஆகிய இவ்விரண்டு கொள்கைகளுக்கும் பொதுவானது வணங்குதல் என்னும் பண்பாகும். இறந்தவர்களை வணங்குவதினாலும், இயற்கையை வணங்குவதினாலும் உடலுக்கும் உள்ளத்திற்கும் அப்பாற்பட்ட நிகழ்வுகளையும் சக்திகளையும் ஆட்படுத்த முடியும் என்ற எண்ணமே அது. ஒரு செயல் நடைபெற்றதற்கான காரணத்தை அறியமுடியாதபோது, அச்செயல், ஒன்று 'முன்னோர்களின் ஆன்மாக்களின் செயல்பாட்டினால் நடக்கிறதென்றும்' அல்லது 'இயற்கைச் சக்திகளுக்குத் தலைமை வகிக்கும் தெய்வங்களால் நடக்கிறதென்றும்' நம்புகின்றனர். அச்செயல்கள், தனக்குச் சாதகமாக நடைபெற வேண்டுமென்று விரும்புகின்றனர். இந்த விருப்பத்தை முன்னோர்களின் ஆன்மாவோ அல்லது இயற்கைத் தெய்வங்களோ நிறைவேற்றும் என நம்புகின்றனர்.

'தெய்வங்கள், வழிபடுபவர்களைத் துன்பங்களிலிருந்து காக்கின்றன' என்ற நம்பிக்கை தமிழரிடம் உண்டு. *"வழிபடு தெய்வம் நிற்புறங்காப்ப"*[33] எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். வழிபடு தெய்வத்தைப் பற்றிய குறிப்பு இல்லை. மதுரை நகரைக் காத்து வந்த 'மதுராபுரித் தெய்வம்' பற்றிய குறிப்புகள் சிலப்பதிகாரத்தில் உள்ளன. *"சடையும் பிறையும் தாழ்ந்த சென்னிக் குவளை உண்கண் தவளவாள் முகத்தி ... ... ... பொற்கோட்டு வரம்பன் பொழியிற் பொருப்பன் குலமுதற் கிழத்தி ... ... மாபெருங் கூடல் மதுரா பதிஎன்பேன்"* என்று மதுராபதித் தெய்வம் கட்டுரை காதையில் வருணிக்கப்பெற்றுள்ளது.

இதனால், முன்னோர்களை அல்லது தெய்வத்தை உரிய வழியில் வணங்கினால் அவர்கள் அச்செயலைச் தங்களுக்கு ஏற்புடையதாய்ச் செய்து முடிப்பர் என்று நம்புகின்றனர். இத்தகைய கோட்பாடுகளே சமயங்களின் அடிப்படையாய் உலகம் எங்கும் விரவி உள்ளது.[34]

*"குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ*
*மடிதற்றுத் தான்முந் துறும்"*[35]

*"குடித்தனத்தின் நிலைமையை உயர்த்துவேன் என உறுதி கொள்ளும் ஒருவனுக்கு உதவி செய்யத் தெய்வம் கச்சை கட்டிக் கொண்டு தானே முன்வரும்"* [36] **என்ற இத்திருக்குறள் தெய்வங்கள் மனிதர்களுக்கான பணிகளைச் செய்கின்றன என்ற கருத்திற்கு ஆதாரமாக உள்ளது. சங்கப் பாடல்களில் சிவனைப் பற்றியும் திருமாலைப் பற்றியும் குறிப்புகள் உள்ளன.**

**சங்கப் பாடல்களில் சிவன்** - *"சைவர்களின் முழுமுதற் கடவுளாகக் கருதப் பெறும் சிவபெருமானைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. சிவன் என்ற பெயர் பெற்றில. பிற காரணப் பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளன. முக்கட் செல்வன்(அகம் 181-16, புறம் 6-18), ஆதிரையான் (கலி 150-20), ஆலமர் செல்வன் (கலி 83-14). முக்கணான்(கலி 2-4, 104-2), எரிதிகழ் கணிச்சியோன் (கலி 103-25), சீறருங் கணிச்சியோன்(கலி 1-6), மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன் (முருகு 154), ஆதிரை முதல்வன் (பரி 8-6) என்றினைய சொற்கள் சிவபெருமானைக் குறிப்பனவாக அமைந்துள்ளன."*[37]

**சங்கப் பாடல்களில் திருமால் – சங்கப் பாடல்களில் திருமாலைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.** *"அஞ்சன உருவன்(புறம் 175-5), நேமியான்(புறம்58-15, கலி105-9, 127-4), திகிரியான் (கலி 104-78), மாயவன்(கலி 145, 64), திகிரிசெல்வன்(பரி 13-50), என்றினைய சொற்கள் திருமாலைக் குறிப்பனவாக அமைந்துள்ளன"*[38].

**தென்புலத்தாரையும் தெய்வங்களையும் வழிபட்டு வணங்கிப் பயன்பெற விழையும் மனிதர்களுக்கு உதவிடும் முகமாகப் புராணங்கள் தோன்றின. புராணங்களில் மனிதர்களின் பிறப்பு, அவர்கள் செய்யும் வினைகள், அவற்றால் உண்டாகும் வினைப் பயன்கள், அவ்வினைப் பயன்களால் கிடைக்கும் சுவர்க்கம், நரகம் போன்ற பலாபலன்கள் மற்றும் மறுபிறவி ஆகியன எடுத்துக் கூறப்பெற்றுள்ளன. தீவினைப் பயன்களை நீக்கவல்ல தெய்வங்கள், அத்தெய்வங்கள் உறைந்துள்ள திருத்தலங்கள், அத்தலத்தைச் சென்றடைவதற்கான வழிகள், வழிபட்டோர், அவர்கள் அடைந்த பலன்கள், வழிபட வேண்டிய நாட்கள் மற்றும் விதிமுறைகள் ஆகியன பற்றிப் புராணங்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன.**

## 1.2. புராணம்

*"இந்திய நாட்டு இலக்கியங்களுள் புராணங்கள் ஒரு பெரும்பகுதி. அவற்றைப் பற்றி அறிஞர்கள் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக ஆராய்ச்சி செய்தும், நம்பக்கூடிய எந்த முடிவுகளும் தோன்றவில்லை. வேதகாலத்திலேயே புராண நூல்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டிருக்கின்றன. 'புராணம்' என்ற சொல் உபநிஷதங்களிலும் சாஸ்திரங்களிலும் காணப்படுகிறது".*[39] **சிலப்பதிகாரம் நாடுகாண் காதையில் கவுந்தி முன்னர்த் தோன்றிய சாரணர் அருக தேவனின் பெருமையைப் பலபடக் கூறும்போது,** *"பொருளன் புனிதன் புராணன் புலவன்"*[40] *என்பர். மணிமேகலையில் மணிமேகலா தெய்வம் உலகப் பெண்டிர் வடிவந்தாங்கி மணியறைப் பீடிகை வலங்கொண்டு புத்த தேவனை வணங்கும்போது, "புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்"* [41] **எனத் தொடங்குவாள். தேவாரப் பாடல்களில் சம்பந்தர் அப்பர் ஆகியோர் புராணன்(1569), புராணர்(பூம்புகலூர், அப்பர் 1406), புராணனார் (காளத்தி, அப்பர், 1536) எனவும், திருமூலரின் திருமந்திரத்தில் 'ஆதிபுராணன்' (557)என்றும் இறைவனின் பழம் பெருமையைச் சுட்டுவர்.**[42]

**'புராணம்' என்ற சொல் தமிழ் இலக்கியத்தில் மணிமேகலையில்தான் முதன்முதலில் வருகிறது. சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதையில் வைணவவாதியைக் குறிப்பிடும் போது,** *"காதல் கொண்டு கடல்வணன் புராணம் ஓதினான்"*[43] **என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால், புராணம் என்ற சொல், தமிழ் மொழியில் மணிமேகலை தோன்றிய காலத்திலேயே வழங்கப்பெற்றுள்ளது என அறிய முடிகிறது.** *"புராணவித், புராணி போன்ற சொற்கள் ரிக் வேதத்திலும் அதர்வன வேதத்திலும் காணப்படுகின்றன. எனினும் இச் சொற்கள் புராணத்தைக் குறிக்கவில்லை. பழமையானவன், பழமையைப் பரப்புகிறவன் என்ற பொருளிலேயே இச்சொற்கள் வழங்கியிருக்கின்றன".*[44] *"புராணம் என்கிற வடசொல் 'புரா-நவ' என்ற இருவேர்களில் இருந்து பிறந்தது. இதன் பொருள் பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் உள்ளது என்பர். இன்றும் மக்களிடையே சொல்லப் பெற்று வருகின்ற பழமையான கதைகளைப் 'புராணம்' என்றும் கூறுவர்.*"[45] **புராணம் பழமையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும் புதுமையிலும் வரவேற்கப்படக் கூடியதாகவே இருக்கிறது.**

வேதகாலத்திற்கு முன்பும் வேத காலங்களிலும் நிலவிய மரபுவழிக் கருத்துக்கள் பிற்காலத்தில் புராணங்களாக வளர்ந்தன. *"எது தோன்று தொட்டு இன்று வரைக்கும் பரவியிருக்கிறதோ அதுவே புராணம்"* என்பது வாயுபுராணத்திலுள்ள செய்தியாகும்.[46]

புராணத்திற்கு இணையாக ஆங்கிலத்தில் 'Myth'[47] என்ற சொல் வழங்கப்படுகிறது. 'Mythos' என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து இச்சொல் பிறந்துள்ளது.[48] தீர்மானமான அல்லது உறுதியான பேச்சு அல்லது உரை அல்லது பண்டைய வரலாற்றைக் குறிப்பிடுவது என்பன போன்ற பொருள்கள் இச்சொல்லிற்குக் கூறப்படும் விளக்கங்களாகும்.

ஒரு செய்தியைக் கூறியவர், கூறியதற்கான காரணம், கூறிய காலம் இவற்றை அறிந்து, அவற்றின் அடிப்படையிலேயே அச்செய்திக்கு முக்கியத்துவம் அளிக்கப்பெறும். எனவே புராணங்களைக் கூறியவர், கூறப்பட்ட இடம் மற்றும் காலம் ஆகியன இப் பகுதிகளில் கூறப்பட்டுள்ளன.

## 1.2.1. புராண ஆசிரியர்

சிவபெருமான் ஒருவனே, தோற்றிவித்தோர் யாருமின்றித் தோன்றியவன். மற்றெந்த ஒன்றையும் தோற்றுவித்தவர் ஒருவர் உண்டு. இப்பகுதியில், புராணக் கதைகளைக் கூறிய ஆசிரியர் பற்றி ஆராயப்படுகிறது.

சைவப் புராணங்களில் புராணக்கதைகளை முதலில் கூறியது சிவபெருமான் அல்லது முருகப் பெருமான் என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது. பார்வதிதேவியோ அல்லது நந்தியோ அக்கதைகளைக் கேட்டு கைலாயத்திலிருக்கும் சனக்குமாரர்களுக்குக் கூறுகின்றனர். அவர்கள் அக்கதைகளை வேதவியாசருக்கு எடுத்து விரித்துக் கூறுகின்றனர். வேதவியாசர் புராணக்கதைகளைப் பூமியிலே சூதமுனிவருக்குக் கூறுகிறார். சூதமுனிவர் அவற்றைப் சவுனகமுனிவர்களுக்குக் கூறுகிறார்.

"மகாபுராணங்கள் அனைத்தையும் இயற்றியவர் வேதவியாசர்"[49]. வேதவியாசர் சிரஞ்சீவிகளுள் ஒருவர் ஆவார். 'ஜீவித்தல்' என்பதற்கு 'உயிர்வாழ்தல்' என்று பொருள். சிரஞ்சீவிகள் என்றால் எப்போதும் இறப்பில்லாமல் வாழ்ந்துகொண்டிருப்பவர்கள்

என்று பொருள்படும். *"அஸ்வத்தாமர், **வேதவியாசர்**, பரசுராமர், விபீஷணர், அனுமார், மகாபெலி, மார்க்கண்டர் ஆகிய ஏழுபேரும் சிரஞ்சீவிகள் ஆவர்".*[50] **அழிவின்றி வாழ்பவர்கள் பட்டியிலில் இரண்டாவதாக வேதவியாசர் குறிப்பிடப்படுகிறார்.**

**திருப்பூவணப் புராணத்தை,**

*"கூனலம்பிறைமிலைச்சுகோடீரபாரத்தெந்தை*
*யூனமிலுமையாள்கேட்பவுரைத்தருளுபதேசத்தை*
*யானதோர்காலைதன்னிலாறுமாமுகங்கொடுற்ற*
*ஞானவானதனைக்கேட்டுநந்திபானவின்றான்மன்னோ " (பாடல் 688)*

**உமையாள் கேட்டுக்கொண்டதற்கு இசைய சிவபெருமான் கூறியருளுகிறார். அதனைக் கேட்ட ஆறுமுகங்கொண்ட முருகப் பெருமான் நந்திக்கு எடுத்துரைக்கிறார்.**

*".... கந்தனிசைத்திடவந்நந்தி*
*தன்றனிச் சொல்சற்குமரன் கொடே*
*வென்றிவேதவியாதற்குரைக்கவஃ*
*தன்றெனக்கவன் சொன்னதறைகுவேன் "* (பாடல் 98)

**என்று சூதமுனிவர் கூறியதாகக் கூறப்பெற்றுள்ளது.**

## 1.2.2. புராணங்கள் கூறப்பட்ட இடம்

**வேதவியாசர் புராணக்கதைகளைக் கூறுகிறார். அவற்றைக் கேட்ட சூதமுனிவர் அக்கதைகளை சவுனக முனிவர்களுக்கு எடுத்துரைக்கிறார். புராணங்களை எடுத்துரைத்த இடம் நைமிசாரண்யம் ஆகும்.** *"இத்தலம் 108 வைணவத் திருத்தலங்களில் ஒன்றாகும். திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் (998-1007, பத்துப் பாசுரங்கள்) செய்யப்பெற்றது".*[51]

*"சத்தியலோகத்தில் பிரமதேவரும் சரசுவதியும் அமர்ந்திருந்தனர். அப்போது பிரமதேவனிடம் முனிவர்கள் சென்று மீண்டும் பிறவாதிருக்கத் தவம் செய்ய ஏற்ற அமைதியான சூழ்நிலையுள்ள இடத்தைக் கூறும்படி வேண்டினர். பிரமன் மகிழ்வுடன் ஒரு தர்ப்பையை எடுத்து உருட்டி அதை ஓட விட்டார். அது நிற்கும் இடத்தில் தவம் செய்யுமாறும், அதுவே புனிதமான தலம் என்றும் கூறினார். அந்தத் தர்ப்பை உருண்டோடி நின்ற இடம் **'நைமிசாரண்யம்'** என அழைக்கப்பட்டது. **'நைமி'** என்றால் 'சக்கரம்' என்றும், **'ஆரண்யம்'** என்றால் 'அடர்ந்தகாடு' என்றும் பொருள். இத்தலம் கோமதி ஆற்றங்கரையில்*

*சீதாப்பூரிலிருந்து(Sitapur) 20 மைல் தொலைவிலும் சண்டிலா (Sandila) மற்றும் உத் (oudh) ஆகிய தொடர்வண்டி நிலையங்களிலிருந்து 24 மைல் தொலைவிலும் உள்ளது".*[52] *"கல்கத்தா-டேராடூன் ரயில் மார்க்கத்தில் பாலமாவ் ஜங்சன் வந்து அங்கிருந்து சீதாப்பூர் போகும் கிளை ரயிலில் ஏறி வழியிலுள்ள நைமிசாரண்யா நிலையைத்தில் இறங்கி 2 மைல் தூரம் சென்றால் இவ்வூரை அடையலாம். மூலவர்-தேவராஜன் (ஸ்ரீஹரி)நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலாம், தாயார்-ஸ்ரீஹரிலஷ்மி (புண்டரீகவல்லி), தீர்த்தங்கள் - சக்கர தீர்த்தம், கோமுகி நதி, நேமி, திவ்ய விச்ராந்த தீர்த்தம் உள்ளன.* ***கோமுகி நதிக்குப் போகும் வழியில் வியாஸகட்டீ என் இடத்தில் வேதவ்யாஸர் ஆலயம் உள்ளது. இதுதான் புராணங்களை இயற்றிய புண்ய பூமி".***[53]

இந்நைமிசாரண்யத்தைப் பற்றித் திருப்பூவணப் புராணத்தில் ஒரு சருக்கம் பாடப் பெற்றுள்ளது. *"அங்கே முனிவர்கள் தவம் மற்றும் வேள்விகளை மேற்கொண்டனர். சவுனகர் என்னும் முனிகணங்கள் உலகநன்மையின் பொருட்டு சந்திரயாகம் செய்யத் தொடங்கினார்கள்"* [54]. அப்போது, ஏராளமான சிவயோகிகள் அங்கு வந்து குவிந்தனர். அவர்களில் பௌராணிகர்[55] என்ற சூதமுனிவரும் (சூதபௌராணிகரும்[56]) ஒருவர். சூதமுனிவரைச் சவுனக முனிகணங்கள் வரவேற்றனர். *"யாகம் செய்யும் பன்னிரண்டு ஆண்டு காலத்தில், கடைத்தேற்றத்தக்க புராணங்களைக் கூறி அருளுமாறு வேண்டினர். அதுகேட்டு மகிழ்ந்த சூதமுனிவர், பதினெட்டுப் புராணங்களையும் மற்றும் உபபுராணங்களையும் எடுத்துக் கூறினார்".*[57] *"இருபத்தெட்டாவது வியாசமுனிவரால் இயற்றப்பட்ட புராணங்கள் பதினெட்டாகும். இப்பதினெட்டனுள் சைவபுராணங்கள் பத்தாகும். அப்பத்துப் புராணங்களுள் ஒன்றாகிய கூர்மபுராணம் வடமொழியினின்றும் தமிழில் மொழிபெயர்த்தவர் கொற்கையை ஆண்ட அதிவீரராம பாண்டியனார் ஆவார்"*[58].

## 1.2.3. புராணங்கள் தோன்றிய காலம்

இந்தியத் துணைக் கண்டத்தில் தோன்றிய நான்கு வேதங்களும் பதினெட்டுப் புராணங்களும் மிகவும் பழமையானவை. உலக அளவில் மிகவும் பழமையான நூல்களாக இவை கருதப் படுகின்றன.

'தொல்லை' என்பது தொன்மையைக் குறிக்கும். இது போலப் 'புராணமுந் தொல்லை' என்பது புராணக் கதைகள் தொன்மையானவை என்பதைக் குறிக்கும்.

*"நில்லாத எழுபிறப்புந் தொல்லை, அல்லல்*
*நீக்குசிவ காமவல்லி நிலையுந் தொல்லை*
*செல்லாரும் பொழில்புடைசூழ் சிதம்பரமுந் தொல்லை*
*திருமூலட் டானமொடு சிவகங்கை தொல்லை*
*சல்லாபந் தருமகு டாகமுந் தொல்லை*
*தலபுராணமுந் தொல்லை சபையுந் தொல்லை*
*சொல்லாரும் நான்மறையுந் தொல்லை தில்லைச்*
*சோதிநட மாடுவதுந் தொல்லை தானே"*

**என்று இரட்டைப் புலவர்கள் தில்லைக் கலம்பகத்தில் பாடியுள்ளனர்.**

*"**தொல்லை**மாபுகழ்துன்றுஞ்சுராதியர்க்*
*கெல்லையில்லநலின்பமளித்திடு*
*மல்லலோங்கிவளர்ந்திடுமந்திரஞ்*
*செல்வமல்கிய தென்றிருப்பூவணம்"* (பாடல் 170)

**என்ற பாடலிலே 'தொல்லை' என்ற சொல்லைக் கந்தசாமிப்புலவர் 'பழமை, தொன்மை' என்னும் பொருளில் பாடியுள்ளார்.**

**தொல்காப்பியத்தை எழுதிய புலவரும், திருக்குறளை இயற்றிய புலவரும் தங்களது பெயர், ஊர், வாழ்ந்த காலம், நூலை இயற்றிய ஆண்டு, ஆட்சி செய்த மன்னர் இவை எதையுமே குறிப்பிடவில்லை. இவர்களைப் போன்றே, புராணத்தை எழுதிய முனிகளும் தங்களது பெயர், வாழ்ந்த காலம், ஆட்சி செய்த மன்னன் இவைபற்றி எதையும் புராணங்களில் குறிப்பிடவில்லை. வடநூற் புராணங்கள் அனைத்திலும், இக்காதையை, "மாமுனிவர் வேதவியாசர் கூறினார். அதைச் சூதமுனிவனாகிய நான் கேட்டு உங்களிடம் கூறுகிறேன்" என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. இதனால் வேதவியாசர் வாழ்ந்த காலத்தைக் கருத்திற் கொண்டு, புராணங்களின் காலம் கி.மு.6 அல்லது கி.மு. 7-ஆம் நூற்றாண்டு என்று சமய நூல் விற்பன்னர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.[59]**

**இந்தியப் புராணங்களில் வடமொழிப் புராணங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன.** *"மகாபாரதத்தில் புராணங்களின் பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. கி.மு.நான்காம் நூற்றாண்டில் கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் அரச குமாரர்கள் முக்கியமாகக் கற்க வேண்டிய நூல்களுள் புராணமும் ஒன்று என்று கூறுகிறார். .... .... வேதகாலத்திற்கு முன்பே புராணங்கள் பழைய கதைகளாக இருந்தன. ஆதிபுராணங்கள் புத்தர் காலத்திற்கு முன்னரும், ஏனைய புராணங்கள் புத்தர் காலத்திற்குப் பின்னரும் ஆக்கப்பட்டவை என்று கூறலாம்".*[60] **குப்தர்கள் காலத்தில்தான் அப்புராணங்கள் செம்மையினையும் ஒழுங்கினையும்**

பெற்றதாக அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர். கி.பி. 300-600 காலகட்டங்களில் வடநாட்டை ஆண்ட குப்தர்கள் வடமொழியை நன்கு போற்றி வளர்த்துள்ளனர். இந்து சமயமும் வடமொழி இலக்கியமும் புராணங்களும் நன்கு வளர்ச்சி பெற்றன. இவர்கள் காலத்தில் வடமொழியிலுள்ள தொன்மையான புராணங்கள் ஒழுங்குபடுத்தித் தொகுக்கப் பெற்றன என்பர்.[61] அதனால் குப்தர்கள் காலத்தை இந்து சமயத்தின் **பொற்காலம்** என்று அழைக்கின்றனர். எனவே வடமொழியில் புராணங்கள் தோன்றிய காலம் கி.பி.300 க்கும் முற்பட்டதாகக் கருத இயலும்.

**திருப்பூவணப் புராணத்தில்,** "சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம்", "சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்", மற்றும் "நளன் கலிமோசனச் சருக்கம்" ஆகிய சருக்கங்கள் பாடப்பெற்றுள்ளன. இதனால், திருப்பூவணப் புராணம் அடங்கிய பிரமகைவர்த்த புராணம் எழுதப்பட்ட காலம், சுச்சோதி மற்றும் நளன் காலத்திற்குப் பிற்பட்ட காலம் என்பது உறுதி. நளன்கலிமோசனச் சருக்கத்திலே,

*"மேவுமந்தமிகுந்திரையாயுக*
*மோவில்பல்புகழோங்குநளன்றனக்*
*கியாவுநல்கியிருங்* ***கலி*** *தீர்த்தருள்*
*பூவணேசன்பொற்கோயில்புகுந்தனன்"* (பாடல் 1325)

என்று கூறப்பட்டுள்ளது. எனவே கலியுகம்[62] தோன்றிய பின்னரே நளன் ஆட்சி செய்தான் என்பதும், அவனது ஆட்சிக்காலத்திற்குப் பிறகே பிரமகைவர்த்த புராணக்கதைகள் கூறப்பட்டுள்ளன என்பதும் உறுதி. கலியுகம் தோன்றி 5108 ஆண்டுகள் ஆகின்றன[63]. எனவே பிரமகைவர்த்த புராணம் எழுதப் பெற்ற காலம் (கலி5108 - கி.பி.2008 = 3100) கி.மு.3100க்குப் பிற்பட்டகாலம் எனத் திருப்பூவணப் புராணத்தின் வழியாக அறியமுடிகிறது.

புராணங்கள் எழுதப் பெற்ற காலத்தைக் கணக்கிட்டுக் கூறுவதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. எனவே புராணங்கள் கூறப்பட்ட காலத்தைக் துள்ளியமாகக் கணித்துக் கூறுவது இன்றளவும் இயலாததாகவே உள்ளது. எனினும், மேற்குறிப்பிடப்பெற்றுள்ள கருத்துக்களால் கி.மு.3100க்கும் கி.பி.300க்கும் இடைப்பட்ட காலத்திலேயே மகாபுராணங்களாகிய பதினெண் புராணங்களும் எழுதப்பெற்றுள்ளன என அறியமுடிகிறது.

### 1.2.4. புராணங்களைத் தோற்றுவித்த நோக்கம்

சங்க இலக்கியத்தின் பெரும்பகுதி தனிப்பாடல்களே. கலித்தொகை, பரிபாடல் இரண்டும் காலத்தால் சற்றுப் பிற்பட்டவை. சங்க காலத்தில் இருந்த நிலைமை சிறிது மாறுதல் அடைந்தபின் இவை பாடப்பெற்றமையால், இவை தனிப்பாடல்களாக இல்லாமல், தொடர் பாடல்களாய் அமைந்திருக்கின்றன. இவற்றிற்குப் பின்வந்த நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கினுள் பெரும்பகுதி, நீதி நூல்களாய் அமைந்திருந்தன. சில தனி அகப்பொருள் நூல்களாயும் அமைந்தன. அக்காலத்திலிருந்த சமுதாய நிலைக்கு ஏற்ப மக்களுக்குப் பொதுநீதிகளை உணர்த்தி நல்வழிப்படுத்த வேண்டிய நிலை அப்போது புலவர்களுக்கு இருந்தது. அதற்கு அடுத்த காலத்தில், சைவத்திலும் வைணவத்திலும் அருட்பாசுரங்கள் தோன்றின. இடைக்காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த சைன ஆதிக்கத்தின் பிடிப்பு தளரவே சமய எழுச்சி உண்டாயிற்று. அதன் விளைவே சைவசமய நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் பாடிய அருட்பாசுரங்கள். இவற்றால் நாடெங்கும் பெருங்கோயில்கள் தோன்றலாயின[64]. வழிபாடுகள் பெருகலாயின. சமுதாய எழுச்சியினால் பெருங் காப்பியங்கள் தோன்றின. வழிபாட்டுணர்வினால் புராணங்கள் எழுந்தன. "குடிதழீஇய கோயில்கள் - கோயில் தழீஇய குடிகள்" என்று மக்களையும் கோயில்களையும் பிரிக்கமுடியாத அளவிற்கு வாழ்க்கையும் வழிபாடும் இணைந்திருந்தன. இக்காலகட்டத்தில் தமிழ் நாட்டின்மீது முகம்மதியர் படையெடுப்புகள் நிகழ்ந்தன. மண்ணாசையும் பொன்னாசையும் கொண்ட மன்னர்களது ஆட்சியில் பெண்ணாசை கொண்ட வீரர்கள் அணியணியாய்ப் படைபடையாய்த் தமிழ்நாட்டைத் தாக்கினர். அவர்கள் கோயில்களிலிருந்த அளவிறந்த பொன்னையும், கோயில் தழுவிய குடிகளிடமிருந்த அழகிய பெண்களையும் தங்களது இலக்குகளாகக் கொண்டு போரிட்டனர். இக்காலங்களில் மக்கள் நிலை தடுமாறினார்கள். அன்றாட வாழ்க்கையின் அடிப்படைக் கூறுகளே நிலைகுலைந்தன. அதன்பின் ஆங்கிலேயர் ஆதிக்கமும் வந்தது.

**இதனால்,** "*வாழ்வை நிலைநிறுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு தங்களது ஊரின் பழம்பெருமைகளைக் கூறுவதற்குப் புலவர்கள் தலைப்பட்டனர். இந்திரன் வணங்கிய ஊர் இது, ஆகவே இது இந்திரலோகம் என்றும், சந்திரன் வணங்கிய ஊர் இது, ஆகவே இது சந்திரலோகம் என்றும் கூறியுள்ள புராணங்களைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடலாயினர்.*

*மேலும் கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி முதலான பிரபந்தங்கள் பெருகலாயின. எனவே, இக்காலகட்டத்தில் கல்வி கேள்வி உடையவர்களாய் வாழ்க்கையில் இன்பமோ துன்பமோ எழுச்சியோ வேதனையோ பெற்ற புலவர்கள் தங்களுக்கு ஏற்ற துறையில் பாடல் புனையத் தலைப்பட்டனர்.*"[65]

**இமயம் முதல் குமரி வரையுள்ள அனைத்துத் தலங்களும் தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி என்பனவற்றால் சிறப்புப் பெற்றனவாய் உள்ளன. இத் தலங்களில் நடந்த மிகச் சிறப்புமிக்க நிகழ்வுகளைக் கதைவடிவில் தலபுராணங்கள் மக்களுக்கு எடுத்து உரைக்கின்றன. ஒரு தலத்தின் பெருமைகளை ஒன்றாகத் தொகுத்து ஓர் தலபுராணமாகப் பாடுவதால் அந்த இடத்தின் பெருமைகள் அனைத்து அறிவுசான்றோரிடமும் சென்றடைகின்றன. இதனால், புராணங்களைப் படிப்போரும் அதைக் கேட்போரும் அத்தலத்தின் சிறப்பு இயல்புகளை முன்கூட்டியே அறிந்து கொள்ள முடிகிறது. இதனால், தங்களுக்குத் தேவையான வரங்களை அளிக்க வல்ல தெய்வம் உள்ள தலத்தையும், தங்களது நோயை நீக்க வல்ல தீர்த்தமும் விருட்சமும் உள்ள தலத்தையும் அதன் விவரங்களை நன்கு அறிந்து கொண்டு அத்தலங்களுக்குச் சென்று இறைவனை வணங்கி வேண்டிய நலன்களைப் பெற புராணங்கள் ஏதுவாய் அமைகின்றன.**

*"சிருஷ்டி, மனுவந்தரம், அரசமரபு, தலம், தீர்த்தம், விரதம், மந்திரம், யோகம், பக்தி, ஞானம், கன்மம், துதி, அருச்சனைக் குரிய அஷ்டோத்திர சகஸ்ர நாமம், தருமம், சிவன், விஷ்ணு முதலிய தேவர் அவதாரம், லீலை முதலியவைகள் எல்லாப் புராணங்களிலும் பொதுவாகக் காணப்படும். ஒவ்வொரு விஷயம் சிறப்பாக இருக்கும்"*[66].

**இதன் காரணமாகவே முன்னோர்கள் தலங்கள் தோறும் தலபுராணங்களை எழுதி வைத்துள்ளனர்.**

## 1.3. புராண இலக்கணம்

எழுத்திற்கும், சொல்லிற்கும், பொருளிற்கும் இலக்கணம் கண்ட நூலோர், அவர்தாம் இயற்றிய புராண நூல்களுக்கும் இலக்கணம் கூறியுள்ளனர். தொல்காப்பியம், தண்டியலங்காரம், வெண்பாப்பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், திவாகர நிகண்டு ஆகிய நூல்கள் புராணத்திற்கான இலக்கணத்தைக் கூறுகின்றன.

## 1.3.1. தொல்காப்பியம்

தமிழர்தம் தனிச்சிறப்பாகப் பொருளிலக்கணம் கூறியுள்ளது தொல்காப்பியம். இத் தொன்மையான இலக்கண நூல்,

*"தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"*[67]

என்கிறது. *"உரைச் செய்யுளோடு பொருந்தி பழைய வரலாற்றின் அடிப்படையாய் வரும்"*[68] - என்று தொல்காப்பிய நூற்பாவில் கூறப்பட்டுள்ள இலக்கணத்திற்கு ஏற்ப, பழமையான கதைகள் புராணங்களாகப் பாடப் பெற்றன. மேலும், தொல்காப்பியம், எண்வகை வனப்புகளுள் 'தொன்மை' என்பதை,

*"அம்மை யழகு தொன்மை தோலே*
*விருந்தே யியையபே புலனே இழைபெனாஅப்*
*பொருந்தாக் கூறியே ... ...."*[69]

எனப் புராணத்துடன் தொடர்பு படுத்தியுள்ளது. 'புராணம்' என்பதற்குப் 'பழைமையான வரலாறு' என்றும் 'தொன்மை' என்றும் பொருள்.

## 1.3.2. திவாகர நிகண்டு

*"காவியவியற்கை விரிக்குங்காலை*
*ஆரியந் தமிழால் நேரிதிடைக்கி*
*உலகின் தோற்றமும் ஊழியின் றுதியும்*
*வகை சாறொண்ணூற் றாறு வாதியரும் "*[70]

எனத் திவாகர முனிவர் புராணத்திற்கு இலக்கணம் கூறியுள்ளார்.

## 1.3.3. வெண்பாப் பாட்டியல்

*" கருதுசில குன்றினுமக் காப்பிய மென்பர்*
*பெரிதறமே யாதி பிழைத்து - வருவதுதான்*
*காப்பிய மாகுங் குலவரவு காரிகை*
*யாப்பிற் புராணமே யாம் "*[71]

என்று இலக்கணம் கூறுகிறது. 'குலவரவு காரிகை யாப்பிற் புராணமே' என்ற தொடர் பெருங்காப்பியம், சிறுகாப்பியம், புராணம் இம்மூன்றையும் ஒன்றாகவே மதிக்கிறது.

இக்கூற்றுப்படி பாடப்படும் பொருளில் பெருங்காப்பிய புராண வேறுபாடு தோன்றவில்லை.

## 1.3.4. சிதம்பரப் பாட்டியல்

*"அறையு மதிற் சில குறைபா டெனினுங் குன்றா*
*தறம் பொருளின் பம்வீட்டிற் குறைபா டாக ...."*

அறம் பொருள் இன்பம் வீடு இவற்றை எடுத்துரைப்பனவே புராணம் என்று சிதம்பரப் பாட்டியல் கூறுகிறது.

## 1.3.5. இலட்சணம்

தமிழ் நூல்கள் மேற்கண்டவாறு புராணத்திற்கு இலக்கணம் வரையறை செய்துள்ளன. இவை போன்றே வடநூல்கள் புராணத்திற்கு 'இலட்சணம்' கூறியுள்ளன. *"புராண லட்சணம் - இவை சர்க்கம், பிரதி சர்க்கம், மனுவந்தரம், வம்சம், வம்சாதுசரிதம், ஸ்திதி, ரட்சணம், சமுஸ்தை, ஏது, ஆசிரயம், இப்பத்து லட்சணங்களையுடையன. இது கிருதயுகத்தில் நூறுகோடி கிரந்தங்களாகப் பிரமனாலும், திரேதாயுகத்தில் கோடி கிரந்தங்களாய்ப் பதினெண் பாகங்களாக இருடியராலும், துவாபரயுகத்தில் வியாசரால் பதினெண் புராணங்களாகவும் வகுக்கப்பட்டது"* என்கிறது அபிதான சிந்தாணி.[72]

### பஞ்சலட்சணம் - தசலட்சணம்

உயிரினங்களின் பிறப்பு, இறப்பு, சுவர்க்கம், நரகம் போன்றவை புராணங்களில் விளக்கப் பெறுகின்றன. புராணங்களில் இடம் பெறும் விளக்கங்களைக் கொண்டு **பாகவதம்** என்ற நூல், புராணங்களுக்கென்று, பஞ்சலட்சணத்தை வரையறுக்கிறது.

## 1.3.6. பஞ்சலட்சணம்

*"அமரசிம்மன் இயற்றிய அமரகோசம் என்னும் வடமொழி நிகண்டு, புராணம் என்றால்,*

*1) உலகத் தோற்றம்*

*2) ஒடுக்கம் (உலகம் அழிந்து பின் மீண்டும் தோன்றுதல்)*

*3) மனுவந்தரம் (காலவரையறையும் மனுக்களது ஆட்சிக் காலங்கள்)*

*4) முனிமரபு (கடவுள் அல்லது முனிவர்களது வழிமுறைகள்)*

*5) அரச மரபு (சூரியவம்சம் சந்திரவம்சம் என அரசர்களது குடிவழி)*

*என்ற ஐந்து இலக்கணங்களையும் உடையதாக இருக்க வேண்டும்"*[73] **எனக் கூறுகிறது. இந்த பஞ்சலட்சணங்களைக் கீழ்க்கண்ட தமிழிலுள்ள கூர்மபுராணச் செய்யுள்,**

> ***"தோற்றம் உலகம் மீண்டொடுங்கல் துகள் தீர்மன்வந்தரம் முனிவர்***
> ***ஆற்றல் அரசர் மரபவர்தம் சரிதம் என்றும் ஓரைந்தும்***
> ***சாற்றும் புராண இலக்கண மென்றறிஞர் உரைப்பர் "***[74]

**எனத் தொகுத்துரைக்கிறது. வடமொழிப் புராணங்களை ஆராய்ந்த அறிஞர்கள்,** *"ஐந்திலக்கணம் எப்புராணங்களிலும் பின்பற்றப்படவில்லை. வாயு, விட்ணு, மச்ச, பிரமாண்ட புராணங்களில்தான் ஐந்திலக்கணம் கொள்கை அளவில் போற்றப்படுவதாகவும் - குறிப்பிட்ட கடவுளுக்கோ அல்லது சமயத்திற்கோ இன்றியமையா இடந்தரும் போக்கில் புராணங்கள் படைக்கப்பட்டதால் ஐந்திலக்கணங்களைப் பெரும்பான்மையான புராணங்கள் கடைப்பிடிக்கவில்லை. புராணங்களைக் காப்பியங்களோடு சேர்க்காமல் தனியே எண்ணுவது வடநூலார் மரபு. தமிழில் அவற்றையுங் காப்பியங்களாகவே கருதி வந்தனர். தண்டியின் காப்பிய இலக்கணக் கோட்பாட்டை மனத்தில் கொண்டே பிற்காலத்தில் புராணங்களைப் படைத்து வந்தனர் என்றும் கருதுகின்றனர்."*[75]

**தமிழில் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் போன்ற நூல்களின் தலைப்புக்களில் புராணம் என்ற சொல் காணப்படினும் அவைகள் முன்னர்க் கண்ட புராண இலக்கணங்களை முழுமையும் கொண்டவை அல்ல. அவற்றுள் காப்பியக் கூறுகள் படிந்துள்ளன.**

## 1.3.7. தசலட்சணம்

**மேற்கண்ட பஞ்சலட்சணங்களுடன் கூடுதலாக ஐந்து பிற லட்சணங்களையும் சேர்த்துப் பிற்காலத்தில் தசலட்சணம் எழுந்தது.**[76] **அவை 1. சர்க்கம் 2.விசர்க்கம் 3. விருத்தி 4. ரக்ஷா 5. சுந்தரா 6. வமிசம் 7. வமிசானு சரிதம் 8. ஹேது 9. சமஸ்தா 10. சுபஸ்ரஸ்ரயா என்பனவாகும்.**

**தசலட்சணம் மகாபுராணங்களுக்குரியவை என்றும் பஞ்சலட்சணம் உபபுராணங்களுக்குரியவை என்றும் புராணப்புலவர்கள் பிரித்துக் கொண்டார்கள்.**[77]

## 1.3.8. தண்டியாசிரியரின் காப்பியக் கொள்கைகள்

*"பெருங்காப் பியநிலை பேசுங் காலை*
*வாழ்த்து வணக்கம் வரபொரு ளிவற்றினொன்று*
*ஏற்புடைத் தாகி முன்வர வியன்று*
*நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்*
*தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்*
*மலைகடல் நாடு வளநகர் பருவம்*
*இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து*
*நன்மணம் புணர்தல் பொன் முடி கவித்தல்*
*பூம்பொழீல் நுகர்தல் புனல்விளை யாடல்*
*தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்*
*புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்று*
*இன்ன புனைந்த நன்னைடத் தாகி*
*மந்திரந் தூது செலவிகல் வென்றி*
*சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்*
*பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி*
*நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்*
*கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"* [78]

இவ்விலக்கணப்படிக் காப்பியமானது வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் கூறவேண்டும். பின்னர் காப்பியத்தின் பயனானது அறம், பொருள், இன்பம், வீடு இவைகள் பற்றிக் கூறவேண்டும். காப்பிய வருணையாக மலை, ஆறு, நாடு, நகரம் பற்றிக் கூற வேண்டும். காப்பியப் பொருளாகத் தலைவன் தலைவி குடும்பம் இவற்றுடன் மந்திரம் தூது போர்வெற்றி இவைபற்றியும் கூறவேண்டும்.

## 1.3.9. காப்பிய மரபு

தண்டியலங்காரக் காப்பிய இலக்கணத்தின் அடிப்படையிலேயே தமிழில் அதிகமான புராணங்கள் படைக்கப்பட்டுள்ளன. அதனால், *"புராணங்களும் தமிழில் காப்பியங்களாகவே கருதப் பெறும் தன்மையுடையன"* என்பர்[79]. கந்தசாமிப் புலவரும், தண்டியலங்காரக் காப்பியமரபு மீறாமல் புராணத்தின் சருக்கங்களை அமைத்துப் பாடியுள்ளார். நைமிசவனத்திலிருந்த சவுனகமுனிவர்கள், அங்குவந்த சூதமுனிவரிடம் இறைவனை எளிதில் அடையும் நல்வழிவகைகளைக் கூறுமாறு வேண்டுகின்றனர். அதற்குச் சூதமுனிவரும் புராணக்கதைகளைக் கூறுகிறார். இடையிடையே சவுனக

முனிவர்கள் விளக்கங்கள் கேட்கின்றனர். அவர்களது ஐயங்களைத் தீர்க்கும் வகையில் சூதமுனிவர் பதில் கூறும் வகையில் சருக்கங்கள் அமைந்துள்ளன.

தண்டியலங்காரத்தில் கூறப்பட்டுள்ள இக்கொள்கைகள் அனைத்துமே கந்தசாமிப் புலவரால் திருப்பூவணப் புராணத்தில் பின்பற்றப்பட்டுள்ளன.

## 1.4. புராண வகைகள்

வடமொழிப் புராணங்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம் 1.மகாபுராணங்கள் 2. உபபுராணங்கள் 3. அதிபுராணங்கள் என்பவைகளாகும். மகாபுராணங்களில் சமயம் பற்றிய செய்திகள் பெரும்பாலும் பொது நிலையிலேயே கூறப்படும். தனித் தெய்வப் பரவலை அடிப்படையாகக் கொண்டவை உபபுராணங்கள் ஆகும். *விரதம், தீர்த்தம், தலம் பற்றிப் பேசுபவைகளாக அதிபுராணங்கள் தோன்றின.*[80]

### 1.4.1. மகாபுராணங்கள்

பழமையான புராணங்களைச் சிறப்பிக்கும் நோக்கில் அவற்றைப் பிற்காலத்தவர்கள் மகாபுராணம் என்று அழைத்தனர்.[81] திருப்பூவணப் புராணத்திலே 460, 695, 1272 ஆகிய பாடல்களில் புராணங்கள் 18 எனக் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார். *"அவை, 1) சைவம், 2) பவிஷ்யம், 3) மார்க்கண்டம், 4) இலிங்கம், 5)காந்தம், 6) வராகம், 7) வாமனம், 8) மச்சம், 9) கூர்மம் 10) பிரமாண்டம் 11) காருடம் 12) நாரதீயம், 13) விஷ்ணு, 14) பாகவதம், 15) பிரமம், 16) பதுமம், 17) ஆக்னேயம், 18)**பிரமகைவர்த்தம்** என்பன"*[82].

இவற்றை முறையே, 'மச்சம் கூர்மம் வராகம் வாமனம், பிரமம் வைணவம் பாகவதம் சைவம், இலிங்கம் பௌடிகம் நாரதீயம் கானுடம், **பிரமகைவர்த்தம்** மார்க்கண்டேயம் காந்தம் பிரமாண்டம் ஆக்கினேயம் பதுமம் என்றிவை பாற்படு பதினெண் புராண மாகும்' எனத் திவாகரச் சூத்திரம் கூறுகிறது.

இப்பதினெண் புராணங்களும், திருப்பூவணப் புராணத்தில் கீழ்க்கண்ட பாடலில் வரிசைப் படுத்திப் பாடப் பெற்றுள்ளன.

*"சைவ மார்க்கண்டங் காந்தந்தந்தங்கியவி லிங்கங் கூர்மம்*
*வையகம்புகழ் வராகம் வாமனமருவு மச்சம்*
*பொய்யறு பிரமாண்டஞ் சீர்பொருந்துநற் பவுடிகத்தோ*
*டெய்திய பிரமம் பாற்பமிசைத்திடுமிவற்றினோடும்"*

*"காதல்கூர் நாரதீயங் கருடம் வயிணவஞ்சூழ்*
*மாதிரம்புகழும் பாகவதத்துடன்மருவுமேத*
*பேதமி லாக்கிநேயம் பிரமகைவர்த்தமியாவு*
*மோதிடநின்னாற்கேட்டோமொன்பதிற்றிருபுராணம்"* (பாடல் எண் 315, 316)

**இப்பதினெண் புராணங்களையும் 'மகாபுராணங்கள்' என்று கூறுவதை உறுதி செய்யும் வகையில், தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கத்தின் இறுதியிலே, இச்சருக்கத்தைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் பலன் சொல்லும் பாடலிலே, பிரமகைவர்த்த புராணத்தைப் 'பெரும் புராணம்' என்று கந்தசாமிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.**

*"பிரமகைவர்த்தமாம் **பெரும் புராணத்திற்***
*றருமஞ்ஞன் காதை யத்தியாயஞ் சாற்றிடி*
*னருமை யிங்கெழுபஃதந்த நாலதிற்*
*கரைதரு சவுனக கருத்திற் காண்டியால்"*(பாடல் 565)

**இதனால், மகாபுராணம் என்ற சொல்வழக்கும் கந்தசாமிப் புலவரால் புராண இலட்சணங்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவில் வழக்கத்திற்கு வந்து விட்டது என்பர்.**

## 1.4.2. உப புராணங்கள்

*"உபபுராணங்கள் பதினெட்டுள. அவை உசனம், கபிலம், காளி, சநற்குமாரம், சாம்பவம், சிவதர்மம், சௌரம், தூர்வாசம், நந்தி, நரசிங்கம், நாரதீயம், பாராசரீயம், பார்க்கவம், ஆங்கிரம், மாரீசம், மானவம், வாசிட்டம், இலிங்கம், வாருணம் முதலியன".*[83]

*"உபபுராணங்கள் இருபத்தொன்பது".*[84] **எனவும் கூறுவர். மகா புராணங்களைச் சார்ந்து பிற்காலத்தில் உபபுராணங்கள் எழுந்தன. இந்தப் புராணங்களைப் பற்றிய குறிப்பேதும் திருப்பூவணப் புராணத்தில் காணக்கிடைக்க வில்லை.**

## 1.4.3. அதிபுராணங்கள்

*"அதிபுராணங்கள் என்று மற்றொரு வகையான பதினெண் புராணங்களும் இருக்கின்றன. அவை, 1. பார்க்கவ புராணம் 2.முத்கல புராணம் 3.விநாயகர் சரிதவிரிவு 4.ஆதிபுராணம் 5. மகாபாகவதம் 6. தேவியின் சரிதவிரிவு 7. கர்க்கப் புராணம் 8. கல்கி புராணம் 9. கிருஷ்ணாவதாரக் கதை 10. வாசிஷ்டம் 11.பசுபதி புராணம் 12.பிருகத்தருமம்*

*13.பிருகந்நாரதீயம் 14. பிஷ்யோத்தரம் 15.பிருகத்வாமனம் 16.பிருகத் மாத்ஸ்யம் 17.சிவோத்தர தருமம் 18. சண்டி, இலட்சுமி, பராநந்தம் என்பவைகளாகும்'*[85].

இந்தப் புராணங்கள் பற்றிய குறிப்பேதும் திருப்பூவணப் புராணத்தில் கிடைக்கப் பெறவில்லை.

மகாபுராணங்களை மொழிபெயர்த்துத் தலபுராணங்கள் எழுதும் போது தலபுராணங்களுக்கென சில பொதுக்கூறுகளும் இடம் பெற்றன. அவை, 1. காப்புச் செய்யுள் 2.கடவுள் வாழ்த்து 3. அவையடக்கம் 4.திருநாட்டுப் படலம் 5.திருநகரப் படலம் 6. நைமிசாரண்யப் படலம் 7.புராணவரலாற்றுப் படலம் 8. தலமகிமைப்படலம் 9.தீர்த்தமகிமைப்படலம் 10.திருவிழா மகிமைப்படலம் 11.பதிகம் போல்வன. தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூன்றினைப்பற்றிப் பேசுவதாகத் தலபுராணங்கள் அமைகின்றன. இப்பொதுக்கூறுகள் திருப்பூவணப் புராணத்தில் பின்பற்றப்பட்டுள்ளன.

புராணங்கள், 1) கடவுள்வழி, 2) உலகவழி, 3) முனிவர் வழி, 4) அரசர்வழி மற்றும் 5) முன்னோர்வழி என பாடப்பெற்றுள்ளன. இவற்றில் தமிழில் பாடப் பெற்றுள்ள புராணங்கள் பெரும்பான்மையும் கடவுளின் சிறப்புக்களையும் அவர் எழுந்தருளியிருக்கும் தலத்தின் சிறப்பையும் அங்குள்ள தீர்த்தம் மற்றும் விருட்சங்களின் சிறப்பையும் எடுத்து இயம்புவனவாக உள்ளன. சூரிய வம்சம், சந்திர வம்சம் என்று கிரகங்களின் தலைமை பற்றியும் அதில் தோன்றியவர்களின் சிறப்புகள் பற்றியும் புராணங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. இதே போன்று முனிவர்வழி, அரசர்வழி மற்றும் முன்னோர் வழி எனவும் புராணங்கள் உள்ளன. வடமொழியிலிருந்து தமிழ்மொழிக்கு மாற்றம் பெற்ற புராணங்கள் **மான்மியம்** என்றும் **மகாத்மியம்** என்றும் அழைக்கப் பெற்றுள்ளன. சுமார் நானூறுக்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தமிழில் செய்யுள் வடிவில் உள்ளன.

திருப்பூவணப் புராணத்தில் 'மான்மியம்' என்ற சொல்லை 97, 324, 421, 452, 622, 656, 848, 1250, 1272, 1435 ஆகிய பாடல்களில் புலவர் பயன்படுத்தியுள்ளார். 'மகாத்மியம்' என்ற சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளதாக ஆய்வாளரால் அறியப்படவில்லை.

## 1.4.4. தீர்த்த புராணங்கள்

பிறந்த நாட்டைத் 'தாய் நாடு' என்றழைக்கின்றனர். பிரமபுத்ரா நதியைத் தவிர இந்தியத் திருநாட்டில் ஓடும் கங்கை, கோதாவரி, நருமதை, சிந்து, சரசுவதி, காவிரி, வைகை, தாமிரபரணி முதலான அனைத்து நதிகளுமே பெண்பால் பெயர்கொண்டனவாகவே உள்ளன. இந்த நதிகளின் தோற்றம், ஓட்டம், அவைகளின் புனிதத் தன்மை இவற்றை எடுத்துக் கூறுவதாகத் தீர்த்தப் புராணங்கள் அமைந்துள்ளன. *"திருச்சிற்றம்பல முனிவர் இயற்றிய காவேரி புராணமும், பொன்னிச் சிந்து மான்மிய புராணமும் பிற நதிப்புராணங்களும் உள்ளன".*[86] பஞ்சநதிப் புராணம், துலாகாவேரி புராணம், பெண்ணைநதிப் புராணம் ஆகியனவும் உள்ளன.

## 1.4.5. மலைத் தல(கிரி) புராணங்கள்

மயூரகிரிப் புராணம், நாகமலை, கயிலைமலை, சென்னிமலை ஆகிய தலங்களில் உள்ள புராணங்கள் அந்தந்த மலையின் பெயரால் வழங்கப் படுகின்றன.

## 1.4.6. விரத புராணங்கள்

நீரும் உணவும் மனிதன் உயிர் வாழ இன்றியமையாதன. திருத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபடும் போதும், ஒரு குறிப்பிட்ட தெய்வத்தை வழிபடும் போதும் பின்பற்ற வேண்டிய உணவுப் பழக்க வழக்கங்களை எடுத்துக் கூறுவதாக விரத புராணங்கள் அமைந்துள்ளன. விநாயகர் விரதம், நவராத்திரி விரதம், கிருத்திகை விரதம் இவற்றை மச்சபுராணம் விளக்குகிறது. விரத புராணங்கள் வரிசையில் நெல்லைநாதர் இயற்றிய சிவராத்திரிப் புராணம் தமிழில் உள்ளது.

## 1.4.7. சான்றோர் புராணங்கள்

மக்களுடன் மக்களாக வாழ்ந்த தெய்வத்தன்மை பொருந்தியவர்களின் புகழை எடுத்துக் கூறுவன சான்றோர் புராணங்களாகும். இவ்வகையில் மிகவும் பழமையான புராணங்கள் இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த - தெய்வங்களுக்கு இணையாகப் புகழ் பெற்ற அரசர்களின் பெருமைகளைக் கூறுவனவாக அமைந்துள்ளன.

1) அரிச்சந்திரபுராணம் 2) இராமாயணம் 3) மகாபாரதம் ஆகியபுராணங்களின் கூறுகளை நாடக வடிவில் இன்றும் தொலைக்காட்சி வழியாகவும், கிராமங்களில் மேடை நாடகங்களாகவும் மக்கள் பார்த்து மகிழ்கின்றனர்.

தமிழில், இறைவனுடன் தோழமைபூண்ட சுந்தரர் பெருமான் பாடிய 'திருத்தொண்டத் தொகை', மற்றும் அதனை விரிவாகச் சேக்கிழார் பெருமான் பாடிய 'பெரியபுராணம்' இவைகள் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றை நன்கு எடுத்துரைக்கின்றன. சேக்கிழார் புராணம், திருவாதவூரடிகள் புராணம் மற்றும் பல புராணங்கள் உள்ளன.

சமணர்களின் ஆதிபுராணம் திருத்தங்கர்களின் வரலாற்றை எடுத்துக் கூறுவதாக உள்ளது. சீறாப்புராணம் முகமதுநபியின் பெருமைகளை எடுத்துக் கூறுவதாக உள்ளது.

## 1.4.8. கடவுள் புராணம்

வடமொழியிலேயே கடவுள் புராணங்கள் நிறைந்துள்ளன. திருமுருகாற்றுப் படை நூல் கடவுள் புராணமாகவும் தலபுராணமாகவும் திகழ்கின்றது. *"கூர்ம புராணம், இலிங்க புராணம், கந்த புராணம் ஆகிய மூன்றும் முதன்முதலாகத் தமிழில் மொழிபெயர்த்து அதிவீரராம பாண்டியனால் எழுதப் பெற்றுள்ளன. வரதுங்கராம பாண்டியரின் பிரமோத்தர காண்டமும் கச்சியப்பரின் கந்தபுராணமும், மச்சபுராணமும், விநாயகர் புராணமும், பாகவதபுராணமும் தமிழில் தோன்றின"*[87].

வடமொழியில் தோன்றிய இதிகாசங்கள், மகாபாரதம் இராமாயணம் ஆகியவை நாடகங்களாக நடித்துக் காட்டப்படுகின்றன. தமிழ்க்கடவுளாக விளங்கும் முருகனின் 'வள்ளிதிருமணம்' இன்றும் கிராம மக்கள் நாடகமாகப் பார்த்து மகிழ்கின்றனர்.

தீர்த்தங்களின் சிறப்புக்களைக் கூறும் தீர்த்த புராணங்கள், மலைகளின் சிறப்புக்களைக் கூறும் கிரி புராணங்கள், விரதங்களின் சிறப்புக்களைக் கூறும் விரதபுராணங்கள், சான்றோர்களின் சிறப்புக்களைக் கூறும் கடவுள் புராணங்கள் ஆகிய இப்புராணங்களின் வரிசையில் ஒருதலத்தின் சிறப்புக்களைக் கூறும் தலபுராணங்கள் அமைந்துள்ளன.

## 1.5. தலபுராணம்

ஒருவரைப் பற்றி மிகவும் அதிகமாகப் புகழ்ந்து பேசுபவரைப் 'புராணம் பாடுகிறான்' என்று சொல்லும் வழக்கம் இன்றும் நாட்டுப்புறங்களில் நடைமுறையில் உள்ளது. ஒன்றின் சிறப்பினை விரித்துக் கூறுவது புராணம் ஆகும். ஒருவருடைய புகழைப் பிறர் அறியும் வகையில் பாடுவது 'சான்றோர் புராணம்' என்றும், ஒரு தெய்வத்தின் புகழைப் பாடுவது 'கடவுள் புராணம்' என்றும், ஒரு திருத்தலத்தின் புகழைப் பாடுவது 'தலபுராணம்' என்றும், விரதத்தின் சிறப்புகளைக் கூறுவனவற்றை 'விரதபுராணங்கள்' என்றும், தீர்த்தங்களின் சிறப்பைக் கூறுவனவற்றைத் 'தீர்த்த புராணங்கள்' என்றும் புராணங்களை ஐந்து பிரிவுகளாகப் பிரித்துக்கூறவியலும். இவ் வகை புராணங்கள் வடமொழியிலும் தமிழ் மொழியிலும் உள்ளன.

ஒரு கடவுளின் புகழைப் பாடுவது கடவுள்புராணமாகும். அதே கடவுள் ஒரு குறிப்பிட்ட திருத்தலத்தில் எழுந்தருளும் புகழைச் சிறப்பித்துக் கூறுவது தலபுராணமாகும். உதாரணமாகக் கந்தபுராணம் முருகனின் புகழைப் பாடும். திருத்தணிகைப் புராணமானது முருகன் திருத்தணிகையில் செய்த செயல்களின் புகழைப் பாடுவதாகும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நிலங்களைத் தமிழ் இலக்கணம் வகைப்படுத்துகிறது. இவற்றில் உள்ள தலங்களின் சிறப்புகளைத் தொகுத்துக் கூறுவன தலபுராணங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

திருமால் பிரமன் முதலான தேவர்களும், உமாதேவி மகாலெட்சுமி முதலான தேவியர்களும், அகத்தியர் வேதவியாசர் முதலான முனிவர்களும், ஞாயிறு திங்கள் முதலான கோள்களும், அரிச்சந்திரன் நளன் முதலான அரசர்களும், யானை முதல் எறும்பு வரையிலான விலங்கினங்களும் பூசனைகள் செய்து வழிபட்ட செய்திகள், பெற்ற வரங்கள் இவற்றை எடுத்துக்கூறும் வகையில் தலபுராணங்கள் பொதுவாக அமைந்திருக்கும்.

## 1.5.1. தலபுராணங்களின் பயன்கள்

துறக்க நிரயங்களை அடையக்கூடும் வகையில் பாவங்களை நீக்கிப் புண்ணியங்களைப் பெறவேண்டும். புண்ணியத்தை 'அறம்' என்றும், 'நல்வினை' என்றும், 'பொருள்' என்றும் கூறுவது வழக்கு. பாவத்தை 'மறம்' என்றும், 'அறன்கடை' என்றும், 'தீவினை' என்றும் 'பொருளல்லது' என்றும் 'அறம் அல்ல' என்றும் 'அல்லவை' என்றும் வழங்குவர் திருவள்ளுவப் பெருமான்.

*"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த*
*வின்னா வுலகம் புகல்"* [88]

*"அருள் நெறியை மனதிற்கொண்டவர் இருள் சேர்ந்த இன்னாத உலகத்தில் (நரகத்தில்) புகமாட்டார்கள்"* என்பது வள்ளுவன் வாக்கு. எனவே நரகம் புகாமல் இருக்கப் பாவத்தை ஒழித்தல் வேண்டும், புண்ணியத்தைச் சேர்த்தல் வேண்டும். சேர்த்துவைத்த பாவ புண்ணியங்கள் அடுத்தடுத்த பிறவிகளிலும் பயனளிக்கும் என்பதை

"நத்தம்போற் கேடு முளதாகுந் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது"[89]

என்ற குறளில் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் வேண்டியும், இனிப் பாவங்கள் செய்யாதிருக்கவும் திருத்தலங்களில் தீர்த்தங்களும், விருட்சங்களும், மூர்த்தியும் துணை செய்கின்றன. பாவங்களை நீக்கிப் புண்ணியம் செய்திடும் வழிவகைகளையும் திருத்தலப்புராணங்கள் கூறுகின்றன.

## 1.5.2. பிற நாட்டுத் தலபுராணங்கள்

தமிழ் நாட்டின் அண்டை நாடாக சிரீலங்கா (இலங்கை) உள்ளது. அங்கும் தமிழர்கள் காலங்காலமாய் யுகயுகமாய் வாழ்கின்றனர்.
ஈழ நாட்டுத்தலபுராணங்கள்

*"வடவேங்கடம் தென்குமரி*
*ஆஇடைத்*
*தமிழ்கூறும் நல் உலகத்து"* [90]

எனத் தமிழகத்தின் எல்லையைத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் குறிப்பிடுகிறது. இக்கருத்தைக்,

*"குலவுவட**வேங்கடந்தென்குமரியெனத்தமிழெல்லை** கூறுகின்ற*
*தலமதனிற்றலைமை பெறு தலமீரேழ்தயங்குறுசெந்தமிழ் நாடென்றே*
*யிலகுமரியயனமாரிந்திரன் வந்திறைஞ்சவருளேற்பநல்கு*
*மலைமகணல்லரசினறம்வளர்க்கவளஞ்சுரந்தளிக்கும் வைகைநாடு"* (பாடல் 115)

என்ற திருப்பூவணப் புராணப் பாடலும் எடுத்துரைக்கிறது. தொன்று தொட்டுத் தமிழகத்திற்கு அருகில் உள்ள ஈழத்திலும் தமிழர் வாழ்ந்து வருகின்றனர். முதலாம் யுகமாகிய கிரேதா யுகத்தில் இலங்கையை ஆண்ட இராவணேசுவரன் ஓர் தமிழ் மன்னன் எனக் கருதப்படுகிறான். யாழ்ப்பாணம் தமிழ்நாட்டுடன் சங்ககாலம் முதற்கொண்டு தொடர்புடையதாகவே இருந்து வந்துள்ளது. ஈழநாட்டில் தமிழ்ச் செய்யுள் இலக்கியத்தின் தோற்றம் மிகப் பழமையானது. இங்கு *"கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே தமிழ் இலக்கியங்கள் தோன்றி வளர்ந்ததாகக் கூறுவர். ஆயினும், ஆரியச் சக்கரவர்த்திகள் (கி.பி. 1250 - 1621) காலத்தில் தோன்றிய 'சரசோதி மாலை' (கி.பி. 1310) என்ற நூலே முதல் ஈழத் தமிழ் நூலாக இன்று கிடைக்கப்பெற்றுள்ளது. பண்டிதபோசராசன் இயற்றிய இந்நூலுக்கு முன்னே பல நூல்கள் இயற்றப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகின்றது".*[91] தூது காதல் கோவை ஆகிய அகப்பொருள் நூல்களும், பள்ளு அந்தாதி பதிகம் ஊஞ்சல் புராணம் காவியம் ஆகிய புறப்பொருள் வகை நூல்களும் தோன்றியுள்ளன. ஈழத்தில் திருமுறைப் பாடல் பெற்ற சிவத் தலங்கள் இரண்டு உள்ளன. அவை திருக்கோணேசுவரம், திருக்கேதீசுவரம் ஆகும்.

### 1.5.2.1. திருக்கோணேசுவரம்

திருக்கோணேசுவரம் **தட்சிண கயிலாயம்** என்று போற்றப்பட்டு வருகிறது.

*"நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு நிமலநீ றணிதிரு மேனி*
*வரைகெழுமக ளோர் பாகமாகப் புணர்ந்த வடிவினர் கொடியணிவிடையர்*
*கரைகெழு சந்துங் காரகிற் பிளவு மளப்பருங் கனமணி வரன்றிக்*
*குரைகட லோத நித்திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந்தாரே"*

என்று பாடப் பெற்ற தலம்[92]. திருகோணமலையிற் கோயில் கொண்டிருக்கும் கோணேசுவரரையும், மாதுமையாள் அம்மையையும் பற்றிக் கூறும் 'தட்சிணகைலாச புராணம்' என்னும் தலபுராணமே ஈழத்தில் கிடைக்கும் முதல் தமிழ்த் தலபுராணம் ஆகும். வடமொழியில் உள்ள **மச்சேந்திய புராணத்தைத்** தழுவியே இந்நூல் இயற்றப் பட்டுள்ளதென அதன் பாயிரச் செய்யுள் காட்டும்.

*"மீதுயர்ந்த வுருத்திரரும் விரிபதுமப் பெருமலரின் விரிஞ்சர் தாமும்*
*போதுதிரு மாதவரு மாதவர்க்கு ளொருபெரிய புனித மீனு*
*மாதரவி லிறைஞ்சுகதை கயிலாய புராணமென வறைய லுற்றேன்*
*மாதுரிய* ***மச்சேந்திய வடபுராண*** *ணத்தியல்பு மருவத் தானே"*

இதில்ஏழு சருக்கங்களும் 632 செய்யுட்களும் உள்ளன.

### 1.5.2.2. திருக்கேதீச்சுரம்

ஈழ நாட்டிலுள்ள மற்றொரு சைவசத் தலம் திருக்கேதீச்சுரம், கேது பூசித்தமையால் இது கேதீச்சுரம் என்று பெயர் பெற்றுள்ளது. 'செய்ய கேது தலையற்ற வந்நாள் திருந்து பூசனை செய்து முடிப்போன்' என்று பாடப்பெற்றுள்ளது. இலங்கையில் மாந்தை என்னும் மாதோட்ட நகரிலே பாலாவி என்னும் ஆற்றின் கரையில் உள்ளது. பாடல் பெற்ற தலம்.

*"மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி*
*மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரிற்*
*பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேற்*
*தேவனெனை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே"*

*"பண்டு நால்வருக்கு அறம்உரைத் தருளிப் பல்லுல கினில்உயிர் வாழ்க்கை*
*கண்ட நாதனார் கடலிலங் கைதொழக் காத லித்துறை கோயில்*
*வண்டு பண்செயு மாமலர்ப் பொழின் மஞ்சை நடமிடு மாதோட்டம்*
*தொண்டர் நாடொ றும்துதி செயஅருள் கேதீச் சரமது தானே"*

- எனத் திருஞான சம்பந்தப்பெருமானும்,

*"அங்கத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருளி*
*வங்கம்மலி கின்றகடன் மாதோட்ட நன்னகரில்*
*பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்*
*தெங்கம்பொழில் சூழந்ததிருக் கேதீச்சரத் தானே"*

- எனச் சுந்தரர் பெருமானும் பாடியருளியுள்ளனர். பிருகு முனிவர், மாலியவான் என்னும் அசுர மன்னன் போன்ற பலர் வழிபட்டுப் பேறு பெற்ற ஊர். இத்தலத்திற்குரிய **திருக்கேதீச்சுர புராணம்** வைத்தீசுவர குருக்களால் இயற்றப் பெற்றுள்ளது.

1) கதிர்காமப் புராணம், 2) வியாக்கிரபாத புராணம், 3) திருக்கரைசைப் புராணம், 4) திருத்திண்ணபுரம் என்னும் தலத்திற்குரிய ஈழத்துச் சிதம்பர புராணம் ஆகிய நான்கும் ஈழத்தமிழ் புராணங்களாக அறியக் கிடைக்கின்றன.

## 1.5.3.தெலுங்கில் தலபுராணங்கள்

திராவிட மொழிகளில் தமிழையும் தெலுங்கையும் தவிர மற்ற மொழிகளில் தலபுராணங்கள் இல்லை. தெலுங்கிலும் சில தலபுராணங்களே இயற்றப் பட்டுள்ளன. பதினான்காம் நூற்றாண்டு முதலாகத் தென்னகத்தில் ஏற்பட்ட இலக்கிய

மறுமலர்ச்சியின் போது தெலுங்கில் தலபுராணங்கள் எழுதப் பெற்றுள்ளன. 'ஸ்ரீநாதர்' என்ற 'ஸ்ரீநாதுடு' இரண்டு தலபுராணங்களை எழுதியுள்ளார்.[93]

### 1.5.3.1. பீமேசுவ புராணம்

ஆந்திராவில் **தாஷராமம்** என்னும் தலத்திலிருக்கும் பீமேசுவரனின் திருவிளையாடல்களை பீமேசுவ புராணம் என்னும் தலபுராணம் விளக்குகிறது. இதில் ஆறு பகுதிகள் உள்ளன.

### 1.5.3.2. காசிக் காண்டம்

காசிக்காண்டம் என்ற நூல் வடமொழியிலுள்ள காசிக்காண்டத்தின் தெலுங்கு மொழிபெயர்ப்புக் காப்பியமாகும். காசியின் மகத்துவத்தை விளக்கும் இத்தலபுராணத்தில் மூலபுராணத்தில் இல்லாத சில புதுக்கதைகளையும் ஸ்ரீநாதுடு புகுத்தியுள்ளார். இதே காசிக்காண்டத்தை வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்து அதிவீரராம பாண்டியர் பாடியுள்ளது இங்கே ஒப்புநோக்கத் தக்கதாய் உள்ளது.

காஞ்சி மகாத்மியம், பாண்டுரங்க மகாத்மியம், ஸ்ரீகாளஹஸ்தி மகாத்மியம், ஸ்ரீரங்க மகாத்மியம், வேங்கடாசல மகாத்மியம், கார்த்திக மகாத்மியம், விருத்தாச்சல மகாத்மியம் போன்ற பிற தெலுங்கு மொழிப் புராணங்களும் உள்ளன.

## 1.5.4. பிற சமயங்களில் தலபுராணங்கள்

இந்தியத் திருநாட்டில் பௌத்தம், சமணம், பார்சியம், இசுலாம், கிருத்துவம் போன்ற பிற சமயங்களும் உள்ளன. எனவே இந்த சமயங்களில் உள்ள தலபுராணங்கள் இங்கே ஆராயப்பெற்றுள்ளன.

பௌத்த சமயத்தில் தலபுராணங்கள் எதுவும் இயற்றப் பெற்றதாக அறியப்பெறவில்லை.

*"புராணம் என்று ஜைனர்கள் வழங்குவது பிராகிருத மொழியில் உள்ள ஆதிபுராணமாகும். அதிலே தீர்த்தங்கர்களது வரலாறும், அந்த வரலாற்றிடையே அவ்வவர் காலத்தே வாழ்ந்த அரசர்கள் கதையும் வாசுதேவர், பிரதி வாசுதேவர்கள் வரலாறும் வரக்காண்கிறோம். சிந்தாமணி கூறும் சீவகன் கதையும் சூளாமணி கூறும் திவிட்டன்*

*கதையும அந்தப் புராணத்தில் கூறப்பெற்றுள்ளனவேயாம்".*[94] சமண சமயத்தில் தலபுராணங்கள் எதுவும் இயற்றப் பெற்றதாக அறியப் பெறவில்லை. இருபத்துநான்கு தீர்த்தங்கரர்களுள் இருபத்திரண்டு பேர் பீகார் மாநிலத்தில் உள்ள சன்மேதசிகரம் என்ற இடத்தில் முத்தி அடைந்துள்ளனர். குஜராத் மாநிலத்தில் ஊர்ஜயந்தகிரியில் ஒருவரும், கைலாச மலையில் ஒருவரும் முக்தி அடைந்துள்ளனர். தீர்த்தங்கரர்கள் முத்தியடைந்த இத்தலங்களையே சமணர்கள் வணங்கி வழிபட்டு வருகின்றனர். சமணர்கள் வழிபடும் இம்மூன்று தலங்களுக்கும் அவர்கள் தலபுராணம் ஏதும் இயற்றியுள்ளதாக அறியப்பட வில்லை.

### 1.5.4.1. இசுலாம் சமயத்தில் தலபுராணம்

இசுலாம் உலகில் பரவுவதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே முகமதியர்களின் மூதாதையர்களான அரபு மக்களுடன் தமிழ்மக்கள் வாணிபம் செய்து வந்துள்ளனர். ஏற்றுமதி இறக்குமதி வாணிபங்கள் நடைபெற்றுள்ளன. வாசனைத் திரவியங்களும் அரிசியும் துணிகளும் ஏற்றுமதிப் பொருட்களாகவும், குதிரை போன்றவை இறக்குமதி பொருட்களைாகவும் வாணிபம் செய்யப்பட்டுள்ளன.

தமிழ் இலக்கியங்களின் மீது கொண்ட பற்றின் காரணமாக இசுலாமியர்களும் தமிழில் இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளனர். 1) சீறாப்புராணம், 2) திருக்காரணப் புராணம், 3) முகயித்தீன் புராணம், 4) நாகூர்ப்புராணம் என்பன உள்ளன.

இவற்றில் இசுலாம் மதத்தை நிறுவிய முகம்மது(சல்) அவர்களின் வரலாற்றைச் சீதக்காதியின் அவைப்புலவரான உமறுப்புலவர் 'சீறாப்புராணம்' என்ற பெயரில் 17ஆம் நூற்றாண்டில் பாடியுள்ளார்.

திருக்காரணப் புராணம் - அப்துல் காதிறு சாகுல் கமீது ஆண்டகை அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், முகயித்தீன் புராணம் - முகைதீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும் கொண்டதாக உள்ளன.

நாகூர் புராணம் மட்டுமே தலபுராணமாக உள்ளது. தமிழ்நாட்டில் உள்ள நாகூரில் சாகுல்கமீது ஆண்டகை அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளார். அவர் அடக்கம் செய்யப் பெற்ற பின்னர் நடைபெற்ற நிகழ்ச்சிகளே நாகூர்ப்புராணத்தில்

வருணிக்கப் பெற்றுள்ளன. நாகூர் குலாம்காதிறு நாவலர் அவர்கள் 1882ஆம் ஆண்டு இப்புராணத்தை இயற்றியுள்ளார். இப்புராணத்தில் புங்கை மரங்களே 'நாக மரங்கள்' என்று அழைக்கப்பட்டன என்றும், நாகமரங்கள் சூழ்ந்திருந்ததனால் இது 'நாகவூர்' என்றும் பின்னர் மறுவி 'நாகூர்' என்றும் அழைக்கப்பட்டதாக இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 1.5.4.2. கிருத்துவ சமயத்தில் தலபுராணம்

கிருத்துவ சமயத்தில் இத்தாலியிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்த 'பெஷி' என்ற 'வீரமாமுனிவர்' 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் 'தேம்பாவணி'யைப் புராண நடையிலேயே பாடியுள்ளார்.

கிருத்துவ மதத்தில் தலபுராணங்கள் ஏதும் இயற்றப்பெற்றுள்ளதாக ஆய்வாளரால் அறியப்படவில்லை.

## 1.5.5. அரசியல் மற்றும் சாதிப் புராணங்கள்

அண்மைக்காலத்தில் அசலாம்பிகை அம்மையார் அவர்கள் அரசியலை மையமிட்டு **காந்திபுராணம்** எழுதியுள்ளார்.

சாதியை மையமிட்டுக் **குலாலர் புராணம், செங்குந்தர் புராணம்** ஆகியன உருவாகியுள்ளன.

## 1.5.6. வைணவத் தலபுராணங்கள்

வைணவக் கோட்பாட்டிற்கு வேதங்களே அடிப்படையாகும். வேதங்களுள் 'ரிக்' வேதத்திலுள்ள 'புருஷ ஸூக்தம்' இன்றியமையாத பகுதியாகும். மேலும், உபநிடதங்கள்[95], பிரம சூத்ரம், பகவத்கீதை, வைகானஸம், பாஞ்சராத்திரம் இவையும், பதினெண் புராணங்களுள் விஷ்ணு புராணம், பாகவதம், நாரதீயம், காரூடம் ஆகிய நான்கும், இதிகாசங்களில் பாரதமும், இராமாயணமும், தோத்திர நூலாகிய விஷ்ணு சகஸ்ரநாமமும், இவற்றோடு பன்னிரண்டு ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்யபிரபந்தமும், இதனை விளக்க வந்த உரை நூல்களும் சிறப்புடைய வைணவ நூல்களாகக் கருதப் பெறுகின்றன. வேதத்தின் சாரமாக விளங்குவன நம்மாழ்வாரின்

திருப்பாசுரங்கள், அவற்றுள், திருவிருத்தம் - இருக்கு வேத சாரம் எனவும். திருவாசிரியம் -யஜுர் வேத சாரம் எனவும், பெரிய திருவந்தாதி அதர்வண வேத சாரம் எனவும், திருவாய்மொழி சாமவேத சாரம் எனவும் போற்றுவர்.[96]

பதினாறாம் நூற்றாண்டில் ஏற்பட்ட சமய எழுச்சியால் சில பெருநூல்கள் வைணவத்தில் தோன்றலாயின. இரண்டு பாகவதங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. ***கூடற் புராணமும் திருக்குருகை மான்மியமும்*** தலபுராணங்களாகத் தோன்றின.

வைணவத் திருத்தலங்கள் அதிகமான எண்ணிக்கையில் இருந்தாலும் அவற்றுள் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற தலங்கள் 108 ஆகும். இவற்றுள் திருமால் நேரில் காட்சியளித்த திருத்தலங்களில் ஒன்றாகத் திருவேங்கடம் திகழ்கிறது. வெங்கடாத்ரி, சேசாசலம், வேதாசலம், கருடாசலம், விருசாபாத்ரி, அஞ்சனாத்ரி, ஆனந்தாத்ரி என்ற ஏழுமலைகளுக்கு நடுவே திருவேங்கடவன் திருக்கோயில் உள்ளது. இங்கு 14 தீர்த்தங்கள் உள்ளன. இத்தலத்தின் புராணம் வடமொழியில் வியாசமுனிவரால் 'சேடாசல மகிமை' என்ற பெயரில் எழுதப் பெற்றுள்ளது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்துத் 'திருவேங்கடத் தலபுராணம்' என்ற பெயரில் மதுரகவி வீரராகவ ஐயங்கார் அவர்கள் பாடியுள்ளார்.

வைணவத்தலங்களில் தலபுராணம் சிறப்பாகத் தமிழில் அமையப்பெற்ற தலமாகத் திருவேங்கட புராணம் அமைந்துள்ளது.

## 1.5.7. வேதத்தில் கூறப்பெறும் தலங்கள்

கோயில் என்னும் சிதம்பரத் தலச் சிறப்பு வேதத்திலுள்ள தர்சனோபநிஷத்திலே கூறப்பட்டுள்ளது. இதில், சிதம்பரம் இருதய மத்தியிலுள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது.[97] இராமேசுவரம் என்னும் சேதுவின் சிறப்பு, ரிக்வேதசம்மிதை மண்டலம்10, சூக்தம் 115.3 இல் கூறப்பட்டுள்ளது. இந்தச் சேதுவைத் தரிசிப்பவர் சம்சாரத்தைக் கடக்கின்றனர் என்று யஜுர் வேதம் தைத்ரீய சம்மிதை (3-2-2-2) கூறுகிறது. அறிஞர்கள் திருமாலின் உயர்ந்த வடிவமாகச் சேதுத்தலத்தைக் காண்கின்றனர் என்றும் (1-3-6-12-13) கூறுகிறது. வேதாரண்யம், வில்வாரண்யம்,

கோடம்பூர், திருக்காட்டுப் பள்ளி போன்றன ஸ்ரீருத்தரத்தில் கூறப்பெற்றுள்ள தலங்களாகும். ஒஷதீனாம்பதி என்ற சொல்லால் விளங்கும் மருந்து மரங்களும் தலங்களுமாவன, மருதமரம் - திருவிடைமருதூர், புன்கமரம் - திருப்புன்கூர், கருக்காய் - தருக்குறுக்கை, வேம்பு - புள்ளிருக்குவேளூர் என்பன.[98]

## 1.5.8. இதிகாசத்தில் கூறப்பெறும் தலங்கள்

திருவெண்காடு என்னும் சுவேதாரண்ய தலத்தில் இராமன் விடுத்த பாணத்தால் கரன் விழுந்து இறந்தான் என்பதை வால்மீகி இராமாயணம் ஆரண்ய காண்டம் முப்பதாம் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது. இராமேசுவரத்தின் சிறப்பை ராமன் சீதைக்கு உரைப்பதாக வால்மீகி இராமாயணம் யுத்த காண்டத்தில் கூறப் பெற்றுள்ளது.[99]

## 1.5.9. தமிழில் தல புராணங்கள்

தமிழில் செய்யுள் வடிவில் 382 புராணங்கள் உள்ளன[100] என அறியமுடிகிறது. மேலும், தமிழில் உரைநடையாகத் தலபுராணங்கள் 484 உள்ளன[101] என அறியமுடிகிறது. தமிழ்நாட்டிலுள்ள பல திருத்தலங்களுக்குத் தலபுராணங்கள் வடமொழியில் உள்ளன. தமிழிலுள்ள 115 தலபுராணங்களும் அவற்றின் வடமொழி மூலங்களும் அறியப்பெற்றுள்ளன[102]. இவற்றுள் பல தமிழில் மொழிபெயர்த்துப் பாடப்பெற்றுள்ளன. இதனால், தலபுராணங்கள் தமிழில் அதிகமுள்ளன. *"வடமொழியில் வேதம், இதிகாசம் என்று இவற்றிற்கு அடுத்துவைத்துப் பாராட்டப்படுகின்றன. இவை தமிழில் சிறப்பாக மொழிபெயர்த்து 15-16ஆம் நூற்றாண்டுகளில் எழுதப்பெற்றன்ளன. 1564ல் முடிசூடின அதிவீரராம பாண்டியர் கூர்மபுராணம், இலிங்கபுராணம், கந்த புராணத்தில் ஒரு பகுதியாகிய காசிகண்டம் முதலியவற்றை மொழிபெயர்த்தார். விஜயநகர இந்து சாம்ராச்சியம் பரவியதால் எழுந்த நன்மைகளில் இதுவும் ஒன்று எனலாம்"*[103]. இக்காரணங்களால், தமிழ் நாட்டில் 'புராணங்கள்' என்றால் அவை மிகுதியும் தலபுராணங்களையே குறிப்பிடுவதாக உள்ளன.

## 1.6. திருப்பூவணப் புராணம்

வடமொழியில் உள்ள பிரமகைவர்த்த புராணத்தின் தமிழ் மொழிபெயர்ப்பாகத் திருப்பூவணப் புராணம் உள்ளது. எனவே பதினெண் புராணங்கள், பிரமகைவர்த்த புராணம், திருப்பூவணப் புராணம் ஆகிய இப்பகுதியில் ஆராயப்பட்டுள்ளன.

### 1.6.1 பிரமகைவர்த்த புராணம்

*".... முந்த **மறைநான்கினொடு புராண மூவாறு** முழுதுல*
*கமிறைஞ்ச வன்பின் **மொழிந்த வியாதன்**...." (பாடல் எண் 60)*

கூறிய பதினெண் புராணங்களில் பிரமகைவர்த்த புராணமும் ஒன்று. இதில் 70 முதல் 84முடிய உள்ள அத்தியாயங்களில் திருப்பூவணப் புராணம் கூறப்பெற்றுள்ளது. பதினெண் புராணங்களையும்,

*"சைவ மார்க்கண்டங் காந்தந்தந்தங்கியவி லிங்கங் கூர்மம்*
*வையகம்புகழ் வராகம் வாமனமருவு மச்சம்*
*பொய்யறு பிரமாண்டஞ் சீர்பொருந்துநற் பவுடிகத்தோ*
*டெய்திய பிரமம் பாற்பமிசைத்திடுமிவற்றினோடும்"*

*"காதல்கூர் நாரதீயங் கருடம் வயிணவஞ்சூழ்*
*மாதிரம்புகழும் பாகவதத்துடன்மருவுமேத*
*பேதமி லாக்கிநேயம் **பிரமகைவர்த்த** மியாவு*
*மோதிடநின்னாற்கேட்டோமொன்பதிற்றிருபுராணம்"* (பாடல் எண் 315, 316)

என்று திருப்பூவணப் புராணம் வரிசைப்படுத்திக் கூறுகிறது.

#### 1.6.1.1.பிரம***கை***வர்த்தமும் பிரம***வை***வர்த்தமும்

திருப்பூவணப் புராணத்தில் பிரம***கை***வர்த்த புராணம் என்று குறிப்பிடப் பட்டுள்ள இப்புராணம் வேறு பிற நூல்களில் பிரம***வை***வர்த்த புராணம் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. மேற்கண்ட பாடலிலும்,

*"நிகழ் மறை யுணர்ந்த சவுநக முநிவ நீடு*
*புக ழுலகெலாம் பரவு பூவண மிகுஞ்சீர்*
*மகிழ் **பிரமகைவர்த்த** மாகிய புராணந்*
*திக ழெழுபதென்னு மத்தியாய மிது சொல்வார்"* (பாடல் 307)

என்ற பாடலிலும், மற்றும் 405, 448, 56, 656, 692, 784, 1191, 1288, மற்றும்1328 ஆகிய அனைத்துப் பாடல்களிலும் 'பிரமகைவர்த்த புராணம்' என்றே பாடப் பெற்றுள்ளது.

வேதம்கற்ற பண்டிதர்கள், வடமொழி யறிந்த நூலோர்கள்[104] இப் புராணத்தைப் '**பிரம*வை*வர்த்த** புராணம்' என்றே அழைக்கின்றனர். மகாபுராணங்களின் பெயர் வரிசையைக் கூறும் ப.முத்துக்குமாரசாமி, 'பிரம***வை***வர்த்தம்' என்றே குறிப்பிடுகிறார்.[105] *"பிரமவைவர்த்த புராணம் ஒரு ராஜஸிக புராணம். இது பிரம காண்டம், பிரகிருதி காண்டம், கணேச காண்டம். ஸ்ரீ கிருஷ்ண காண்டம் என நான்கு காண்டங்களைக் கொண்டது. இது பிரமனைப் பற்றியும் அவருடைய வைவர்த்தம் (பரிணாம வளர்ச்சி) பற்றியும் விவரிக்கிறது".*[106], திருப்பூவணத் திருக்கோயில் தொடர்பாகச் சிறப்புக்கட்டுரைகள் எழுதி வெளியிட்ட குமுதம்ஜோதிடம்[107] ஆசிரியர் ஏ.எம். இராசகோபாலன் தனது கட்டுரைகளில்[108] 'பிரமவைவர்த்த புராணம்' என்றே குறிப்பிட்டு எழுதியுள்ளார். மேலும் புராணங்கள் தொடர்பான இணைய தளங்களிலும் பிரமவைவர்த்த புராணம் என்றே குறிப்பிடப் பட்டுள்ளது. "*இது ராதையின் பிறப்பு, வளர்ப்பு, கோலாகம், சேத்திரமான்மியம், கனவின் பலன், ராதா சகஸ்ரநாமம் ஆகியவற்றைக் கூறுவது. ஜயதேவர் இயற்றிய அஷ்டபதிக்கு மூலாதாரமானது".*[109] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

### 1.6.1.2. எழுத்துப் பிழை

இது திருப்பூவணப் புராணத்தை ஏட்டுப்பிரதியிலிருந்து எடுத்து அச்சேற்றும் போது ஏற்பட்ட அச்சுப் பிழையாக இருக்கலாம்! புராணப் புத்தகத்தின் கடைசிப் பக்கத்தில் உள்ள பிழைத்திருத்தத்தில் இதுபற்றி ஏதும் குறிப்பிடப்பெறவில்லை. எனவே புத்தகத்தை அச்சிட்ட இ. இராமசுவாமிப்பிள்ளை என்ற ஞானசம்பந்தப் பிள்ளை அவர்களும், அதனைப்பிழைத்திருத்தம் செய்தோரும், இவர்களை இப்பணிக்கு நெறிப்படுத்திய அன்றைய மதுரை ஆதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண சுவாமிகள் அவர்களும், இதனைப் பிரமகைவர்த்தபுராணம் என்றே ஏற்றுக் கொண்டுள்ளனர் என அறியமுடிகிறது. அபிதான சிந்தாமணியில் பிரமகைவர்த்தபுராணம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

இதனால், திருப்பூவணப் புராணத்தின் வடமொழியிலான மூலநூலின் பெயர் மேலும் ஆய்விற்கு உரியதாக உள்ளது. திருப்பூவணப்புராணத்தில் அனைத்து

இடங்களிலும் பிரமகைவர்த்த புராணம் என்றே குறிப்பிடப் பெற்றுள்ளதால் இவ்வாய்வேட்டிலும் அச்சொல்லே பயன்படுத்தப் பட்டுள்ளது.

### 1.6.1.3. பிரமகைவர்த்தத்திலுள்ள பிற தலபுராணங்கள்

பிரமகைவர்த்த புராணத்தில் திருப்பூவணப் புராணத்தைத் தவிர மற்றபிற திருத்தலங்களின் புராணங்களும் கூறப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியல் கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

| வரிசை எண் | வடமொழி நூல் | தமிழில் மொழிபெயர்த்துப் பாடப் பெற்ற புராணங்கள்[110] |
|---|---|---|
| 1 | பிரமகைவர்த்த புராணம் - சிவசேத்திர காண்டம் | கருவூர்ப் புராணம் |
| 2 | பிரமகைவர்த்த புராணம் - உத்தரபாகம் சேத்திர காண்டம் - பாரிஜாதவன அகசேசுவர மகாத்மியம் | திருவாடானைத் தலபுராணம் |
| 3 | பிரமகைவர்த்த புராணம் | திருவையாற்றுப் புராணம் |
| 4 | பிரமகைவர்த்த புராணம் | மடவார் வளாகம் என்னும் புதுவைத் தலபுராணம் |
| 5 | பிரமகைவர்த்த புராணம் - சேத்திர காண்டம் | மாயூரப் புராணம் |
| 6 | பிரமகைவர்த்த புராணம் | திருவெண்காட்டுப் (சுவேதவனம்) புராணம் |
| 7 | பிரமகைவர்த்த புராணம் - அத்தியாயம் 70 முதல் 84 முடிய | திருப்பூவணப் (புட்பவனம்)புராணம் |

## 1.6.2. திருப்பூவணப் புராணம் கூறுதல்

*"…. நைமிசாராணியந்தன்னி னற்றவத்தின் மிக்க சிவஞானவேட்கைச்*
*சவுநகாதிய முனிவர் கணங்களானோர் தர்க்கமோ டுத்தரங்கள் சாற்றித் தாபித்*
*துவமனிலாமாதவன்றன் மைந்தன் மைந்தரொருமையுடனிருண் மலந்தீர்ந்திருந்தங்கோர்நாட்*
*சிவனடியை யடையும் வகை தெரிக்குங் காதை சேர்ந்தவர் கடாந் ….. "* (பாடல் 47)

நைமிசாரணிய வனத்தில், நற்றவத்தின் மிக்க சிவஞான வேட்கையுடைய சவுனகாதிய முனிவர் கணங்கள், தர்க்கமோடு ஆதாரங்கள் சாற்றிச் சிவனடியை அடையும் வகைகளைத் தெரிவிக்குமாறு கேட்க, சூதமுனிவர் தலவரலாறுகளைக் கூறிவருகிறார். அப்போது சவுனமுனிவர்கள் சூதரிடம்,

*"முன்பொர் தினந்தனின் மூதறிவாலே*
*மன்பயில்* ***புட்பவனத்தது காதை***
*மின்பயில் கின்ற* ***சுவேதவனத்தி***
*னன்கதை நாப்பண வின்றிடு காலை*[111] *(பாடல் 57)*
*அப்பரிசங்க ணறைந்த சுருக்க*
*மெய்ப்பட நாடி விளங்க விரித்துத்*
*திப்பியமான செழுங்கதை மேன்மை*
*யிப்பரிசென்ன வியம்பிட வேண்டும் (பாடல் 58)*

என விரும்பிக் கேட்டனர். அது கேட்டு, நன்று நன்று என்று கூறிச் சூதமுனிவரும் திருப்பூவணப் புராணக் கதைகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கூறுகிறார்.

## 1.6.3. திருப்பூவணப் புராணத் தோற்றம்

*".... கந்தனிசைத்திட வந்நந்தி*
*தன்றனிச் சொல்சற்குமரன் கொடே*
*வென்றி வேதவியாதற் குரைக்க வமு*
*தன்றெனக் கவன் சொன்ன தறைகு வேன்" (பாடல் 92)*

*"நந்திதான் கேட்டவற்றை நற் சநற்குமாரற் கோத*
*வந்த நற்சனற்குமார னருள் வியாதற் குரைப்பச்*
*சுந்தர வியாதனெற்குத்* ***தொகுத் து****பதேசஞ் செய்ய*
*முந்துறக் கேட்டவற்றை மொழிந்தன னுமக்கியானே" (பாடல் 689)*

என்று சூதமுனிவர் கூறுகிறார். புராணக் கதைகளை முதலில் முருகப் பெருமானே நந்திதேவருக்கு உரைத்தார். நந்தி தேவர் அவற்றைச் சனகாதி முனிவர்களுக்கு எடுத்து உரைக்க, அம்முனிவர்கள் வியாசருக்கு விரித்துக் கூறினர் என்றும், வியாச முனிவர் அவற்றைச் சூதமுனிவருக்குத் தொகுத்துக் கூறினார் என்றும் பாடப் பெற்றுள்ளது. இக்கருத்தை உறுதி செய்யும் வகையில்,

*"பங்கயத் திருமங்கை சாபந்தவிர்த்திடு காதைதான்*
*றங்கு நற் சொல்பகர்ந்துளோர் தஞ்செவிக் கொடுநாடுவோர்*
*துங்கமிக்க பலன்கள் சீர்துன்றுளத் தருள்கூரவே*
*மங்கலத்தினி* ***னந்திநேர் வந்து****ரைக்கினுமரிதரோ "* (பாடல் 858)

என்ற இப்பாடல் அமைந்துள்ளது. திருநந்தி தேவரே[112] நேரில் வந்தாலும் அனைத்துப் பலன்களையும் விடுதலின்றி விரித்துக் கூறிடுவது அரிதாகும் என்று பாடப்பெற்றுள்ளது. அவ்வளவிற்குப் பலன்கள் அதிகமாக உள்ளன என்பது இதனால் பொருளாகிறது.

## 1.6.4. திருப்பூவணப் புராணம் - பொது அமைப்பு

தலபுராண நூல்கங்களில், அத்தலம் பாடல் பெற்ற தலமாக இருந்தால், முதலில் அத்தலத்திற்கு உரிய தேவாரப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அதன் பின்னர் தலபுராணப் பாடல்கள் உள்ளன. கி.பி.1897ஆம் ஆண்டு அச்சடிக்கப்பட்ட திருப்பூவணப் புராணப் புத்தகத்திலும் முதலில் தேவாரப் பாடல்களும் அடுத்து புராணப் பாடல்களும் அச்சடிக்கப்பெற்றுள்ளன. முதலில், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் ஒன்றாம் திருமுறையில் அமைந்துள்ள தேவாரப் பாடல்களும், அடுத்து மூன்றாம் திருமுறையில் உள்ள பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அடுத்து திருநாவுக்கரசு நாயனார் பாடல்களும், சுந்தரமூர்த்தி நாயனார் பாடல்களும், கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடல்களும் உள்ளன. **அருணகிரிநாதரின் பாடல்கள் இடம் பெறவில்லை.**

## 1.6.5. திருப்பூவணப் புராணம் - சருக்க அமைப்பு முறை

புராணநூல்களில் முதலில் பாயிரம் அமையப் பெறும். இதில் கடவுள் வாழ்த்துப் பாடல்களும், பின்னர் அடியார் துதிப்பாடல்களும் அமையப் பெறும். கடவுள் வாழ்த்துப் பகுதியில் முதலில் விநாயகர் துதியும், பின்னர் மூலவர் (சிவபெருமான்), உமாதேவியார், உற்சவர், முருகன், பைரவர், திருநந்தி தேவர், கலைமகள், அகத்தியர் இவர்களது துதிப் பாடல்களும் பொதுவாக அமையப் பெற்றிருக்கும். பின்னர் அடியார் வணக்கத்தில் சைவசமயக் குரவர்கள் நால்வரையும் மற்றும் நாயன்மார்களையும் வணங்குவது ஒரு மரபாக அனைத்துத் தமிழ்ப் புராணங்களிலும் உள்ளன.

திருப்பூவணப் புராணத்திலும் இம் மரபுமுறை முழுமையாகக் கடைப் பிடிக்கப் பட்டிருக்கிறது. சிறு மாறுதல்களும் உள்ளன. அகத்தியர் துதி இல்லை. அடியார்கள் துதிப்பாடல்களில் நால்வர் துதிப் பாடல்களும் அவற்றை அடுத்து மெய்கண்டதேவர் துதியும், திருத்தொண்டர் துதியும்[113] உள்ளன. அருணகிரிநாதர் துதி இல்லை.

### 1.6.5.1. அருணகிரிநாதர்

திருப்பூவணப் புராணப் புத்தகத்தில், திருமுறைப் பாடல்களை அடுத்து அருணகிரிநாதர் பாடல்கள் இடம் பெறவில்லை. மேலும் அடியார் துதிப்பாடல்களிலும்

அருணகிரிநாதர் துதிப் பாடல் இடம் பெறவில்லை. இதற்குக் காரணம் 1) புராணம் தமிழில் எழுதப்பெற்ற காலத்திற்குப் பின்னர் அருணகிரிநாதர் வாழ்ந்திருக்கலாம், அல்லது 2) அருணகிரிநாதர் பாடிய பாடல்கள் முருகனைப் பற்றியன என்பதாக இருக்கலாம்.

திருப்பூவணப் புராணம் பாடப்பெற்ற காலம் கி.பி. 1620 ஆகும். அருணகிரிநாதர் பற்றிய வரலாற்றுக் குறிப்பேதும்கிட்டவில்லை. அவர் பாடிய 'அதலசேடன் ... ' எனத் தொடங்கும் திருப்புகழில் 'பிரபுடதேவ மாராயன்' என வரும் குறிப்பினால் இவர் விசயநகர அரசர்களுள் ஒருவனான பிரபுடதேவராசன் என்ற மன்னன் காலத்தவர் எனக் கருதலாம். இம்மன்னன் கி.பி. 1450ஆம் ஆண்டுகளில் அரசாண்டதாகக் கல்வெட்டு கொண்டு ஆராய்ந்துள்ளனர். இதனடிப்படையில், அருணகிரிநாதர் வாழ்ந்த காலம் கி.பி. 1450 எனக்கொள்ளலாம்.[114] எனவே புராணம் பாடப்பெற்ற காலத்திற்கு முன்பே அருணகிரிநாதர் திருப்பூவணப் பாடல்களை இயற்றியுள்ளார்.

எக்காரணம் கருதியோ திருப்பூவணப் புராணத்தில் அருணகிரிநாதர் துதிப் பாடல் கந்தசாமிப் புலவரால் பாடப்பெறவில்லை. மேலும் அருணகிரிநாதரின் மூன்று பாடல்களும் கி.பி.1897ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட திருப்பூவணப் புராணப் புத்தகத்தில் இடம்பெறவில்லை.[115]

## 1.6.6. திருப்புவணப் புராணச் சருக்கங்கள்

திருப்பூவணப் புராண வரலாற்று நிகழ்ச்சிகளின் துவக்கம் திருக்கயிலாயத்தில் தொடங்கினாலும், தமிழ்க்காப்பிய மரபிற்கு ஏற்ப, காப்பு, நூற்பயன், கடவுள் வாழ்த்து, ஆற்றுச் சருக்கம், நாட்டுச் சருக்கம், நகரச் சருக்கம் ஆகியனவற்றையும் புலவர் பாடியுள்ளார். அதன்பின்னர் பாயிரம் பாடியுள்ளார். பாயிரத்தில் மூன்று பாடல்களில் திருப்பூவணப் புராணத்தின் இருபது காதைகளின் தலைப்புக்களையும் கூறுகிறார். இது தண்டியலங்காரக் காப்பிய இலக்கணத்திற்கு ஏற்பச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்களின் தொடக்கத்தில் அமைந்துள்ள **'வருபொருள் உரைத்தல்'** என்ற நெறியினைத் தழுவி உள்ளது.

திருப்பூவணப் புராணத்தில், 'கடவுள் வாழ்த்து' என்று தனிப் பகுதியும், பின்னர் 'பாயிரம்' என்று ஒரு தனிப்பகுதியும் அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்தில் திருப்பூணக்

கோயிலில் உள்ள தெய்வங்களின் பெயர்களே இடம் பெற்றுள்ளன. வேறுபிற தெய்வங்களின் பெயர்களேதும் இடம் பெறவில்லை. கடவுள் வாழ்த்திற்கும் பாயிரத்திற்கும் இடையே கீழ்க்கண்டபடி சருக்கங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. மேலும், முதற் பாடல் விநாயகர் துதி என்று இல்லாமல் 'காப்பு' என்று உள்ளது.

1) காப்பு,
2) நூற்பயன்,
3) கடவுள் வாழ்த்து,
4) அவையடக்கம்,
5) நைமிசாரணயச் சருக்கம்,
6) சவுனகர் சூதரை வினவிய சருக்கம்,
7) திருக்கைலாயச் சருக்கம்,
8) ஆற்றுச் சருக்கம்,
9) நாட்டுச் சருக்கம்,
10) நகரச் சருக்கம்,
11) பாயிரம்
12) முதல் 31) முடிய இருபது சருக்கங்களில் புராணக்கதைகள் அமைக்கப் பெற்றுள்ளன.

நைமிசாரணயச் சருக்கம் முதல் நகரச்சருக்கம் முடியவுள்ள சருக்கங்களை, மூலபுராணத்தில் இருந்து மொழிபெயர்த்து எழுதுவதாகக் கந்தசாமிப் புலவர் குறிப்பிடவில்லை. பாயிரம் முடிவடைந்தவுடன் திருப்பூவணப் புராணக் கதைகள் பாடப் பெற்றுள்ளன. அவை சூரியன் பூசனைச் சருக்கம் முதல் சிதம்பர உபதேசச் சருக்கம் முடிய உள்ள இருபது சருக்கங்கள் ஆகும். இவ்விருபது சருக்கங்களில் உமாதேவி திருஅவதாரச் சருக்கம், திருக்கலியாணச் சருக்கம், தக்கன் வேள்வியழித்த சருக்கம், மற்றும் சிதம்பர உபதேசச் சருக்கம் ஆகிய நான்கு சருக்கங்கள் நீங்கலாக உள்ள மற்றபிற பதினாறு சருக்கங்களை மட்டுமே மூலபுராணத்தி லிருந்து மொழிபெயர்த்துத் தமிழில் எழுதுவதாகக் கந்தசாமிப் புலவர் அச்சருக்கங்களின் இறுதியில் வரும் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். சூரியன் பூசனைச் சருக்கத்தின் இறுதியிலே,

*"நிகழ்மறை யுணர்ந்த சவுநக முநிவ நீடு*
*புகழு லகெலாம் பரவு பூவணமிகுஞ் சீர்*
*மகிழ் **பிரமகைவர்த்த மாகிய புராணந்***
*திகழெழுபதென்னு மத்தியாய மிது சொல்வார் " (பாடல் 307)*

எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. இதைப் போன்றே, 405, 448, 527, 565, 692, 784, 857, 1191, 1288, 1328, 1348 ஆகிய பாடல்களிலும் புராணக்கதைகள் கூறப்பட்டுள்ள பிரமகைவர்த்த புராணத்தின் அத்தியாயங்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன.

## 1.7. காப்பிய உத்தி

சிறப்புமிக்க தலங்களைக் கூறி, அவற்றை விட இத்தலம் சிறந்தது என்றும் எனவே இத்தலத்தை வழிபடுதலால் மிகுந்த பலன் உண்டு என்றும் கூறுவது காப்பியங்களில் ஓர் உத்தியாகப் பயன்படுத்தப்படுகிறது. அவ்வகையில் கைலாயம், காசி, சிதம்பரம் முதலான திருத்தலங்களுடன் திருப்பூவணம் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

திருப்பூவணப் புராணக் கதைகளின் முதல் நிகழ்ச்சியானது கைலாயத்தில் நடைபெறுகிறது. அங்கே சிவபெருமான் பார்வதி தேவியாரிடம், நீ எனது சொல்லை மதியாமல் தக்கன்மாட்டுச் சென்று யாகத்தில் கலந்து கொண்டாய், அது நீ அறிந்து செய்த பிழையாகும் எனக் கூறினார்.

*"தழுவுதற் கெட்டாத் தபனியவரை சேர் சந்தனக் குங்குமக் கொங்கைக்*
*குழை கிழித்தோடிக் கொடுஞ்சமர் விளைக்குங் கூரிலை வேனெடுங் கண்ணாய்*
*விழையு நீ யாமுன் விளம்புரை மறுத்து மிக்க தக்கன் வயிற்சென்ற*
*பிழைதனை யொழிவான் வழிமதியென்னாப் பேசினன் **பிறையணி பெருமான்**"*
(பாடல் 1156)

இப்பிழையை நீக்கிட, இவ்வுலகத்திலேயே சிறந்த பாண்டியநாட்டிலுள்ள திருப்பூவணம் சென்று கற்பகவனத்திலே தவஞ்செய்வாய், அங்கே ஒரு சிவலிங்கம் உண்டாகும். அச்சிவலிங்கத்தில் யாம் உனக்கு அருள் புரிவோம் எனக்கூறுகிறார்.

*"பார்தனின் மேலாம் பரதகண்டத்திற் பாண்டி நன்னாட்டினிற் பரந்த*
*வார் புனைச் சங்கூர் வைகைசூழ் கிடந்த மாடநீண் மதுரைமூதூர் சேர்*
*பூர்வ திக்கதன் கட்புகலும் யோசனையிற் பொங்கர் சூழ் கற்பக வனத்தி*
*லோர் தருவளர்த்தே யுறுதவமுஞற்றிலோர் **சிவலிங்க மங்குண்டாம்**"* (பாடல் 1157)

*அத்த தரு நீழல மர்ந்த லிங்கத்தி னழகுடன் பழமறை விதியிற்*
*பத்தி மிக்குயர்ந்த பூசனை பயிற்றிற் பண்டை நாளண்டர் கண்டறியாச்*
*சுத்தமா **மந்தத் தொல் லிலிங்கத்திற் றோன்றியா நினக் கருள் புரிதுஞ்***
*சித்திர படம் போற்றிகழ் புறவடிமேற்செஞ்சிலம் பரற்று சீறடியாய் "* (பாடல் 1158)

இதனைக் கேட்ட பார்வதிதேவியார் திருப்பூவணம் வருகிறார். இதிலிருந்தே திருப்பூவணப் புராணக் கதைகள் ஆரம்பமாகின்றன.

இக்கதை புராணத்தில் பதினான்காவது சருக்கமாகவும், சூரியன் பூசனைச் சருக்கம் முதலாவது சருக்கமாகவும் பாடப் பெற்றுள்ளது.

சூரியன், இந்திரன், அரசன் ஆகிய இவர்களில் யாரேனும் சிவலிங்கத்தை வணங்கி வழிபட்டிருந்தால், அவர்கள் வழிபட்ட கதையை முதலில் கூறுவது மரபாகும். இது புராணக்கதைகளைக் கூறும் ஒரு உத்தியாகும். இத்தகைய சருக்க அமைப்பு முறையானது வடநூலில் கூறப்பட்டுள்ளது. அவ்வரிசைமுறைப்படியே கந்தசாமிப் புலவரும் கூறுகிறார். கதையமைப்பு வரிசை முறையை தமிழில் மொழிபெயர்த்துக் கூறும்போது கந்தசாமிப்புலவர் எவ்விதத்திலும் மாற்றம் செய்யாமலேயே கூறியிருக்கிறார்.

## 1.7.1. வீடுபேறு அளித்தல்

அறம், பொருள், இன்பத்திற்கு அப்பால் 'வீடுபேறு அடைதல்' சிறப்பித்துக் கூறப்படுகிறது. மனிதவாழ்வின் முடிவில் ஆன்மாவானது இறைவனது திருவடியைச் சேர்வதை வீடுபேறு அடைதல் என்று குறிப்பிடுகின்றனர். 1) பிறக்க வீடு தருவது திருவாரூர், 2) இறக்க வீடு தருவது காசி, 3) கண்டு வழிபட வீடு தருவது சிதம்பரம், 4) நினைக்க வீடு தருவது திருவண்ணாமலை என இந்நான்கு தலங்களையும் வீடு நல்கும் திருத்தலங்களாகக் குறிப்பிடுகின்றனர். இவையாவையும் ஒருவன் வாழ்கின்ற காலத்தில் வழிபடும் தலங்களாக உள்ளன. உயிர்நீத்த ஒருவனை வீடுபேறு அடையச் செய்யும் வழியைச் சுச்சோதி அரசனிடம் நாரத முனிவர் கீழ்க்கண்ட பாடலில் கூறுகிறார்.

*"திருப்பூவண ஒருத்தலந் தானரன் றனக்கு மருந்தவர்க்கு மரும் பிதிர்களாயினோர்க்குஞ்*
*சித்த மகிழ்தல மதனிற் சென்றடைந் துன்பிதிர்களுக்குத் திலோதகத்தைப்*
*புத்தமுதத்தடம் பொருந்து புனலாடி யளிக்கி னெதிர் பொருந்தி வாங்கி*
***முத்தியடைகுவ** ரதனான் முயன்றிடு தியிமூ துண்மை முழவுத்தோளாய்"* (பாடல் 1225)

இறந்தோர் பொருட்டுத் திருப்பூவணத்திலே, திதி தர்ப்பணம் போன்ற கர்மகாரியங்களைச் செய்தால் நீத்தார் நேரில் வந்து பிண்டத்தைப் பெற்றுக்கொண்டு முத்தியடைவர் என்று புராணத்திலே கூறப்பட்டுள்ளது. திருப்பூவணம் இறந்துவிட்ட முன்னோர்களுக்கு வீடுபேறு அளிக்கக்கூடிய திருத்தலமாகத் திகழ்கின்றது. இக்காரணத்தினால்,

*"திக் குலகெலாம் புகழ் சிதம்பரம தென்றும்*
*பக்கமுறு தக்கிண காசிப்பதி யதென்றுந்*

*தக்க சதுர்வேதபுர மென்று மதுசார்பேர்*
*மிக்க **பிதிர்முத்திபுர** மென்று நனிமேவும்"* ( பாடல் 303)

திருப்பூவணம், '**பிதிர் மோட்ச புரி**' என அழைக்கப்படுகிறது.

## 1.7.2. காசிக்கு ஒப்பாகச் சொல்லுதல்

திருத்தலங்களைக் காசிக்கு ஒப்பாகச் சொல்லும் வழக்கம் உள்ளது. *"திருவெண்காடு, திருவையாறு, மாயூரம், திருவிடைமருதூர், திருச்சாய்க்காடு, திருவாஞ்சியம் போன்ற தலங்கள் காசிக்கு ஒப்பாகச் சொல்லப்படும் திருத்தலங்களாகும்".*[116]

*"மருவிய காசி வாசமக்கண்மிக் குடல் வருந்தும்*
*பொருவிறென் பூவணந்தான் பொருந்திடா மெய்வருத்த*
*மரியன பொரு ளொன்றில்லை யாதலா லைந்தவித்தீர்*
*கருதிலப் பூவணந்தான் **காசியி லதிகமாகும்** "*(பாடல் 441)

என்ற பாடல்களில், திருப்பூவணம் காசியினும் சிறப்புடையதாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் '**காசிக்கு வீசம் கூட**' எனச் சிறப்பித்துக் கூறுகின்றனர்.[117]

## 1.7.3. கைலாயத்திற்கு ஒப்பாகச் சொல்லுதல்

மலை மற்றும் குன்றுகளில் உள்ள சிவத்தலங்களைக் கைலாயத்திற்கு ஒப்பிட்டுக் கூறுகின்றனர். இத்தலங்கள் யாவும் **தென்கயிலாயம்** எனச் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளன. திருவண்ணாமலை, திருகோணமலை, திருப்பரங்குன்றம், திருச்சிராப்பள்ளி முதலான திருத்தலங்கள் அவ்வகையில் அடங்கும்.

திருப்பூவணத்தில் மலைகளேதும் இல்லை. இக்காரணத்தினால் திருப்பூவணம் கைலாயத்திற்கு இணையாகக் கூறப்பட வில்லை.

## 1.7.4. சிதம்பரத்திற்கு ஒப்பாகச் சொல்லுதல்

தில்லையும் திருப்பூவணமும் குருஉபதேசத் தலங்களாக விளங்குகின்றன.

*"பரிசனர்பஃறொழில்பரிவுகொடடைகுநரொருசாரார்*
*குருவினைவழிபடவகமகிழ்கூருநரொருசாரா " (பாடல் 1170)*

இப்பாடல், திருப்பூவணத்திலே குருவினை வழிபட்டு மகிழும் மாணவர்களைப் பற்றிக் கூறுகின்றது.

வியாச முனிவரிடம் உபதேசம் பெற்ற மாத்தியாந்தின முனிவரும், தியானகாட்ட முனிவரும் திருப்பூவணத்திலே தவம் செய்து, சிவபெருமான் தரிசனம்

கிடைக்கப்பெற்றனர். அவர்கள் சிவபெருமானிடம் குருஉபதேசம் பெற்றிடவும் அவரது திருநடனத்தைக் காணவும் வரம் வேண்டினர்.

> *"ஆதலினிந் தவருபரணவமா மஞ்செழுத் தரு ளுபதேசந்*
> *தீதற் கொடுநீர் தில்லையிற் சேர்மின் செம்பொனம்பலந்தனில் யாமே*
> *காதலி னிருத்தங் காட்டுது மிந்தக் காசி* ***றென்பூவணக்காசி***
> ***யோதிடு முபதேசத் துளநடனமுஞற்று தன்மந்தண மாமால்"*** *(பாடல் 1363)*

என்று சிவபெருமான் அருளியதால், திருப்பூவணமானது பூவணக்காசி என்றும் இரகசிய சிதம்பரம் என்றும் சிறப்புப் பெயர்கள் பெற்றது. மேலும், திருப்பூவணத்தில் கருவறையும் இராசகோபுரமும் வடகிழக்குத்திசையில் சிதம்பரத்தை நோக்கியிருக்கும் (படம் - 3).

இவ்வமைப்பினால் திருப்பூவணம் கோயில் வாசலில் இருந்து உள்நோக்கி வணங்கினால் திருப்பூவணநாதரையும், வெளிநோக்கி வணங்கினால் சிதம்பரத்தையும் வணங்க முடியும்.

தில்லையை நோக்கித் திருப்பூவணக் கோயில் அமைந்துள்ளதால், தில்லையும் திருப்பூவணமும் தொடர்பு உடையனவாக உள்ளன.[118]

*"பப்புரு மகாருஷி பூசித்த தலம்"*[119] என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. ஆனால் 'பப்புரு' பூசித்ததாகத் திருப்பூவணப் புராணத்திலும் திருப்பூவணம் தொடர்பான இலக்கியங்களிலும் குறிப்பேதும் ஆய்வாளரால் அறியப் பெறவில்லை.

## 1.7.5. விடங்கத் தலங்கள்

சோழ நாட்டில், திருவையாற்றைச் சுற்றியுள்ள ஏழு ஊர்கள் சப்த விடத்தலங்கள் என்று அழைக்கப் படுகின்றன. 'டங்கம்' என்றால் உளி என்று பொருள். விடங்கம் - என்றால் உளிபடாதது என்று பொருள். உளியால் செதுக்கப்படாத சிவலிங்கங்கள் உள்ள தலங்களை 'விடத்தலங்கள்' என்று குறிப்பிடுகின்றனர்.

அவ்வகையில் திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கமும் உளிபடாத ருத்ராட்ச மேனியாய் உள்ளது. இதனால் பாண்டியநாட்டில் உள்ள விடங்கத் தலமாகத் திருப்பூவணம் திகழ்கின்றது.

திருவையாற்றிலுள்ள தியாகேசப் பெருமானின் மூர்த்தமானது, முசுகுந்தன் என்ற மன்னனால் விண்ணிலிருந்து கொண்டு வரப்பட்டது. தியாகேசர் ஏழுவகைத் திருப்பெயர்களைக்கொண்டு ஏழுவகை நடனங்களை ஆடியுள்ளார்.

| திருத்தலப் பெயர் | சிவபெருமானின் பெயர் | திருநடனப் பெயர் |
|---|---|---|
| *திருவாரூர்* | *வீதிவிடங்கர்* | *அஜபா நடனம்* |
| *திருக்கோளிலி* | *அவனிவிடங்கர்* | *பிருங்க நடனம்* |
| *திருநள்ளாறு* | *நாகவிடங்கர்* | *உன்மத்த நடனம்* |
| *திரு நாகைக்காரோணம்* | *சுந்தரவிடங்கர்* | *பாராவாரதரங்க நடனம், வீசி நடனம்* |
| *திருக்காறாயில்* | *ஆதிவிடங்கர்* | *குக்குட நடனம்* |
| *திருவாய்மூர்* | *நீலவிடங்கர்* | *கமல நடனம்* |
| *திருமறைக்காடு* | *புவனி விடங்கர்* | *அம்ஸபாத நடனம்* |

## 1.7.6. பிரம தாண்டவம்

திருப்பூவணத்தில் சிவபெருமான் ருத்தர மேனியனாய் (ருத்ர விடங்கர்) 'பிரம தாண்டவம்' என்னும் நடனமாடியுள்ளார். இதனைக்

*"கரிமுகன் கந்தவேள் கருணையே பொழி*
*திருமுக மண்டலஞ்சிறந்திலங்க வான்*
*பெருகொளி பரப்பிடும்* ***பிரமதாண்டவ***
*மருள் புரிதர வெழுந்தருளு நாயகன் "*(பாடல் 759)

எனத் திருப்பூவணத்திலுள்ள நடராசர் ஆடிய ஆடல் '**பிரமதாண்டவம்**' எனச் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது. மேலும் இப் பிரமதாண்டவ மூர்த்தியை,

*"உறைதரு மத்திங்கடனி லொண்கலை சேர் பூரணையி னோரை தன்னின்*
*மருவிய வன்புடன் பிரமதாண்டவர் மாபூசை செய்வோர் மகேசலோகத்*
*தொரு பிரமகற்பமுறைந்து காந்தத்தி னுருத்திரனோ டுற்றுப் பின்றைக்*
*குருமணி நல்விமான மேல்கொண்டு சிவலோக மதிற் குடியாய் வாழ்வார்"*(பாடல் 1276)

என்று பூசைப் பலன்கள் கூறப்பட்டுள்ளன.

## 1.7.7. வீரத் தலங்கள்(வீரட்டானம்)

சிவபெருமான் வீரம் கொண்டு உக்கிரவடிவில் எழுந்தருளிய தலங்களை வீரத் தலங்கள் என்று குறிப்பிடுகின்றனர். இவற்றுள் எட்டு திருத்தலங்களைச் சிறப்பித்து, 'வீரட்டானத் தலங்கள்' எனக் கூறுகின்றனர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்கண்டியூர் | - | பிரமனின் ஐந்தாவது தலையைக் கொய்த இடம் |
| 2. | திருக்கோவலூர் | - | அந்தகாசூரனைக் கொன்ற இடம் |
| 3. | திருவதிகை | - | திரிபுரத்தை எரியூட்டிய இடம் |
| 4. | திருப்பறியலூர் | - | தக்கன் சிரத்தைக் அரிந்த இடம் |
| 5. | திருவிற்குடி | - | சலந்திரனைத் தலையை அரிந்த இடம் |
| 6. | திருப்பழுவூர் | - | யானையின் தோலை உரித்து அணிந்த இடம் |
| 7. | திருக்குறுக்கை | - | மன்மதனை எரித்த இடம் |
| 8. | திருக்கடவூர் | - | யமனைக் காலால் உதைத்த இடம் |

இந்த எட்டுத் தலங்களும் சோழ நாட்டிலேயே உள்ளன. வீரட்டானத் தலங்கள் ஏதும் சேர பாண்டிய நாடுகளில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## 1.7.8. சதுர்வேதபுரம்

நான்கு வேதங்களும் ஓதப்பெறும் தலங்கள், 'சதுர்வேதபுரம்' எனப் பெயர் பெற்றன.

திருப்பூவணத்தில்,

*"மேவு நல்வேத வியாதனெண் வசிட்டன் மிக்கசீர்க் கவுதமன் வாம*
*தேவன் மார்க்கண்டனங்கிராத் திகழத்திரிய தீதரன் சதானந்தன்*
*றாவில் பாரத்துவாச னக்கினிபன் சவுனகன் மவுனபாற்கரனோ*
*டோவறுமனைய முனிவர் மாணக்கருடன் மறைமுழுது நன்கோதி* (பாடல் 1351)

*தெரிவருஞ் சீர்மத்தியான காலத்திற் றென்றிருப்பூவணந் தன்னி*
*னொரு வருமுள்ளத் துணர்வுடன் றூங்கி யுவந்தினி துறைதரு மதனாற்*
*புரையிகந் தோங்கும் புகழ் **சதுர்வேதபுரமெனப்** புகன்றிடு முலக*
*மருள் பழுத்தின் பத்தழுந்து மாதவ விவ் வருந்தலப் பெருமை யாரறிவார்".* (பாடல் 1352)

பிறதலங்களில் வேதங்கள் அந்தணர்களால் ஓதப்பெறும். திருப்பூவணத்திலோ, வேதவியாசன், வசிட்டன், வாமதேவன், மார்க்கண்டன், தீதரன், சதானந்தன், பராத்துவாசன், அக்கினிபன், சவுனகன், பாற்கரன் முதலான முனிவர்களும் அவர்களது சீடர்களும் வேதங்களை ஓதுகின்றனர். இதனால் திருப்பூவணமானது சதுர்வேதபுரங்கள் என்றழைக்கப்படும் தலங்களில் சிறப்புடைய தலமாக விளங்குகிறது.

## 1.8. புராணத்தைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்கள்

*"அரும்பய னாயு மறிவினார் சொல்லார்*
*பெரும்பய னில்லாத சொல்"*[120]

அரும் பெரும் பயன்களை ஆராய்ந்து கூறும் அறிவுள்ளோர், பெரும் பயன்களைக் கொடுக்காத சொற்களைக் கூறமாட்டார்கள் என்ற திருவள்ளுவரின் வாக்கிற்கு இணங்க, புராணத்தின் இரண்டாவது பாடலிலே நூற்பயன் என்ற தலைப்பின் கீழ் இப்புராணத்தைப் படிப்போரும் கேட்போரும் இகத்திலும் பரத்திலும் உள்ள நல்லன எல்லாம் சேர்வர் என்று பலன் கூறப்பெற்றுள்ளது.

*"தந்திமுகன் றம்பி யருணந்தி தனக் குரைப்ப நந்தி சநற்குமாரன்*
*வெந் துயரமற வெடுத்து விரித்துரைப் பவுவன் வேதவியாதற் கோதப்*
*புந்தியுணர்ந்தவன் சூதமுநிக் குரைத்த புட்பவன புராணந்தன்னைச்*
*சிந்தை மகிழ்வுறப் படிப்போர் கேட்போர்* ***நல்லிகபரங்கள் சேர்வரன்றே"*** *(பாடல் 2)*

திருப்பூவணப்புராணத்தின் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும், இக்காதையை உள்ளம் மகிழ்ந்து படிப்போரும் கேட்போரும் அடையும் பலாபலன்கள் கூறப் பெற்றுள்ளன.

1. சூரியன் பூசனைச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் புந்தியில் கொள்வோரும், அவர்கள் திருப்பூவணம் வந்து வழிபட்டு முத்தி யடையும் பேறு கிடைக்கப்பெறுவர். [121]
2. திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்தைப் பண்ணுடன் பாடுவோரும், இக் கதையைக் கூறுவோரும், பொருள் உணர்ந்தோரும் மற்றும் இக்கதையைச் செவிமடுத்துக் கேட்டோரும் சிவபெரும்பதி சேர்வர்.[122]
3. மணிகன்னிகைச் சருக்கக்கதையைக் கூறுவோர் அர்த்தநாரியான சிவபெருமானின் பதியில் தங்குவார்கள்.[123]
4. துன்மனன்சருக்கத்தைப் படிப்போரும் அதனை ஓதுவோரும் கேட்போரும் பூசை செய்வோரும், ஊர்வசியைப் போன்ற அழகுடைய பெண்டிருடன் பதினாயிரம் வருடம் வாழ்வர். [124]

5. தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் அரனாகிய சிவபெருமானிடத்து வந்து அவரது அருகில் இருப்பர்.[125]

6. உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கத்தில், மணிகன்னிகைத் தீர்த்தமாடுவோரின் பாவங்கள் நீங்கப்பெறும், சுமங்கலிகள் நீராடினால் மக்கட்பேறு பெறுவர், அமங்கலிகள் நீராடினால் அடுத்தபிறவியில் சுமங்கலியாய் வாழ்வர், விரத நற்பலன்கள் உண்டாகும். உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்கள் கலியின் கொடுமை நீங்கப்பெற்று, வளமை பெற்று நற்கதி பெறுவர்.[126]

7. பாற்கரபுரச் சருக்கத்தைப் பண்பொடு பாடுவோர் செவிகொண்டு கேட்டு உள்ளத்தில் கொள்வோர் செல்வம்மிகுந்த நாட்டை அரசாள்வர்.[127]

8. சர்வபாவமோசனச்சருக்கத்தை படிப்போரும் அதைக் கேட்போரும் பிறரிடம் கூறுவோரும் மனைவி மக்கள் பேரன் பேத்திகள் சுற்றத்துடன் மங்களமாக வாழ்ந்து சிவபிரானின் பொற்பாதங்களை அடைவர்.[128]

9. பிரமசாபமோசனச்சருக்கத்தைத் தினமும் ஓதுவோர், அதன் பொருளை உணர்ந்தோர் அதனைப் பிறரிடம் கூறுவோர் அதைக் கேட்போர் அனைவரும் தங்களது வாழ்நாளில் நீண்ட சுவர்க்கத்தில் உள்ள மகளிர் சூழ இருப்பர்.[129]

10. இலக்குமி சாபமோசனச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் இலக்குமியின் அருளாலே செல்வம் பெற்று மங்கலமாக வாழ்வர். மேலும் இதனால் கிடைக்கும்பலனை திருநந்தி தேவரே நேரில் வந்து எடுத்துரைத்தாலும் அரிதாகும். அவ்வளவு மிகுபலன்கள் கிட்டும்.[130]

11. உமாதேவி திருவவதாரச்சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் சிவபிரான் திருவருளினாலே முத்தியடைவார்கள்.[131]

12. திருக்கலியாணச்சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் கடுந்துயரங்கள் நீங்கப் பெற்று மங்கல நிகழ்ச்சிகள் நடைபெற்று இந்திரபோகங்கள் நிறைந்த செஞ்சடிலன் பதத்தில் சேர்வார்கள்.[132]

13. தக்கன் வேள்வியழித்தசருக்கத்தை விருப்பத்துடன் படிப்போரும் கேட்போரும், *"திக்கினோ டுலகுக் கரசாகியே சித்த நீடுகளிப்புடன் மேவியே தொக்க போக சுவர்க்க மதுற்றுயர் சுத்த ஞான சுகத்தினி லாழ்வரே".*[133]

14. உமைவருசருக்கத்தை ஓதுவோரும் அதைக் கேட்போரும் சிவபெருமானது தாமரைமலர்பாத நிழலில்வாழ்வார்கள்.[134]

15. சுச்சோதிதீர்த்தயாத்திரைச்சருக்கத்தைப படிப்போரும் நல்ல புதல்வர்களைப் பெற்று மேன்மையடைவர். பத்தி மிகுந்திருப்பர், தேகம் சுத்தமாய் வாழ்ந்து சிவகதி சேர்வார்கள்.[135]

*16.* சுச்சோதிபிதிர்களை முத்தியடைவித்த சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் சிவபிரானது மோன ஞான நன் துதி பொருந்துவார்.[136]

17. தீர்த்தச்சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் "*பார்புரந்தருள் பார்த்தி வராகியே பரவரும்* ***பரமுத்தி பொருந்துவார்***".[137]

18. நளன்கலிமோசனச்சருக்கத்தைச் "சந்த முடன் புகல் சிந்தை யுவந் தனர் ***வெந் துயர் சிந்துவார்***".[138]

*19.* திருவிழாச்சருக்கத்தைப் படிப்போரும் அதை அன்புடன் கேட்போரும் தங்களது துயரமான எண்ணங்கள் நீங்கப் பெற்று பொன்னலம்பலத்தைச் சென்று சேர்வர்.[139]

*20.* சிதம்பரவுபதேசச்சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் திருப்பூவண நாதருக்கு நல்ல பூசைகள் செய்தால் கிடைக்கும் பலன்கள் அனைத்தும் கிடைக்கும். நாடிய பொருள்கள் யாவும் கிடைக்கப்பெறுவர்.[140]

*புவன மெங்கணுஞ் சீர்போற்றும் பூவண மான்மியத்தை*
*நவிலுறச் செவிக்கு நாளு நல் விருந்தளிக்குநர்க்குச்*
*சிவபிரன ருளினாலே* ***தேடு பேருவகை கூடுஞ்***
*சவுநக முநிவவீது* ***சத்தியஞ் சத்தியங்காண்***" *(பாடல் 1435)*

*"ஒப்பிலாத வுருத்திர சங்கிதையுற்ற பூவண நற்கதை யோதுவோர்*
*செப்புமாறு செவிக்கொடு மன்னிய சிட்டராய சிறப்புறு தன்மையோர்*
*விப்பிராதிபவித்தக மெய்ம் மொழீமிக்க வேத விதத்துயர் மாதவீர்*
*தப்பிலத தவத்திரு மன்னவர்* ***தயாபரன் கயிலைக் கிரி வாழ்வரே***" *(பாடல் 1436)*

கூறப்படும் காதைகளின் கருத்திற்கு ஏற்ப, அக்காதைகளை வாசிப்போரும் கேட்போரும் அடையும் பலாபலன்கள் கூறப்பட்டுள்ளன. முத்தியடைதல், சிவகதி யடைதல், கயிலையில் சேர்ந்து வாழ்தல், நீடுவாழ்தல், இகத்திலும் பரத்திலும் உள்ள நல்லனவற்றை அடைதல், நாடிய பொருள் கைகூடுதல், அரசராய் வாழ்தல் ஆகிய பலன்கள் பொதுவாகக் கூறப்படுகின்றன. ஆண்களுக்கு என்று சிறப்பாகப் பிரமசாபமோசனச் சருக்கத்தில் மட்டும் "*நீடு சுவர்க்கம் அது உற்ற அர மகளிர் சூழ இருப்பர் எந்நாளுமே*" *என்று பலன் கூறப்பெற்றுள்ளது.* *பெண்களுக்கு* - நல்லமணவாளன் அமைதல், கணவனுடன் கூடி இன்புறுதல், நன்மக்கட் பேறு, சுமங்கலியாய் வாழ்தல் ஆகிய பலன்கள் கூறப்பெற்றுள்ளன.

திருப்பூவணத்திலுள்ள சிவலிங்கத்தை வணங்குவதால் உண்டாகும் பலன்கள் நந்திதேவராலும் எடுத்து இயம்புவதற்கு அரியதாகும். அறிந்துள்ள பலன்களை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று பாவம் நீக்குதல் மற்றொன்று முத்தியளித்தல்.

## 1.9. பாவம் போக்கும் பூவணம்

பாவங்கள் இரண்டுவகை. ஒன்று அறிந்து செய்யும் பாவமாகும். மற்றொன்று அறியாமல் செய்யும் பாவமாகும். அறியாமல் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தமும், அறிந்து செய்த பாவத்திற்குத் தண்டனையும் உண்டு. எல்லாத் திருத்தலங்களும் பாவங்களைப் போக்க வல்லனவே. ஒவ்வொரு தலமும் ஒவ்வொருவிதமான பாவங்களைப் போக்கவல்லனவாக இருக்கும். அவ்வகையில், திருப்பூவணம் அறிந்து செய்த பாவங்களைப் போக்க வல்ல திருத்தலமாகச் சிறப்புற்றுத் திகழ்கிறது.

பார்வதி தேவியார் தக்கன் பொருட்டுக் கணவருடன் தர்க்கம் செய்து வாதிட்டார். இது அறிந்து செய்த பாவமாகும். இப்பாவம் நீங்கத் திருப்பூவணம் வந்து தவமிருந்து வழிபட்டுப் பாவம் நீங்கப் பெற்றார்.

பிரமதேவன் காமஉணர்வு மிகப்பெற்று ஊர்வசியை உற்று நோக்கினான், இப்பாவம் நீங்கத் திருப்பூவணம் வந்து வழிபட்டுப் பாவம் நீங்கப் பெற்றான்.

வாலகில்லி முனிவர் மிகவும் குள்ளமாய் இருந்தார். அவரை முனிவர் என்று தெரிந்தும் இலக்குமி தேவியார் கேலி செய்து நகைத்தார். இதனால் உண்டான பாவம் போக்கத் திருப்பூவணம் வந்து தவமிருந்து பாவம் நீங்கப்பெற்றார்.

துன்மனன் என்பவன் அறிந்து செய்த பாவங்கள் அனைத்தையும் நீக்கிய திருத்தலம்.

பொய் சொல்வது பாவம், இருந்தும் இறைவன்முன் பிரமதேவன் பொருட்டுத் தாழம்பூ பொய் சொன்னது. இப்பாவம் நீங்கத் திருப்பூவணம் வந்து வழிபட்டு பாவம் நீங்கப் பெற்றது.

திரணாசனன் என்பவன் முத்தியடைந்துள்ளான். தருமஞ்ஞனின் முன்னோர்கள் முத்தியடைந்துள்ளனர். சுச்சோதி அரசனின் முன்னோர்கள் நேரில் வந்து பிண்டம் பெற்று முத்தியடைந்துள்ளனர்.

இக்காரணங்களால், திருப்பூவணம் அறிந்து செய்த பாவம் போக்கவல்ல திருத்தலமாகவும், 'பிதிர்முத்தி புரமாகவும்' சிறப்புற்றுத் திகழ்கிறது.

## தொகுப்புரை

அனைத்து உயிரினங்களிலும் மனித இனம் அறிவினால் மேம்பாடுடையதாக விளங்குகின்றது. அறிவில் சிறந்த மனிதர்கள் நம்பிக்கை உடையவர்களாய் இருக்கின்றனர். வாழ்வில் செய்த நல்வினை தீவினை இவற்றின் அடிப்படையில் சொர்க்கத்தையோ அல்லது நரகத்தையோ அல்லது இறைவனடியையோ சேர்வர் என்றும் நம்புகின்றனர். நல்வினை மற்றும் தீவினைகளின் அடிப்படையிலேயே பிறப்பும் வாழ்க்கையும் அமைகின்றன என்றும் நம்புகின்றனர். நீத்தோருக்கும் தெய்வங்களுக்கும் வேண்டியவற்றைச் செய்து கொடுத்து அவர்களை வணங்கி மகிழ்வித்தால், அவர்கள் நம்மைத் துன்பங்களிலிருந்து காத்து நல்வாழ்வு அளிப்பர் என்றும் நம்புகின்றனர். இந்த நம்பிக்கைகளின் அடிப்படையிலேயே சமயக் கோட்பாடுகள் உள்ளன. சமயங்களில் மிகவும் தொன்மையானதாக இந்துசமயம் விளங்குகின்றது. இதில் சிவலிங்க வழிபாடு பண்டைக்காலந்திலிருந்தே மக்களிடம் இருந்து வருகிறது.

**"தென்னாடுடைய சிவனே போற்றி**
**என்னாட்டவருக்கும் இறைவா போற்றி "**

என்பதற்கு ஏற்ப, உலகத்தோர் அனைவராலும் போற்றப்படும் சிவபெருமான் உறைந்துள்ளது தென்நாடு என்று போற்றப்பெறும் பாண்டிய நன்னாடாகும். இப் பழம் பாண்டிய நாட்டின் தலைநகராக, மதுரை மாநகர் சிறப்புற்றுத் திகழ்கின்றது. இம் மதுரை நகரினும் தொன்மையானதாகவும், சிறப்புடையதாகவும் திகழ்கிறது திருப்பூவணம். இத்தலத்திற்கான புராணத்தின் சிறப்புகள், திருப்பூவணப் புராணத்தின் சருக்க அமைப்பு முறை. இம்முறை தண்டியலங்கார இலக்கணத்திற்கு இயைபுடையதாய் அமைதல். அருணகிரிநாதரின் பெயர் திருப்பூவணப் புராணத்தில் இடம்பெறாமை ஆகிய பொருள் குறித்து விளக்கப் பெற்றது.

பிற தமிழ்ப் புராண நூல்கள், வைணவப் புராணங்கள், பிற மொழி மற்றும் சமயங்களில் தலபுராணங்கள், அவை உருவான நோக்கம், வழிபாட்டு முறைகள், சமயங்களுக்கும் வழிபாட்டிற்கும் உள்ள தொடர்புகள், சமயங்களுக்கும் மனிதர்களின் கோட்பாடுகளுக்கும் உள்ள தொடர்புகள் குறித்துப் பொதுவாக விளக்கம் செய்யப்பெற்றுள்ளது.

மனிதர்களின் நம்பிக்கைகள், வழிபாடுகள், சமயங்கள், புராணங்கள், தலபுராணங்கள், திருப்பூவணத் தலபுராணம் இவை தொடர்பான பொதுவான கருத்துக்கள் இந்த இயலில் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

*****

சான்றெண் விளக்கம்

---

21 ஔவையார் பாடியது, **நல்வழி**, முதல் பாடல்.
22 திருக்குறள் 398
23 திருக்குறள் 1042
24 கி. காளைராசன், அழகப்பா பல்கலைக்கழகம், **திருப்பூவணக் காசி,** பக்கம் 146 - 147
25 அகம் - 35, டாக்டர் அ. விசுவநாதன், **தமிழ்ச்சிந்தனைகள்** பக்கம் 48
26 திருக்குறள் 771
27 தொ.பரமசிவன், **தெய்வங்களும் சமூக மரபுகளும்,** பக்கம் 1
28 ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், விவேகானந்த சுவாமிகள் இயற்றிய **ஞானயோக விளக்கம்,** பக்கம் 10
29 ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், விவேகானந்த சுவாமிகள் இயற்றிய **ஞானயோக விளக்கம்,** பக்கம் 11
30 அகம் 309
31 புறம் 260
32 "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்பல றலை" (குறள் - 43)
33 **தொல்காப்பியம்**, பொருளதிகாரம், செய்யுளியல் நூற்பா எண். 1367
34 **ஞானயோக விளக்கம்,** (விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தழுவியது), பக்கங்கள் 7, 8, 9. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், ஸ்ரீராமகிருஷ்ணா தபோவனம், திருப்பராய்த்துறை.
35 திருக்குறள் 1023
36 வெ. இராமலிங்கம் பிள்ளை, **திருக்குறள் புது உரை,** பக்கம் 703
37 அ. விசுவநாதன், **தமிழ்ச்சிந்தனைகள்,** பக்கம் 58
38 மேலது, பக்கம் 58
39 **கலைக்களஞ்சியம்**(தொகுதி-7), முதற்பதிப்பு, பக்கம் 436
40 சிலம்பதிகாரம் 10 - 179
41 மணிமேகலை 5- 98
42 கமலை ஞானப் பிரகாசர், **தந்திவனப் புராணம்,** முன்னுரை பக்கம் 9
43 மணிமேகலை 27-98
44 மருததுரை, **புராண இலக்கிய வரலாறு**, பக்கம் 15
45 மு. அருணாசலம், **இலக்கிய வரலாறு,** பக்கம் 6
46 அ) கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 436
ஆ) இரா. பாலசுப்பிரமணியன், **புராணவியல்,** பக்கம் 1

47 Article about mythology, the retelling of myths and stories that a particular culture believes to be true and that use **...** The **myth** of Prometheus was first **...**
*en.wikipedia.org/wiki/Mythology*

**Religion and mythology -** Main article: ***Religion and mythology*** In a scholarly context, the word "myth" may mean "sacred story", "traditional story", or "story about gods". Many myths, such as ritual myths, are clearly part of religion. However, unless we simply *define* myths as "sacred stories" (instead defining them as "traditional stories", for instance), not all myths are necessarily religious. As the classicist G. S. Kirk notes, "many myths embody a belief in the supernatural [...] but many other myths, or what seem like myths, do not". As an example, Kirk cites the myth of **Oedipus**, which is "only superficially associated [...] with religion or the supernatural", and is therefore not a sacred story. (Note that folklorists would not classify the Oedipus story as a myth, precisely because it is not a sacred story.) Examples of religious myths include: An Australian myth describing the first sacred **bora** ritual[26] The creation story found in **Gnosticism** of how God forgets himself and becomes man, and through knowing that story we arrive back to our **Fullness**.[*citation needed*]

Myths as depictions of historical events : As discussed above, the status of a story as myth is unrelated to whether it is based on historical events. Myths that are based on a historical events over time become imbued with symbolic meaning, transformed, shifted in time or place, or even reversed. One way of conceptualizing this process is to view "myths" as lying at the far end of a continuum ranging from a "dispassionate account" to "legendary occurrence" to "mythical status". As an event progresses towards the mythical end of this continuum, what people think, feel and say about the event takes on progressively greater historical significance while the facts become less important. By the time one reaches the mythical end of the spectrum the story has taken on a life of its own and the facts of the original event have become almost irrelevant. A classical example of this process is the Trojan War, a topic firmly within the scope of Greek mythology; the extent of a historical basis in the Trojan cycle is regularly disputed (see historicity of the Iliad).

This method or technique of interpreting myths as accounts of actual events, euhemerist exegesis, dates from antiquity and can be traced back (from Spencer) to Euhemerus' *Sacred History* (300 BCE) which describes the inhabitants of the island of Panchaia, *Everything-Good*, in the Indian Ocean as normal people deified by popular naivety. As Roland Barthes affirms, "Myth is a word chosen by history. It could not come from the *nature* of things". This process occurs in part because the events described become detached from their original context and new context is substituted, often through analogy with current or recent events. Some Greek myths originated in Classical times to provide explanations for inexplicable features of local cult practices, to account for the local epithet of one of the Olympian gods, to interpret depictions of half-remembered figures, events, or to account for the deities' attributes or entheogens, even to make sense of ancient icons, much as myths are invented to "explain" heraldic charges, the origins of which has become arcane with the passing of time. Conversely, descriptions of recent events are re-emphasised to make them seem to be analogous with the commonly known story. This technique has been used by some religious conservatives in America with text from the Bible, notably referencing the many prophecies in the Book of Daniel and the Book of Revelation especially. It was also used during the Russian Communist-era in propaganda about political situations with misleading references to class struggles.

Mâche argues that euhemerist exegesis, "was applied to capture and seize by force of reason qualities of thought, which eluded it on every side." This process, he argues, often leads to interpretation of myths as "disguised propaganda in the service of powerful individuals," and that the purpose of myths in this view is to allow the "social order" to establish "its permanence on the illusion of a natural order." He argues against this interpretation, saying that "what puts an end to this caricature of certain speeches from May 1968 is, among other things, precisely the fact that roles are not distributed once and for all in myths, as would be the case if they were a variant of the idea of an 'opium of the people.'" Against Barthes, Mâche argues that, "myth therefore seems to choose history, rather than be chosen by it", "beyond words and stories, myth seems more like a psychic content from which words, gestures, and musics radiate.

History only chooses for it more or less becoming clothes. And these contents surge forth all the more vigorously from the nature of things when reason tries to repress them. Whatever the roles and commentaries with which such and such a socio-historic movement decks out the mythic image, the latter lives a largely autonomous life which continually fascinates humanity. To denounce archaism only makes sense as a function of a 'progressive' ideology, which itself begins to show a certain archaism and an obvious naivety."

Catastrophists such as Immanuel Velikovsky believe that myths are derived from the oral histories of ancient cultures that witnessed "cosmic catastrophes". The catastrophic interpretation of myth, forms only a small minority within the field of mythology and often qualifies as pseudohistory.

[48] " The word is derived from the Greek word Mythos, which means word or speech and is akin to our word mouth" – Oxford Junior Encyclopedia, Page 332.

[49] **கலைக்களஞ்சியம்**, தொகுதி-7, பக்கம் 436

[50] ஆய்வாளரிடம் உள்ள **பழமையான ஏடு** ஒன்றில் கூறப்பட்டுள்ளது.

[51] 108 **ஸ்ரீ வைஷ்ணவ திவ்யதேச வைபவமும், புராண-அபிமான ஸ்தலங்களும்,** பக்கம் 75, 76

[52] **அபிதான சிந்தாமணி** பக்கம் 998 மற்றும் 999

[53] தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, 108 **ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவமும் புராண-அபிமான ஸ்தலங்களும்,** பக்கம் 75, 76

[54] www.astrojothi.com. "The sages (maharshis) arranged for a sacrifice (yajna) in this forest and the ceremony went on for twelve years. Naimisharanya forest was a wonderful place to arrange sacrifices in."

[55] திருப்பூவணப் புராணம் பாடல் எண் 1290

[56] **சூத்திரன்** என்ற சொல் **சூதன்** என்றாகும். **பௌராணிகர்** என்றால் புராணங்களை விரித்துக் கூறுபவர் என்று பொருள். ஆகையால், **சூதபௌராணிகர்** என்றால். **சூத்திர குலத்தில் தோன்றிப் புராணங்களை விரித்துக் கூறியவர்** என்று பொருள் கொள்ளலாம். திரு.இரவிச்சந்திரன், தொழில்வேதியல்துறைத் திட்ட அலுவலர், அழகப்பா பல்கலைக்கழகம் அவர்கள் கூறியது.

[57] ந.க.மங்களமுருகேசன், **விநாயகர், பக்கம் 47**

[58] அதிவீரராமபாண்டியன், **கூர்மபுராணம்,** முகவுரை பக்கம் 1

[59] முத்துக்குமாரசாமி, **உலக சமயங்கள் - இந்து சமயம்,** பக்கம் 42,

[60] கலைக்கஞ்சியம், தொகுதி-7, பக்கம் 436

[61] H.G. Rawlinson, India - A Short Cultural History, Page No. 130

[62] "துவாபர யுகத்தற்குப் பிற்பட்டது. இது கிருஷ்ணன், பாண்டவர்கள் இவர்கள் அரசாட்சியின் முதலும் இறுதியுமானது. இதற்கு வருடம் நான்கு லட்சத்து முப்பத்தீராயிரம். இதில் மக்கள் பொய், கொலை, களவு, காமங்கள் முதலிய மாபாதகங்கள் செய்து தெய்வம், குரு, தாய் தந்தை முதலியவரை இகழ்ந்து பசி முதலிய பீடைகளால் வருந்துவர். இதில் தருமம் இராது." - **அபிதான சிந்தாமணி** பக்கம் 370

[63] ஆற்காடு கா.வெ.சீதாராமய்யர் சுத்த வாக்கிய சர்வமுகூர்த்த பஞ்சாங்கம் 2006-07, பக்கம் 6,

[64] திருப்பூவணத்தில் திருக்கோயில் தேவகம்மியனால் கட்டுவிக்கப்பட்டதென 755ஆவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

[65] மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு** 16ம் நூ., பக்கம் 8 மற்றும் 9

[66] **கலைக்களஞ்சியம்**, தொகுதி-7, பக்கம் 436

[67] தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா எண் 1493

[68] *ச.வே.சுப்பிரமணியன்*, **தொல்காப்பியம் தெளிவுரை ,** *பக்கம்* 581

[69] *தொல்காப்பியம் நூற்பா எண்*. 6

[70] *திவாக முனிவர்*, **சேந்தன் திவாகரம்** *பக்கம்* 309

[71] *இரத்தினவேலு முதலியார், வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப்பாட்டியல், பாடல்எண்* 43

[72] *ஆ. சிவப்பிரகாச முதலியார்*, **அபிதான சிந்தாமணி**, *இரண்டாம் பதிப்பு, பக்கம்* 1170

[73] *கலைக்களஞ்சியம், தொகுதி*-7, *பக்கம்* 436

[74] *அதிவீரராம பாண்டியன்*, **கூர்மபுராணம்,** *பக்கம்* 7

[75] *ந. இராமலிங்கம்*, **கந்தபுராண ஆராய்ச்சி,** *பக்கம்* 106

[76] *இரா. பாலசுப்பிரமணியன்*, **புராணவியல்**, *பக்கம்* 5

[77] *மருததுரை*, **புராண இலக்கிய வரலாறு,** *பக்கம்* 30

[78] **தண்டியலங்காரம்,** *நூற்பா எண்* 8

[79] *கி.வா. ஜகந்நாதன்*, **தமிழ்க்காப்பியங்கள்,** *பக்கம்* 135

[80] *இரா. பாலசுப்பிரமணியன்*, **புராணவியல்**, *பக்கம்* 54

[81] *மேலது, பக்கம்* 55

[82] *அபிதான சிந்தாமணி பக்கம்* 1169

[83] *அ*) *அபிதான சிந்தாமணி பக்கம்* 1169

*ஆ*) *கலைக்களஞ்சியம், தொகுதி*-7, *பக்கம்* 437

[84] *கலைக்களஞ்சியம், தொகுதி*-7, *பக்கம்* 436

[85] *மேலது, பக்கம்* 438

[86] *வே.இரா. மாதவன்*, **தமிழில் தலபுராணங்கள்** *இரண்டாம் பகுதி, பக்கம்* 41

[87] *மேலது, பக்கம்* 41

[88] *திருக்குறள்* 243

[89] *திருக்குறள்* 235

[90] *பனம்பாரனார் பாடிய தொல்காப்பியம்* - *சிறப்புப் பாயிரம்*

[91] *வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள், பக்கம்* 17 *முதல்* 33 *முடிய*

[92] "*தெக்காரும் மாகோணத்தானே*" - *என்று நாவுக்கரசரும்*, "*மாகோணத்தானே*" - *என்று சுந்தரரும் பாடியுள்ளனர்*. "*ஆழிபுடை சூழ்ந்தொலிக்கும் ஈழந்தன்னில் மன்னு திருக்கோணமாலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார்*" - *என சேக்கிழாரும் பாடியுள்ளனர்*.

[93] *வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள் இரண்டாம் பகுதி , பக்கம்* 34 *முதல்* 40 *முடிய*

[94] *கலைக்களஞ்சியம், தொகுதி*-7, *பக்கம்* 440

[95] "*உபநிடதம்* - *தத்துவம்* : *இவை வேதங்களின் முடிவுப் பகுதிகளாக அமைந்துள்ளன. ஆகையால் இவை வேதாந்தங்கள் எனப்படுகின்றன. இவற்றில் தேவங்களின் பொருளும்*

*காணக்கிடக்கின்றன. உபநிஷத் என்ற சொல்லுக்குச் சிரத்தையுடன் அருகே உட்காருவது என்று பொருள். ரிஷிகள் போதித்த உண்மைகளே உபநிடதங்கள் என்று பெயர் பெற்றன. ஏறக்குறைய இருநூறு நூல்கள் உள்ளன. முக்திகா என்ற உபநிடதத்தில் 108 உபநிடதங்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன." கலைக்களஞ்சியம், தொகுதி-2, பக்கம் 269*

[96] *வே. இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள், இரண்டாம் பகுதி , பக்கம் 87 மற்றும் 88*

[97] *திருப்பூவணம் வாஸ்து புருடனின் முகமண்டலமாகக் கூறப்பட்டுள்ளது இங்கே ஒப்பு நோக்கத் தக்கதாய் உள்ளது.*

[98] *வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள் - இரண்டாம் பகுதி - பக்கம் 92*

[99] *வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள் - இரண்டாம் பகுதி - பக்கம் 92*

[100] *மேலது, பக்கம் 185 முதல் 209 முடிய*

[101] *மேலது, பக்கம் 210 முதல் 239 முடிய*

[102] *மேலது, பக்கம் 240 முதல் 246 முடிய*

[103] *கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 438*

[104] *அழகப்பா அரசு கலைக்கல்லூரியில் சமஸ்கிருதப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற* **திரு. நடராசன்** *அவர்கள் நேரில் கூறியது. மற்றும், பள்ளத்தூர் சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரியில் சமஸ்கிருதப் பேராசியராகப் பணியாற்றிவரும் ஸ்ரீசுபா அவர்கள் 10-08-2007 அன்று நேரில் கூறியது.*

[105] *ப. முத்துக்குராமசாமி,* **உலக சமயங்கள் - இந்துசமயம்,** *முதற்பதிப்பு, ஆகஸ்ட் 1996, பக்கம் 42 கடைசி வரி, பக்கம் 43 முதல் வரி*

[106] *டி.எஸ். இராமலிங்கம், அஷ்டா தச புராணங்கள் என்னும்* **பதினெண் புராணங்கள்**, *பக்கம் 465*

[107] *ஜோதிடப் பலன்கள் மற்றும் திருக்கோயில்களின் சிறப்புகளைக் கூறும் தமிழ் வார இதழ், சென்னை பதிப்பு*

[108] *13-10-2006 மற்றும் 20-10-2006 நாளிட்ட* **குமுதம் ஜோதிடம் இதழ்***களில் வெளியான* **"பூ மணக்கும் பூவணத்துப் புனிதன்"** *என்ற தலைப்பிலான கட்டுரைகள்.*

[109] *கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 436*

[110] *பிரமகைவர்த்த புராணத்தில் ஏராளமான தலபுராணங்கள் உள்ளன. அவற்றில் ஆய்வாளர் அறிந்த சில புராணங்கள் மட்டுமே இங்கு தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன.*

[111] *இதனால், சுவேதவனம் என்ற* **திருவெண்காடுப்** *புராணத்திலே திருப்பூவணத்தின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன என அறியமுடிகிறது.*

[112] *நாட்டுபுற வழக்கில் "உன்னால் மட்டுமல்ல-உன் அப்பன் தாத்தா வந்தாலும் முடியாது!" என்று கூறும் வழக்கம் உள்ளது. இவ்வாறாக, முன்வருக்கு முன்னவராலும் முடியாதது! என்பது*

சொல்வழக்கு. இங்கே முன்னவராக வேதவியாசரும் முன்னவருக்கு முன்னவராக நந்திதேவரும் உள்ளனர்.

[113] திருத்தொண்டர் துதியில் அவர் திருப்பூவணம் வந்து வணங்கியதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

[114] தமிழில் திருப்புகழ், **திருப்புகழில் பண்ணாராய்ச்சி நூல்**

[115] அருணகிரிநாதரின் திருப்பூவணப் பாடல்கள் மூன்றும் திருப்பூவணம் தொடர்பான எந்த ஒரு நூலிலும் இடம்பெறவில்லை. இவ்வாய்வாளர் தனது எம்ஃபில் ஆய்வின்போது இப்பாடல்களைத் திரட்டிச் சேர்த்துள்ளார்.

[116] வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள் - இரண்டாம் பகுதி - பக்கம் 51 -

[117] கி. காளைராசன், **திருப்பூவணக் காசி,** பக்கம் 148

[118] மேலது, பக்கம் 72-73

[119] அபிதான சிந்தாமணி பக்கம் 1555

[120] திருக்குறள் 198

[121] திருப்பூவணப் புராணம் பாடல் எண் 309.

[122] மேலது, பாடல் எண் 406.

[123] மேலது, பாடல் எண் 449.

[124] மேலது, பாடல் எண் 528.

[125] மேலது, பாடல் எண் 566.

[126] மேலது, பாடல் எண் 628.

[127] மேலது, பாடல் எண் 657.

[128] மேலது, பாடல் எண் 693.

[129] மேலது, பாடல் எண் 785.

[130] மேலது, பாடல் எண் 858.

[131] மேலது, பாடல் எண் 967.

[132] மேலது, பாடல் எண் 1087.

[133] மேலது, பாடல் எண் 1153.

[134] மேலது, பாடல் எண் 1192.

[135] மேலது, பாடல் எண் 1231.

[136] மேலது, பாடல் எண் 1271.

[137] மேலது, பாடல் எண் 1289.

[138] மேலது, பாடல் எண் 1329.

[139] மேலது, பாடல் எண் 1349.

[140] மேலது, பாடல் எண் 1433.

# 2. திருப்பூவணப் புராணமும் நூலாசிரியர் வரலாறும்

**முன்னுரை**

திருப்பூவணப் புராணத்தின் பொதுவான அமைப்பு முறையும், சருக்கங்களின் தலைப்பும் வரிசைமுறையும், அவற்றில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை, புராணக்கதைகள், புராணத்தின் அடிப்படையிலான நம்பிக்கைகள், இறைவன் இறைவியை வணங்குவதால் கிடைக்கும் பலன்கள், வழிபாடுகள், விழாக்கள், சிறப்புகள், மற்றும் புராணத்தைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்கள் மற்றும்பிற விபரங்களும் இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

மேலும், திருப்பூவணப் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதிய கந்தசாமிப் புலவரின் ஊர், தாய் தந்தையர், அவர் வாழ்ந்த காலம் ஆகியனவும் இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

## 2.1. நூலமைப்பு

திருப்பூவணப் புராணம் 1437 காரிகை மற்றும் விருத்தப் பாக்களால் ஆனது. முச்சீர் முதல் எண்சீர் வரை பல்வேறு விருத்தங்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. இவை காப்பு, நூற்பயன் மற்றும் கடவுள் வாழ்த்துத் தொடங்கி சிதம்பரஉபதேசச் சருக்கம் ஈறாக உள்ள அனைத்துப் பாடல்களிலும் விரவியுள்ளன.

திருப்பூவணப் புராணம் பின்வரும் வகையில் சருக்கங்களாகப் பிரித்துப் பாடப்பெற்றுள்ளது.

| வரிசை எண் | தலைப்பு | பாடல்கள் எண்ணிக்கை | பாடல்கள் மொத்தம் |
|---|---|---|---|
| | காப்பு | 1 | 1 |
| | நூற்பயன் | 1 | 2 |
| | கடவுள் வாழ்த்து | 18 | 20 |
| | அவையடக்கம் | 5 | 25 |
| | நைமிசாரணியச் சருக்கம் | 21 | 46 |
| | சவுனகர் சூதரை வினவிய சருக்கம் | 15 | 61 |
| | திருக்கைலாயச் சருக்கம் | 38 | 99 |
| | ஆற்றுச் சருக்கம் | 11 | 110 |
| | திருநாட்டுச் சருக்கம் | 52 | 162 |
| | திருநகரச் சருக்கம் | 65 | 227 |
| | பாயிரம் | 3 | 230 |
| 1 | சூரியன் பூசனைச் சருக்கம் | 79 | 309 |
| 2 | திரணாசனன் முத்தி பெற்ற சருக்கம் | 97 | 406 |
| 3 | மணிகன்னிகைச் சருக்கம் | 43 | 449 |
| 4 | துன்மனன் சருக்கம் | 79 | 528 |
| 5 | தருமஞ்ஞுன் முத்தி பெற்ற சருக்கம் | 38 | 566 |
| 6 | உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கம் | 62 | 628 |
| 7 | பாற்கரபுரச் சருக்கம் | 29 | 657 |
| 8 | சர்வ பாவ விமோசனச் சருக்கம் | 36 | 693 |
| 9 | பிரம சாப விமோசனச் சருக்கம் | 92 | 785 |
| 10 | இலக்குமி சாபவிமோசனச் சருக்கம் | 73 | 858 |
| 11 | உமாதேவி திருஅவதாரச் சருக்கம் | 109 | 967 |
| 12 | திருக்கலியாணச் சருக்கம் | 120 | 1087 |
| 13 | தக்கன் வேள்வியழித்த சருக்கம் | 66 | 1153 |
| 14 | உமைவரு சருக்கம் | 39 | 1192 |
| 15 | சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம் | 39 | 1231 |
| 16 | சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம் | 40 | 1271 |
| 17 | தீர்த்தச் சருக்கம் | 18 | 1289 |
| 18 | நளன் கலிமோசனச் சருக்கம் | 40 | 1329 |
| 19 | திருவிழாச் சருக்கம் | 20 | 1349 |
| 20 | சிதம்பர உபதேசச் சருக்கம் | 87 | 1436 |
| | வாழ்த்துப் பாடல் | 1 | 1437 |

### 2.1.1. காப்பு

திருப்பூவணப் புராணத்தின் முதலாவதாக விநாயகர் பாடல் ஒன்று காப்புப் பாடலாக உள்ளது. இதில் செந்நிற கமலத்தை மலர்விக்கும் ஞாயிறு போன்றதும், வெண்மதிபோன்றதும், அடியார்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு நல்கும் **கற்பகவிநாயகரின்**பாதங்களைப் போற்றிப் பாடப்பெற்றுள்ளது.

### 2.1.2. நூற்பயன்

இரண்டாவது பாடலில் திருப்பூவணப் புராணத்தை ஓதுவோரும், அதைக் கேட்போரும் அடையும் பலன் கூறப் பெற்றுள்ளது. ஒப்பிலாத உருத்திர சங்கிதை உற்ற திருப்பூவணநாதரின் இந்தப்புராணக் கதைகளைக் படிப்போரும், பிறருக்கு உரைப்பவரும், இக்கதைகளைக் செவிகொண்டு கேட்பவர்களும், மனம் மெய் வாக்கு இவற்றால் இறைவனை வணங்குவோரும் மாதவம் செய்தவர்கள். இவர்கள் தவறேதும் இல்லாத தவத்திரு மன்னவர் தயாபரன்(சிவன்) கயிலை மலையில் வாழ்வார்கள்.

*"தந்திமுகன்றம்பியரு ணந்திதனக்குரைப்பநந்தி சநற்குமாரன்*
*வெந்துயரமறவெடுத்துவிரித்துரைப்பவுவன் வேதவியாதற்கோதப்*
*புந்தியுணர்ந்தவன்சூதமுநிக்குரைத்த புட்பவனபுராணந்தன்னைச்*
*சிந்தைமகிழ்வுறப் படிப்போர் கேட்போர் நல்லிகபரங்கள் சேர்வரன்றே"* (பாடல் 2)

என்று நூலாசிரியர் உறுதிபடக் கூறுகிறார். *"சொல்லுக சொல்லிற் பயனுடைய"*[141] என்ற வள்ளுவனின் வாக்கிற்கு இணங்க திருப்பூவணப் புராணக் கதைகளைப் படிப்போரும் அதைக் கேட்போரும் அடையும் பயன்களை இரண்டாவது பாடலிலேயே நூலாசிரியர் கூறிவிடுகிறார்.

### 2.1.3. கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்துப் பகுதியில் சபாபதி, திருப்பூவணநாதர் (மூலலிங்கம்), அழகிய நாயகர்(உற்சவர்), மின்னன்னை(அம்பாள்). விநாயகக் கடவுள், முருகக் கடவுள், வயிரவக் கடவுள், சரசுவதி தேவி, திருநந்தி தேவர், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தர மூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமிகள்,

மெய்கண்ட தேவர், திருத்தொண்டர் இவர்களை வாழ்த்திப் பாடல்கள் உள்ளன. இதில் திருப்பூவணநாதருக்கு மட்டும் நான்கு பாடல்கள் உள்ளன. ஏனைய தெய்வங்களுக்கும் நாயன்மார்களுக்கும் தலா ஒன்று வீதம் பாடல்கள் உள்ளன. காப்பு, நூற்பயன் ஆகிய இரண்டு பாடல்களையும் சேர்த்து ஆக மொத்தம் இருபது பாடல்கள் உள்ளன. பாயிரத்தில் பாடப் பெற்றுள்ள தெய்வங்களுக்குத் திருக்கோயிலில் சிலைவடிங்கள் உள்ளன.

## 2.1.4. நால்வர் துதி

**திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்**

*"திருத்தோணிபுரத் தமர்ந்த சிவனருளா னுமை கலசத் திரு முலைப்பால்*
*விருப்போடு மமுது செய்து மிகுசைவத்துறை விளங்க வேதமோங்கக்*
*கருக்குழி வீழ்ந்தலற வமண்கையர் கடாங்கழுவேறக் கருதிமாற*
*னெருப்புறு வெப்பகன்றிட வெண்ணீறெடுத்துச் சாத்தினர் தாணினை தல் செய்வாம்"*

**திருநாவுக்கரசுநாயனார்**

*"அருள் பெருகுந் திலகவதி யாரருளா லமண் சமயமகற்றி யன்பாற்*
*கருதரிய கற்புணையாற் கடனீந்திக் கருவேலை கடப்பான் போலு*
*மருவுபுகழ் வாய்மூரில் வைதிக சைவந்தழைப்ப வந்து தோன்றித்*
*திருவதிகைப் பதிவருஞ் செந்தமிழ் நாவுக்கரையர் பதஞ்சிந்தை செய்வாம் "*

**சுந்தரமூர்த்தி நாயனார்**

*"காதலுடன் மிகுமின்பக் கடிமணப்பூம்பந்தரின் கீழ்க்கலைவல்லோர்முன்*
*மாதவன் போல் வந்திவனம் வழித்தொண்டனென்றிசைக்கும் வழக்கினாலே*
*பாதிமதிநுதற் பரவையிடையிருளிற் பங்கயப் பொற்பாதஞ்சேப்பச்*
*சோதிதனைத் தூதுகொண்ட சுந்தரன்றாள் சந்ததமுந் தொழுது வாழ்வாம் "*

**மாணிக்கவாசக சுவாமிகள்**

*"மருவார்க டொழுகழற்றென் மதுரைவருதமிழ்வழுதி மன்னர் கோமான்*
*பொருவாசி கொணர்கெனச் செம்பொன் கொடுத்துவிடுத்திடவச் செம்பொன்னாலே*
*பெருவாழ்வை யுறவிரைந்து பெருந்துறையின் மேவியதம்பிரானைக் கொண்ட*
*திருவாதவூரடிகளிரு பாதகமலங்கள் சென்னிவைப்பாம்"* (பாடல் 15,16,17, 18)

இதில் **மெய்கண்ட தேவர் வாழ்த்துப்** பாடலில் "*சிவஞானநூல் வகுத்துக் கொடுத்தமை*" குறித்து வாழ்த்திப் பாடப் பெற்றுள்ளது.[142] மேலும் "*பூவணத்தெம் புண்ணியன் பொற்கோயினண்ணுஞ் சீர்மேவு **திருத்தொண்டர்** சேவடிகள் தினம் பணிந்து சிந்தை செய்வோம்*" என்று திருத்தொண்டர் துதியும் உள்ளது.[143]

## 2.2. அவையடக்கம்

பாயிரத்தை அடுத்து அவையடக்கப் பாடல்கள் ஐந்து உள்ளன. இவற்றில், கலைகளில் சிறந்த முனிகள் வடமொழியில் எழுதிய திருப்பூவணப் புராணத்தை "நீ நற்றமிழான் முறைநவிற்று"[144] என நுண் அறிவில் உயர்ந்தவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்கத் தாம் திருப்பூவணப் புராணத்தைத் தமிழ் மொழியில் மொழிபெயர்த்து விருத்த யாப்பில் பாடுவதாக நூலாசிரியர் கூறுகிறார்.

## 2.3.1. நைமிசாரணியச் சருக்கம்

திருப்பூவணப் புராணக்கதைகளைக் கூறுமாறு சவுனக முனிவர்கள் சூதமுனிவரிடம் நைமிசாரண்யத் திருத்தலத்தில் வேண்டிக் கொண்டனர். சவுனகாதி முனிவர்களின் வேண்டுகோளை ஏற்றுச் சூதமுனிவரும் திருப்பூவணப் புராணக் கதைகளைக் கூறுகிறார். கதை கூறுதலும், கேட்டலும் நடைபெற்ற இடம் நைமிச வனமாகும். இந்த வனத்தின் பெருமைகளை 21 பாடல்களில் நூலாசிரியர் எடுத்துரைக்கின்றார். இப்பாடல்களில் சிவபெருமானின் பெருமைகளை எடுத்துக்கூறி அப்பெருமைகள் இந்த நைமிச வனத்திற்கும் பொருந்தும் ஆகையால் இந்த இடம் சிவபெருமானை ஒக்கும்[145] என்று கூறுகிறார். மேலும் நான்முகன் பெருமைகளை எடுத்துக் கூறி அப்பெருமைகள் யாவும் இந்த வனத்திற்கும் பொருந்தும் ஆகையால் இந்த இடம் நான்முகனை ஒக்கும்[146] என்று பாடுகிறார். இங்கே பன்னசாலைகள் உள்ளன. அட்ட யோகம் செய்பவர்கள் வாழ்கின்றனர்.[147] எண்ணிலாதோர் பிறப்பு இறப்புக்களை தங்களது கண்ணினாற் கண்டு கழித்துப் பல காலங்கள் கடந்து மாதவம் செய்வோர் இங்கே வாழ்கின்றனர்.[148] பிரமச்சரியம், வானப் பிரத்தம், வருணாச்சிரமம் போன்ற நெறிகளைக் கடைப்பிடித்து வாழ்வோர் இங்கே உள்ளனர்.[149] பிறவிப்பகை உடைய கீரியும் பாம்பும் மற்றபிற விலங்குகளும் ஒன்றாய் கூடி இங்கே வாழ்கின்றன.[150] மேலும்,

*"காமாதிகள் விட்டேற்குநர் தண்டோரொருசாரார்*
*பூமாலை களாற் பூசனை புரிவோரொருசாரா*
*ரோமாதிகளுக்காவனகொணர்வோரொருசாரார்*
*பாமாண்புறவே பாடுநராடுநரொருசாரார்*

*யாகாதிகடருமங்களிழைப்போரொரு சாரார்*

*யோகாதிகள் கருமங்களுழப் போரொரு சாரார்*
*சாகாமூலபலந்தருகிற்பவரொருசாரார்*
*மாகாமந்தனை மாற்றிமகிழ்ந்தோரொரு சாரார்*

*வேதாகமநூன்மேதகவோதுநரொருசாரா*
*ராதாரத்தினடுக்கையறிந்தோரொருசாரார்*
*நாதாந்தந்தனை நாடிநவிற்றுநரொருசாரா*
*ரோதாவுண்மைப் பொருளையுணர்ந்தோரொருசாரார்"(பாடல் 39,40,41)*

என்று நைமிச வனத்தில் வாழ்பவர்களின் தினச் செயல்பாடுகளைப் பாடியுள்ளார்.

## 2.3.2. சவுனகர் சூதரை வினவிய சருக்கம்

நைமிசவனத்திலே, தவமிகுதியினலே சிவஞானத்தில் விருப்பமுடைய சவுனநகர் முதலிய முனிவர் குலாம்கள், 'சிவனடியை அடையும் வகை தெரிவிக்குங் காதை'களைத் தம்முள்ளே ஒருவருக்கொருவர் ஆராய்ந்து கொண்டிருந்தனர். அப்பொழுது, சூதமுனிவர் அங்கே வந்தார். அவரை மற்றைய முனிவர்கள் எதிர்கொண்டு வணங்கி இருக்கை கொடுத்து அமரச் செய்தனர். அந்த இருக்கையிலே சூதமுனிவர் அமர்ந்திருந்தார். அப்போது அவரிடம்,

*"முன்பொர் தினந்தனின் மூதிறவாலே*
*மன்பயில் புட்பவனத்தது காதை*
*மின்பயிலகின்ற **சுவேதவனத்தி***
***னன் கதை** நாப்பணவின்றிடுகாலை*

*அப்பரி சங்கணறைந் தசுருக்க*
*மெய்ப்படநாடி விளங்க விரித்துத்*
*திப்பியமான செழுங்கதை மேன்மை*
*யிப்பரி சென்ன வியம்பிட வேண்டும்" (பாடல் 11,12)*

எனச் சவுனநகர் முதலிய முனிவர்கள் விண்ணப்பஞ் செய்தனர். அதற்குச் சூதமுனிவர் முதலில் திருக்கைலாயத்தின் பெருமைகள் பலவற்றில் சிலவற்றை எடுத்துக்கூறிப் பின்னர் திருப்பூவண மான்மியத்தை எடுத்துக் கூறியருளினார்.

## 2.3.3. திருக்கைலாயச் சருக்கம்

உமாதேவியார் உடனுறையச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கப் பெற்றது திருக்கைலாயமலை.

*"அந்தநன் கயிலை தன்னிலன் புள்ளவ ரியயனமரர்க ளவுணர்*
*சந்திராதித்தர் கின்னரர் வசுக்கள் சாரண ரெண்டிசாமுகத்தர்*
*கந்தருவத்தர் காரி மாகாளி கருடர் வித்தியாதரர் சித்தர்*

*முந்துறு நிகமாகமமுணர் முனிவர் முறை முறை தொழுதுநின்றேத்த" (பாடல் எண் 91)*

*"நவமணிகள் அழுத்திய செம்பொன்னாலாகிய ஒரு மண்டபத்திலே சிங்காசனத்தில், அறுமுகக்கடவுள் அமர்ந்தருளும்போது, திருநந்தி தேவர் வணங்கி, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் அருளுஞ் சிவத்தலத்தைப் பற்றிக் கூறி அருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர். அதற்குச் சிவபிரான் தமக்கு அருளிச் செய்தபடி முருகக்கடவுள் திருநந்தி தேவருக்கும் ஓதியருளினர். திருநந்தி தேவர் அதனைச் சனற்குமார முனிவருக்கு விரித்து உரைத்தார். சனற்குமாரர் வேதவியாத முனிவருக்கும், அவர் எனக்கும் சொல்லியருளினார்,*

*ஈது முன்னரி சைந்த சோபானமென்*
*றோது நீதிச் சவுநகற் கோதியே*
*காதலாலக் கதையை விரித்துயர்*
*சூத மாமுனி சொல்லத் தொடங்கினான்". (பாடல் 99)*

## 2.3.4. ஆற்றுச் சருக்கம்

**ஆற்றுச் சருக்கத்தில்,**

*"பன்னு செந்தமிழ்சேர் சங்கப்பாண்டிநன்னாடுசூழ்ந்த*
*தொன்மைசால் பொருநை வைகை வளஞ்சில தொகுத்துரைப்பாம்" (பாடல் 100)*

**என்று செந்தமிழ்ப் பாண்டிய நாட்டில் ஓடும் பொருநை, வைகை நதிகளின் வளங்கள் சிலவற்றைத் தொகுத்துக் கூறியுள்ளார்.**

*"பொருதிருப் **பொருநையோடு** புரிசடைப் பெருமான்றன்னான்*
*மருவிய மகிழ்வினீடும் **வைகை** மாநதியை யுந்தான்*
*றருணவெண்ணிலாக் கொழிக்குந் தரளமாலிகை போற்றாங்குந்*
*திருமிகு வண்மை சான்றசெந்தமிழ்ப் பாண்டிநாடு" (பாடல் எண் 110)*

**ஆற்றுச் சருக்கத்திலுள்ள அதிகமான பாடல்கள் பொருநை நதியின் புகழ் பாடுவனவாக உள்ளன. வைகை ஆற்றின் சிறப்புகள் அடங்கிய பாடல்கள் திருநாட்டுச் சருக்கத்திலேயே அதிகம் காணப்படுகின்றன.**

## 2.3.5. திருநாட்டுச் சருக்கம்

**பரமனது திருவருளால் ஓங்கி உயர்ந்தது பாண்டிய நாடு. இதனைச் சுந்தர மாறன் என்ற பெயரில் சிவபெருமான் ஆட்சி செய்துள்ளார்.**

*"பன்னுமலயத்துவச பாண்டியன் பண்டிழைத்த தவப் பயத்தினாலே*
*முன்னொரு காலவதரித்து மும்முலை[151]யாண் முடிதுலங்க முறையிற்காக்கு*
*மந்நிலையி லமர்புரிந்தங் கவளை மணம்புணர்ந்தருளி யங்கணாளன்*
*மன்னுநற் **சுந்தரமாறனென** வரசு புரிந்துளது வழுதிநாடு" (பாடல் 113)*

சங்கம் வைத்துத் தமிழ் ஆய்ந்த நாடு, பாண்டிய நாடு. வடவேங்கடந் தென்குமரி எனத் தமிழ் எல்லை கூறுகின்ற இந்நாட்டிலே, வைகை வளஞ் சுரந்தளிக்கும். அறுபத்துநான்கு திருவிளையாடல்களை ஈசன் நடத்தியருளினார்.

*"தவலறவே யொரு **நான்கு தலையிட்ட வறுபஃது தந்தலீலை***
*சிவபெருமான் செய்தருளிச் செங்கயற்கண் மங்கையொடுஞ் சேர்ந்தநாடு*
*கவுணியர் தங்குலத்துதித்த **காளையமண்கையர் தமைக்கழுவிலேற்ற***
*மவுலிதிகழ் வழுதிமகிழ் வண்**டமிழேடெதிரேறும் வைகை** நாடு" (பாடல் 116)*

சொக்கநாதர், கர்ப்பூர நாயகியான[152] மீனாட்சியம்மையைத் திருமணம்[153] செய்தருளியது, சமணர்கள் கழுவேறியது, திருஞானசம்பந்தர் இட்ட ஏடுகள் வைகை ஆற்று நீரை எதிர்த்துச் சென்றது ஆகிய பாண்டிய நாட்டுச் சிறப்புகள் இப்பாடலிலே குறிப்பிடப்பெற்றுள்ளன.

*"செந்நெல் வளர்ந்து செழுங்கதிர் சாய்தல்*
*பன்னுதமிழ்ப் புகல்பாலனை முன்னா*
*னின்னருளா னதி**யே டெதிரேற***
***மன்ன னெழுந்து வணங்குதல் போலாம்"** (பாடல் 137)*

என்ற பாடலில் ஏடு எதிரேறும் போது மன்னன் எழுந்து வணங்கியதை நெற்கதிர்கள் சாய்ந்திருப்பதற்கு உவமையாகப் புலவர் பாடியுள்ளார்.

### 2.3.5.1. வரியும் வகையும்

*"அழகியசீர்ப்புகழ் வேந்தற்**காறிலொன்று கொடுத்**தைந்தில்*
*வழிபடுதெய்வம் பிதிரர்வருவிருந்துவான்கிளைகள்*
*விழைவுறவேயளித்ததற்பின்மிகுமொன்றால் வியன்குடிமை*
*பழகிய செல்வம் பெருகும் பாண்டிவளநன்னாடே" (பாடல் 140)*

என்ற பாடலில் ஆறில் ஒருபாகம்(1/6) பாண்டியநாட்டில் மன்னனுக்கு வரியாகக் கொடுக்கப்பட்ட (வரி வாங்கப்படவில்லை - கொடுக்கப்பட்டுள்ளது) செய்தியும், மீதமுள்ள ஐந்து பங்கையும் தெய்வம், நீத்தார்கள், விருந்தினர், வான், கிளைகள் எனப் பிரித்து அளிக்கும் குடிமை பொருந்தியது பாண்டியநாடு எனச் சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளது.

*"**வண்டமிழ்ச்சங்க**மெங்கும்வார்புனற்சங்கமெங்குஞ்*
*சண்பகவனங்களெங்குந்தகுமடவனங்களெங்கும்*
*விண்படர்வேழமெங்கும் வியன்கழைவேழமெங்கும்*
*பண்டருபாடலெங்கும் பதமிதிப்பாடலெங்கும் " (பாடல் 143)*

என்ற பாடலில் தமிழ்ச்சங்கம் பற்றிப் பாடப்பெற்றுள்ளது.

### 2.3.5.2. பாண்டிப் பதினான்கு

*"தென்மதுரை பரங்குன்றந் திருவிராமேச்சுர மாடானை புத்தூர்*
*பன்னுதமிழேடக நெல்வேலி பகர்குற்றால மாப்பனூர்பார்*
*மன்னுபுனற் சுழியல் புனவாயில் கொடுங்குன்றமெழின் மருவுகானை*[154]
*பொன்மதில் சூழ் பூவணமும் பொருந்துகின்ற புகழ்ப் பொதியப் பொருப்பனாடு"*

(பாடல் 117)

இப்பாடலிலே தேவாரப் பாடல் பெற்ற பாண்டியநாட்டுத் தலங்கள் பதினான்கும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

### 2.3.5.3. மதுரையின் சிறப்புகள்

திருப்பூவணப் புராணத்தில் திருப்பூவணத்தின் பெருமைகளைக் கூறத் தலைப்பட்ட புலவர், இத்தலத்தின் இருப்பிடத்தைக் கூறும் போது, இது பாண்டியநாட்டின் தலைநகரான மதுரையின் சிறப்புக்களில் சிலவற்றைக் கூறி, இச்சிறப்புகளையுடைய மதுரைக்குத் தென்கிழக்கே திருப்பூவணம் உள்ளது எனக்குறிப்பிடுகிறார்.

பாண்டியநாட்டின் தலைநகரான மதுரைக்குக் கடல்களை எல்லைகளாகக் கொண்ட மன்னர்கள் நேரிடையாக நெருங்க அஞ்சுவர். இங்கே கையிலே அனலையுடைய சிவபெருமான் துணைவியாரோடு விமானத்திலிருந்து வந்து ஆட்சிசெய்கிறார். இந்திரன் பூசை செய்யும் ஊர். மாடமாளிகைகள் நிறைந்த வளமை மிகுந்த இந்த நகரிலே தமிழ்ச்சங்கம் உள்ளது.

*"நீடுதிரைக்கடலாடைநிலவேந்தர் நேரிழையார் நெருங்க வெங்குஞ்*
*சூடகக்கைச்சுரர்மடவார்துணைவரொடும் விமானத்திற்றுவன்றுமூதா*
*ரேடலர்தாரிட்டருச்சித்திந்திரன் வந்தனைபுரியுமெழில்கொண்மூதூர்*
*மாடமலிமறுகுதிகழ்வளமைசாறமிழ்ச் சங்கம் வளருமூதூர் (பாடல் 164)*

தேவர்களும், திசைக்கு ஒன்றாக நான்கு தலைகளையுடைய பிரமனும், திருமாலும் இங்கு வந்து வணங்குகின்றனர். பாண்டிய மன்னன், தன் கண்களாலே கண்டு களிக்கும்படியாக, நடராசப் பெருமான் வெள்ளியம்பலத்திலே கால்மாறித் திருநடனம் ஆடுகிறார். பூதேவியின் முகமாக விளங்கும் மதுரையின் புகழ் மூவுலகிலும் பரவியுள்ளது.

*தேவர்களுந்திசை முகனுந் திருமாலுந்திசை யோருஞ் செங்கை கூப்ப*
*மேவுதிருநடராசர் மீனவன் றன் விழிகளிப்பவெள்ளிமன்றுட்*

*டாவின்மலாப்பதமாறித்தாண்டவஞ் செய்தருள்கின்றதருமமூதூர்*
*மூவுலகும் புகழ்மதுரைமிகவிளங்குநிலமகடன் முகமே போல" (பாடல் 164, 165)*

மதுரையின் சிறப்புகள் பல திருநகரச் சருக்கத்திலே பாடப் பெற்றுள்ளன.

## 2.4. திருநகரச் சருக்கம்

சிறப்புகள் மிகுந்த பாண்டிய நாட்டில் உள்ள சிவபெருமான் உறைந்துள்ள திருப்பூவணத்தின் சிறப்புகள் சில இச்சருக்கத்திலே 65 பாடல்களில் விரிவாக எடுத்துச் சொல்லப்பெற்றுள்ளன. முதலில் மதுரை மாநகரின் சிறப்புக்களைக் கூறி அதன் அருகில் தென்கிழக்குத் திசையில் ஒரு யோசனை தூரத்தில் உள்ளது திருப்பூவணநகரம் என்று கூறப்பட்டுள்ளது.

உழவர்கள் நாற்று நட்டுச் செந்நெல் வளர்த்தனர். பொய்யான சமயங்களைப் பற்றிய பௌத்தரும் சமணரும் கழுவினில் ஏறிய நாடு. வயலில் வேலை பார்ப்பவர், கள்ளுண்டு களித்திருப்போர், நெல்முடி நடுவோர், பண்களோடு இசை பாடி நடனம் ஆடுவோர், பண்ணையில் வேலை செய்யும் உழத்தியர் மது உண்பது குற்றமில்லை எனக்கூறி நகைத்துக் கள்ளுண்டிருப்பர். செந்நெல் மலைபோல் குவிந்திருக்கும். சோலைகள் நிறைந்திருக்கும். நீர்த்துறைகள் நிறைந்திருக்கும். 'பாதமே பயிலும் பரதத்துடன் மாதரோடு நடிக்கும் மயிற்குழாம்' நிறைந்திருக்கும்.

*"கண்டவளவான்மிகுகலைப்பொருளினாலும்*
*வண்டவளநாயகிவழுத்தரிடதென்றாற்*
*கொண்டவளவில்புகழ்குலச்செழியராளு*
*மண்டவளநாட்டணியையாரறையவல்லார்" (பாடல் 162)*

## 2.5. திருப்பூவணத் திருத்தலம் அமைவிடம்

*"அன்ன திருப்பதிக் கங்கி திக்கினில் யோசனைக்கப்பா லமர்ந்து தோன்றுஞ்*
*சின்மயமாஞ் சிவலிங்கஞ் செங்கதிர் வெய்யோன் பூசை செய்யவைகு*
*மன்னுநவமணித்தேரூர் மறுகு தொறுமாளிகை சூளிகைநெருங்கும்*
*பொன்மதில்சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார் "*
*(பாடல் 166)*

திருப்பூவணத் திருத்தலத்தின் அமைவிடம் பற்றி இப்பாடலிலே குறிப்பிடப்பெற்றுள்ளது. பாண்டியநாட்டின் தலைநகராகிய மதுரைக்கு அங்கி திக்கினிலே (அக்னித்திசை என்றழைக்கப்படுகின்ற தென்கிழக்குத்திசையிலே) ஒரு யோசனை (18 கி.மீ.) தூரத்திலே **திருப்பூவணம்** உள்ளது.

## 2.5.1. பூவணச் சிறப்புகள்

**பொன்னனையாள்** தன் மனைவரும் சிவபெருமானின் கமலச் சேவடிகளின் மணம் திருப்பூவணநகரத்தின் எட்டுத்திசைகளிலும் வீசும்.[155] சிவபெருமானுக்கும், பெருமாளுக்கும், பிரமதேவனுக்கும் உரிய பண்பு நலன்களை இத்தலம் பெற்றுள்ளதால், இது **சேந்தன்** போன்றது. **செங்கண்மால்** போன்றது. **திசைமுகன்** போன்றது. கலைகளில் **கலைமகளைப்** போன்றது. செல்வத்தில் **பூமகள்** போன்றது.

திருப்பூவணத்தில் பொன்வேய்ந்த மதில்கள் சூழ்ந்த **கோட்டை** உள்ளது.[156] (இன்று இந்த இடம் 'கோட்டைமேடு' என்று அழைக்கப்படுகிறது). பொன்னால் ஆன **கோபுர வாயில்** உள்ளது. "பீடுற மன்னும் பெரும் புறக் கடல் போற் பிறங்கு **பேரகழி** சூழ்ந்திலகும்"[157]. அதில் திமிங்கலம் இருக்கும். அகழியை அடுத்தாற்போல் **தேர்** செல்லும் இரதவீதி(படம்-13)[158] இருக்கும். கோட்டை வாயில்கள் தோறும் "மகிழ் தரு மாட கூட மண்டபங்கள் மாளிகை சூளிகை நெருங்கும்"[159]. அன்னசாலைகள் உள்ளன[160].

இவ்வாறாகத் திருப்பூவண நகரின் அமைப்பும் அதன் சிறப்புகளும் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

## 2.5.2. பூவணத்து ஓசைகள்

நாரதரின் இன்னிசை, வீணையின் இசை, வேதத்தின் ஓசை, துந்துபியின் ஓசை, முழவோசை, கடாக்களிறோசை முதலான ஓசைகள் திருப்பூவணத்தில் கேட்டுக் கொண்டே இருக்கின்றன.

## 2.5.3. பூவணத்து மரங்கள்

*"காமரமருச்சுநங்காகதுண்டநீள்*
*பூமிகுகுங்குமம் புன்னை வன்னி பொற்*
*றேமரு வேல நற்றிகிரி கூவிள*
*மாமலகங் கடம் பார மாதுளம் (பாடல் 86)*

*வண்பல வரம்பை மாவகுளந் தாடிமம்
பிண்டி மந்தார மாம்பிர நற்பிப்பில"
சண்பகந் தமரநீள்சாலஞ் சந்தனம்
விண்டிகழ் பராரை மாமரங்கண் மேவுமால்" (பாடல் 87)*

என்ற பாடலிலே திருப்பூவணத்திலே பூங்கமுகு, வாழை, தெங்கு, கோங்கு, ஆரம், சந்தனம், புன்னை, சம்பகம், மந்தாரம், வருக்கை, மாமரம் முதலான பல்வகை மரங்கள் இருந்த செய்தி கூறப்பட்டுள்ளது.

## 2.5.4. பூவணத்துப் பறவைகள்

*"கோடரங்கள் குயில்விளையாடலே
நீடரங்கினிலாவிளையாடுவ
மாடமேல்விளையாடுவமஞ்ஞைக
ளாடுநீர்விளையாடுவவன்னங்கள்" (பாடல்201)*

குயில், மஞ்ஞை, அன்னம் முதலான பறவைகள் அதிகமான அளவில் விளையாடித் திரிந்த செய்தி இப்பாடலிலே கூறப்பட்டுள்ளது.

## 2.5.5. பூவணத்து மக்களின் செயல்கள்

மங்கலவிதத்துடன் மணத்தொழின்முடிப்பார், தோரணநிறுப்பார், நிறைகும்பம் நடு வைப்பார், இசை பாடி நடனமாடுவோர், நல்லிசை கேட்பார், இசை பயிற்றியிடுகிற்பார், கோபுர நல்வீதிகள் விளங்கக் கண்களிகள்கூரவிடு காவண நிரைப்பார், குங்குமசுகந்தமுலை கொண்டணிதல் செய்வார், குழலில் மிக அகிலிட்டுகொழும்புகை நிறைப்பார் எனப் பல்வேறுவிதமான மக்கள் நிலைகளை எடுத்துக் கூறுகிறது.

## 2.6. பாயிரம்

பாயிரத்தில் மொத்தம் மூன்று பாடல்கள் உள்ளன.[161] இம்மூன்று பாடல்களிலும் திருப்பூவணப் புராணமாகக் கூறப்போகும் இருபது சருக்கங்களையும் வரிசையாகப் புலவர் எடுத்துக்கூறியுள்ளார். மேலும் இப்புராணத்தைப் பாடும் வருடத்தையும் குறிப்பிடுகின்றார்.

"1) செங்கதிர்வெய்யோன்பூசைசெய்தவாறுந்
2) திகழ்திரணாசனன்வீடுசேர்ந்தவாறும்

3) பொங்குமணிகன்னிகைநீர்பொருந்துமாறும்
4) புகலருந்துன்மனன்கதியிற்புக்கவாறுந்
5) தங்குதருமஞ்ஞுன் முத்திசார்ந்தவாறுந்
6) தன்னிகருற்பலாங்கிபதிசார்ந்தவாறும்
7) பங்கமில்பாற்கரபுரப்பேர்படைத்தவாறும்
8) பன்னுமெலாப்பவங்களையும்பாற்றுமாறும்" (பாடல் 228)

"9) செங்கமலன்சாபமுற்றுந்தணந்தவாறுந்
10) திருமகடன்சாபந்தான்றீர்ந்தவாறு
11) மங்கையவதாரஞ் செய்தமர்ந்தவாறும்
12) வார்சடையோனவளைமணம்புணர்ந்தவாறுந்
13) தங்கியதக்கன்வேள்விதகர்த்தவாறுஞ்
14) சங்கரிபூவணத்தில்வந்தவாறுந்
15) தீர்த்தங்கொங்கணிசுச்சோதிதானாடுமாறுங்
16) கோதில்பிதிர்களைமுத்திசேர்த்தவாறும்" (பாடல் 229)

"17) அருளுடனே தீர்த்தங்களாடுமாறு
18) மருங்கலியின்வலியை நளனகற்றுமாறுந்
19) திருவிழாவணிபெறச்செய்வித்தவாறுஞ்
20) சிதம்பரநல்லுபதேசஞ் செய்தவாறும்
*சகாத்த மாயிரத் தைஞ்ஞூறு தங்கு நாற்பான் மூன்று தந்த வாண்டிற்*
*பொருவரு நற்புலவோர் சொற்புலமை காட்டப் புட்பவனபுராணமெனப் புகலலுற்றேன்"*
(பாடல் 230)

இந்த மூன்று பாயிரப் பாடல்களிலும் திருப்பூவணப் புராணச் சருக்கங்கள் இருபதும் கூறப்பட்டுள்ளன. அவ்விருபது சருக்கங்களும் கீழே பட்டியலிடப் பட்டுள்ளன.

1. சூரியன் பூசனைச் சருக்கம்
2. திரணாசனன் முத்தி பெற்ற சருக்கம்
3. மணிகன்னிகைச் சருக்கம்
4. துன்மனன் சருக்கம்
5. தருமஞ்ஞுன் முத்தி பெற்ற சருக்கம்
6. உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கம்
7. பாற்கரபுரச் சருக்கம்
8. சர்வ பாவ விமோசனச் சருக்கம்
9. பிரம சாப விமோசனச் சருக்கம்
10. இலக்குமி சாபவிமோசனச் சருக்கம்
11. உமாதேவி திருஅவதாரச் சருக்கம்

12. திருக்கலியாணச் சருக்கம்
13. தக்கன் வேள்வியழித்த சருக்கம்
14. உமைவரு சருக்கம்
15. சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம்
16. சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்
17. தீர்த்தச் சருக்கம்
18. நளன் கலிமோசனச் சருக்கம்
19. திருவிழாச் சருக்கம்
20. சிதம்பர உபதேசச் சருக்கம்

எனத் திருப்பூவணப் புராணச் சருங்கங்களை வரிசைமாறாமல் அப்படியே பாயிரத்தில் அமைத்துப் பாடியுள்ளார்.

## 2.7. திருப்பூவணப் புராணம்

திருப்பூவணப்புராணக் கதைகள் இருபது சருக்கங்களில் கூறப்பட்டுள்ளன. இக்கதைகள் இப்பகுதியில் சருக்கவரிசைப்படி கூறப்பட்டுள்ளன.

### 2.7.1. சூரியன் பூசனைச் சருக்கம்

சூரியன் பூசனைச் சருக்கத்தில் மொத்தம் 79 பாடல்கள் உள்ளன. இதில் சூரியன் ஒன்பது கோள்களுக்கும் தலைவனாக நீடித்திருக்கும் வரத்தினை திருப்பூவணநாதரை வணங்கிப் பெற்ற வரலாறு கூறப்பட்டுள்ளது. இச்சருக்கத்திலே **வடமொழிச் சொற்கள்** மிகுதியாக இடம் பெற்றுள்ளன. பொருள் மாறுபாடு கொள்ளாத வகையிலும், கருத்துக்கள் விடுபடாதவகையிலும் இச் சொற்கள் பல அப்படியே பயன்படுத்தப் பெற்றுள்ளன.

தாமிரபரணி நதியும், வைகை நதியும் சூழப்பெற்ற செந்தமிழ்ப் பாண்டி வள நாட்டிலே, விராட்புருடனுக்கு(வாஸ்து பூதத்திற்கு) முகமாகக் கொள்ளப்பெற்ற மதுரையம்பதிக்குத் தென்கிழக்கு(அக்கினி)த் திசையிலே, யோசனை(18.கி.மீ.) தூரத்தில் புட்பவனம் ஒன்று உள்ளது.

*"அந்த நல் வனத்தி னாதி காலத்தி லரி யயன் முதற் கடவுளர்கள்*
*வந்து போற்றிசைக்கு மாண்பினதாகி மலைமகள் வளர்க்கும் வான் றரு வாய்ப்*
*புந்திகொள் பாரிசாத மென்றொரு பேர் புனைந்து நீங்காது பொங்கொளியா*
*யிந்திராதியார் சேரெண்டி சாமுகத்து மெங்கணும் பரந்து மிக்கிலகும் "* (பாடல் 237)

உமாதேவியாராலே வளர்க்கப்பெற்ற வான் தருவாகிய பாரிசாதவிருட்சத்தின் அடியிலே சுயம்புமூர்த்தியாகிய சிவலிங்கப்பெருமான் முளைத்தருளி இருப்பார். அவருக்குத் தென்றிசையிலே மின்னனையாராகிய தேவியார் தவம் செய்து கொண்டிருப்பார். அத்தேவியார் சந்நிதியிலே சூரியனாலே தோண்டப்பட்ட மணிகன்னிகை என்னும் ஒரு தீர்த்தம் உண்டு. அப்பாரிசாத விருட்சத்தின் அடியிலிலே உள்ள சிவலிங்கப்பெருமானது திருவருளாலே, சூரியன் தனது பதவியை நிலைபேறாக அடையும் வண்ணம் எண்ணி, சித்திரை மாதத்திலே சித்திரை நட்சத்திரத்திலே பூசை செய்யும் பொருட்டுத் தீர்த்தமாடி, வெண்ணீறு உத்திராட்சங்கள் அணிந்து, பூசைக்கான உபபொருட்களைச் சேகரித்துக் கொண்டு, சுயம்புலிங்கம் போல மணலைத்திரட்டி ஐந்துவகையான திருமஞ்சனங்கள் செய்து, இருக்கை கொடுத்து, அதன்மேல் இலிங்கத்திலே வித்தியாதேகமாகிய சதாசிவமூர்த்தியை அமையச் செய்து, உருவமில்லாதவரும், அநேகசந்திரர் ஒளிபோல ஞானானந்த உருவமாகிய பரமசிவனாகிய மூர்த்திமானை முகமண்டலத்தின் மேலே தியானித்து, மலர்களைக் கொண்டு அஞ்சலி செலுத்தி, வித்தியாதேகத்தில் ஆவாகித்துத் தாபனம் சந்நிதானம் சந்நிரோதானம் செய்து, சுவாகதார்க்கியமும் காளகன்னிமுத்திரை இலிங்கமுத்திரை முதலியவும் தூபதீபங்களுங் கொடுத்து திருமஞ்சனம் அபிடேகித்து, பின்பு தைலக்காப்பு மஞ்சட்காப்பு பஞ்சகவ்வியம்[162] பஞ்சாமிர்தம் [163] பால் தயிர் நெய் தேன் கருப்பஞ்சாறு முதலியனவும் சந்தனக்குழம்பு முதலியவும் அபிடேகித்து, திருவொற்றாடை சாத்திப் பட்டுப் பரிவட்டம் அணிந்து, விபூதி சந்தனங்கள் தரித்து, இரத்தின நகைகளும் மகுடமும் அணிந்து, பூமாலைகள் சாத்தி, பலவித நைவேத்தியங்கள் செய்து பாத்தியாசமனார்க்கியங்கள் கொடுத்து, தீபாராதனை செய்து, திருவைந்தெழுத்து மந்திரத்தை ஓதி, உடல் பொருள் ஆவி இவற்றைத் தந்தஞ்(தத்துக் கொடுத்தல்) செய்து, கும்பிட்டுக் கைகொட்டிக் கூத்தாடி வணங்கிக் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் பொழியப் பரவசனாகி இசையுடன் புகழ்ந்து பாடினான். உடனே அவ்வருட் குறியினின்று, உமாதேவி யுடன் சிவபிரான் தோன்றியருளினான். சூரியன் விரும்பியபடி,

*"பதந்தனில் வீழ்ந்திறைஞ்சும் பரிதிவானவனை நோக்கிக்*
*கதங்கொடு காமற்காய்ந்த கண்ணுதல் யாருங்கேட்ப*

*விதங்கொளீரேழ் பொழிற்கு மிக்கிறையா யிலங்கி*
*வதிந்து நீ வாழ்நாள்காறும் வாழ்கென வரங்கொடுத்து"* (பாடல் 263),

இப்புட்பவனத் தலத்திலே வசிப்பவர்க்கு அறமும், பொருளும், இன்பமும், வீடும் உண்டாகுமென்று அருளி மேலும் சூரியனுக்குத் தீட்சை வழங்கித் திருவைந்தெழுத்தை ஓதியருளி, அவ்வருட்குறியிலே பிரிக்க முடியாதபடி ஒன்றாய்க் கலந்தார். பின்பு ஆதித்தன் கேட்ட உபதேசப் பொருளைச் சிந்தித்துத் தெளிந்து, சிவபிரான் விருப்பப்படி சிவலிங்கத்துக்கு அக்கினி திக்கிலே, தனது கையினாலே சதுரமாகத் தோண்டி, உற்பலமும் தாமரையும் உண்டாக்கி, திருவைந்தெழுத்தைத் தியானித்து விதிப்படி நீராடி, அத்தீர்த்தத்துக்கு மணிகன்னிகை என்னும் பெயரிட்டுச் சூரிய மண்டலத்தின் அரசனாக ஆளத் தொடங்கினான். தேவதச்சனை அழைத்து ஆலயம் கட்டுவித்து, அதில் உபதேவதைகளையும் பிரதிட்டை செய்தான். பின்னர் திருவிழா நடாத்தித் தன்னுடைய உலகத்தை அடைந்தான். சிவபிரான் திருவைந்தெழுத்தை உபதேசித்தற்கு இடமாகியது இத்திருப்பூவணத் திருத்தலம். அம்மந்திரத்தை தட்சிணா மூர்த்தியின் திருமுன்பு விதிப்படி செபிப்பவர்க்கு முத்திசித்திக்கும், மணிகன்னிகைத் தீர்த்தத்தில் தீர்த்தமாடிச் சிவலிங்கப் பெருமான் திருமுன்னர் அமர்ந்து திருவைந்தெழுத்தை உபதேசஞ் செய்தவரும் பெற்றவரும் சிவவடிவம் பெறுவர். அகத்திய மாமுனிவரும் அம்மணிகன்னிகைத் தீர்த்தத்தில் மூழ்கித் திருவைந்தெழுத்தை விதிப்படி ஓதிக் கடல்நீர் முழுமையையும் குடிக்கும் ஆற்றல் பெற்றார். அத்தீர்த்தத்திலே கங்கை முதலியன வந்து தங்குதலால்,

*"சித்திரை கொள் சித்திரை மெய்திங்கள் கலை சேர் நாள்*
*வைத்த புகழாதபனன் மந்திர நவிற்றி*
*யுய்த்த மணியோடை யினி னுச்சி தனின் மூழ்கி*
*நித்தனை வணங்குநர் கணீடு கதி சேர்வார் "* (பாடல் 295)

சித்திரை மாதத்திலே சித்திரை நட்சத்திரம் முழுமதி நாளன்று உச்சிப் பொழுது சூரியன் மந்திரம் ஓதி மணிகன்னிகையிலே முழுகிச் சிவலிங்கதரிசனம் செய்தவர் திருக்கயிலாசஞ் சேர்வர். சிவலிங்கத்தின் திருமுன்பு பொருந்திய வைகைநதியில் ஒரு அம்பு செல்லும் தொலைவரையுள்ள தீர்த்தத்துக்குப் **பாவநாசதீர்த்தம்** என்று பெயர். அதிலே முழுகினோர் சிவலோகம் பெறுவர். அத்திருத் தலத்தைத் தரிசித்தோர் திருக்கைலாசம் அடைவர். இந்தத் தலத்திற்குக் கிரேதாயுகத்திலே தேவிபுரம் என்றும்,

திரேதாயுகத்திலே இலக்குமிபுரம் என்றும், துவாபரயுகத்திலே பிரமபுரம் என்றும், கலியுகத்திலே, பாஸ்கரபுரம் ஆனந்தவனம் முத்தியாச்சிரமம் இரகசியசிதம்பரம், தட்சிணகாசி, சதுர்வேதபுரம், பிதிர்முத்திபுரம் என்றும் பெயர் பெறும். இத்தலம், வசிப்போர்க்குச் செல்வத்தை நல்கும். பாவத்தைப் போக்கும். சிவஞானத்தை ஆக்கும். இத்தலத்தில் வதிந்தருளிய பெருமையாலே விநாயகக்கடவுள் சிவார்ச்சனை செய்து முடித்தார்.

"*நிகழ் மறை யுணர்ந்த சவுநக முநிவ நீடு*
*புகழு லகெலாம் பரவு பூவணமிகுஞ் சீர்*
*மகிழ்* ***பிரமகைவர்த்தமாகிய புராணந்***
*திக ழெழுபதென்னு மத்தியாய மிது சொல்வார்*". (பாடல் 307)

இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எழுபதாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

## 2.7.2. திரணாசனன் முத்திபெற்ற சருக்கம்

திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்தில் உள்ள கதையானது பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்தொன்றாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது. கந்தசாமிப் புலவர் இதனை 97 பாடல்களில் பாடியுள்ளார். இதில் பிரளய காலத்தில் தோன்றிய அமுதக் குடத்தின் ஒரு பகுதி திருப்பூவணத்தில் மணிகன்னிகைத் தீர்த்தத்தில் சேர்ந்த செய்தி கூறப்பெறுகிறது. 18 புராணங்களின் பெயர்கள் கூறப் பட்டுள்ளன.

திருப்பூவணநாதரை முதலில் வணங்க வேண்டும், பின்புதான் தேவியாரை வணங்க வேண்டும் என்ற செய்தி முக்கியமாக இடம் பெறுகிறது. மேலும் இத்தலத்தில் செய்த பாவம் இத்தலத்திலேயே நீங்கப் பெறும் என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது.

சூதமுனிவர் சவுனகமுனிவரை நோக்கி, முனிவரே, திரணாசனன் முத்திபெற்ற கதையைச் சொல்லுங்கள் என்றனர். அதற்குச் சவுனகமுனிவர் சூதமுனிவரை நோக்கி, "உரோமஷர்ணர் என்னும் திருநாமம் உடையவரே, நீங்கள் பிரமகைவர்த்த புராணம் ஈறாகிய பதினென்புராணங்களிலும்[164] திருப்பூவணத் தலம் சிறந்தது என்று கூறினீர்கள்".

அவ்வாறு கூறும்போது, இடையிலே கும்பகோணத் தலத்தைக் கூறினீர். அத்திருப்பூவணத்துக்கு மேம்பட்ட தலம் உண்டேல், உரைக்கவேண்டும் என்று கேட்க, சூதமுனிவர் சொல்லத் துவங்கினார்.

உலகமெல்லாம் ஒடுங்குதற்குக் காரணமாக எழுகடலும் ஒன்றாய் எழுந்த பிரளயத்திலே ஒரு அமிர்தக் கும்பம் தோன்றி உலாவியது. அதனை திருமால் வந்து சிவபிரான் திருவருளினால் மூன்றுகூறாக்கி, முதலாவது ஒரு கூற்றைத் திருப்பூவணத்திலும், பின்பு ஒரு கூற்றைக் கும்பகோணத்திலும், அதன்பின் ஒரு கூற்றை எல்லாத் தீர்த்தங்களிலும் வைத்தார். முதலாவது வைத்த கூறாகிய அமிர்தம் அத்திருப்பூவணத்துள்ள மணிகன்னிகைத் தீர்த்தத்திலே பூவாய் மணி போல வந்து வீழ்ந்தது.

*"நாம நீர் வையம் போற்று நல் லமிர்தாம் மிசத்தொன்*
*றேமமாம் புட்பமாகி யின் னமுதுருவ மன்னிப்*
*பூமகள் பொருந்தி வாழும் பொழிறிகழ் பூவணத்தின்*
*மா மணிகன்னிகைக் கண் வந்தது வீழ்ந்த தன்றே"* (பாடல் எண் 329)

இக் காரணத்தினால், அத்தீர்த்தத்திற்கு மாயாதீர்த்தமென்றும், மணிகன்னிகை என்றும் இரண்டு பெயருண்டாகியது. அத்தீர்த்தத்திலே தீர்த்தம் ஆடுவோர்க்குப் பாவங்களெல்லாம் ஒழியும். அத்திருப்பூவணத்தை ஆலயமாகக்கொண்டு வீற்றிருந் தருளுஞ் சிவலிங்கப்பெருமானை முதலிலே தரிசித்துப் பின்பு தேவியாரைத் தரிசிக்க வேண்டும். அங்ஙனம் அன்றித் தேவியாரை முதலிலே தரிசித்தவர் நரகம் பெறுவர்.

*"பொழிறிகழ் புராதனத் தெம் பூவணங் கோயில் கொண்ட*
*குழகனைத் தொழுமுன் செம்பொற்கொடி தனைக் கும்பிட்டோர்க*
*டொழுதிடு மக்கணத்திற் றொடர் புறுந் தோடந் தன்னால்*
*விழுவர் கள கோர மென்னும் வெங்கொடு நிரயந் தன்னுள்"* (பாடல் 332)

இது யாதுகாரணத்தால் என்றால், முதலாம் யுகத்திலே, கௌதமி தீரத்திலே, பன்னாசனன் என்னும் பெயரடைய பிராமணனுக்குத் திரணாசனன் என்னும் ஒரு நன்மகன் இருந்தான். இவன், வேதாதிகலைகளின் கரைகண்டவனாய், யாகாதி கிரியைகள் செய்பவனாய், சிவதருமங்கள் பலவற்றைச் செய்பவனாய், சிவபிரான் திருவடிகளை மனம் வாக்கு மற்றும் காயங்களினால் வழிபடுவோனாய், பெண்ணாசை முதலிய ஆசைகள் அற்றவனாய், பொய்வாழ்வினை ஒழித்து மெய்வாழ்வு பெறவேண்டும் பேரவா உடையனாய், ஆசாரியர் அடிமலர் குடிகொண்ட

உள்ளத்தனாய், மற்றும் பல நற்குணங்கள் உடையவனாயிருந்தான். அங்ஙனம் இருந்தவன் தன்னுடைய ஆசிரியராகிய உரோமச முனிவரைக் கண்ணுற்று வணங்கி, எளிதாக முத்தி சித்திக்கும் உபாயத்தை உரைத்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான். அதற்கு அம்முனிவர்பிரான், சிவத்தலங்கள் பலவற்றினுஞ் சென்று, அங்குள்ள சிவதீர்த்தங்களிலே விதிப்படி தீர்த்தமாடிச் சிவலிங்க மூர்த்திகளைப் பேரன்போடு வழிபட்டு, சிவதானாதிகள் செய்தால், பாவங்கள் ஒழிந்து முத்தி பெறலாம் என்று அருளினார்.

உடனே திரணாசனன் துறவறம் பூண்டு சிவத்தலங்கள் பலவற்றிற்குச் சென்று, சிவதீர்த்தங்களிலே மூழ்கி சிவலிங்கங்களை வழிபட்டு, சந்தனப் பொதியச் செந்தமிழ்ப் பாண்டிநாடு சேர்ந்து, வைகைநதியில் நீராடி, திருவாலவாயில் (மதுரையில்) வீற்றிருந்து அருளும் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரை வணங்கித் திருப்பூவணத்தலம் வந்து சேர்ந்தான். அங்கே, மணிகன்னிகைத் தீர்த்தத்தில் முழுகியெழுந்து உமாதேவியாரை முதலில் வணங்கி, சிவலிங்கப் பெருமானை வணங்காமல் தென்றிசை நோக்கிச் சென்று திருச்சுழியற் பதியை அடைந்து சிந்து தீர்த்தத்தில் தீர்த்தமாடி, சிவலிங்கப்பெருமானை வழிபட்டு, மீண்டும் திருப்பூவணம் சேர்ந்து மணிகன்னிகைத் தீர்த்தத்தின் மூழ்கி, அதன் கரையில், இராக்கதனாய்த் தன் அறிவிழந்து. பசியினால் வாடிவதங்கித் துன்பத்தில் இருந்தான். அப்பொழுது நாரதமுனிவர் வந்து, அவ்விராக்கதனை நோக்கி, 'நீயாரென்று' கேட்டார்.

அப்போது சிறிது அறிவு விளங்கிய அவன், பாவக்கடல் கடந்து முத்திக்கரையை அடையும்படி விரும்பிப் பல தீர்த்தங்களிலும் தீர்த்தமாடி இப்பதியை அடைந்து இத்தீர்த்தத்தில் நீராடிய அளவிலே மனங்கலங்கினவன் ஆனேன். இதற்குக் காரணம் புலப்படவில்லை என்றான். அதற்கு நாரதமுனிவர், யோகக்காட்சியினால் உணர்ந்து, பூவணநாதரை முதலிலே வழிபடாது தேவியாரை வழிபட்ட தோசத்தால், இப் பேய் உருவம் பெற்று மயங்கினாய். இனி முதலிலே புட்பவனேசுவரரை வணங்கிப் பின்பு அம்மையை வணங்கினால் நற்கதி பெறுவாய்.

*"ஆதலி னன்பு கூர்ந்தேயரும் பெருங்கலை தெரிந்த*
*மூதறிவுடையோர் முக்கண் மூர்த்தியைத் தொழுகமுன்ன*
*மாதலினீதியாலே மங்கையை யங்கை கூப்பிப்*

*பாததாமரையிற் பின்னர்ப் பணிந்திடக் கடவரன்றே"* (பாடல் 333)

பின்னும் புட்பவனேசர் சந்நிதியிலே ஐந்நூறு விற்கிடை அளவுள்ள ஒரு பிரமதீர்த்தம் உண்டு. அது முறை பிறழ்ந்த பாவம் முதலியவற்றைப் போக்கும். அதிலே கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்திலே நீராடுவது சிறப்புடையது. கார்த்திகை மாதம் நீராடுதல் மிகுந்த பலன்களைக் கொடுக்கும் என 1273ஆவது பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

*"பூர்வமுறு மீசனது முன்னமுறு பூர்வத்*
*தோர் தரு மைஞ்ஞூறு வரிவிற்கிடை யினுற்ற*
*தேர் கொள் கடிவாச நனியியற்றி யததற்குப்*
*பேர் **பிரமதீர்த்த** மெனவே யுலகு பேசும்"* (பாடல் 394)

ஆதலால், அப் பிரம தீர்த்தத்திலே மூழ்கி அரக்கர் உருவை அகற்றிப் புட்பவனேசுவரரை வழிபடுவாய், காசி முதலிய பதிகளிற் செய்தபாவங்கள் இப்பதியில் போகும். இங்கு செய்த பாவம் இங்கேயே ஒழியும் என்று கூறித் திருமால் உலகம் சேர்ந்தனர். பின்னர் நாரதமுனிவர் அருளிய வழியே திரணாசனன் ஒழுகிப் புட்பவனேசுவரரையும் தேவியாரையும் வழிபட்டுத் திருக்கைலாச பதவி சேர்ந்தனன்.

*"மருவு மிந்தநன் மந்தணமான தோர் மிகழ் பெருங்கதை வன்பவமானகா*
*னெரி பொருந்திடு மென்பர் கண் மேலையோ ரிணையிகந் துறுமிங்கிதன்மேன்மைதான்*
*பரவு கின்றவர்கள் பண்கொடு பாடினோர் பகரிரும் பொருடந்து சொல் பான்மையோர்*
*திரமுடன் செவி கொண்டிதுதேர்குவோர்**சிவபெரும்பதிசேர்வதுதிண்ணமே**"* (பாடல் 406)

## 2.7.3. மணிகன்னிகைச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தின் 72ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. மணிகன்னிகைச் சருக்கத்தில் மொத்தம் 43 பாடல்கள் உள்ளன. இதில் சூரியனால் தோண்டுவிக்கப் பெற்ற மணிகன்னிகைத் தீர்த்தத்தின் பெருமைகளும், அங்குள்ள பைரவர் மற்றும் சூரியலிங்கம் இவற்றின் பெருமைகளும் வெகுவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

*"இலகொளிபரப்புமெல்லோனெதிர்முகந்தரவிருந்து*
*மலருடன்றூர்வைமிக்கவண்கனிதண்டுலங்கொண்*
*டலகிலாப்பவங்கணாயேற்காடுமித்தீர்த்தந்தன்னாற்*
*றொலைவுசெய்தருளவேண்டுஞ்சோதியேயெனப்பணிந்து (பாடல் 430)*

***சூரியவிலிங்கந்**தன்னைச் சொல்லுமந்திரத்தினாலே*

*சீர்பெறச்செபித்துத்தேவதேவனைப்பிரார்த்தித்தன்பாற்*
*பேர்பெறுதீர்த்தமூழ்கிப்பிதிர்களோடிருடிகட்காங்*
*கேர்பெறுதர்ப்பணங்களிரவிமந்திரத்தினாலே (பாடல் 431)*

*யாவனிம்முறையிற்செய்வானவன்கடலுடுத்தபார்மேற்*
*றேவர்கண்முனிவர்மிக்கதென்புலத்தவர்கடன்செய்*
*மேவியபிரமசாரியெனின்விருப்பறுத்தேயொல்லை*
*மூவுலகங்கள்போற்றமுத்தியையடைவனன்றே" (பாடல் 432)*

என்ற பாடல்களில் சிவலிங்கத்தை முறைப்படி வணங்கித் தர்ப்பணம் செய்வதால் உண்டாகும் நன்மைகள் கூறப்பட்டுள்ளன. மேலும் காசியிலும் பூவணம் சிறந்தது என்பதும் கூறப் பெற்றுள்ளது.

*"அண்டமோர் விராட் புருடன் றனங்கமாம்*
*புண்டரீகத் திருப் பொருந்தும் பூவணங்*
*கொண்ட பேரெழில் குடி கொண்டவன் முக*
*மண்டலமாகவே மறைந்து வைகுமால்"* (பாடல் 413)

பூமியை விராட்புருடன்(வாஸ்து பூதம்) என்றால், அந்த விராட்புருடனுக்குத் திருப்பூவணத் தலமானது முகமண்டலமாகக் கொள்ளப் பெற்றதாயிருக்கிறது. அப்பதியிலுள்ள தீர்த்தத்தில், திருமால் முதலாவது வைத்த அமிர்தக்கூறு மணிமயமாய் வீழ்ந்தபடியால், அதற்கு மணிகன்னிகை என்று பெயர். அதிலே தீர்த்தம் ஆடுவோர் பத்துப் பிரமகற்பம் வரை அமிர்தம் உண்டு தேவலோகத்தில் வாழ்வார். அத் தீர்த்தத்திலே எல்லாத் தேவர்களும் இருடிகளும் வசிக்கின்றார்கள். அதிலே மூழ்கிச் சூரியலிங்க தரிசனம் செய்வோர், காலனைக் காணாமல், காலகாலர் கயிலையைக் காண்பர். அத்தீர்த்தம் ஆடுதலும், அச்சிவலிங்க தரிசனஞ் செய்தலும் அறஞ் செய்வோர்க்கே கைகூடும். அத்தீர்த்த தரிசனத்தாலும் பரிசத்தாலும் பாவங்கள் போகும். புண்ணியங்கள் சேரும்.

அத்தல தரிசனம் செய்வோர்க்குச் சிவத் துரோக பாவமும், தாய் தந்தையருக்குச் செய்த அபராதமும், பிறர்மனைவியைச் சேர்ந்த பாவமும், பெரியோரை நிந்தித்த பாவமும், அந்தணரைக் கோபித்த பாவமும், புசிக்கக் கூடாதவைகளைப் புசித்தபாவமும், கோள்கூறிய பாவம் முதலியனவும் ஒழியும். அப்பதியில் வதியும் பெரியோர்க்குப் பொன் கொடுத்தவரும், கோதானம் செய்தவரும் இகத்திலும் பரத்திலும் இன்பம் அனுபவிப்பர். உத்தராயணம், தட்சிணாயனம், சூரியசந்திர கிரகணங்கள், விதிபாதம் முதலிய புண்ணிய காலங்களிலே, இத் தீர்த்தங்கரையில் அமரும் வைரவக்கடவுளை வணங்கி, கிழக்கு

முகமாக, அறுகு புட்பம் அரிசி கனி இவைகளோடு அமர்ந்து, (சூரியலிங்க மூர்த்தியே உமக்கு நமஸ்காரம், இந்த தீர்த்தத்தில் நீராடுவதால் பிறவிகள் அனைத்தினும் செய்த பாவங்களைப் போக்கியருளும் என்னும் பொருளுடைய) சூரியலிங்கமூர்த்தி மந்திரத்தைக் கூறி, அத்தீர்த்தத்திலே மூழ்கி, நீத்தார்களுக்கும் இருடிகளுக்கும் தர்ப்பணஞ் செய்பவன், திருமணமாகாதவன் எனில் முத்தியடைவான். குடும்பம் உடையவனானாற் சொர்க்கம் சேர்வன். தர்பணஞ் செய்யாவிடினும் குளித்தாலே போதும், நீத்தார்களுக்குத் தர்ப்பணஞ் செய்த பயன்பெறுவன். அத்தீர்த்தக் கரையிலே சுவர்ணதானஞ் செய்வோன் சுவர்க்கஞ் சேர்வான்.

அப்புட்பவனத் தலம் போல நீத்தார் கடனைத் தீர்த்தல் ஒரு தலமும் செய்யமாட்டாது. ஒரு கணப்பொழுது ஞானத்தாலாவது அஞ்ஞானத்தாலாவது அப்பதியில் வசிப்போர் சிவனது உருவத்தைப் பெறுவர். ஒரு தளிராதல் கனியாதல் புட்பவனேசருக்குப் பத்தியொடு கொடுப்போர் முத்தராவர். மற்றைய தலத்தினின்று தேகவியோகத்தைச் சிந்தித்து இத்தலஞ் சேர்ந்து இறந்தோருக்குச் சிவபிரான் தாரக மந்திரமாகிய 'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்தை உபதேசஞ் செய்தருளுவர். ஆதலால் இப்பதியின்கண் யாவரும் வசித்தல் வேண்டும். காசி வாசத்தினாலே பெரிதும் உடல்வருந்தும், புட்பவன வாசத்தால் உடல் வருத்தமுறாது. ஆதலாற் காசிப்பதியினும் புட்பவனம் ஏற்றமாகும். பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம் முதலியவற்றைச் சூரியலிங்க மூர்த்திக்கு அபிடேகித்தால் சிவனது உருவம் பெறலாம். மணிகன்னிகா தீர்த்தக்கரையிலே 'பிதிர்சிராத்தம்' முதலியன செய்தால் நெடுங்காலம் நீத்தார்கள் பெரிதுமகிழ்வார். அத்தீர்த்தத்திலே நீத்தார்களது அஸ்தி கிடந்தால் அவர்கள் 'சாரூப்பிய முத்தி' அடைவர். ஆதலால், மக்கள் பத்தியோடு நீத்தார்கள் முத்தியடையும் வண்ணம் அவர்களது உடலுறுப்புக்களை அங்கே இட வேண்டும். முன்னம் ஒரு காலத்தில் ஒரு அந்தணனின் உடலுறுப்பைக் கழுகு அங்கே இட்டதனால் அவன் கதியடைந்தான்.

"*சந்த மாமறை தேர்கின்ற சவுனக முனிவ கேண்மோ*
*வந்த நற் பிரம கைவர்த்தந் தருமத்தியாய*
*மிந்தவாறடைவிற் றேர்தியெழுபதின் மேலி ரண்டாம்*
*புந்தி கொள் புகழ் செறிந்த பூவணக்காதை மாதோ*" (பாடல் 448)

இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்திரண்டாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

### 2.7.4. துன்மனன் சருக்கம்

துன்மனன் சருக்கத்தில் 79 பாடல்கள் உள்ளன. இக்காதை பிரமகைவர்த்த புராணத்தில் 73ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. அறநூல்கள் பழித்துரைக்கும் குற்றங்களைத் செய்தோர் திருப்பூவணத் தலத்தை அடைந்ததனால் எங்ஙனம் நற்கதி அடைந்தனர் என்பதை விளக்கும் வகையிலும், புண்ணியங்கள் சேர்க்கும் வகைகளை அறிவிக்கும் வகையிலும் இச்சருக்கம் அமைந்துள்ளது.

தந்தை தாய் ஆசிரியர் அந்தணர் இவர்களை இகழ்ந்தவரும், அந்தணர் பொருளை அபகரித்தவரும், பொய்ச்சான்று புகன்றோரும், கன்னிகையைப் பழித்தோரும், கள்ளுண்டவளது முகத்தை மோந்தவரும், அவளைச் சேர்ந்தவரும், பிரமகத்தி செய்தவரும், விடரோடு கூடியவரும், கற்புடைய மனைவியை விட்டுப் பரத்தையரைச் சேர்பவரும், குல மகளிரைக் கலப்போரும், கணவர் சொற் கடப்பவரும், குழந்தைகள் அணியைத் திருடுவோரும், பொருளை விரும்பிப் பசுவை விற்போரும், பதினெண்புராணங்களைப் பிரமாணமாகக் கொள்ளாதவரும், சிவாலயத்தை இடிப்பவரும், சிவநிந்தை செய்பவரும், அறத்தைப் பழித்தவரும், அழித்தவரும், பொருள்வேண்டி விற்றவரும், அன்னத்தை விற்றவரும், பழித்தவரும், அறநூல்வழி ஒழுகாதவரும், மொழி பிறழ்ந்தவரும், வீணாகப்பழி மொழிவோரும், தங்காரிய நிமித்தம் பிறர்காரியத்தைக் கெடுத்தவரும், பிறர் துன்பத்தைக் கண்டு உதவாதவரும், திருநந்தவனம் கிணறு குளங்களைச் செய்யச் சொல்பவரை இகழ்பவரும், தாய் தந்தையருக்குச் சிராத்தஞ் செய்யாதவரும், நம்பினோரை வதைப்பவரும், திருநீறணியாதவரும், திருவைந்தெழுத்தை மதியாதவரும், உருத்திராட்சத்தை நிந்திப்பவரும், கொடிய கும்பிபாகம் முதலிய நரகங்கள் சேர்ந்து பெருங் கொடுந் துன்பங்களை நெடுங்காலம் அனுபவிப்பர். அகிம்சை, உண்மை கூறல் முதலிய தருமங்களை உடையவர் விமானம் ஏறிச்சென்று சுவர்க்காதிலோகங்களிலே போகங்களை அனுபவிப்பர்.

கபிலை தீர்த்தக்கரையில் வேதியர் குலத்திற் பிறந்தவனும், வேடரோடு கூடி இழிதொழில் செய்பவனும், துராசாரனுமாகிய துன்மனன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் நல்லநெறியிலிருந்து பிறழுந்தவர்கள் மற்றும் தீயவர்கள் முதலாயினோரோடு கூடித் தன் வருணத்திற்கு உரிய முறையில் வழுவினான்.

காமநூலைக் கற்றுப்பாடி நடிப்பவன். பிராமணர் மற்றும் பாலர் மாதர் முதலியோரைக் கொலை செய்பவன், மற்றும் பலரைக் கொன்று அவர்கள் பொருளை அபகரித்து வாழ்பவன், பெண்களின் கற்பைச் சூறையாடுபவன். இவன் செய்த நன்மை ஒன்றுமில்லை. இவன் வழிபட்ட தெய்வம் ஒன்றுமில்லை. இவன் புசியாத உயிர்கள் இல்லை. இவன் செய்யாத பாவங்கள் இல்லை. இவன் பஞ்சமகா பாதகர்களாலே சூழப்பட்டுப் பலகாடுகளிலும் நாடுகளிலுஞ் சுழன்று சிலகாலஞ் சென்ற பின்பு பூர்வசிவ புண்ணியத்தினாலே, திருப்பூவணத்திலே திருவிழா நடத்தலைக் கேள்வியுற்று அந்தத் தலத்தை அடைந்தான். அடைந்து பங்குனி உத்தர மகோற்சவத்திலே திருவீதியிலே திருத்தேர்(படம்-13) மீது சிவபிரானைத் தரிசித்துப் பகற்பொழுது கழிந்தபின், பலவீதிகளையுங் கடந்து கருவறையிலே புகுந்து திரவியங்களைத் திருடுங் காலத்தை நோக்கிக் கொண்டிருந்தான். அப்படியிருந்தவன் நடு இரவிலே, கூடவந்த கொலைகாரக் கூட்டத்தினரோடு அரண்மனைக் கருவூலத்திலே நுழைந்து, அளவற்ற பொருள்களை எடுத்துக் கொண்டு அரண்மனைக் கடைவாயிலை அடைந்தான். அப்போது, வாயில் காப்போர் கண்டு திருடரோடு போர் செய்யத் தொடங்கினர். இதனால் திருடர்கள் பயந்து தப்பியோடும் போது, மணிகன்னிகைத் தீர்த்தத்தில் விழுந்து இறந்தார்கள். இங்ஙனம் இறந்தமையால், சிவபிரான் விருப்பப்படிச் சிவதூதர்கள் விமானங்களுடன் வந்து இறந்தவர்களைத் தனித்தனி விமானத்தில் ஏற்றிக் கொண்டு போய்ச் சிவலோகஞ் சேர்த்தனர்.

*"ஆதலினி யாவர்களு மாத ரவினென்றும்*
*வேதியர் தமக்கு நிதி வேண்டியதொர் தானங்*
*கோதற வளித்து மணிகுண்டமதின் மூழ்கிற்*
*றீதில் சிவலோகமது சென்றடை வரன்றே"* (பாடல் 526)

இங்ஙனம் ஆன்மிகச் சிந்தனைக் ஏதுமின்றி அத்தீர்த்தத்தில் வீழ்ந்து இறந்தவருஞ் சிவலோகஞ் சேர்வரானால், நல்லறிவோடு அத்தீர்த்தமாடியோர் உள்ளன்போடு

திரவியங்களைத் தானஞ் செய்வோர் சிவலோகஞ் சேர்வதிற் சிறிதும் ஐயமில்லை. இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்து மூன்றாம் அத்தியாயத்திலே கூறப்படும்.

## 2.7.5. தருமஞ்ஞுன் முத்திபெற்ற சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 74ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது.

*"ஓது நன் பலமாயுகமுறு வதாய்க் கேட்போர்*
*பாதகங் கணோய் பற்றறத் துடைப்பதாய்ப் பின்னுங்*
*காதல்கூர் மணிகன்னிகை மன்னுமோர் காதை*
*சூத மாதவன் சுவுனக கேளெனச் சொல்வான் " (பாடல் 529)*

தென்திசையிலே தாமிரபரணி நதிக்கரையிலே, வேதவனம் என்னும் தலத்துக்கு மேலைத் திசையிலே கோலாகலம் என்னும் கிராமத்திலே, வேதசன்மா என்னும் பெயருள்ள ஒரு பிராமணன் இருந்தான். அவன் நான்கு வேதங்களையும் ஆறு சாத்திரங்களையும் மற்றும் கலைகளையும் ஓதியுணர்ந்தவன். நித்திய கர்மங்களை வழுவாது செய்து பஞ்சாட்சரத்தை[165] விதிப்படி மெய்யன்பொடு ஓதுபவன். தன்மக்கள் மற்றும் பேரன் பேத்திகளோடு கூடிக் குபேரனுக்கு ஒப்பாக வாழ்பவன். அவனுக்கு மூப்புப்பருவம் வந்து உடல்நலிந்து இறந்தான். அவன் இறந்த பின்பு அவனுடைய மகன் தருமஞ்ஞுன் என்னும் பெயருடைய ஒருவன் தந்தையைப் போல வேதம் முதலியவற்றை ஓதி உணர்ந்து ஒழுக்கத்திலே வழுவாதவனாக இருந்தான். அவன் தன்னுடைய தந்தைக்கு அந்திக் கருமங்களை அன்புடன் முடித்துத் தந்தையின் அங்கம் முழுவதையும் ஒரு கலயத்திலே அடைத்துத் துணியால் வாயைமூடி அரக்கு முத்திரை வைத்துக் கங்கை நதியிலே இட வேண்டுமென எண்ணி, மாணாக்கனொடு வடதிசை நோக்கிச் சென்றான். வழியில் உள்ள சிவத் தலங்களிலே பெரியோர்களுக்குத் தானங்கள் கொடுத்துத் தீர்த்தங்களாடி மதுரையம்பதி சேர்ந்து, தீர்த்தங்களிலே மூழ்கித் தானங்கள் கொடுத்து மூன்று தினம் தங்கி அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுரரைத் தரிசித்தான்.

*"வேணி மேன்மிளிர் வெண்ணிலா மிலைச்சிய கூட*
*லேணுநாயகி தன்னை முத்தினம் பணிந்தேத்திக்*

*காணுமா றரிதாகிய கடவுள் செம்பாகம்*
*பூணுலா மலைமங்கை சேர் பூவண மடைந்தான்" (பாடல் 542)*

திருப்பூவணம் சேர்ந்து சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து, மணிகன்னிகைத் தீர்த்தக் கரையை அடைந்து வயிரவக் கடவுளை எள்ளு அறுகு அட்சதை இவைகளினாலே பூசித்து, அஸ்திக் குடத்தை அக்கரையிலே வைத்துவிட்டு அத்தீர்த்தத்திலே மூழ்கினான். மூழ்கும்போது பெருமழை பெய்தமையால் விரைந்து எழுந்து கரை ஏறும்பொழுது, கால் இடறி அஸ்திக் குடம் அத்தீர்த்தத்திலே விழுந்தது.

*"மிக்க வத்தடம் வீழ்தல் கண்டுளம் வெருவி யோடி யெடுத்தன*
*னக் கடத்தினி னிட்ட வங்க மனைத்து மக் கணமாய் மலர்*
*தக்க நற் சத* ***பத்திரத்தொடு*** *சார்ந்த* ***வுற்பலமாகவே***
*தொக்கவன் பினிறைஞ்சி யந்தணர் சூழலுற் றிவை சொல்லுவான்" (பாடல் 548)*

*"பாச மோசன தீர்த்த மென்பது பண்டு கண்டது கேட்டதாய்க்*
***காசிமாநகரத்தினும்*** *மிது கட்டுரைதிட வொண்ணுமோ*
*பேசின் முன்ன மருந்தவஞ் செய் பிதாக்களுங் கதி பெற்றனர்*
*பூசுராதிபர் போற்று மிப்பதி பூர்வ மாமிது புகலிலே " (பாடல் 550)*

உடனே ஓடி அக்குடத்தை எடுத்த போது, சிவபிரான் திருவருளினாலே அக்குடத்திலிருந்த எலும்பு முழுவதும் தாமரை மலரும் உற்பல மலருமாக இருக்கக்கண்டு பெரிதும் மகிழ்ந்து அம்மணிகன்னிகாக் கரையிலே பர்ணசாலைகளிலே வசிக்கின்ற முனிவர் குலாங்களிடத்தே போய் நிகழ்ந்தவைகளை விவரித்து கூறினான். அதுகேட்ட அவர்கள், இந்ததலம் காசித்தலத்தினும் சிறப்புடையது எனக் கூறினர். இதைக் கேட்ட தருமஞ்ஞன், 'என்னுடைய தந்தை முதலான முன்னோர்கள் நற்கதியடைந்தனர்' என்று கூறிச் சிவாலயஞ் சேர்ந்து, சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து வணங்கித் துதித்த பொழுது, அவ்வருட் குறியினின்று சிவபெருமான் காளை வாகனத்தில் தோன்றித் தரிசனங் கொடுத்துத் தருமஞ்ஞனுக்கு நற்கதியும் அருளி மறைந்தருளினார்.

*"அங்கவ ருபதேசந் தனையுற்றே யரிய விமானத் தூரிமை யினேறிச்*
*சங்கரனருள் கூர் கிங்கரராவார் சரதமிதருள் வழி செவியினிறைப்போர்*
*வெங்கன லாயிரம் வேள்வியர் வேள்விமேய நல்வாச பேயம் மோர்நூறு*
*பொங்குலகஞ் செய்த புண்ணிய நண்ணுவர் பொழில் புரிபாவமுமொழிகு வரன்றே"*
*(பாடல் 564)*

தருமஞ்ஞனைப் புகழ்வோரும் அவன் துதியைப் படிப்போரும் பாவங்கள் நீங்கிச் சுவர்க்க உலகம் சேர்வர். இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்தினாலாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

புராணத்தில் கூறப்பட்டுள்ள இக்கதையைப் பற்றித் தமிழக அரசு வெளியிட்டுள்ள இராமநாதபுர மாவட்ட அரசிதழிலும், திருப்பூவணம் கோயில் பற்றிய முன்னோடி ஆய்வாளர் கா.கணநாதனின் ஆய்வேட்டிலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

2.7.5.1. இச்சருக்கக் கதைபற்றி முன்னோடி ஆய்வாளர் கா. கணநாதனின் கருத்து :–

*தருமஞ்ஞன் என்பவன் தன் தந்தையின் அஸ்தியை இராமேசுவரக்கடலில் கரைக்கும் பொருட்டு வழித்துணையாக வேலையாள் ஒருவனையும் உடனழைத்து வந்தான். வழியில், பல்வேறு மலர்கள் நறுமணம் பரப்பும் சோலைகளின் கரையே ஆறு ஓடிக்கொண்டிருப்பதைக்கண்டு நீராட விருப்புற்றான். அதனால் தன் வேலையாளிடம், தன்தந்தையின் அஸ்திக் கலசத்தைக் கொடுத்து, இதை அவிழ்க்காதே என்று கட்டளையிட்டுக் குளிக்கச் சென்றான். பசியால் வாடிய வேலையாள், குடத்தினுள் உணவேதுமிருக்கலாம் என்றெண்ணித் திறந்து பார்க்கும் போது அதில் நறுமலர்கள் நிறைந்திருந்தன. எனவே குடத்தை மூடிவைத்துவிட்டான். குளித்துத் திரும்பிய தருமஞ்ஞனும் வேலையாளும் குடத்துடன் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தனர். சிலநாட்கள் பயணத்திற்குப் பிறகு இராமேசுவரத்தை அடைந்தனர். அங்கே கடற்கரையில் தன்தந்தையின் அஸ்தியைக் கரைக்க வேண்டி குடத்தின் மூடியைத் தருமஞ்ஞன் அவிழ்த்தான். அதில் நெருப்பில் வெந்த எலும்புகள் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்ட வேலையாள், ஐயா நாம் வரும்வழியில் சிலநாட்களுக்கு முன்னர் ஒரு காட்டில் தாங்கள் நீராடச் சென்றபோது, பசியால் வாடிய நான் தங்களது உத்தரவை மீறி உணவுவேண்டி இக்குடத்தைத் திறந்து பார்த்தேன். அப்போது அதில் மல்லிகை மலர்கள் இருந்தன. ஆனால் இப்போது, வெந்த எலும்புகள் காணப்படுகின்றன என்று கூறினான். இதனைக் கேட்ட தருமஞ்ஞன் அதிசயித்து அதுவே புண்ணியமான தலம் என்று கூறி மீண்டும் அத்தலத்திற்கே செல்வோம் எனப் புறப்பட்டுச் சென்றான். திருப்பூவணத்தை அடைந்த அவர்கள், பூவணநாதர் கோயில் உள்ள இடத்திலிருந்து ஓர் அம்பு பாயும் தூரத்தில் (சுமார் 18 அடி தூரம்) குடத்தைத் திறந்து பார்த்த போது அதில் மல்லிகை மலர்கள் நிறைந்திருப்பதைக் கண்டு பெருமகிழ்வுற்றுத் தான் நீராடிய வைகையாற்றிலேயே அஸ்தியை கரைத்து விட்டான், பூவணத்திடை (பூவணத்து – இடை) திரும்பி வந்ததால் இத்தலத்திற்கு திருப்பூவனம் என்று பெயரிட்டான் என்றும், திருப்பூவணம் என்று அழைக்கப்படுவதால் திரும்பவும் அஸ்தி பூவான இடம்*

என்பதைக் குறிக்கும் விதத்தில், திருப்பூவண்ணம் என்றும் இவ்விடத்திற்குப் பெயரிட்டு அழைப்பதாக ஆய்வாளர் கா. கணநாதன் குறிப்பிடுவர்"[166].

இந்தச் செய்திகள் அனைத்தும், வெ.அய்யாவுப் பிள்ளை அவர்களிடம் பேட்டி கண்டு பெற்றதாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும் தருமஞ்ஞன் என்பவன், காசிநகரத்து அரசன் என்றும், வேதம் ஓதி உணர்ந்த அந்தணன் என்றும் இரண்டு விதமான கருத்துக்கள் உள்ளன எனக் கூறியுள்ளார்.

*"தருமஞ்ஞன் கொண்டுவந்து அஸ்திக்கலயம் மணிகன்னிகைத் தீர்த்தத்திலே விழுந்தபோது அதிலிருந்த எலும்புகள் தீர்த்தத்திலே சேர்ந்தன. தீர்த்திலேயிருந்த உற்பலமும் தாமரையும் கலயத்தில் சேர்ந்தன"* என்ற புராணக்கதையுடன், சுச்சோதி அரசன், காசியில் பிண்டம் கொடுத்துப் பின்னர் திருப்பூவணம் வந்து பிண்டம் கொடுத்த கதையையும் ஒன்றாகச் சேர்த்து மக்களால் தவறுதலாகக் கூறப்பட்டுள்ளது. இதையே கா.கணநாதன் அவரது ஆய்வில் குறிப்பிட்டுள்ளார்.

***<u>2.7.5.2. துன்மனன் சருக்கக் கதைபற்றி</u>*** – தமிழக அரசு 1972ஆம் ஆண்டு வெளியிட்ட இராமநாதபுரம் மாவட்ட அரசிதழில், *"திருப்பூவணநாதர் சுவாமி கோயிலின் தென்கிழக்கில் சூரியனால் உண்டாக்கப்பட்ட மணிகன்னிகைத் தீர்த்தம் உள்ளது. இதில் அஸ்திக்கலயத்தில் உள்ள எலும்புகளைக் கரைத்தால் அவை பூவாக மாறும். தர்மராசன் என்பவன் தனது தந்தையின் அஸ்திக்கலயத்திலிருந்த எலும்புகளை இதில் போட்டான். அவை பூவாக மாறக்கண்டு வியந்தான். இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் இத்தலத்திற்குத் திருப்பூவணம் எனப் பெயர் உண்டானது. இன்றும் மக்கள் திருப்பூவணநாதர் சந்நிதிக்கு எதிரே உள்ள வைகை ஆற்றில் தங்களது முன்னோர்களின் அஸ்தியைக் கரைத்து வருகின்றனர்."*[167] என்று உள்ளது.

மேற்கண்ட செய்தியில், *"தர்மராசன் தனது தந்தையின் அஸ்தியை மணிகன்னிகா தீர்த்தத்திலே இடும்போது அவை பூவாய் மாறின"* என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணத்தில் உள்ளபடி மணிகன்னிகைத் தீர்த்தமானது மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் கோயிலில் உள்ளது போன்று மிகப்பெரிய குளமாகும். இம் மணிகன்னிகா தீர்த்தக்குளம் இப்போதுள்ள முருகன் கோயிலுக்கு எதிரே உள்ளது. மேலும், தர்மராசன் என்பதும் தவறாகும், தருமஞ்ஞன் என்பதே புராணத்தில் உள்ள பெயராகும். இதனால் புராணத்தில் கூறியுள்ளபடி தமிழகஅரசின் இராமநாதபுர மாவட்ட அரசிதழில் குறிப்பிடப் பெறவில்லை என்பது தெளிவு.

## 2.7.6. உற்பலாங்கி பதியை யடைந்த சருக்கம்

இச்சருக்கத்தில் மொத்தம் 62 பாடல்கள் உள்ளன. இப் பாடல்களில் "கைம்மை நீக்கிய மணிகன்னிகைப் புனலின்"[168] பெருமைகள் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன. தீர்த்தம் ஆடுவதால் ஏற்படும் பலன், தீர்த்தம் ஆட வேண்டிய நேரம் முதலானவையும் கூறப்பெற்றுள்ளன.

துங்கபத்திரை நதிக்கரையிலே, புண்ணிய கிராமத்திலே, கோபாலன் என்னும் பெயருள்ள ஒரு பிராமணன் இருந்தான். அவனுக்கு உற்பலாங்கி என்கிற பெண் இருந்தாள். அவள் சாமுத்திரிகா சாத்திரத்திற் சாற்றியபடி அமைந்த உடலினை உடையவளாய் இருந்தாள்.

*"முந்தை நாளிவளுறின் முகில்வணன் கடற்*
*செந்திருமாதினைச் சிந்தை கொண்டிடா*
*னந்து நான்முகனு நாமாதை நண்ணிடா*
*னிந்திரன் வேண்டில னிந்திராணியை" (பாடல் 572)*

அவள் பிறைமதி போல வளர்ந்து மணப்பருவம் அடைந்தாள். ஒரு நாள் தந்தைதாயார் இருவரும் நம்முடைய அருமை மகளை மணஞ் செய்தற்குரியன் யாவனோ என்று தம்முள்ளே ஆராய்ந்து கொண்டிருந்தனர். அப்போது, அவர்கள் வீட்டுத் தலைவாயிலில் தேவனோ என்று மதிக்கத்தக்க ஒரு பிரமசரியப் பிராமணன் வந்து அன்னப்பிச்சை கேட்டான். அவனைக் கோபாலவேதியன் கண்ணுற்று இவன் நம்முடைய பெண்ணுக்கு இசைந்த வரனே என்று கருதி, 'என்னுடைய அன்னமென்னடைக் கன்னிகையுடன் அன்னமுங் கொடுப்பேன், உன்னுடைய தந்தை முதலாயினாரையும், நீ செல்லும் இடத்தையும் சொல்' என்று கேட்டான். அப்பிரமச்சாரியும் மகிழ்ந்து, 'யான் மவுட்கலியன் என்னும் பிராமணன் பெற்ற மகன் வேதமுதலியவற்றை ஆராய்ந்துள்ளேன். பிரமநற்சரியம் பூண்டுள்ளேன். மாதவங்கள் புரியுங் கருத்துடையேன். உன்னுடைய மகளைக் கொடுத்தால் ஏற்றுக்கொள்வேன்' என்றான். அதுகேட்ட கோபால வேதியன் தன்னுடைய மனைவி முதலாயினோர்க்குச் சொல்லி, மணப்பந்தர் அமைத்துச் சில சடங்குகள் செய்து பின்,

*"தாவில் சீர்க் கன்னிகாதான நல்குவான்*
*காவிசேர் தடங்கணாள் காண்டகப் புனல்*

*பூவுறழ் செங்கையிற் புகாமுனன் குயிர்*
*மேவிய மணமகன் வியோக மாயினான்" . (பாடல் 599)*

இங்ஙனம் இருபது வரர்கள் வந்து கன்னிகையைத்தானம் ஏற்குமுன் மரணம் அடைந்தார்கள். பின்பு கன்னிகையின் தாய் தந்தையரும் சுவர்க்கலோகஞ் சேர்ந்தனர். அதன்பின்னர் உற்பலாங்கி, கணவனை அடையுங் கருத்தினளாய்ப் பல சிவத் தலங்களைச் சேர்ந்து சிவதீர்த்தங்களிலே மூழ்கி, திருப்பூவணஞ் சேர்ந்தாள். மணிகன்னிகைத் தீர்த்தத்தைக் கண்ணுற்று அதிலே தீர்த்தமாடினாள். அவள் செய்த நல்வினைப் பயனால், அத்தீர்த்தக்கரையில் காலவ முனிவரைக் கண்டு வணங்கினாள். அவரிடம் ஒன்றும் உரையாது அவரது நல்லாசியை நாடித் தூரத்தே நின்றனள். அவ்வாறு நின்ற உற்பலாங்கியை நோக்கி 'நீ வந்த வரலாற்றைச் சொல்லென்று' முனிவர் கேட்டார். அவளும் தான் பிறந்து வளர்ந்த கதையையும் திருமணத்திற்கு முன்னர் இருபது வரன்கள் இறந்த கதையையும் கூறி, நிலையாய் இருக்கத்தக்க கணவனை அடையவிரும்பி இங்கே வந்தேன் என்றாள். அதற்கு,

*"மிக் கார்வத்துடன் கௌரி விரத மநுட்டித்து முன்னை விதியினாலே*
*யெக்காலு மிழைத்திடு முத்தியாபன நீ யிழப்ப விஃதியைந்த தென்று*
*முக்கால முதலியன முறையானே முற்றறிந்து மொழியுமந்தத்*
*தக்கார் கொளம் முநிவன் ஞானக்கண்ணா லுணர்ந்து சாற்றினானே " (பாடல் 621)*

இத்தீர்த்தமாடினமையால், தீவினைகள் எல்லாம் நீங்கி மங்கலம் உண்டாகும். ஆயினும், "இத்தீர்த்தத்தில் பூத்த கமலமலரும், உற்பலமலருங் கொண்டு நீ உமாதேவியாரை விதிப்படி பூசனை செய்தால், தேவி நேரில் எழுந்தருளி மங்கலம் தந்தருளுவாள் என்று முனிவர் சொல்லி அருளினார். உற்பலாங்கியும் அம்முனிவர் அருளியவண்ணம் தேவியாரை ஆராதித்தாள். தேவியார் திருவருளினாலே நல்ல கணவனை மணந்து, தீர்க்க சுமங்கலியாயிருந்தாள்.

இத்தீர்த்தத்திலே இடப ராசியில் சந்திரன் இருக்கும் காலத்தில் செவ்வாய் கிழமைகளில் அமங்கலிகள் தீர்த்தமாடினால் மறுபிறப்பிலே தீர்க்க சுமங்கலிகளாக வாழ்வர். சுமங்கலிகள் தீர்த்தமாடினால் மகப் பேறடைவர்.

*"அற்பினோங்கு சீரரனடிக்கண் வாழற்புதந் தருமருடவத்தினா*
*னுற்பலாங்கி தன் கதை படித்துளோ ருய்த்துணர்ந்து தஞ்செவி வழிக்கொள்வோர்*
*கற்கு மாண்பினோர் கலியகத்தரோகட்ட வெங்கொடும் பவமகற்றியே*
*மற்றை யாண்டையோர் வளமைபெற்று மேல்வைத்திடுங் கதிமருவுகிற்பரே" . (பாடல் 628)*

## 2.7.7. பாற்கரபுரச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 75ஆம் அத்தியாயத்தில் கூறப் பெற்றுள்ளது. இச்சருக்கத்தில் மொத்தம் 29 பாடல்கள் உள்ளன. இதில் சூரியனின் தாய் தந்தையர், பிறப்பு, வதுவை(திருமணம்), மனைவி, சூரியனின் வெம்மையை மனைவி தாங்கிக் கொள்ளமுடியாமை ஆகியனவும், சூரிய மண்டலத்தைச் செப்பனிடும் போது உண்டான ஒரு பொடி திருப்பூவணத்திலே வீழ்ந்த செய்தியும் கூறப் பெற்றுள்ளது. இதன் காரணமாகத் திருப்பூவணம் சூரியத்தலம் அல்லது '**பாஸ்கர சேத்திரம்**' என்று வழங்குவதாயிற்று. மேலும் இத்தலத்தில் தங்கி விரதம் இருத்தல், ஓதுதல் செய்வோருக்கு உண்டான பலன்கள் கூறபட்டுள்ளன.

*"காசினியிடத்து மேலாங் **காசிப**ன் றனக்கு மிக்க*
*வாசிலா வழகு பூத்த வணியிழை **யதிதி** யென்பா*
*டேசுறநிவந்து வாளிற்செறியிருள் விழுங்கி யெங்கும்*
*வீசு செங்கதிரோன் றன்னை மேதினி விளங்க வீன்றாள்" (பாடல் 630)*

காசிப முனிவருக்கும் யதிதிக்கும் பிறந்த சூரியன், துவட்டாவின் மகளாகிய பிரபை என்பவளை மணந்து வாழ்ந்திருந்தனர். பிரபைக்குச் சூரியனது வெப்பத்தைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. எனவே தனது நிழலைத் தன்னைப் போலப் பெண் வடிவாகும்படி ஆக்கிச் சூரியனிடத்தே நிறுத்திவிட்டுப் பெண்குதிரை வடிவெடுத்து, வடதேசம் நோக்கிப்போய் ஒரு வனத்தில் தங்கினாள். சூரியனது வெம்மையைப் பொறுக்கும்படி அவனைத் தியானித்துக் கொண்டு தவஞ் செய்தாள்.

*"வார்தரு பூண்முலைவாள் விழியா மடமயில் செய்த*
*தேர்வரிதாகிய பட்டிமை யிறையுந் தேரானா*
*யார் கலி வேலை முகட்டினில் வந்தெழு மழல் வெய்யோன்*
*றார்குழன் மேவிய சாயையை யன்பிற் சார்ந்துற்றான் (பாடல் 638)*

சிலகாலத்திற்குப் பின்பு, சூரியன் தன்னுடைய மனைவியாக இருப்பவன் பிரபை அல்ல என்பதையும், அவளது நிழலான சாயா என்பவள் என்பதையும் தெரிந்து கொண்டான். உடனே, அவன் ஆண்குதிரை வடிவம் எடுத்து மனைவி தவம் செய்யும் வனஞ் சேர்ந்தான். அங்கு அவளைக் கலந்தான். பிரபை செய்த தவ விசேடத்தாலே சூரியனது வெம்மையைப் பொறுத்து மகிழ்ந்தனள். பின்பு சூரியனும் பிரபையும் ஆகாய வழியாகச் சென்றனர். அப்போது, தேவர் முதலாயினார் சந்தித்துச்

சூரியமண்டலத்தைக் கடைந்து செப்பஞ் செய்தார்கள். அச்சர்ச்சரையைக் கடையும் போது அப்பொடி திருப்பூவணத்தில் வீழ்ந்து எங்கும் பரந்தது. முதலாவது திருப்பூவணத்தில் விழுந்து. பின்பு மற்றைய தலங்களிற் பரந்தது.

*"சட்டக மன்னிய சர்ச்சரையைத் திகழ் சாணைக்கட்*
*கட்டழகுற் றிட மற்றையவும் பர்கடைந் தொப்ப*
*மிட்டனரப் பொடி வீழ்தலு மத்தல மெங்குந்தான்*
***புட்பவனம் பெயர் பெற்றது பாற்கரபுரமென்றே** " (பாடல் 653)*

இதனால், திருப்பூவணம் சிறந்த 'பாஸ்கரபுரம்' என்னும் பெயர் பெற்றது. சூரியன் தன்னுடைய மனைவியரோடு திருப்பூவணத் தலத்தையும் மற்றைய தலங்களையும் தரிசித்தான். உத்தமமாகிய திருப்பூவணத் தலத்திலே தங்கி, உபவாசம் விரதம் ஜபம் தானம் முதலியன அன்புடன் செய்தால் நன்று.

*"கரு தரும்புகழ் மேவு பாற்கரபுரம் புகழ்காதை தான்*
*பருகு செந்தமிழ் மேன்மையாற் பரவு பண்பொடு பாடுவோ*
*ரருளுடன் செவியூடு கேட்டவை யுளங்கொடு தேர்குவோர்*
*திரு மிகுந்திடு தேவரூர் தினமிருந் தரசாள்வரே " (பாடல் 657)*

இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்தைந்தாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

## 2.7.8. சர்வ பாவ மோசனச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 76ஆம் அத்தியாயத்தில் கூறப் பெற்றுள்ளது. இச்சருக்கத்தில் மொத்தம் 36 பாடல்கள் உள்ளன. மணிகுண்ட தீர்த்தம் மற்றும் பிரமதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஆடினோர் அடையும் பலன்கள் விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

*"சுத்தமாம் புராணந் தேர்ந்த சூத நன்மாதவத்தோய்*
*சித்திர மணிகுண்டத்தி றிசைமுகன் றீர்த்தந்தன்னிற்*
*பத்தி யினடைந்தி யாரும் படிந்திடு காலபேத*
*மித்திறனன் மாதோ விசைக்குவ தின்னுமுண்டால் " (பாடல் 658)*

சித்திரை மாதத்திலே முழு நிலவு நாளிலே, முதலாவது வயிரவக் கடவுளை வணங்கிப் பின்பு சிவபெருமானை வழிபட்டுச் சூரிய உதயத்திற்கு முன்னே, மணிகன்னிகைத் தீர்த்தம் ஆடியவர்க்குக் கொலை முதலியபாவங்கள் நீங்கும்.

*"அக்கிநிட்டோம மாதியரிய நல்வேள்வி யாற்ற*
*மிக்க செம்பொன் கொடுத்தோர் மேவிய பலன்களுண்டாம்*

*பக்கமோ டரிதினேனும் பகர்ந்திடு மந்த நாளிற்*
*றெக்க சீர் மணிகுண்டஞ் சேர் தோயத்திற் றோய மாதோ (பாடல் 663)*

தீயை (அக்னியை) மூட்டி வேள்விகள் செய்தற்கு உண்டான பொருள்களைத் தானம் செய்வோருக்குப் புண்ணியம் உண்டாகும். குட்டநோயன், தொண்டைக்குள்ளே உரோமம் உடையவன் மற்றுங் கொடிய நோயன் ஆகியோர் அத்தீர்த்த நீரைப்பருகினால் அவர்களது நோய்கள் ஒழியும். வைகாசி மாதத்திலே புதன் கிழமையன்று அத்தீர்த்தத்திலே மூழ்கினவனுக்குப் பொருட்களவின் பாவம்போகும். அறிவு வேண்டும் என்று வேண்டி அத்தீர்த்தத்திலே முழுகிப் பொருளைத் தானஞ் செய்வோனுக்கு இயமதண்டம் இல்லை. நீத்தோரின் மக்கள், வைகாசிமாதத்தில் விசாக நட்சத்திரத்திலே அந்தணர் கையிலே நீத்தார்களை நோக்கி, எள்ளு தயிர் பால் உளுந்து வெல்லம் இவைகள் அமைந்த சித்திரான்னத்துடன் அறுசுவைக்கறி அமுதும், சந்தனம் பூ பாதுகை குடை ஆபரணங்கள் முதலியனவும் தானஞ் செய்தால் சிறப்புடையதாகும். அவ்வாறு செய்தால், நீத்தார்கள், ஞாயிறு திங்கள் (சந்திராதித்தர்) உள்ள வரையும் மகிழ்ந்திருப்பர். தானஞ் செய்தவர் நீத்தார்களுடன் திருக்கையிலாசபதி சேர்வர். மாசி மாதத்து மாமக[169] காலத்திலே மூழ்கித் தானஞ் செய்வோர் பாவங்களைப் போக்குவர். மார்கழி மாதத்திலே பிரம தீர்த்தத்திலே நீராடுவோர் பசுவைக்கொலை(கோகத்தி) முதலிய தீவினைகள் நீங்கி விமானமேறிச் சுவர்க்கஞ் சேர்ந்து பதினான்கு இந்திரப்பட்டம் வரை வாழ்ந்து பூலோகத்தில் அரசராவார்.

*"கார்த்திகைத் திங்க டன்னிற் கார்த்திகை நாளிற் றிங்கள்*
*சீர்த் திகழ்கலை யீரெட் டுஞ் செறிந்த நாள் குறைந்த நாண்மெய்க்*
*கீர்த்தி கொள்க்ர கணகாலங் கெடுமதி திங்கள்சேர்நா*
*ளார்த்த சுந்தரப்பொன் சேயிலருங் கலையொடுங்கு மந்நாள்" (பாடல் 674)*

கார்த்திகை மாதம் புட்கரயோகத்திலே மூழ்கினோர் சிவபுரஞ் சேர்வார். சிவராத்திரியிலே பிரமதீர்த்தத்திலே நீராடுவோர் திருப்பூவண நாதரை வில்வத்தாற் பூசித்து உபவாசம் இருந்து, சிவபுராணங்களைப் பாராயணம் செய்தால், மற்றைய தலங்களில் அளவில்லாத சிவராத்திரி விரதமிருந்த பயனைப் பெறுவர். சிவநிசியிலே, புட்பவனேசருக்குப் பஞ்சகவ்வியம் பஞ்சாமிர்தம் தயிலம் குசோதகம் இவைகளாலும், மணிகன்னிகா தீர்த்தத்தாலும் அபிசேகம் செய்தால், ஆயிரஞ் சதுர்யுகஞ் சிவலோகத்தில் வசிப்பர். செம்பட்டினாலும் வெண்பட்டினாலும் வாழை

கமுகுகளினாலும் புட்பவனேசரை அலங்கரித்தோர் அறிவும் அழகும் ஆற்றலும் உடைய உடலை அடைவர். புட்பவனத்திலே, தீட்சை பெறாதவனும் திருவைந் தெழுத்தை ஒருமுறை ஒதினால், பாவங்களினின்றும் நீங்குவான். இருமுறை ஓதினால் திருக்கைலாசபதி சேர்வான். நூற்றெட்டுமுறை ஓதினால் முத்தியடைவான். 'ஸ்ரீருத்திர மந்திரத்தை' நூறுமுறை சொன்னால் நன்றி கொன்ற பாவம் ஒழியும்.

*"உருத்திரன் றனக்கு மிக்கோங் கொளியு ருத்திராக்க மாலை*
*யருத்தியி னளித் தோரக் கவணி மணியொன்றினுக்குத்*
*திருத்தகு சிவலோகத்திற் றிகழ் தருவருடம் வாழ்ந்து*
*பரப்பிரமத்தைச் சேர்வர் படர்புவி யிடத்து மன்னோ" (பாடல் 683)*

புட்பவனேசருக்கு உருத்திராட்சமாலை தரித்தால் ஒவ்வொரு மணிக்கு ஒவ்வொரு வருடம் சிவலோகஞ் சேர்ந்து வாழ்ந்து பின்பு பூலோகத்திலே சிவஞானத்தைப் பெறுவர். எந்தப் பொருளையும் புட்பவனேசருக்கு அன்புடன் அளிப்போர் இகபரங்களை அடைவர்.

*"அழகியமின்னன்னை யெனு மானந்தவல்லி யுடனமர்ந்து தோன்றுஞ்*
*செழுமலர்க் கொன்றை யினறும் பூந்தேன் றுளிக்குஞ் செஞ்சடில சேகரன் சேர்*
*பொழிறிகழ் பூவணக்காதை புகல் பிரமகைவர்த்தபுராணந் தன்னி*
*னெழுதரியமறை முநிவ வீரெழுபத்ததாறா மத்தியாய மாகும்". (பாடல் 692)*

இவ்வத்தியாயத்தைப் படிப்பவருங் கேட்பவரும் எல்லாப் புண்ணியங்களையும் அடைவர்.

## 2.7.9. பிரம சாபமோசனச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 77ஆம் அத்தியாயத்தில் கூறப் பெற்றுள்ளது. இச் சருக்கத்திலே மொத்தம் 92 பாடல்கள் உள்ளன. இச் சருக்கத்திலே திருக்கைலாசமலையிலே ஊர்வசியின் அல்குற்குறியைக் காமஉணர்வுடன் உற்றுநோக்கிய பிரமதேவன் பெற்ற சாபம், அது நீங்கத் திருப்பூவணம் வந்து வழிபட்டது. கோயில் கட்டுவித்தது, திருப்பணிகள் செய்வித்தது ஆகிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

திருக்கைலாசமலையிலே, செம்பொன்னாலாகிய திருமண்டபத்திலே, அரிபிரமேந்திராதி தேவர் முதலியோர் சூழத் திவ்விய சிங்காசனத்திலே, உமாதேவியார் உடனுறையத் திருநீலகண்டனாகிய சிவபெருமான் வீற்றிருந்து அருளினார்.

அப்பொழுது, திருநந்திதேவர் வேந்திரப் படையினாலே அவ்விடத்திலே நெருங்கிய தேவர் முனிவர் குலாங்களை ஒதுக்கிச் சந்நிதியிலே உலாவி நின்று துதி செய்தார். அங்கே அரம்பை மேனகை ஊர்வசி திலோத்தமை முதலிய தேவரம்பையர்கள் வீணா கானத்தொடு நடித்தார்கள். அம் மகளிருள்ளே ஊர்வசி தனியே நடித்த பொழுது சிவபிரான் திருவுளம் மகிழ்ந்தருளினார். அப்போழுது ஊர்வசி இடையிலே உடுத்தியிருந்த ஆடையைப் பெருங்காற்று வந்து சற்றே ஒதுக்கியது. பிரமன் தவிர மற்றையோர் பெரிதும் அஞ்சித் தலை கவிழ்ந்தனர். ஆனால்,

*"உறுபெருங் காதலுள்ள மீக்கொள்ள வோங்கு பேரெழினலந்தாங்கு*
*முறையறு கன்னன் மூரிவிற் காமன் முடுகினன் மலர்க்கணை தொடுப்பக்*
*கறையணற் கொடிய கட்செவிப் பாந்தட் கணமணாட வியவளல்குற்*
*குறியிடந் தன்னைநோக்கினன் கமலக்கோயில் வீற்றிருந்திடுங் குரிசில்". (பாடல் 715)*

அதனை உணர்ந்த சிவபிரான், நமது சந்நிதியிலே நிற்றற்கு நீ அருகதை உடையவனல்லன் எனப் பிரமனை நோக்கி விலக்கினார். அப்பிரமன் கீழே விழுந்து பெரிதும் பணிந்து எழுந்துநின்றனன். அப்போது, சிவபிரான் "நமது சந்நிதியிலும், ஆசாரியன் அக்னி வேதாகமங்களோதும் இடம், நமதருளை நாடிக்கொண்டிருக்கும் பெரியோர், இவ்விடங்களிலும் மகளிர் அழகைக் கண்டு மயங்குவோன், நரகவாசியாவன்" என்று சபித்தார். அங்ஙனம் ஆயினும் நீ நம்மாட்டு வைத்த அன்பினால் மகிழ்ந்தோம், இவ்விடத்தே நீ செய்த அபராதமானது நமதருட் குறியைப் பூசித்தால் ஒழியும் என்றும்,

பூமியிலே,

*"இன் னமுதங்கான் றிருட்குறும்பெறியுமிந்துவின் மரபினில் வந்த*
*பன்னு செந்தமிழ்த் தென்பாண்டி நன்னாட்டிற் பயின்றிடும் பதிபலவுளவா*
*மன்னதின் மேலா யறைந்திடுங் கூடலாலவாய்ப் பதிக்கு **யோசனையின்***
*மன்னிடும் வன்னி திக்கினோர் தலம் பூவணமெனு மணி திகழ்நகரம்" (பாடல் 720)*

*"உரைசெயு மந்தவோங்கெயின் மூதூரோ ரொரு மூவுலகேத்த*
*மருவிடு மதன்கண் மத்திமை வயங்குவான் முகடணவு வண்பணை சூழ்*
*பரவரும் **பாரிசாத** மொன்றுண்டப் பராரை மாமரத் திருநீழற்*
*புரிகுழலுமை முன் புரிதரு செயலாற் பூசைசெயி லிங்கமொன் றுண்டால்" (பாடல் 721)*

அங்கே நீ சென்று, "அரியவச் சிவலிங்கத் தன்பினா**யிரஞ் சதுர்யுகங்கள்**[170] பூதலமதனிற் பொருந்தியாங் கெம்மைப் பொற்புடன் பூசனை புரியி" என்றும், தான் அங்கே தோன்றி கருணை புரிவதாகவும் திருவாய் மலர்ந்தருளினார். அருளியவுடன் சிவபிரான்

மாட்டுப் பிரமன் விடைபெற்றுத் திருப்பூவணஞ் சேர்ந்து, மணிகன்னிகைத் தீர்த்தத்திலே மூழ்கி, சுவாமி சந்நிதிக்கு நேரிலே ஒரு தீர்த்தம் உண்டாக்கித் திருக்கோயிலினுள்ளே போய்ச் சிவலிங்கப் பெருமானை விதிப்படி அருச்சித்துப் பின்பு தேவியாரையும் பூசித்து அப்பால் மணிகுண்டதீர்த்தத்துக்கு நிருதி மூலையிலே ஆலநிழலின்கண்ணே தன்பேராலே ஒரு சிவலிங்கப் பிரதிட்டை செய்தான். பின்னர்ச் சுவாமி சந்நிதிக்கு வடதிசையிலே நூற்றெட்டு விற்கிடைத் தூரத்திலே தவஞ் செய்து கொண்டிருந்த திருமாலைக்கண்டு வணங்கித் தான் பூமியில் வந்த வரலாற்றைக் கூறிக் கலந்திருக்குங்கால், பிரமன் தேவகம்மியனை வருவித்துப் புட்பவனேசருக்கு ஆலயம் அமைக்கும்படிச் சொன்னான். தேவகம்மியன் சிற்பநூலின்படி திருக்கோயிலை அமைத்தான் (படம் - 4).

கோயில் அமைத்தபின் திருக்கோயிலினுள்ளே பிரமன் புகுந்து சிவலிங்கத்தைப் பூசித்துச் சிவயோகத்தில் இருந்தான்.

*"இன்ன நற்றவங்கள் கண்டிரங்கி யெம்பிரான்*
*பன்னக பணமணிப் பணிகடாங்கியே*
*மன்னும் வானவர்கள் பூமழை பொழிந்திட*
*மின்னனையாளுடன் விடையிற் றோன்றி னான்" (பாடல் 768)*

உடனே பிரமன் எழுந்து வணங்கித் துதித்தான். அத்துதிக்குச் சிவபிரான் மகிழ்ந்து பிரமன் செய்த பாவத்தையும் போக்கிப் பூவணத்து வசிப்பவர்க்கும் பாவந்தீரும்படி அருளினார். பின்பு பிரமனுந் திருவிழா நடாத்திச் சத்தியலோகஞ் சேர்ந்தான்.

*"பிரம சாப மகற்றிடு மிக்கதை பெருகு காதலி னித்தமுமோதுவோ*
*ருரிய ஞானவுரைப் பொருள் செப்பினரொருமையோடு செவிகொடுத்தோர்கு வோர்*
*கருணையால் வரைகுற்றநர் கற்குநர் கழறுகாதை கருத்தினினாடு வோர்*
*மருவி நீடுசுவர்க்கம துற்றர மகளிர்சூழவிருப்ப ரெந்நாளுமே". (பாடல் 785)*

## 2.7.10. இலக்குமி சாபமோசனச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 78ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. இச் சருக்கத்திலே 73 பாடல்கள் உள்ளன. வைகுண்டத்தில் திருமாலைக் காணவந்த **வாலகில்லி** முனிவரை மகாலெட்சுமி கேலி செய்தார். அதனால் உண்டான சாபத்தை நீக்கத் திருப்பூவணம் வந்து தவம் செய்தார். இதனால்

பாவம் நீங்கப் பெற்றார். திருமாலும் தனது பெயரால் சிவலிங்கம் வைத்து தீர்த்தம் உண்டாக்கி வழிபட்டார். இச் சருக்கத்தில் இக்கதை கூறப்பட்டுள்ளது.

வைகுண்டத்திலே, செம்பொற்றிரு மண்டபத்தின் மத்தியிலே, சிங்காசனத்திலே, இலக்குமி உடனுறையத் திருமால் வீற்றிருந்த காலையில், அவர் திருமுன்பு வித்தியாதரர் பாடினார். அரம்பை முதலாயினோர் ஆடினார். தேவர் முதலாயினோர் துதித்தனர்.

*"என்னவேபன்னி யின்னன விமையோரேத்திட வெம் பிரான் மகிழ்ந்தா*
*னன்னவர் தமக்கு வேண்டிய வரங்கள எப்பிலா தனவளித்தருளிப்*
*பன்னருந்திறல் சேர் பண்ணவர் தமக்குப் பரிவுடன் விடைகொடுத்த தன்பின்*
*றன்னிகர் மணிப் பொற்சயன மண்டபத்திற் சார்ந்தனன் சக்கரக்கடவுள் " (பாடல் 809)*

இலக்குமிதேவி திருவடிப் பணிவிடை செய்ய நித்திரை புரிந்தார். அப் பொழுது,

*"சீலநற் சயன் நீதில்விசயன் சேர்*
*மூலவேத முழங்கிடு முன்றில்வாய்*
*நீலமேனி நிமலனை நேடிய*
***வாலகில்லியர்** வந்து பொருந்தினார்" (பாடல் 813)*

இவர்கள் குறள் வடிவினர். வந்தவர்களை வாயில்காப்போர் எதிர்சென்று வணங்கி உபசரித்து ஆசனத்திலிருக்கச் செய்து, உள்ளே போய்ச் சேடியர்களை அழைத்து முனிவர்கள் வரவைத் திருமாலுக்கு விண்ணப்பஞ் செய்யும் வண்ணந் தெரிவித்தனர். அதனை உணர்ந்த சேடியர், இலக்குமி தேவியை வணங்கி முனிவர்கள் வரவை திருமாலுக்குத் தெரிவிக்கும்படி வேண்டினர். வேண்டினவுடன் அம்முனிவர்கள் குள்ள உருவமாய் இருத்தல் பற்றி இலக்குமிதேவி பெரிதும் நகையாடினள்.

*"பெண்டகை மதிகொடு பெருகு மோகையா*
*லொண்டொடி நகைத்தல் கேட்டுறுவர் யாவரும்*
*விண்டுவை மதித்திடார் வெகுண்டு செல்லவை*
*குண்டநீத்தரு நெறிகுறிக் கொண்டாரரோ " (பாடல் 823)*

உடனே, திருமால் நித்திரைநீங்கி, நிகழ்ந்தவைகளை யுணர்ந்து இலக்குமியைப் பார்த்து, "இதுகாறும் யான் அந்தணர்களுக்கு அன்பர் என்பதை நீ மாற்றினாய்" உயர்ந்த குலமகளாய்க் கணவன் கருத்தின் வழி ஒழுகுபவள் ஆயினும் அந்தணர்களை அவமதிப்பு செய்தால் அவள் குலக்கேடிநியாம்" என்று சபித்து விலக்கினர். அச்சாபத்தை அடைந்த இலக்குமி வருந்தித் திருப்பூவணஞ் சேர்ந்து தவஞ் செய்து கொண்டிருந்தனள். இலக்குமியை விலக்கிய பின்பு திருமால் பயந்து விரைந்து சென்று

முனிவர் குலாத்தை அடைந்து வணங்கி, " முனிவர்களே, என்னுடைய மனைவி பெண் மதியினாலே நகை செய்ததைச் சித்தத்தில் வைத்தருளாது கருணை புரிய வேண்டும்" என்று வேண்டிய போது முனிவர்கள் இரங்கி, திருமாலே,

*"அன்ன தொல் பூவணத்தி னலர்ந்த செம்மலர்ப் பூங்கோதை*
*பன்னிரு வருட மந்தப் பண்டை நன் மணிகுண்டத்திற்*
*றன்னிகர்தவஞ் சாரப் பின் சார்ந்தரன் பூசையாற்றி*
*மன்னிய திருவினோடு வைகுண்ட மருவிவாழ்வாய் " (பாடல் 839)*

என்று அருளினார்கள். உடனே திருமால் மகிழ்ந்து, "முனிவர்களே, நீவிர் இங்கே வந்த காரண யாது?" என வினவிய வழி. அதற்கு அம் முனிவர்கள், நாங்கள் செய்யும் வேள்வியைக் காத்தல் வேண்டும் என்றனர். அங்ஙனமே முனிவர்கள் வேள்வியைக் காத்துப் பின்பு திருப்பூவணஞ் சேர்ந்து, சிவலிங்கப் பெருமானைப் பூசித்ததனால் இலக்குமிக்கு உண்டான அபராதமும் சாபமும் நீங்க அவளோடு வைகுண்டஞ் சார்ந்து வாழ்ந்தனர். திருப்பூவணேசருக்கு மேலைத் திசையிலே, இரண்டம்பு செல்லுந்தூரத்திலே, திருமால் தம் பெயராலே ஒரு சிவலிங்கப் பிரதிட்டை செய்தனர். ஒரு தீர்த்தமுண்டாக்கினர். சித்திரை மாதத்திலே, ஆதிவாரத்திலே, அத்தீர்த்தத்திலே மூழ்கி விஷ்ணுலிங்கத்தை வழிபட்டோர் பாவநீங்கிப் பதமுத்தி பெறுவர்.

*"பங்கயத் திருமங்கை சாபந்தவிர்த்திடு காதைதான்*
*றங்கு நற் சொல்பகர்ந்துளோர் தஞ்செவிக் கொடுநாடுவோர்*
*துங்கமிக்க பலன்கள் சீர்துன்றுளத் தருள்கூரவே*
*மங்கலத்தினி* ***னந்திநேர் வந்து****ரைக்கினு மரிதரோ". (பாடல் 858)*

## 2.7.11. உமாதேவி திருவவதாரச் சருக்கம்

இச்சருக்கத்திலே 109 பாடல்கள் உள்ளன. இதில் தட்சன் முழுமுதற் கடவுள் சிவபெருமானே என்பதை உணர்ந்து அவரை நோக்கித் தவமிருந்து உமாதேவியார் தனக்கு மகளாகப் பிறக்குமாறு வரம் வேண்டுதல், உமாதேவி பூமியில் அவதரித்தல், தட்சன் மகளாய் வளர்தல், சிவபெருமானை நோக்கித் தவம் செய்தல், சிவபெருமான் பார்ப்பனன் வடிவில் நேரில் தோன்றுதல் ஆகிய கதைகள் கூறப்பெற்றுள்ளன.

தட்சன், சத்தியவுலகம் சார்ந்து, பிரமனை வணங்கி, 'முதற்கடவுள் யார்' என்று வினவினான். அதற்குப் பிரமன்,

*"முன்னொரு தினந்தனின் முகுந்தனுமி யானும்*

*பன்னரிய பன்றியது வாய்ப்படி யிடந்து*
*மன்னமதுவாகி விண்ணடைந்தது பறந்து*
*மின்னுமறியாத சிவனே யிறைவ னென்றான் " (பாடல் 862)*

அதற்குத் தட்சன், "படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில்களும் முறையே மூவர்களுக்கும் உரித்தாய் இருக்க அம்மூவருள் ஒருவனை முதற்கடவுள்" என்று கூறுதல் பொருந்தாது என்று கூறினான். பிரமன், "என்னையும் திருமாலையும் உண்டாக்கிப் பின்பு உலகத்தைப் படைக்கவும் காக்கவும் அதிகாரங் கொடுத்துப் பின்னர் எங்களை உலகத்தோடு அழித்துப் பின்பு வினைவசத்தால் உண்டாக்குவோர் அச்சிவபிரான். ஆதலால் அவரே முதற்கடவுள் அவரை வழிபட்டே உய்வாய் என்றும், அவரை நோக்கி மானத வாவியிலே தவஞ்செய்வாய் என்றும்" கூறினர். அங்ஙனமே மானத வாவியிலே தட்சன் ஆயிரவருடம் தவஞ் செய்தான். அதற்குச் சிவபிரான் எழுந்தருளிய உடன் தட்சன் வணங்கி, சிவபிரானைநோக்கி "கருணையங்கடலே, உம்மை வணங்குவோர் அனைவரும் என்னை வணங்கவும், என்பணி செய்யவும், உம்மை மாத்திரம் யான்பணியவும், இந்திரபதம் பிரமபதம் விஷ்ணுபதம் அசுரபதம் முதலியன எல்லாம் என்னுடைய ஆணைவழி நடக்க வேண்டும். நான் தலைவனாக இருக்கவும் எனக்குப் புதல்வர், புதல்வியர்களைக் கொடுத்து அவர் மரியாது இருக்கவும், உமாதேவி எனக்கு மகளாக வரவும் நீர் என்மாட்டு எழுந்தருளி அத்தேவியைத் வதுவை(திருமணம்) யாற்றவும் வரமருள வேண்டும்" என்று வேண்டினான். சிவபிரானும்,

*"தவலரிதாய தவமிக முயலுந் தக்க நற்றலைமை நீ பெறவே*
*யிவை யுன்களித்தா மித்திரு நீங்கா திம்முறை நடத்தியா லென்னாக்*
*குவளை சேர் தடங்கட் கோமளவல்லி கொண்ட கூறுடைக் குழகன்செம்*
*பவள வார்சடை யிற் பகீரதிமிலைச்சும் பராபரன் கயிலையிற் படர்ந்தான் " ( பாடல் 877)*

உடனே தட்சன் மகிழ்ந்து, பிரமனை அழைத்து, நிகழ்ந்தவைகளைச் சொல்லி ஒரு நகரம் அமைக்கும்படி கூறினான். அங்ஙனம் பிரமன் "மகாபுரம்" என்னும் ஒருநகரம் உருவாக்கினார். அதிலே தட்சன் வீற்றிருந்து அரசாட்சி செய்து, வேதவல்லியை மணந்து ஆயிரம் மக்களைப் பெற்று, உலகத்தைப் படைக்கும் வலிமை பெறும்படி தவஞ் செய்ய அனுப்பினான். அம்மக்கள் நாரதமுனிவர் உபதேசத்தால் 'ஞானநிட்டை' கூடி முத்தி பெற்றனர்.

*"தக்கனாயிடைத் தக்க நம்மைந்தர்கள் யாரு
மிக்க முத்தியின் மேவினர் விதியிது வென்னாத்
துக்கமுற்று மெய்துண்ணென நடுங்கிய சூழல்
புக்கனன்பினு மாயிரம் புதல்வரைத் தந்தான்" (பாடல் 892)*

முன்போல அவர்களையும் தவஞ் செய்யும்படி அனுப்பினான். மீண்டும் நாரதமுனிவர் உபதேசத்தாலே அவர்கள் திருவைந்தெழுத்தைச் சிந்தித்து 'ஞானநிட்டைகூடி' முத்தி பெற்றனர். பின்பு தட்சன் மகள்களைப் பெற்று விவாகஞ் செய்து கொடுத்துப் பேரன் பேத்திகளுடன் (புத்திர பௌத்திர பாக்கியத்தோடு) வாழ்ந்து கொண்டிருந்தான். அப்போது, திருக்கைலாசத்திலே, சிவபிரானை உமாதேவியார் வணங்கி,

*"அந்த நல்ல மையந் தன்னினம்பிகை வணங்கி யெந்தாய்
சந்தத முயிர்கட் கெல்லாஞ் சஞ்சலப்படுத்து கின்ற
வெந்துயர்ப் பிறப் பிறப்பை வீட்டி வீடருளுந் தன்மை
யிந்த வாறடியனேற் கிங்கியம்பிட வேண்டு மென்றாள்". (பாடல் 913)*

அதற்குச் சிவபிரான், "தேவீ, நாம் பஞ்சகருத்தர் முகமாகப் பஞ்ச கிருத்தியங்களையும் உலகத்தில் நடாத்தி, இருவினைக்கீடாக உயிர்களுக்குப் போகங்களை ஊட்டிப் பின்பு ஞானத்தைக் காட்டி முத்தி கொடுப்போம். அப்பஞ்ச கிருத்தியப்படும் உலகமெல்லாம் உன்னுடைய அம்சம்" என்று அருளினார். அதுபற்றி உமாதேவியார் தம்மை மதித்து நின்றவழி, சிவபிரான் யோகத்தில் எழுந்தருளி இருந்தனர். அப்போது உமாதேவியார், "தங்களை மதியாமல் என்னை உயர்வாக நினைந்த எனது இப்பிழையினால் உண்டான பாவம்(தோஷம்) அகலும்படி அருள்புரியவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தார். அதற்குச் சிவபிரான், "தேவீ, நீ காளிந்தி நதியிலே, தாமரைமலரிலே, வலம்புரிச் சங்கு வடிவாய்த் தவம் புரிந்தால், பின்பு குழந்தையாவாய், அப்பொழுது தட்சன் வந்து உன்னைப் புதல்வியாகக் கொண்டு வளர்ப்பான். அப்பால் நாம் வந்து உன்னை மணஞ் செய்து கொண்டு இக்கயிலை மலைக்கு வருவோம்" என்றருளினார். உடனே உமாதேவியார் விடைபெற்று, காளிந்திநதி சேர்ந்து கமல மலரிலே சங்குவடிவாய்த் தவஞ் செய்தார். அப்போது வேதவல்லியோடு தட்சன் காளிந்திநதியில் நீராடினான். அங்கே கமல மலரிலே தங்கிய சங்கினைக் கண்ணுற்றுக் கைகளினால் அள்ளியபோது குழந்தை வடிவாயினார். அக்குழந்தையைத் தன்புதல்வியாகக் கொண்டு மகிழ்ந்து, வேதவல்லி கையிற்கொடுத்தான். அவள் வாங்கிக் குழந்தையை உச்சிமோந்து தழுவி மகிழ்ந்தாள். மாளிகை சேர்ந்து வளர்ந்தனள்.

தட்சனும் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். குழந்தையாக வளர்ந்த தாட்சாயணி ஆறாவது பிராயத்திலே. கன்னிமாடத்திலே, சிவபிரானை நோக்கித் தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்போது சிவபிரான் பிரமசரிய வயோதிகப் பிராமண வடிவங்கொண்டு வந்தார். அவரைத் தவஞ் செய்யும் உமாதேவியார் வணங்கி உபசரித்தார். உபசரித்தவுடன் பிரமசாரியார், "தேவீ, நின்மாட்டு ஒன்றை விரும்பி வந்தோம்" என்றனர். அதற்குத் தேவியார் யாதென்று வினவ, பிரமசாரியார் உன்னை மணஞ் செய்யும் பொருட்டு வந்தோம் என்றனர். உடனே தேவியார், "ஓ, பார்ப்பானே, நீ வஞ்சக வேடந் தாங்கி வந்தாய் போலும்" என்று கூறி ஞானமூர்த்தியாகிய சிவபிரான் மணம் புரியும் பொருட்டு அவரை நோக்கித் தவஞ் செய்கின்றேன்" என்றாள். அதற்குப் பிரமசாரியார், இறைவன் வந்து மணம்புரிதல் அருமை என்றனர். தேவியார் இன்னும் வருந்தி அருந்தவஞ் செய்வேனென்று கூறிச் சேடியர்களுடன் சேர்ந்தார்.

*"நீங்குக வென்றுசீறி நீண்மணி மாடந் தன்னிற்*
*பாங்குறு பரிசனத்தோர் தம்முழைப் படர்தலோடும்*
*பூங்குழ லுமையாள் காணப் பொருவருங் கருணைவள்ள*
*றீங்குறாத் தனது பண்டைத் திருவுருத் தரிசிப்பித்தான்". (பாடல் 962)*

அதனைத் தரிசித்த தேவியார் திருவுள்ளமுருகிக் கண்ணீர் ஒழுகத் தொழுது அடியேன் கூறிய பிழையைத் தேவரீர் பொறுத்தருளும் என்றார். அப்போது அங்கே நிகழ்ந்த செய்திகளைச் சேடியர் ஓடித் தட்சனுக்குச் சொல்லினர். அதனை உணர்ந்த தட்சன், சிவபிரான் என்னைவிரும்பும் பட்சத்தில், என்னுடைய மகளை அவ்விறைவருக்கே மணஞ் செய்து கொடுப்பேன் என்றபொழுது உமாதேவியாரும் பரமபதியாகிய நாயகரையே நாடிக் கொண்டிருந்தார்.

*"மைக்கருங்கணுமை மாதராண் மட்டறுங் கருணை கூரவே*
*தக்க பண்புரியின் மேவியே தக்கனன் பின்மகளான சீர்*
*மிக்க நன்கதையை யோதுவோர் மெய்ச்சொலின் பயனை நாடுவோர்*
*முக்கணெந்தை யருளாகியே முத்தி சென்ற டைகுவார்களே" (பாடல் 967)*

"மலயத்துவச பாண்டியனுக்கும், சூரசேனன் என்னும் சோழவரசனுடைய மகளாகிய காஞ்சனமாலையை மணந்து கொண்டான். அவன் 'புத்திர காமேஷ்டி'யைச் செய்து வேள்வித் தீயிலிருந்து எல்லா உயிர்களையும் எல்லா உலகங்களையும் பெற்றவளாகிய உமாதேவியர் மூன்று முலைகளையுடைய ஒரு பெண் மகவாக மூன்று வயதுடன் எழுந்து வரபெற்று, அவளுக்குத் '**தடாதகை**' எனப் பெயரிட்டு வளர்த்தனர்

எனத் திருவிளையாடற் புராணத்திலே தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலத்திலே பரஞ்சோதி முனிவரால் கூறப்பட்டுள்ளது."[171]

## 2.7.12. திருக்கலியாணச் சருக்கம்

இச் சருக்கத்தில் மொத்தம் 120 பாடல்கள் உள்ளன. இவைகளிலே தட்சன் தனது மகளான தாட்சாயனியைச் சிவபெருமானுக்குத் வதுவை(திருமணம்) செய்வித்தது, சிவபெருமான் மணம் முடிந்தவுடன் மறைந்தது, இதனால் தேவியார் மீண்டும் தவம் மேற்கொண்டது, தட்சன் சிவபெருமானை நிந்தித்தது, சிவபெருமான் உமாதேவியார் தவம்செய்யும் இடத்தில் தோன்றி அவருடன் திருக்கைலாயம் சென்றது, அங்கு வந்த தட்சனுக்குக் காட்சியளிக்காதது, இதனால் தட்சன் கோபம்கொண்டது ஆகிய நிகழ்ச்சிகள் கூறப்பெற்றுள்ளன.

*"அருமறை நான்கையும் கத்தடைத் தசீர்*
*மருவிய சவுனக மகிழ்ந்து கேண்மியா*
*பொருவிடைப் பாகனப் பொருவின் மங்கையைத்*
*திருமணஞ் செய்தது செப்புவாமரோ " (பாடல் 968)*

எனத் திருமணம் நடைபெற்ற கதையைச் சூதக முனிவர் சொல்ல ஆரம்பித்தார். தட்சன் தனக்கு மகளாக அவதரித்த உமாதேவியாருக்குத் திருமணஞ் செய்யும் பொருட்டு மணமுரசு அறைவித்து நகரத்தை அலங்கரித்துத் திருமண மண்டபம் நிருமித்துப் மற்றைய மகள்களுக்குத் தெரிவித்தவுடன் அவர்களும் வந்தனர். தேவர்களுக்குத் தெரிவிக்க, பிரமன் முதலிய தேவர்களும் வந்தனர். திருக்கைலாச மலையினின்று சிவபிரான் காளை வாகனத்தில் உமாதேவியார் தவஞ் செய்யுங் கன்னிமாடத்துக்கு எழுந்தருளினார். அப்போது தட்சன் வந்து வணங்கித் துதித்து,

*"ஆதிநாயகி யடியனே னிடத்து தித்திடவு*
*நீதியால வனின்ப நன்மணஞ் செயநினைந்திப்*
*போது நீயிவண் போதரப் பொருந்திய பொற்பால்*
*யாது நற்றவம் புரிந்த திவ்விருங்கடி நகரம்" (பாடல் 989)*

*"என்று பற்பல வியம்பியே பின்னரு மிறைஞ்சித்*
*துன்று சீர்த் திருமாலயன் சுரர்புடை நெருங்க*
*மன்றலாற்ற வென்மனை யிடைத் திருவுள மகிழ்ந்து*
*வென்றி மால்விடைத்தனில் வரல்வேண்டு மென்றிரந்தான்". (பாடல் 990)*

உடனே சிவபிரானும் அம்மண்டபத்துக்கு எழுந்தருளிய பொழுது வேதவல்லி வந்து பசுப்பால் வார்த்துப் பாதாரவிந்தங்களை விளக்கியபின் சிவபிரான் திவ்விய சிங்காசனத்திலே வீற்றிருந்து அருளினார். திருமால் முதலிய தேவர்களும் ஆசனங்களிலே அமர்ந்தனர். உமாதேவியாரும் திருமணக் கோலங் கொண்டு சிவபிரானருகே அமர்ந்தருளினார்.

*"எம்மை யினிதாண்ட ருளென்றி யாவருமே பணிந்தேத்து மெம்மான் றன்னை*
*நம் மருக னென்றெண்ணி நாயகியை நிற்களித் தேனானே யென்னா*
*வெம் முனைசேர் வேனெடுங்கண் விளங்கிழை செங்காந்தளங்கை தன்னைமிக்க*
*செம்மணிப் பொற்குண்டிகையிற் றிகழ் திருமஞ்சன மரன்றன் செங்கை யீந்தான் "*

*(பாடல் 1042)*

உடனே தக்கன் சிவபிரான் திருக்கையின்கண் உமாதேவியாரைத் தத்தஞ் செய்தான். பிரமன் அக்கினி வளர்த்துத் திருமணச் சடங்குகளை முடித்தார். உடனே சிவபிரான் மறைந்தருளினார். மறைந்த பின்பு உமாதேவியார் பெரிதும் வருந்தி அருந்தவஞ் செய்தார். அப்பொழுது, திருமால் முதலிய தேவர்கள் சிவபிரான் திருவுளப் பாங்கை உணர்தல் அருமையென்று பேசிக்கொண்டார்கள். இச்செய்தியை உணர்ந்த தக்கன் தேவர்களை அனுப்பிவிட்டுச் சிவபிரானை நிந்தித்துக் கொண்டிருந்தான். அப்போது, சிவபிரான் தோன்றி,

*"இரந்த காலையி னெம்பெருமாட்டியை யெங்கோன்*
*வருந்தனீ யெனவே திருவாய் மலர்ந் தருளி*
*விரும்பியே பொருவெள்விடை மீதுட னிருத்திப்*
*புரந்தராதியர் போற்றிடக் கயிலையிற் போந்தான் " (பாடல் 1072)*

தக்கனும் திருக்கைலாச மலைக்குச் சென்றான். சிவபிரான் தரிசனங் கிட்டவில்லை.

*"திருமணிப் பெருங் கோயினீ செல்லலென்றதுதா*
*னுரிய நற்றவத்தியான் றருமொரு மடக்கொடியு*
*மருவு மென்றிரு மருகனும் வழங்கிய மாற்றங்*
*கருதினும் முறையன்றிது வென்று கட்டுரைப்பான் " (பாடல் 1082)*

பின்னர், தன் நகரத்தைச் சார்ந்து தேவர் குலாங்களை அழைத்துச் "சிவபிரானை இன்று முதல் நீவிர் வழிபடுதலை ஒழியுங்கள்" என்று கூறினன்.

*"அன்ப ருளந்தனதாய கோயிலா மங்கணன் மங்கையை யார்வமாகவே*
*யின்ப மணம்புணர் காதை யோதுவோரின் புடனன் செவியேற வேய்குவோர்*
*வன்பவ வெந்துயர் யாவுமாறியே மங்கல வங்கனையார்களோடு தாந்*
*தென்பயிலிந்திர போகமேவியே செஞ்சடிலன் பதமீது சேர்குவார்". (பாடல் 1087)*

## 2.7.13. தக்கன் வேள்வியழித்த சருக்கம்

இச்சருக்கத்தில் 66 பாடல்கள் உள்ளன. சிவபெருமானின் செயல்பாடுகளில் ஒப்புமை கொள்ள முடியாத தட்சன், சிவபெருமானை மதிக்காமல் மற்ற தேவர்களை அழைத்து வேள்வி செய்யத் துவங்கினான். அழைக்காமலேயே அங்கு வந்த தேவியார் யாககுண்டத்திலே எழுந்து தக்கன்தலை துண்டாகுமென்று சாபம் வழங்கினார். இது அறிந்த சிவபிரான், வீரபத்திரரைப் படைத்து யாகத்தை அழித்தார். இச் செய்திகள் இந்தச் சருக்கத்திலே கூறப்பெற்றுள்ளன.

*"மாதவன் விரிஞ்சன் மிகு வானவர்கண் மாத*
*ரேதமறு மாதவர்க ளெண்டிசை புரப்போ*
*ராதியர்கள் சூழ நுதலங் கணனை நீத்தே*
*மேதகைய தக்கனொரு வேள்வி செயலுற்றான்" (பாடல் 1089)*

அதனைக் கண்ணுற்ற நாரதமுனிவர் திருக்கைலாயஞ் சேர்ந்து சிவபிரான் மாட்டு விண்ணப்பஞ் செய்த பொழுது, உமாதேவியார் எழுந்து சிவபிரான் திருவுளம் உணராமல், உரிய விடைபெறாமல் தக்கன் யாகசாலையை அடைந்தாள்.

*"தக்க வுலகங்களிடை சார்ந்த பல யோனி*
*தொக்க வுயிர்கட் கருள் செய்தோன்றலினி யானென்*
*றக்கொடிய தக்க னுமையாளையும் வெகுண்டே*
*மிக்க கயிலைக் கிரியின் மீண்டுபடர் கென்றான்". (பாடல் 1105)*

அதற்கு உமாதேவியார் தக்கனை நோக்கிப் பெரிதுஞ் சினங்கொண்டு, "ஏய், தக்கனே, நீ சர்வலோக நாயகராகிய சிவபிரானை நிந்தனை செய்தமையால் நீ செய்யும் வேள்வியும் அழிந்து உன்னுடைய தலையும் ஒழிந்திடுக" என்று சபித்து, மூலாக்கினியை எழுப்பி அதிலே முழுகினாள். முன்னமே சிவபிரானை நோக்கி உமாதேவியார் தன்மாட்டு மகளாக அவதரிக்கும் வண்ணம் எண்ணித் தவம் பண்ணிய இமய மலையரையன் வளர்க்கும் யாககுண்டத்திலே அவதரித்தருளினார். பின்னர்த் தக்கன் யாகசாலையிலே நிகழ்ந்தவைகளைத் திருநந்தி தேவர் முதலியோர் முகமாக உணர்ந்த சிவபிரான் வீரபத்திரக் கடவுளை நெற்றிக் கண்ணிடைனின்றும் படைத்தார். சிவபெருமான் வீரபத்திரரிடம், "வீரனே, நம்மை நிந்தித்துத் தக்கன் யாகஞ் செய்கின்றான், நீ அவனை அடைந்து அவியைக்கொடு என்று கேள் கொடுத்தால் வாங்கிக்கொண்டு இங்கே வா, கொடாவிட்டால், அவன் சிரத்தினை அறுத்து வேள்வியையும் அழித்துவிடு, யாமும்

வருவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே வீரபத்திரக் கடவுள் சிவபிரான்மாட்டு விடைபெற்று,

*"மன்னிய கரிமேல் வாலுளை மடங்கன் மறங்கொடு செல்வதுபோன்று
முன்னி மான்றன்னை யுறுவலி யொழிப்பானோர் வயப்புலி யுறல் போன்றும்
பன்னக மதனைப் பரிகுவானினைந்து பன்னக வயிரி சென்றெனவுந்
தன்னிகர் **வீரபத்திரன்** வேள்வி தந்திடுந் தக்கனைச் சார்ந்தான்". (பாடல் 1125)*

தக்கனை அடைந்த வீரபத்திரர், தக்கனே "சிவபிரானுக்குரிய அவிப்பாகத்தைக் கொடு" என்றார். அதற்குத் தக்கன் "அப்பித்தனுக்கு அவிப்பாகங் கொடேன், நீ செல்" என்றான். அப்பொழுது, வீரபத்திரக்கடவுள், யாகசாலையிலிருந்த திருமாலைத் தண்டாயுதத்தினாலே அடித்தார். உதிரத்தை உமிழும்படி பிரமன் தலையிற் குட்டினார். குயில் வடிவங்கொண்டு ஓடின இந்திரனை வாட்படையினால் வெட்டினார். கூற்றுவனைக் கொன்றார். சூரியன் பல்லைத் தகர்த்தார். சந்திரனைப் பாதத்தாலே தேய்த்தார். சரசுவதி மூக்கையும் முலையையும் அரிந்தார். அக்கினியின் கையையும் நாவையும் சேதித்தார். தக்கன் மனைவி நாசியை அரிந்தார். தக்கன் தலையை அறுத்து யாக குண்டத்திலே போட்டார். மற்றவர்களையும் தக்கபடி தண்டித்தார். அப்பொழுது சிவபிரானும் காளை வாகனத்தில் எழுந்தருளினார். உடனே திருமால் வணங்கிப் பிராத்தித்தமையால், வீரபத்திரக் கடவுள் முகமாகத் தேவர்களைப் பிழைப்பித்தார். பின்பு, பிரமன் வணங்கிக் கேட்டுக் கொண்டபடி,

*"இரந்தி டுமமையத் தெம்பிரான் வீரவின்னதும்புரிதி நீ யென்னாக்
கரந்தலைக் கொண்டு வணங்கியே பானு கம்பனைத் தக்கனற்க வந்தம்
விரைந்து நீ கொணர்தி யென்னலு மந்த மேதகு பூதமாங்குய்ப்பப்
புரிந்த வவ்வேள்விக் கரிந்தமைத் தலையைப் பொருத்தின னெழுகென வுரைத்தான் "*

(பாடல் 1145)

ஆட்டின் தலையைத் தக்கனுக்கு அமைத்து எழுப்பினார். பின்னர்ச் சிவபிரான் இமயமலைக்கு எழுந்தருளிப் பார்வதி தேவியாரை மணந்து திருக்கயிலாச மலை சேர்ந்து யோகியாய் எழுந்தருளியிருந்தார்.

*"தக்கன் வேள்விதகர்த்திடு மிக்கதை தக்கஞான தவத்துறு மாதவீர்
மிக்க சீரின் விருப்பினுரைக்குநர் மெய்ச் சொன்மேவு செவிக்கொளு மேன்மையோர்
திக்கினோ டுலகுக் கரசாகி யேசித்த நீடுகளிப்புடன் மேவியே
தொக்க போகசுவர்க்க மதுற்றுயர் சுத்தஞான சுகத்தினி லாழ்வரே". (பாடல் 1153)*

## 2.7.14. உமைவரு சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 79ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. இச்சருக்கத்திலே மொத்தம் 39 பாடல்கள் உள்ளன. இவற்றில், சிவபெருமானை மதியாது தக்கன் நடத்திய யாகத்திற்குச் சிவபெருமானின் விருப்பம் இன்றிச் சென்றதனால் உமாதேவியிடம் பாவம் உண்டானது, அதனைப் போக்கச் சிவபெருமான், உமாதேவியைத் திருப்பூவணம் சென்று பாரிசாதத்தாரு வளர்த்து அதனடியிலிருந்து தவம் இயற்றுமாறு அருளியது, அவ்வாறே தேவியார் திருப்பூவணம் வந்து தவமியற்றி அருள் பெற்ற கதை இவை இடம் பெற்றுள்ளன. மேலும் பசியால் வாடிய ஓர் ஏழை அந்தணனுக்குச் சிறிதளவு இலைக்கறி கொடுத்ததால் உண்டான புண்ணியம் பற்றி எடுத்துக்கூறும் கதையும் இடம் பெற்றுள்ளது.

*"பூங்குழலுமை பின் பூவணந்தன்னிற் பொருந்தி நற்றவஞ் செயுமாறு*
*மோங்கிய காதலு வந்திடத்தான முத்தமர்க் குதவிடுமாறுந்*
*தாங்கரும் வெகுளித்ணந்திடு ஞானச்சவுனக கேளென வருளிற்*
*றூங்கியே மிகு வெந்தீங்கெறிந்தோங்குஞ் சூதமாமுனிவரன் சொல்வான்" (பாடல் 1154)*

திருக்கைலாச மலையிலே, சிவபிரான் யோகமூர்த்தியாக எழுந்தருளி யிருக்கும் பொழுது, ஒருதினத்திலே சிவபிரான் உமாதேவியாரை நோக்கி,

*"தழுவுதற் கெட்டாத் தபனியவரை சேர்சந்தனக் குங்குமக் கொங்கைக்*
*குழைகிழித் தோடிக்கொடுஞ் சமர்விளைக்குங் கூரிலைவேனெடுங் கண்ணாய்*
*விழையு நீ யாமுன் விளம்புரை மறுத்து மிக்க தக்கன் வயிற்சென்ற*
*பிழைதனை யொழிவான்வழி மதியென்னாப் பேசினன் பிறையணி பெருமான்".*

(பாடல் 1156)

"இக் குற்றத்தைப் போக்கும் பொருட்டு, செந்தமிழ்ப் பாண்டிய நாட்டில் உள்ள திருப்பூவணச் சேர்ந்து, பாரிசாத விருட்சம் வளர்த்து அதன் அடியிலே நீ தவஞ் செய், பாரிசாதத் தாருவின் கீழிருந்து ஒரு மூலலிங்கம் தோன்றும். அதிலே நம்மைப் பூசித்தால் நாம் வெளிப்பட்டு அக்குற்றத்தை நீக்கி உனக்கு அருள்புரிவோம்" என்று திருவாய் மலர்ந்து அருளினார். அருளியவுடனே விடைபெற்று உமாதேவியார் திருப்பூவணஞ் சேர்ந்து பாரிசாதத் தாரு வளர்த்து அதனிழலிலே,

*"கூறிடுந்தேவிகுண்டதீரத்தின்குணதிசைகுறித்திடுமெல்லை*
*யாறுவெம்பகையுமறவெறித்துதறியரும்பன்னசாலைசெய்ததன்கட்*
*சீறுகாலருந்திச்சிலபகலதுவுஞ்சிறிதருந்தாதுதேவாண்டி*
*னூறுமன்புடனோராயிரவருடமொண்டொடியுறுதவமுழந்தாள்". (பாடல் 1161)*

ஓராயிரவருடம் தவஞ் செய்து கொண்டிருக்கும் போது,

*"அப் பரிசந்தவருந் தவமுழந்தே யாயிரமாண்டு மாண்டதற்பி*
*னொப்பரிதாய **வுமையவள் வளர்த்த வோங்கு மந்தார** மூலத்திற்*
*பைப் பெரும் பாந்தட்பாதலத் துதித்துப் படியினைக் கீண்டு மேன்முளைத்துத்*
*திப்பியமாகத் திருவருளுருவாய்ச் சேர்ந்த தோர் திகழ் சிவலிங்கம்" (பாடல் 1162)*

முளைத்தது. அதனைத் தேவியார் கண்ணுற்றுப் பெரிதும் மகிழ்ந்து அச்சிவலிங் கத்தைப் பூசித்தார் (படம் - 5) அச்சிவலிங்கத்திலே காளைவாகனத்தில் சிவபெருமான் காட்சியளித்தார். பார்வதிதேவியார் வார்த்தையைக் கடந்த குற்றத்தை நீக்கியருளினார். மற்றும் பல முனிவர்களும் அச்சிவலிங்கத்தைப் பூசித்தார்கள்.

*"எத்தலமும் புகழித்தல மேவிய வியல்பாலே*
*பத்திகொள் **பாரிசாத** நிழற்கட் பரமேசன்*
*சித்திர மேவிய சேவடிகண்டு தினந்தோறு*
*முத்தி யடைந்திட மோனமடைந்தன ரொருசாரார்". (பாடல் 1168)*

அச்சிவலிங்கப் பெருமான் அமர்ந்து அருளுதற்கு இடமாகிய பாஸ்கரபுரியாகிய திருப்பூவணத்திலே, நற்குணங்கள் உள்ளவர்களுக்குத் திலமளவு தானஞ் செய்தால் அது மலைபோலாகும். இந்தத் தலத்திலே, ஓர் அந்தணன் வேத முதலியவைகளை யுணர்ந்து, ஒழுக்கத்திலே வழுவாது, சிவார்ச்சனை செய்து, உடலினை வெறுத்து, இலைக்கறி மாத்திரம் உண்டு, சிவயோகத்தில் அமர்ந்திருந்தான். அவ்வாறு இருக்கும் போது, ஒருநாள் இரவிலே, பெருமழை பெய்யுங் காலத்திலே, ஒரு பிராமணன் பெரும் பசியோடு அச்சிவயோகியின் பர்ண சாலையை அடைந்தான். உடனே சிவயோகி எழுந்து வணங்கித் திருவடிகளை விளக்கிப் பர்ணசாலையின் உள்ளே சேர்த்து, உபசரித்துத் தனக்குப் பாகஞ் செய்திருந்த இலைக்கறியில் ஒரு பங்கை உண்பித்தான். பிராமணனும் அந்த இலைக்கறியை உண்டு மகிழ்ந்தான். அதனோலே சிவபிரானுந் திருவுளம் மகிழ்ந்தருளினார். அதனால் உலகம் முழுவதும் மகிழ்ந்தது. உடனே இலைக்கறி படைத்த அந்தணன் முன்னே, காளை வாகனத்தில் சிவபிரான் தோன்றிப் பிறவியறும் வண்ணம் அருள்செய்தார். இலைக்கறியுண்ட அந்தணனுக்கு மரணம் நேரிட்டபோது வேதாந்த முடிபாகிய சித்தாந்தத்தை உபதேசித்தார். இத்திருப்பூவணத்துக்கு ஒப்பான தலம் இல்லை.

*"அன்னிய தான மதன்கணளிக்கு மருந்தான*
*மன்னு பலங்கள் வழங்குநர்கட் கவைவந்தெய்து*
*மின்னருளா ல ஃதேற்குநர்க் கென்று மிரும்பாவந்*
*தன்னிகர் **சவுனக சத்தியமா மிது** சாற்றங்கால்". (பாடல் 1188)*

இப்படலத்தை ஓதுவோருங் கேட்போரும் சிவபிரான் திருவடி நிழலிலே வாழ்வர்.

*"சிமய மாலிமயாசல மேவிய சிவமனோன்மனி சேர் கவுமாரி தேர்*
*சமயநாயகி சௌரி சகோதரி சகலகாரண நாரணி யாயிதழ்க்*
*கமலலோசனி காதையை யோதுநர் கருதியே செவிவாய் வழியோர்குவோ*
*ரமலநாயகனார் பதமாகிய வரிய தாமரை நீழலில் வாழ்வரே". (பாடல் 1192)*

## 2.7.15. சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 80ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. இச்சருக்கத்திலே மொத்தம் 39 பாடல்கள் உள்ளன. இவற்றில், சுச்சோதி மன்னன் தனது தாய்தந்தையருக்கு ஒவ்வொரு திருத்தலமாகச் சென்று தர்ப்பணம் செய்தது, திருப்பூவணத்தில் அம்மன்னனது முன்னோர்கள் நேரில் வந்து தில தர்ப்பணத்தை ஏற்றுக் கொண்டது ஆகிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

கோதாவிரி நதிக்கரையிலே, போகவதி நகரத்திலே, 'தேவவன்மா' என்னும் அரசன் ஒருவன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவனுக்குச் சுச்சோதி, நீதிமுகன், வதானியன், தேவமித்தரன் என்னும் பெயருள்ள நான்கு மகன்கள் இருந்தார்கள்.

*"சாலவுங் கற்றோர் தங்கள் பாற்கலைகடாந் தெரிந்திரு முதுகுரவர்*
*சீலநற்குரவன் செப்பிய மாற்றந் தினந்தொறுந் திறம்பிடாத் திறத்தோர்*
*ஞாலமேற்றி கிரியுருட்டி நன்களிப்பாரை பதியென வளர்ந்ததற்பின்*
*மாலுமெய்த் திருவும் போலவர்க் கின்பமணம் புணர்வித்தனன் மன்னன்".*

*(பாடல் எண் 1200)*

பின் அமைச்சர்களை அழைத்து, "நம்முடைய மகனைப் பாதுகாத்து அவன் ஆணை வழி ஒழுகுவீராக" என்று உத்தரவிட்டான். பின்னர் அத்தேவவன்மா என்பவன் தருமசீலை(1220) என்னும் மனைவியோடும் தவஞ் செய்யும் பொருட்டு வனத்தையடைந்து சிவயோகியாய் அமர்ந்து தேகவியோக முற்றான். மனைவியுடன் சிவபதம் அடைந்தான். அவ்விருவருக்கும் சுச்சோதி என்பவன் சகோதரர்களோடுங் கூடி அந்திக் கடமைகளை முடித்தான்.

*"அதுபொழு தங்கண்ணைந்து முன்னவனை யாரருள் **வீணைநாரதன்** றான்*
*றுதி பல புனைந்து சொல்லுவ துடையேன் றூயநற் பாரெலாந் தோண்மேன்*
*மது மலர்மாலை யென்னவேசுமந்த மன்னநின் மனத்திடை மதித்தே*
*யிதுபுரி வைகுயேலாழி சூழுலகதின்றுனக் கிணையிலை யென்றான் " (பாடல் 1203)*

*"இந்த நற்றலத்தினிருங் குலப்பிதிர்களி யைந்துநிற்கெதிர் முகந்தரவே*
*வந்து நீ வழங்குந் திலதருப்பணத்தை வாங்கிடின் மற்றைய தலத்தை*
*முந்துறக் காண்டியத்தலம் **பிதிர்கண் முத்தியினடைந்திடும் புரமா***

*மந்த நற்றல மேயரும் பெருந் தலத்தினதிக வுத்தம தலமாமால்" (பாடல் 1204)*

அவ்வாறு "நீத்தார்கள் நேரில் வந்து திலதருப்பணத்தை பெற்றுக் கொள்ளும் இடமாகியதே உத்தமதலமாம், அதனை அடுத்துத் தருப்பணஞ் செய்வாய்" என்று சுச்சோதி மன்னனிடம் நாரதர் கூறினார். உடனே சுச்சோதிராசன் மகிழ்ந்து அக்கினிகர்ப்பன் என்னும் புரோகிதனை அழைத்து, முனிவர் அருளியதைச் சொல்லி, சேனைகள் சூழப் புறப்பட்டுப் பிரயாகை சேர்ந்து தீர்த்தமாடி, நீத்தார்களுக்குத் தர்ப்பணம் பண்ணித் தானங்கள் கொடுத்தான். பின் அரித்துவாரம் அவந்தி மாளவம் காகோலம் நீலகண்டம் முதலாகத் திரிகூடவீசம் ஈறாக வடதிசையிலுள்ள தலங்களையும், காஞ்சிபுரம் முதலாகத் தொண்டை நாட்டிலுள்ள தலங்களையும், தில்லைவனம் முதலாகச் சோழநாட்டிலுள்ள தலங்களையும் அடைந்து தீர்த்தங்களாடிச் சிவபிரானைத் தரிசித்துப் பின்னர் நீத்தார்களை நோக்கித் திலதருப்பணஞ் செய்தான். பின் பாண்டிநாட்டிலே திருவாலவாய் சேர்ந்து, பொற்றாமரை வாவியிலே மூழ்கி முன்னோர்களுக்குத் தருப்பணஞ் செய்து, அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுரரை வழிபட்டு அத்தலத்தே தங்கினான். ஒரு தினம் அரசன், "நாரதமுனிவர் கூறிய வார்த்தை விநோதமோ!" என்று கருதி மனம் வருந்தி இருக்கும்போது நாரதமுனிவர் அம்மன்னனைக் கண்டார். அவர் மன்னனிடம், "இத் திருவாலவாய்க்குக் கீழைத் திசையிலேயுள்ளது திருப்பூவணம். அது, சிவபிரானுக்கும் முனிவர்களுக்கும் நீத்தார்களுக்கும் திருவுளம் மகிழத்தக்க தலமாகும். நீ அங்கே சென்று உனது முன்னோர்களுக்குத் தருப்பணஞ் செய்வாயானால் அதனை அவர்கள் நேரேவந்து ஏற்று முத்தி அடைவார்கள்" என்றார்.

*"நினைவரிய புகழ் நிருபனிகழமுதகான மணிமகதிவீணை*
*முனிவனுரை செவிமடுத்து முழுதுணர் **மூவாயிர மாமுனிவரோடுந்***
*தனது பிதிர்கடன் கழித்துத் தங்குபல தானதருமங்கள் செய்வான்*
*புனித மிகுந்திலங்கிய **பொற்புரிசை சூழ் பூவணத்திற்** பொருந்துகின்றான்". (பாடல் 1230)*

இக்கதையை ஓதுவோரும் கேட்போரும் நல்ல மக்கட் செல்வத்தைப் பெற்று, அம் மக்களால் மிகுந்த புகழுடன் வாழ்வர். பின்னர் சிவகதி சேர்வர். இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எண்பதாம் அத்தியாயத்திலே கூறப்படும்.

## 2.7.16. சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்

இச்சருக்கத்தில் மொத்தம் 40 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் சுச்சோதி அரசன் திருப்பூவணத்தில் தனது முன்னோர்கள் பொருட்டுச் செய்த தர்ப்பணங்களும், அதனைப் பெற்றுக்கொண்டு அவனது முன்னோர்கள் ஆசி வழங்கியதும், இதனால் இறைவன் திருவுள்ளம் மகிழ்ந்து இதில் தொடர்புடைய அனைவருக்கும் முத்தியருளிய செய்தியும் கூறப்படுகின்றன. மேலும் பஞ்சாமிர்தம் திருமஞ்சனம் செய்தல், விளக்கேற்றுதல், மாலை சாற்றுதல், ஆலயம் உண்டாக்குதல், திருவிழா நடத்துதல், திருக்கோயிலுக்கு வருதல், மறையவர்க்குப் பொருள் ஈதல், மற்றும் வேண்டிய உதவிகள் செய்தல் ஆகியவற்றினால் ஏற்படும் பலன்கள் விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

நாரதமுனிவர் அருளியபடித் திருப்பூவணஞ் சேர்ந்த சுச்சோதிராசன், மணிகன்னிகைத் தீர்த்தமாடிச் சிவலிங்கப் பெருமானை வழிபட்டு வரும் நாளிலே, ஒருநாள்,

*"வந்திடு மளவின் வானவர்பெருமான் மாபெருங் கோபுரவாயின்*
*முந்தை நான்மறையு முழுதொருங் குணர்ந்து மூவுலகேத்திடு நெறிசேர்*
*சுந்தரநீறு துதைந்த மெய்யழகுந் தூய வற்கலையுடை யழகுந்*
*தந்த காலவனைக் கண்டவன் றாளிற்றட மணிமுடிபடத் தாழ்ந்தான்". (பாடல் 1236)*

காலவ முனிவரது ஆசிபெற்று, வைகைநதி முதலிய தீர்த்தங்களிலே அமாவாசை தினத்திலே தீர்த்தமாடித் தன்னோடும் வந்த மூவாயிர முனிவருக்கும் அறுசுவைக் கறியமுதுடன் திருவமுது செய்வித்துத் திருப்பூவணேசருக்குப் பூசை நடாத்தினான். பின்னர்,

*"பாலின் வெண்டரளந்தனைத் திரைசுருட்டிப் பந்தெறிந்தே விளையாடுஞ்*
*சீலமார் **வைகைத்**திகழ் புனலிடத்துஞ் சேர்ந்த தெள்ளமுத தீர்த்தத்துஞ்*
*சாலநீள் வானறோய் **சந்திரதடத்துஞ்** சங்கரன் கோயிலினன்பாற்*
*கோலவாளி யிரண்டிட்ட தோரெல்லை கொண்ட **மார்க்கண்ட தீர்த்தத்தும்** "* (பாடல் 1239)

மற்றும் மணிகன்னிகைத் தீர்த்தத்தும் தீர்த்தமாடிச் சங்கற்பம் பண்ணி முன்னோர்களை மனத்திலே வேண்டி, "யான் என்னுடைய தாய்தந்தையருக்கப் பெரிதும் விருப்பம் உடைய மகனானால், வேதம் முதலிய கலைகளை உள்ளபடி ஓதியுணர்ந்தவனானால், தவங்கள் செய்தவனானால், நாரதமுனிவர் அருளிய மொழி வழியே ஒழுகுகின்றவனானால், சிவார்ச்சனை அன்புடன் செய்தவனானால், சிவதீர்த்தங்களிலே

சிரத்தையோடு நீராடுபவனானால், தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று அவரது வார்த்தையிற் பிறழாதவனானால், என்னுடைய தாய் தந்தை, பாட்டன் பாட்டி, முப்பாட்டன் பூட்டி அனைவரும் எனக்கு எதிரிலே தோன்றி நான் கொடுக்கும் எள்ளையும் பிண்டத்தையும் ஏற்றருள வேண்டும். ஏற்று அருளாவிடின், எனது உயிரை விட்டு விடுவேன்" என்று அனைவர் செவியிலும் புகும்படி சொல்லி, எள்ளும் பிண்டமுங் கொடுத்தான். அப்போது, மற்றவர்களுக்குத் தோன்றாமல் அவ்வரசனுக்கு மாத்திரம் அவனுடைய முன்னோர்கள்

*"ஈந்திடு மவ்வேலை தனிலிரு நிலவேந்தன் பிதிர்களின் புற்றேவான்*
*றோய்ந்துயர் பொன்னுலக முறுஞ் சுரர்வடிவங் கொண்டவன் முன்றோன்றியே னோர்*
*தாந் தெரியாவகை யடைந்து தக்க கரபாத்திரத்திற்றந் தயாவு*
*மாந்தரங்கமுடன்றேவர முதருந்துமாபோல வருந்தி.. ... .." (பாடல் 1247)*

பிண்டத்தை உண்டு ஆசீர்வதித்து அரசனை மகிழ்வித்துச் சிவபிரான் திருவடி நிழலிற் சேர்ந்தார்கள். இக்காரணத்தாலே புட்பவனமானது 'பிதிர்முத்திபுரம்' என்னும் பெயர் பெற்றது.

*"வாவிதிகழ் பூவணத்து மாணிக்கம் மாமலைக்கு*
*மேவு செம்பொன் கொடிக்கும் வேணவாவி னீந்து*
*பூவலையந்தான் போற்றும் போன்னனையா னல்லருளாற்*
*றேவவன் மனருள் சேய்சீவன் முத்தனானான்". (பாடல் 1251)*

மூவாயிரம் முனிவர்களும் நீத்தார்கள் பொருட்டுத் தானஞ் செய்தமையால் அம்முனிவர்களுடைய முன்னோர்களும், சிவபிரான் திருவருளினாலே நற்கதி பெற்றனர். புட்பவனேசர் திருக்கோயிலுக்கு நிருதிதிக்கிலே சுச்சோதிராஜன் தன்னுடைய தந்தை தேவவன்மாவின் பெயராலே ஒரு சிவலிங்கப் பிரதிட்டை செய்வித்தான். பின்பு அவ்வரசன் மூவாயிரம் முனிவர்களோடு போகவதி நகரம் சேர்ந்தான். திருப்பூவணத் தலத்திலே முன்னோர்களுக்கு எள் தர்ப்பணஞ் செய்வோர் அளவில்லாத பயன்பெறுவர்.

### 2.7.16.1. வழிபாடும் பயனும்

பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம் இவற்றால் திருப்பூவணநாதருக்குத் திருமஞ்சனம் செய்வித்தவர் கரியகண்டத்தை உடைய சிவபெருமானின் திருவடி நிழலில் வாழ்வர். நடராசர் சந்நிதியிலே விளக்கேற்றுபவர் சிவபுரத்தினிற் கோடி நன்குலத்துடன் கூடி வாழ்வர். மாலைகள் சாற்றுவோர், கயிலையில் வாழ்வர். ஆலயத்தை

உண்டாக்குவோருக்கு நான்கு மடங்கு புண்ணியம் கிடைக்கும். தேர்த்திருவிழா நடத்துவோர் சிவபிரானுடன் சிவபுரியில் சேர்வர். திருப்பூவணநாதரை வழிபட்டோர் புனித மேனியினராய் கயிலை மலைக்கு அருகில் வாழ்வர். சிறிதளவேனும் மறையவர்களுக்குப் பொருள் ஈந்தால் அது செம்பொன்மலைக்குச் சமமாகும்.

*"சீருலாவு பிதிர்க ளுறுங்கதிசேரு மாகதை செப்புறுகிற்பவ*
*ரேருலாவு பொருட் பகசர்கின்ற வரீதுகாதினிறைத் திடுமன்னோ*
*மூர்கள் யாவுமொடுக் கிவிரைந்துவிணூ டுலாவிடு முப்புரம் வெந்திட*
*மூரன்முன்னம் விளைத்திடு மெம்பிரான் மோன ஞானநன்முத்தி பொருந்துவார்".*

(பாடல் 1271)

## 2.7.17. தீர்த்தச்சருக்கம்

இச் சருக்கத்திலே மொத்தம் 18 பாடல்கள் உள்ளன. இவற்றில் திருப்பூவணத்தில் உள்ள தீர்த்தங்களின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன. எந்த நாளில் என்ன நேரத்தில் தீர்த்தமாடினால் என்ன பலன் கிட்டும் என்று விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளது.

*"மறைநான்கு மனங்கிடந் தவழு விலருட்சவுனக வன்னக் கலாபப்*
*பொறி மயினின்றன வரத நடனமிடும் பொழிறிகழும் பூவணத்தி*
*னறைதரு தீர்த்தங் கடமிலரும் பவ நீங்கிட வாடு மான்மியத்தின்*
*முறைமை தனை மூவாறுபுராண முனியுரைப்ப னெனமொழிவ தானான்".* (பாடல் 1272)

கார்த்திகை மாதப்பிறப்பு(சங்கிரம புண்ணிய) காலத்திலும், ஆதிவாரத்திலும், சூரியோதயத்திற்கு முன்னே, மணிகுண்டதீர்த்தத்திலே, சூரியமந்திரம் உச்சரித்து மூழ்குவோர், அவர்கள் வேண்டியதை யடைந்து முடிவிலே சிவலோகஞ் சேர்வர். அம்மணிகுண்டத்திலே மூழ்கி அந்தணர்களுக்கு உடலுழைப்பைத் தானஞ் செய்வோர் குட்டம் முதலிய நோய்கள் நீங்கி, முடிவிலே ஆதித்தியவுலகம் அடைவர். அத் தீர்த்தத்திலே, மார்கழி மாதம் செவ்வாய்க் கிழமை, மனைவியுடன் மூழ்குவோர் மக்கட் பேறடைவர். திருவைந்தெழுத்தை உச்சரித்து அசுவதி நட்சத்திரத்தில் மூழ்குவோர் இறுதியிலே சிவலோகம் அடைவர். முழுமதி நாளிலே, பிரமதாண்ட மூர்த்தியைப் (திருப்பூவண நடராசரைப்) பூசிப்போர் மகேசருலகத்திலே ஒருகற்பம்வரையிலே தங்கிப் பின்பு சிவலோகஞ் சேர்வர். மகா(ஆவணி) மாதத்திலே, சூரியோதய காலத்திலே, சூரியமந்திரம் உச்சரித்துச் சிவபிரான் திருமுன்னர் நாடகஞ் செய்வோர் இறுதியிலே

நற்கதிபெறுவர். சூரியோதயத்திற்கு முன் வைகைநதியிலே மூழ்கி, சிவநிசியிலே நித்திரையின்றி நான்குயாமமுஞ் சிவபூசை செய்து, தானங்கள் செய்வோர் இறுதியிலே சிவலோகஞ் சேர்ந்து வாழ்வார். மணிகன்னிகைத் தீர்த்தத்திலே இடப மாதத்தில் விசாக நட்சத்திரத்திலும், தட்சணாயனத்திற் கிரகணகாலத்திலும் தீர்த்தமாடுவோர் பலதானஞ் செய்தபயனைப் பெறுவர். சிவசந்நிதியில் இரண்டம்பு செல்லுந் தூரத்தில் உள்ள வசிட்ட தீர்த்தத்தில் மூழ்குவோர் இறுதியிலே பிரமபதம் பெறுவர். சூரியோதயத்திலே இந்திர தீர்த்தத்திலே, பங்குனிமாதம் உத்தரத்திலே, மூழ்குவோர் யாகபலத்தை அடைவார். பன்னிரண்டு தினமூழ்குவோர் 'சாகயாக' [172] பலனைப் பெறுவர். ஒருமாதம் மூழ்குவோர் அசுவமேத பலனைப் பெறுவர். அத்தீர்த்தத்தைப் பருகுவோர் அக்னிவேள்விப் பலனை அடைவர்.

*"புகலரிய கேதாரமலை காசி மாகாளம் புட்கரஞ்சீர்*
*திகழ்கமலாலயந் தில்லைவனந் தீதில்வேதவனந் திருவெண்காடு*
*மகிழ்தரு தென்மதுரை தனின்மருவுகதியைப் பெறுவான் வைகுவோர் சேர்*
*மிகுபலமானவை யனைத்து மேவுவர் பூவணநகரின் மேவுவோரே".* (பாடல் 1287)

கேதாரமலை, காசி, மாகாளம், புட்கரம், கமலாலயம், தில்லை, வேதவனம், திருவெண்காடு, மதுரை ஆகிய அனைத்துத் தலங்களிலும் பெறும் பலனைவிட மிகுதியான பலனைத் திருப்பூவணம் சேர்ந்தவர்கள் நிச்சயம் பெறுவர்.

இந்தத்தீர்த்தச் சருக்கத்தை ஓதினோரும் கேட்டோரும் பூலோகத்தில் அரசராய் வாழ்ந்து முடிவில் நற்கதி பெறுவர்.

### 2.7.18. நளன் கலிமோசனச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 83ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற் றுள்ளது. இச்சருக்கத்தில் மொத்தம் 40 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் நளமகாராசன் கண்ட கனவு, அதன்பின்னர் அவன் அடைந்த துன்பங்கள், அரசவாழ்வை விடுத்து தேரோட்டியானது, தமயந்தியை மணந்தது, மீண்டும் அரசனானது ஆகிய கதைகள் பாடப் பெற்றுள்ளன. அவன் கலியின் கொடுமையைத் தீர்க்கும் பொருட்டு ஒவ்வொரு தலங்களையும் சென்று வணங்கினான். திருப்பூவணம்

வந்து வழிபட்டபோது மிகவும் மனநிம்மதி உண்டானது எனத் திருப்பூவணத்தின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

*"முழங்கு திரைக்கடலுலக முழுதுமொரு மதிக்கவி கைமுறையிற் காத்து*
*வழங்கு கலிவலி தொலைத்து மருவலர் தம்மாருயிரை வாங்கி மாந்திக்*
*கொழுங் கனற் செங்குருதி தனைக்குடித்து மிகக்குமட்டி யெதிர் கொப்பளிக்குந்*
*தழங்கிலை வேனெடுந் தடக்கை தாங்கு **நளனென்று**ரைக் குமோங்கு பேரான்".*

(பாடல் 1294)

நளச்சக்கரவர்த்தி வேட்டைக் கோலங்கொண்டு காட்டையடைந்து கொடிய மிருகங்களைக் கொன்று, வேடரோடும் பசியால் வருந்திச் சூரியன் உச்சியில்வரும் போது, தடாகத்தை ஆராய்ந்து கண்டு, அதிலே மூழ்கி நியமங்கள் நிறைவேற்றி, பொதிசோறுண்டு மரநிழலிலே ஒரு நாழிகை நித்திரை செய்தான். செய்யும்பொழுது, தனக்குத் துன்பம் வந்ததாகவும் மரத்தினின்று கீழே வீழ்ந்ததாகவும், பாம்பு தீண்ட அதனாற் உடல் கறுத்ததாகவுங் கனவுகண்டு விழித்தான். விழித்தவுடன் வந்த அமைச்சர் புரோகிதர் முகமாக, அத்தீய கனவிற்குப் பிராயத்சித்தத்தை உணர்ந்தும் தீயூழினாற் பிராயச்சித்தஞ் செய்வதில் நளராசனுக்கு ஊக்கம் உண்டாக வில்லை. பின்பு நளராசன் சூதாடி எல்லாவற்றையுந் தோற்றுத் துன்பமுற்று, மனைவி மக்களைவிட்டு வனம் புகுந்தான். புகுந்த பின்னர் நகுடனென்பான் பாம்பாகித் தீண்டினமையால், உடல்முழுவதும் ஒளிமழுங்கிக் கருமையுற்றனன். அப்பால் நளராசன் இருதுபன்ன மன்னனிடம் தேர்ப்பாகனாய் அமர்ந்து, அம்மன்னனோடு தமயந்தியின் சுயம்வரத்திற்குச் சென்று அவளை மனைவியாக அடைந்தான். பின்னர் சூதாடி வென்று அரசாண்டு மனைவி மைந்தருடன் நால்வகைச் சேனைசூழத் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டான். புறப்பட்டு,

*"கேதாரம விமுததங்களித்து கயை பிரயாகை கிளர்வானோங்கும்*
*போதார்ந்த வடகானம் பொங்கியெழுங் காளிந்தி புகலவந்தி*
*காதார்ந்த குழைய னரித்துவார மிகு மாளவமாக தங்கரகோல*
*மாதாரமாத்தி நகர் பஞ்சாப் சரத்தோடாரண நற்கானம் " (பாடம் 1314)*

முதலாகிய தலங்களை அடைந்து தீர்தங்களாடிச் சிவலிங்க மூர்த்திகளைத் தரிசித்துக் கொண்டு, செந்தமிழ்ப் பாண்டிநாடு சேர்ந்து, மதுரையம்பதியுற்றுத் தீர்த்தங்களாடி அருள்மிகு மீனாட்சி சுந்தரேசரரைத் தரிசித்து,

*"மேவுமந்த மிகுந் திரையாயுக*
*மோவில் பல்புகழோங்கு நளன்றனக்*
*கியாவு நல்கியிருங் **கலிதீர்த்தருள்***

***பூவணேசன்*** *பொற்கோயில் புகுந்தனன்". (பாடல் 1325)*

திருப்பூவணஞ் சேர்ந்து சுவாமியையும் அம்மையையுந் தரிசனஞ் செய்து, அப்பதியின் மகிமையும் அப்பதிக்குத் தான் வந்தபின்னர்த் தனக்குண்டாகிய நிர்மலத் தன்மையும் உணர்ந்து அங்கேவதித்து, கலிவருத்துதற்கு ஏதுவாகிய பாவத்தை விடுவிக்கத் தீர்த்தமாடித், தானங்கள் கொடுத்து, அக்கினியை உத்தியாபனஞ் செய்து, புட்பவனேசருக்கு மகோற்சவம் நடாத்தத் தொடங்கினான்.

*"செங்க னற்றனைச் செய் துத்தியாபவனம்*
*பொங்கு பூவணத் தெம்புனி தன்றனக்*
*கங்கண் மாநில மெங்கணு மாற்றவே*
*மங்கலோற்சவ மன்னனுண் டாக்கினான்". (பாடல் 1327)*

## 2.7.19. திருவிழாச் சருக்கம்

இக்காதை பிரமகைவர்த்தபுராணத்தில் 84ஆம் அத்தியாயத்தில் கூறப்பெற் றுள்ளது. இச்சருக்கத்தில் மொத்தம் 19 பாடல்கள் உள்ளன. திருப்பூவணநாதருக்கு நடைபெறும் திருவிழாக்கள் இச்சருக்கத்தில் விவரித்துக் கூறப்பெற்றுள்ளன.

*"வேதாகமத்தின் விதியோது கீர்த்தி வீசும் வைகாசி ரவியிற்*
***பாதாளவீசன்*** *மகிழ்வோங்கு பூர்வ பக்கங் கொள் பக்கமதனி*
*னோதாளியத் தினோரேழ் தினத்தினுறு வேதபாரகர்த மாற்*
*கோதேது மில்லதொரு கோவிலங்கு கொடியேற்று வித்தனனரோ". (பாடல் 1331)*

நளச்சக்கரவர்த்தி, திருப்பூவணேசருக்குத் திருவிழா நடாத்தத் தொடங்கி, வளர்பிறையிலே, புனர்பூச நட்சத்திரத்திலே, காளைவாகனக் கொடியேற்றித் தேர்த்திருவிழா நடாத்தித் தீர்த்த விழாவுஞ் செய்வித்தனன். பின்பு சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து விடைபெற்றுக் கொண்டு தனது நகரத்தை அடைந்து வாழ்ந்திருந்தனன். இத்திருவிழாவைத் தரிசித்தோர் இகத்திலே செல்வத்தோடு வாழ்ந்து, மறுமையிலே பலபோகங்களைத் துய்ப்பர்.

*"அவிழ்ந்திடு மபுத்திபூருவ மதாய்ச் செயும்*
*பவங்களிப் பூவணப் பதியைக் கண்ணுறிற்*
*றவிர்ந்திடும் புத்தி பூருவத்திற் சார்பவ*
*முவந்தொரு மதியுறி லொழியு மாலரோ". (1340)*

அந்தணரை நிந்தித்த பாவமுதலியன, அப்பதியில் ஆறுமாத காலம் வசித்தால் ஒழியும். சித்திரை மாதத்து முழுநிலவு நாளிலே மணிகன்னிகைத் தீர்த்தத்திலே, மூழ்கித் திருப்பூவணேசருக்குப்

*"பூரணைதனின் மணி பொருந்து மோடையி*
*லாரருளுடன் படிந்தண்ணல் சென்னிமேல்*
*வாரி சந்தயங்கு பூமாலை சாத்தினர்*
*நேர்கு வரத்தின நினைந்த யாவுமே". (பாடல் 1342)*

முழுமதி நாளில் விசாக நட்சத்திரத்திலே, புட்பவனேசருக்குப் பூமாலை சாத்தினோர் நினைத்தவை யாவும் கிடைக்கும். பட்டுப் பரிவட்டங் கொடுத்தவர், பாவங்கள் நீங்கிச் சந்ததியுடன் சக்கரவர்த்தியாய் வாழ்ந்து, சிவலோகஞ் சேர்வர். உத்தராயண தட்சினாயண காலம், கிரகணகாலம் முதலிய புண்ணிய காலங்களிலே மணிகன்னிகை முதலிய தீர்த்தங்களாடிச் நல்லோருக்குத் தானஞ் செய்வோர், பாவங்கள் ஒழிந்து எட்டுப் போகங்களை அனுபவிப்பர்.

*"சந்திவந்தனை தந்தமாதவஞ் சங்கரன்புகழ் தங்குமாலயஞ்*
*சுந்தரந்திகழ் கின்ற பூசனைதுன்று மன்பர் தொடங்கு மாமட*
*மிந்தவண் கதை பண்பினோது நான்புடன் செவிகொண்டு தேர்குநர்*
*சிந்தை வெந்துயரங்கடீர்குவர் செம்பொனம்பதி சென்று சேர்வரே".* (பாடல் 1349)

இங்ஙனம் பிரமகைவர்த்த புராணத்திலே எண்பத்து நான்காம் அத்தியாயத்திலே கூறப்படும்.

### 2.7.20. சிதம்பர வுபதேசச் சருக்கம்

இச்சருக்கத்திலே மொத்தம் 88 பாடல்கள் உள்ளன. மாத்தியந்தின முனிவரும் மற்றும் தியானகாட்ட முனிவரும் திருப்பூவணத்திலே அருந்தவம் இருந்து சிவனருள் பெற்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

*"தனை நிகரரிய தவமொரு வடிவாஞ் சதுர்மறைச் சவுனகவயன்மா*
*னினைவருஞ் சகள நிட்கள வடிவா நிமலனானந்த தாண்டவத்தை*
*முனிதரு திமிரமுக்குறும் பெறிந்த முனிவரர்க்கருளிய முறைமை*
*யினிது கேளெனக் கடகமல் நீர்பொழிய வெடுத் தருட்சூதனாங் கிசைப்பான்".* (பாடல் 1350)

வசிட்டர் முதலாகிய முனிவர்கள், நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்து தங்குதற்கு இடமானதால், புட்பவனம், சதுர்வேதபுரமெனப் பெயர்பெறும். அப்பதியிலே, வியாசமுனிவர் மாட்டு உபதேசம் பெற்ற மாத்தியந்தின முனிவரும் தியானகாட்ட

முனிவரும் சிவபிரானை நோக்கித் தேவவருடம் நூறு வரையும் அருந்தவம் புரிந்தனர் (படம் - 6).

இம்முனிவர்களது தவத்தின் பொருட்டுச் சிவபிரான் காளை வாகனத்தில் தோன்றிய பொழுது, அம்முனிவர்கள் தரிசித்துத் துதித்தனர். அத்துதிக்கு மகிழ்ந்தருளிய சிவபிரான், முனிவர்களே "நீங்கள் வேண்டியவரம் யாது?" எனவினவிய போது, அம்முனிவர்கள், சுவாமீ, "இத்திருப்பூவணத்திலே பஞ்சாட்சரத்தை அடியேங்களுக்கு உபதேசித்து ஆனந்த தாண்டவஞ் செய்தருள வேண்டும்" என்று வேண்டிய வழி, சிவபிரான், "முனிவிர்காள், கான்மீர நாட்டிலே உள்ள முனிவர்கள் பொருட்டுத் தில்லை வனத்திலே திருநடனஞ் செய்வோம், அதை நீங்கள் தரிசிக்கலாம். இத்தலத்திலே பிரணவமாகிய திருவைந்தெழுத்தை உங்களுக்கு உபதேசித்து, உங்கள் இருதயகமலமாகிய திருவம்பலத்திலே திருநடனஞ் செய்வோம்" என்று பிரணவத்தை உபதேசித்தருளினார். அதனை முனிவர்கள் சிந்தித்து, சிவபிரான் திருநடனத்தையும் இருதயகமலத்திலே தரிசித்துப் பின்பு தில்லைவனஞ் சேர்ந்து சிவபிரானுடைய ஆனந்த தாண்டவத்தைத் தரிசிக்க விரும்பியிருந்தார்.

*"இத்தல மதனுக்கின்னு மோர் நாமமியம்பின் மாபாதக நாச*
*வுத்தம நாமமுற்றிடு மதனாலுமை திருமாலயன் வெய்யோன்*
*வித்தக முனிமார்க்கண்ட னெண்டிசையோர் வேந்தரெண் குருகுலவேந்தர்*
*புத்தியும் பொருவின் முத்தியும் பொருந்தப் பூசனை புரிந்தனர்மாதோ* ". (பாடல் 1367)

உமாதேவி, திருமால், பிரமன், சூரியன் முதலியோரும் மற்றும் முனிவர் இராக்கதர் முதலியோரும் புத்தி முத்தியின் பொருட்டுச் சிவபிரானை அர்ச்சித்துப் பாவங்களைப் போக்கினமையால், இத்திருப்பூவணம் 'மகா பாபமோசன புரம்' என்று பெயர் பெறும்.

"*அங்கணனுடன் வாதாடி மா**காளியாடிய** தோட மதகலச்*
*சங்கரன்றனக் குத்தர திசையிரண்டுசார்தரு கூவிளி தூரத்*
*தெங்கணும்புகழ் **காளீச்சுரலிங்க** மினிதமைத் தருச்சனை செய்து*
*வெங்கொடும் பவத்தை வேரறுத்திட்ட மேன்மை மூவுலகினும் விளங்கும்*". (பாடல் 1369)

சிவபிரானோடு காளிதேவி சபதங் கூறி ஆடிய தோசநிவர்த்தியின் பொருட்டுத் திருப்பூவணேசர் திருக்கோயிலுக்கு வடதிசையிலே தன்பெயராலே காளீசுரலிங்கம் என்ற பெயரில் சிவலிங்கம் ஒன்றைப் பிரதிட்டை செய்து பூசித்தாள்.

பன்னிரண்டு வருடம் மழையில்லாத காலத்திலே, சலந்தரன் என்னுந் தவளை திருப்பூவணத்திலே, அலரியடியிற் தங்கினமையால், அவ்வலரி பூத்த மலர் சிவபிரான்

திருமுடியில் ஏறினதால் சிவபிரான் அத்தவளைக்குச் சக்கரவர்த்தியாய் இருக்கும் வரமருளினார். பின்பு பூமியை ஆண்ட தேவர்களை வருத்தினமைபற்றிச் சிவபிரான் திருமாலுக்குப் புட்பவனத்திலே சக்கரப்படை அருளிச் சலந்தரனைக் கொல்வித்து, முன்பு அலரிமலர் சூடுதற்கு ஏதுவான புண்ணியத்தால், சலந்தரனுக்குப் புட்பவனத்தில் முத்தி அருளினார்.

தாழைமலர், பிரமன் பொருட்டு பொய்ச்சான்று கூறியதாலாகிய பாவத்தைத் திருப்பூவணேசரைப் பூசித்துப்போக்கியது. திருப்பூவணேசருக்குப் பசுப்பால் அபிடேகிப்பவர் புத்திமுத்திகள் பெறுவர்.

"*கூடிய பேரன்புள்ளங் கொண்ட* ***மார்க்கண்டனென்போன்***
*நீடுமச் சிவலிங்கத் தினிகழ்த்து மான்பான் முன்னாட்டித்*
*தேடருமர்த்த நாரீசன் றனைத் தெரிசித்தங்க*
*ணாடருஞ் சீவன்முத்தி நண்ணினனறிக மாதோ* " (பாடல் 1429)

மார்க்கண்டமுனிவர் புட்பவனேசருக்குப் பசுப்பால் அபிடேகித்துச் சீவன்முத்தி யுற்றனர்.

"*புவனமெங்கணுஞ் சீர்போற்றும் பூவணமான் மியத்தை*
*நவிலுறச் செவிக்கு நாளுநல்விருந்தளிக்கு நர்க்குச்*
*சிவபிரன ருளினாலே தேடுபேருவகைகூடுஞ்*
*சவுநகமுநிவ வீது**சத்தியஞ் சத்தியங்***காண்*" (பாடல் 1435)

திருப்பூவணப்புராணக் கதைகளை பேசுவோரும் கேட்போரும் சிவபெருமான் திருவருளினால் அவர்களது வாழ்வில் மகிழ்ச்சி கூடிவரும் என்று சூதமுனிவர் இரண்டு முறை சத்தியம் செய்து சவுனக முநிவரிடம் கூறுகிறார்.

"*ஒப்பிலாத வுருத்திர சங்கிதையுற்ற பூவணநற்கதை யோதுவோர்*
*செப்புமாறு செவிக்கொடு மன்னியசிட்டராய சிறப்புறு தன்மையோர்*
*விப்பிராதிப வித்தக மெய்ம்மொழி மிக்க வேதவிதத்துயர் மாதவீர்*
*தப்பிலாத தவத்திரு மன்னவர் தயாபரன் கயிலைக்கிரி வாழ்வரே* " (பாடல் 1436)

"***வாழ்கமன்னவன்செங்கோன்மழைமுகில்***
***வாழ்கநான்மறைவாணவர்கணானிலம்***
***வாழ்கவைதிகசைவமலர்த்திரு***
***வாழ்க வஞ்செழுத்துண்மைநன்மந்திரம்*** " *(பாடல் 1437)*

இப் பாடலுடன் திருப்பூவணப் புராணம் முடிவடைந்துள்ளது.

## 2.8. புராண அடிப்படையிலான நம்பிக்கைகள்

திருப்பூவணப் புராணத்தில் உள்ள இருபது சருங்கங்களில் கூறப்பட்டுள்ள வரலாற்றுக் கதைகளின் அடிப்படையில் கீழ்க்கண்ட நம்பிக்கைகள் பண்டு தொட்டு இன்றுவரை மக்களிடையே உள்ளன.

1. திருப்பூவணநாதரை வணங்கினால் அரசபதவி அடையலாம்
2. திருப்பூவணத்தில் நீத்தார்களுக்குப் பிண்டம் வழங்கினால் அவர்கள் அதனை நேரில் வந்து பெற்று மகிழ்வர்.
3. மணிகன்னிகையில் அமிழ்தம் கலந்துள்ளது. அதனை உண்டால் நோய்கள் நீங்கப்பெற்று நீண்ட ஆயுள் உண்டாகும்.
4. அதில் நீராடினால் அனைத்து தீவினைகளும் நீங்கப் பெறும்
5. அதில் வீழ்ந்து இறந்தால் சிவனருளால் முத்தி கிடைக்கும்
6. அத்தீர்த்தத்திலே அஸ்திக் கலயத்தில் உள்ள எலும்பு பூவாக மாறும்
7. அதில் நீராடி மின்னம்மையை வழிபட்டால் திருமணம் நடைபெற்று நல்ல கணவன் அமையப் பெற்று தீர்க்க சுமங்கலியாய் சுகம் அனுபவித்து, நன்மக்களைப் பெற்று வளமுடன் வாழ்வர்.
8. பெண்களைக் காமக்கண்ணோடு பார்த்தல் முதலான காமத்தினால் உண்டான பாவங்கள் நீங்கப்பெறும்
9. பிறரை அவமதித்துக் கேலிசெய்த பாவம் நீங்கப் பெறும். மற்றும் அனைத்துப் பாவங்களும் நீங்கப்பெறும். கலியின் கொடுமை நீங்கப் பெறும்
10. குருவருள் கிடைக்கும்.

இந்த நம்பிக்கையின் அடிப்படையில் தமிழகத்தின் மூவேந்தர்களும், சுச்சோதி நளன் முதலான வடநாட்டு வேந்தர்களும் காலங்காலமாகத் திருப்பூவணம் வந்து வழிபட்டுள்ளனர். மக்கள் தங்களது முன்னோர்களை முத்தியடைவிக்கவும், தங்களது தீவினைகள் நீங்கப்பெற்று முத்தியடையவும் இன்றளவும் வந்து வழிபட்டு வருகின்றர்.

'மணிகன்னிகையில் நீராடி வழிபட்டால் அனைத்துத் தீவினைகளும் நீங்கும்' என்ற நம்பிக்கையால் ஏராளமானோர் தங்களது அந்திமக்காலத்தில் இத்தீர்த்தத்தில் வீழ்ந்து உயிர்விட்டுள்ளனர்.

தருமஞ்ஞன் கொண்டுவந்த அஸ்திக் கலயத்திலிருந்த 'எலும்பு மணிகன்னிகா தீர்த்தத்திலே பூவாக மாறியது'. சுச்சோதி அரசனுடைய பிதிர்கள் நேரில் தோன்றி பிண்டம் பெற்று அவனை ஆசிர்வதித்துள்ளனர். எனவே தங்களது பிதிர்களும் தாங்கள் அளிக்கும் பிண்டத்தைப் பெற்று மகிழ்ந்து தங்களை ஆசிர்வதிப்பர் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இன்றும் அதிகமான மக்கள் இத்தலத்திலே திதி, தர்ப்பணம் முதலானவற்றைச் செய்து வருகின்றனர்.

## 2.8.1. புராண அடிப்படையிலான வழிபாடுகள்

அம்மன் தவம் இயற்றிய திருத்தலம் என்ற புராணத்தில் கூறப்பட்டுள்ள கருத்தின் அடிப்படையில் 'அம்மன் தபசு விழா' சிறப்பாக நடைபெற்று வந்துள்ளது. அதிலும் குறிப்பாக அம்மன் ஆடிமாதம் முழுமதிநாளில் வைகை ஆற்றின் வடகரையிலிருந் தபசு மேற்கொள்ளும் **'ஆடித்தபசு'**த் திருவிழா நடைபெற்று வந்துள்ளது. இக்காலத்தில் ஆடித்தபசு மண்டபம் சிதிலமடைந்ததால் இவ்விழா ஆடித்தபசு மண்டபத்தில் நடைபெறாமல் திருக்கோயில் வளாகத்திலேயே நடைபெற்று வருகிறது. முன்னைச் சிறப்பு மாறாமல் இவ்விழாவை நடத்தும் வகையில் ஆடித்தபசு மண்டபம் ஆய்வாளரது முயற்சியால் புனர்நிர்மாணப் பணிகள் நடத்தி முடிக்கப் பெற்றுள்ளன. வரும் ஆடிமாதம் (2009ம் ஆண்டு) இவ்விழாவினைச் சிறப்புடன் நடத்திடுவதற்கா அனைத்து முயற்சிகளம் ஆய்வாளரால் மேற்கொண்டுள்ளார். இதன் விபரங்கள் இந்த ஆய்வேட்டின் பின்னிணைப்பில் உள்ளன.

புராணத்திலே யாகசாலைகள் பல உள்ளன என்றும் பல்வேறுவிதமான யாககங்கள் நடைபெற்றன என்றும், நளமகாராசன் அசுவமேத யாகத்தைத் திருப்பூவணத்திற் செய்தான் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும் வேள்விகள் பல நடைபெற்றன என்றும் கூறப்பட்டுள்ளது. இக்காலத்தில் இவ்வகை வழிபாடுகள் மிகவும் குறைந்து விட்டன. குறிப்பிட்ட பலனை வேண்டிச் செல்வந்தர்கள் சிலர் திருக்கோயில் வளாகத்திலேயே சிறிய அளவிலான யாககங்களைச் செய்கின்றனர்.

### 2.8.2. விழாக்கள்

பங்குனி உத்தரத்திலே திருவிழாகள் நடைபெற்றுள்ளன. தேர்த்திருவிழா நடைபெற்றுள்ளது. திருவிளக்கு பூசைகள் மற்றும் பல விழாக்கள் இன்றளவும் பண்டைச் சிறப்பு மாறாமல் நடைபெற்று வருகின்றன.

நளமாகாராசன் தீர்த்தவாரி விழா நடத்தியுள்ளான். இத்திருவிழா தற்போது நடைபெறவில்லை. இவ்விழா எதனால் எப்போது தடைபெற்று நின்றது என்ற செய்திகள் ஆய்வாளரால் அறியப்பெற வேண்டியுள்ளன.

## 2.9. நூலாசிரியர் வரலாறு

திருப்பூவணப் புராணத்தை இயற்றியவர் கந்தசாமிப்புலவர். இவரது ஊர், தாய், தந்தையர், இவரது காலம் ஆகியனவற்றைக் கண்டறிவது இப்பகுதியின் நோக்கமாகும்.

### 2.9.1. கந்தசாமிப் புலவரின் ஊர்

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற கணியன்பூங்குன்றனாரின் வாக்கிற்கு ஏற்ப எல்லா ஊரையும் தனதாகவும், மக்கள் அனைவரையும் தன்னுறவாகவும் கொண்டு புலவர்கள் வாழ்ந்துள்ளனர். இருப்பினும் கந்தசாமிப் புலவர் வாழ்ந்த ஊரை அறிந்து கொள்வது இப்பகுதியின் நோக்கமாகும்.

கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணம் பாடியது போன்றே, மதுரையில் வைகையின் வடகரையில் உள்ள திருவாப்பனூர்ப் புராணத்தையும் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார். அதனால், இவர் திருப்பூவணம் அல்லது மதுரையைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும்.

கந்தசாமிப்புலவர் எந்த ஊரைச் சேர்ந்தவர் என்பது பற்றிய தகவல் ஏதும் திருப்பூவணப் புராணப் பாடல்களில் கிடைக்கப்பெறவில்லை. இருப்பினும், திருவாப்பனூர்ப் புராணப் பாயிரப் பாடலில் இப்புலவரது ஊரும் பெயரும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

*"கனியினைப் பிழிந்து செந்தேன் கண்டென வாப்ப னூர்நம்*
*பனிமதி மிலைந்த நாதன் பன்னரும் புராணந் தன்னைப்*
*புனிதன்மெய்க் **கந்த சாமிக் கவிஞன்பூ வணத்தான்** பார்மேல்*
*இனிதெனப் புலவர் கூற வின்றமிழ்ப் புணர்த்தி னானே "*[173]

பல பழங்களை ஒன்றாகச் சேர்த்துப் பிழிந்து அதன் சாறுகளைத் தொகுத்தாற்போலத் திருவாப்பனூரில் வீற்றிருக்கும் குளிர்ந்த நிலவைச் சூடிய சிவபெருமானது சொல்லற்கரிய இப்புராணத்தைத் ***திருப்பூவணம் என்னும் தலத்தில் வசிக்கும் புனிதனாகிய கந்தசாமிப் புலவர்*** இவ்வுலகிலுள்ள அறிஞர்கள் இது தகுதியுடையது என்று கூறும்படியாக இனிய தமிழில் மொழி பெயர்த்தார், என்று பாடப்பெற்றுள்ளது.

இதனால் கந்தசாமிப் புலவர் திருப்பூவணத்தில் வசித்தவர் என்பது தெளிவாகிறது.

## 2.9.2. தாய் தந்தையர்

திருப்பூவணத்தில் பொன்னனையாளுக்கு[174] அடுத்துக் கந்தசாமிப் புலவரையே போற்றுகின்றனர். பொன்னனையாளுக்கும் கந்தசாமிப்புலவருக்கும் தாய்-மகன் உறவு என்பது செவிவழிச் செய்தி. இதனை உறுதி செய்யும் வகையில் திருப்பூவண நாதருலாவில் சிறப்புப் பாயிரப் பழைய பாடல் ஒன்று உள்ளது.

*"திருவால வாயரெலாம் வலசித்த ரிரதவா தஞ்செய்தற்கா*
*வருவாரை வணங்கவவர் மணிமுறுவர் சிறிதரும்பி மலர்க்கணோக்கக்*
*கருவாகிப் **பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோ் கந்த சாமி***
*பெருவாய்மைப் பூவையுலாப் பாடியதெம் போலியர்கள் பிழைக்கத்தானே "*[175]

மதுரை சிவபெருமான் இரசவாதம் செய்யச் சித்தர் வடிவில் திருப்பூவணம் வருகிறார். வந்தவருக்கு வேண்டிய ஆசனம் அளித்து சித்தரது திருவடிகளில் வீழ்ந்து பொன்னனையாள் வணங்குகிறாள். இதற்கு மகிழ்ந்த சிவபெருமான் அவளை அன்போடு நோக்குகிறார். இறைவனது அருட்பார்வையால் 'பொன்னனையாள் கருவுற்றுப் பெற்றெடுத்த **புத்திரனோ்** கந்தசாமிப் புலவர்' ஆவார் என்று இப்பாடலுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது.[176]

'புத்திரனோ்' என்பதைப் 'புத்திரனார்' எனப் பாடபேதம் கொண்டு, கந்தசாமிப் புலவர் பொன்னனையாள் பெற்றெடுத்த மகன் ஆவார் என்று கூறப்படுகிறது.

திருப்பூவணத்தில் உற்சவமூர்த்தியாக விளங்கும் 'அழகிய நாயகர்', பொன்னனையாளுக்கு மகன் போன்றவர் என்று கீழ்க்கண்ட அழகிய நாயகர் துதிப் (பழைய செய்யுள்) பாடல் கூறுகிறது.

*"தன்னனையார் தந்தையார் தமராரென் றறியாமற் றனித்தவுன்னைப்*
*பொன்னனையார் வயிற்கருவிப் புகுந்ததனான் முத்தமிட்டுப்* ***புதல்வன்போல***
*மின்னனையா ரிடம் பிரியா மணவாள னெனப்புரிந்த விதத்தாலன்றொ*
*என்னனையார் களுந்தரிசித் தேத்தினர் பூவணத் துறைந்தா யெளிதிற்றானே"*[177]

தன்னை யார் என்று அறியாதவன்! தனது தாய் தந்தை யார் என்று அறியாதவன்! தன்னுடன்பிறந்தோர் யார் என்று அறியாதவன்! ஆதியும் அந்தமும் இல்லாத அனாதியானவன் பரமேசுவரன். இவன் திருப்பூவணத்து உற்சவரை பொன்னினால் செய்து வார்த்து எடுப்பதற்காகப் பொன்னனையாள் மெழுகினால் செய்து வைத்திருந்த அச்சில் கருவாகப் புகுந்தான். இவன் அந்த வார்ப்பு அச்சிலிருந்து (கருவிலிருந்து) இவ்வுலகிற்கு வெளிப்பட்டவுடன், பொன்னனையாள் "அச்சோ அழகிய பிரானே" என்று குழந்தையை முத்தம் கொஞ்சுவது போல, அன்பினால் அள்ளி முத்தங் கொண்டாள். அச்சோ! "அழகிய பிரான்" என்று பெயரிட்டு அழைத்தாள். இதனால் 'அழகிய நாயகர்', பொன்னனையாளுக்குப் புதல்வன் போல் ஆனார். மின்னனையாளைப் பிரியாத மணவாளன், எங்களைப் போன்றோர் எளிதில் தரிசித்து ஏத்துவதற்கு ஏதுவாகவே திருப்பூவணத்தில் சிவபெருமான் தோன்றினான் போலும்! என்று இப்பாடல் கூறுகிறது.

பொன்னனையாள் உருவாக்கிய கருவில் தோன்றியதாலும், தோன்றியவுடன் பொன்னனையாள் அன்பினால் அள்ளி முத்தங் கொண்டதாலும், திருப்பூவண உற்சவ மூர்த்தியான அழகிய நாயகர் பொன்னனையாளுக்கு மகன் போன்றவர். என்பது இப்பாடலின் கருத்தாகிறது. எனவே 'பொன்னனையாள் புத்திரன்' என்பது 'அழகிய நாயகரையும்', 'பொன்னனையாள் புத்திரன்நேர்' என்பது கந்தசாமிப்புலவரையும் குறிக்கும். இப்பாடல் கருத்தின் அடிப்படையில கந்தசாமிப் புலவர் அழகிய நாயகருக்கு இணையாகப் போற்றப் பட்டுள்ளார். பொன்னனையாளின் வம்சாவழியினர் கோயிலில் இன்றும் பணியாற்றி வருகின்றனர். அவர்களில் யாருக்கும் கந்தசாமி என்ற பெயர் சூட்டப் பெறவில்லை.

### 2.9.3. கந்தசாமிப்புலவர் வாழ்ந்த காலம்

கந்தசாமிப் புலவர் குறிப்பிடும் பொன்னனையாள், அருணகிரி நாதர், முத்துவடுகநாகேந்தரன் ஆகியோர் வாழ்ந்த காலங்களின் அடிப்படையிலும் மற்றும் புராணப் பாடல்கள் அடிப்படையிலும் இவர் வாழ்ந்த காலத்தைக் கணிக்க இயலும். *"கந்தசாமிப் புலவர், 17ஆம் நூற்றாண்டு, திருப்பூவணம் என்னும் ஊரைச் சேர்ந்த இவர்* ***உருத்திரகணிகையின் மகனாகத்*** *தோன்றியவர்*[178]*. சிவகங்கையில் அரசராக இருந்த '****முத்துவடுகநாத துரை****'யவர்களின் காலத்தவர்"*[179] என்பர்.

இதனால் பொன்னனையாள் வாழ்ந்தகாலத்தையும், முத்துவடுகநாததுரை ஆட்சி புரிந்த காலத்தையும் அறிவதன் வழியாகக் கந்தசாமிப்புலவர் வாழ்ந்த காலத்தைக் கண்டறிய இயலும்.

#### 2.9.3.1. பொன்னனையாள் காலம்

பொன்னனையாள் பொருட்டுத் திருப்பூவணம் உற்சவமூர்த்தியைச் செய்திடத் தேவையான தங்கத்தை மதுரை சிவபெருமான் நேரில் வந்து இரசவாதம் செய்து தயாரித்துக் கொடுத்தார். இவ்வரலாறு 36ஆவது திருவிளையாடற் புராணமாகப் பாடப் பெற்றுள்ளது. எனவே பொன்னனையாள் திருவிளையாடற் புராணம் எழுதப்பெற்ற காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர் என்பது தெளிவு.

'திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்' என்னும் நூலே இன்று கிடைக்கும் பழமையான நூலாகும். இதன் ஆசிரியர் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பெரும்பற்றப்புலியூர் நம்பி ஆவார்.[180] இவர் இரசவாதம் செய்த படலத்தைப் பாடியுள்ளார். அதனால் பொன்னனையாள் வாழ்ந்த காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென்பது திண்ணம். எனவே கந்தசாமிப் புலவர் கி.பி. 13ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு வாழ்ந்தவர் என்பது பொருத்தமாகும்.

#### 2.9.3.2. அருணகிரிநாதர் காலம்

திருப்பூவணப் புராணத்தில், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் ஒன்றாம் திருமுறையில் அமைந்துள்ள தேவாரப் பாடல்கள், அடுத்து மூன்றாம் திருமுறையில் உள்ள பாடல்கள், திருநாவுக்கரசு நாயனார் பாடல்கள், சுந்தரமூர்த்தி நாயனார்

பாடல்கள், கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடல்கள் உள்ளன. அருணகிரிநாதரின் பாடல்கள் இடம் பெறவில்லை. இதனால் அருணகிரிநாதர் பாடுவதற்கு முன்பே கந்தசாமிப் புலவர் வாழ்ந்துள்ளார் எனக் கருதலாம்.

அருணகிரிநாதர் பற்றிய வரலாற்றுக் குறிப்பேதும் கிட்டவில்லை. அவர் பாடிய 'அதலசேடன்' எனத் தொடங்கும் திருப்புகழில் 'பிரபுடதேவ மாராயன்' என வரும் குறிப்பினால் இவர் விசயநகர அரசர்களுள் ஒருவனான பிரபுடதேவராசன் என்ற மன்னன் காலத்தவர் எனக் கருதலாம். இம்மன்னன் கி.பி. 1450ஆம் ஆண்டுகளில் அரசாண்டதாகக் கல்வெட்டு கொண்டு ஆராய்ந்துள்ளனர். இதனடிப்படையில், அருணகிரிநாதர் வாழ்ந்த காலம் கி.பி. 1450 எனக்கொள்ளலாம்.[181] எனவே கந்தசாமிப் புலவர் இதற்கும் முன்பு வாழ்ந்தவர் எனக் கருதலாம்.

திருப்பூவணப் புராணத்தில் கடவுள் வாழ்த்துப் பகுதியின் நிறைவாக உள்ள அடியார்கள் துதிப் பாடல்களில், மெய்கண்டதேவர் திருத்தொண்டர் இவர்களுக்குத் துதிப்பாடல்கள் உள்ளன. அருணகிரிநாதருக்குத் துதிப்பாடல் இல்லை. 'கந்தனை'த் துதித்துப் பாடிய அருணகிரிநாதரைக் கந்தசாமிப்புலவர் துதித்துப் பாடவில்லை.

அருணகிரிநாதர் துதிப் பாடல் கந்தசாமிப் புலவரால் பாடப்பெறவில்லை. மேலும் அருணகிரிநாதரின் மூன்று பாடல்களும் கி.பி.1897ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட திருப்பூவணப் புராணப் புத்தகத்தில் இடம்பெறவில்லை. வடக்குப்பட்டு, த.சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், அருணகிரிநாதர் பாடிய 99 தேவாரத்தலங்களை பட்டியலிட்டுள்ளார்[182]. அப்புத்தகத்தில் திருப்பூவணம் அருணகிரிநாதர் பாடல் பெற்ற தலமாகக் குறிப்பிடப்பெறவில்லை.[183]

## 2.9.3.3. முத்துவடுக நாகேந்திரன் காலம்

கந்தசாமிப் புலவர் திருப்பூவணநாதருலாவில்

*".... ..... .... - பேர்வுற்ற*
*நீட்சிப் பிரிவொழிய நேடி மணப்பதெனக்*
*காட்சித் திருவபிடே கங்கொண்டு - மாட்சி*
*அலங்கார மாக்கொளத ளாடை யிரண்டும்*
*விலங்காடை யென்ன விலக்கி - நலங்காணும்*
*மன்போசன்* ***முத்து வடுகநா கேந்த்ரனருள்***
*பொன்போலு மாடை புனைந்தருளித் - தன்போல்*

*திகழ்ந்திடுங்க ணன்றித் திருமுடியுந் திங்கள்*
*புகுஞ்செல்வங் கண்டு பொறான்போல் - மிகுங்கதிர்சூழ்*
*செம்பருதி தானுமொக்கச் சேர்ந்து சுடர்வதென "[184] ப் பாடியுள்ளார்.*

அதாவது, திருப்பூவணத்து உற்சவமூர்த்தியான 'அழகிய நாயகர்' உலாப் போந்த போது, யானையின் தோலையும், புலியின் தோலையும் விலங்கினது ஆடைகள் என விலக்கிவிட்டு மன்னன் 'முத்துவடுகநாகேந்த்ரன்' அளித்த பொன்போன்ற ஆடையை அணிந்தருளினார் என்று பாடியுள்ளார். 'நாகேந்த்ரன்' என்றால் 'அரசன்' என்று பொருள், எனவே 'முத்துவடுகன்' என்பது அரசனின் பெயர்.

இதனால் கந்தசாமிப்புலவர் திருப்பூவணநாதருலா எழுதிய காலத்தில் **'முத்துவடுகன்'** என்ற அரசன் திருப்பூவணத்தை ஆண்டுள்ளார் என்று பொருளாகிறது.

இப்பாடல் அடிகளுக்குப் பொருள் எழுதியுள்ள திருமதி (புலவர்) பி.சீதாலட்சுமி பரத்வாஜ் அவர்கள், *"இற்றைக்கு ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு காளிதாசன் முதலிய பண்டிதர்களை ஆதரித்துப் புகழால் உலகில் நிலைபெற்ற போசராசன் போன்று **சிவகங்கையை ஆண்ட 'முத்துவடுகநாத துரை'** [185] அளித்த பொன்போலும் பட்டாடை புனைந்து, மணிமகுட மமைத்து, மணிகண்டனென்னும் பெயர் விளங்க, மணிகண்டி என்னும் அணியைக் கழுத்தில் அணிந்து வீற்றிருந்தனர் அழகிய நாயகர்"* என்று குறிப்பிட்டுள்ளார்.[186] எனவே முத்து வடுகநாததுரை என்பவர் சிவகங்கைச் சீமையை ஆண்ட காலத்திலோ அல்லது அதற்குப் பின்னரோ கந்தசாமிப் புலவர் வாழ்ந்துள்ளார் என்பது உறுதியாகிறது.

**சிவகங்கை மன்னர்கள் வரலாறு -** திருப்பூவணம் சங்ககாலம் தொட்டு, பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையின் கிழக்கு எல்லையாகத் திகழ்ந்துள்ளது. இதனால் திருப்பூவணம் மதுரை மன்னர்களின் நேரடி ஆட்சியின் கீழ் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளது. கி.பி. 1695ஆம் ஆண்டு மைசூர் மன்னன் மதுரை மீது போர் தொடுத்தபோது நாயக்கருக்கு உதவியாக இராமநாதபுர மன்னரான இரகுநாத சேதுபதி போரிட்டார். வெற்றி கிடைத்தது. இவ்வெற்றியைப் பாராட்டும் முகமாகத் திருப்பூவணம், திருச்சுழி, பள்ளிமடம் ஆகிய பகுதிகளை மதுரை நாயக்கர் இராமநாதபுர மன்னருக்கு வழங்கினார். கி.பி. 1710இல் இராமநாதபுர மன்னர் கிழவன்

சேதுபதி இறந்த பின்னர் விஜயரகுநாத சேதுபதி எட்டாவது மன்னரானார். அவர் தனது மகள் அகிலாண்டேசுவரி நாச்சியாரைச் சசிவர்ணத் தேவருக்கு மணமுடித்து வைத்து 1000 பேர் கொண்ட படையையும், பிரான்மலை, திருப்புத்தூர், சோழபுரம் மற்றும் திருப்பூவணம் ஆகிய ஊர்களையும் அங்குள்ள கோட்டைகளைப் பாதுகாத்து நிருவகிக்கும் உரிமையையும் வழங்கினார்.

கி.பி. 1730இல் இராமநாதபுர மன்னராகக் கட்டையத்தேவர் ஆட்சிக்கு வந்த போது, இராமநாதபுரச் சீமையிலிருந்து சிவகங்கைச் சீமை உருவாக்கப்பட்டது. திருப்பூவணம் சிவகங்கை மன்னர்களின் நேரடியாட்சியின் கீழ் வந்தது.[187] *"சிவகங்கைச் சீமையை சசிவர்ணப் பெரிய உடையாத்தேவர் கி.பி. 1730 முதல் 1750 வரை ஆட்சி புரிந்தார். சசிவர்ணத் தேவரது முதல் மனைவி அகிலாண்டேசுவரி நாச்சியார் மூலம் பட்டாபி இராமசாமி, சுவர்ணகிதை தேவர் என் இரண்டு ஆண்மக்கள் பிறந்தனர். அவரும் சசிவர்ணத் தேவருக்கு முன்னரே காலமாகி விட்டார்கள். சசிவர்ணத் தேவரது இரண்டாவது மனைவி பூதக்காள் நாச்சியார் என்பவர் மூலம் பிறந்தவர்தான் முத்து வடுகநாதத் தேவர் ஆகும். பூதக்க நாச்சியார் வடுக இனத்தைச் சேர்ந்தவர். சசிவர்ணத் தேவரது முதல் மனைவியின் ஆண் மக்கள், இருவரும் சிறுவயதிலேயே மரணமடைந்து விட்டதால், முத்து வடுகநாதத் தேவர் 1750இல் சிவகங்கைச் சீமையின் இரண்டாவது அரசராக முடி சூட்டப்பட்டார்".*[188]. 'முத்துவடுகநாதத் தேவர்' என்பவர் சிவகங்கைச் சீமையை 1750-1772ஆம் ஆண்டுகளில் ஆண்டுள்ளார். இவரது காலம் 18ஆம் நூற்றாண்டாகும். கந்தசாமிப் புலவர் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் அக்காலகட்டத்தில் மதுரையை ஆண்ட மன்னர்களின் பெயர்கள் ஆராயப்படுகின்றன.

**மதுரை மன்னர்கள் -** மதுரையில் கி.பி. 1595இல் கிருஷ்ணப்ப நாயக்கர் பட்டத்திற்கு வந்து ஆட்சி செய்துள்ளார். அவருக்கு வாரிசு இல்லாததால் கி.பி.1601இல் அவருடைய தம்பி விசுவப்பரின் குமாரர் முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் பட்டத்திற்கு வந்தார். அவருடைய மகன் முத்து வீரப்பர் கி.பி. 1609இல் பட்டத்திற்கு வந்தார். *"இவர் 1609 முதல் 1623முடிய ஆட்சி செய்தார்"*[189]. இவருக்கும் மக்கள் இல்லாமையால், இவரது தம்பி திருமலைநாயக்கர் கி.பி. 1627இல் பட்டத்திற்கு வந்தார். திருமலைநாயக்கரின் மகன் இரண்டாம் முத்துவீரப்ப நாயக்கர் கி.பி. 1659இல் முடிசூட்டிக் கொண்டார். நான்கே மாதங்களில் முகமதியருடன் நடந்த போரில்

இறந்தார். அவரது மகன் சொக்கநாத நாயக்கர் ஆட்சிக்கு வந்தார். இவர் கி.பி.1682இல் இறந்தார். இவரது மனைவி மங்கம்மா. இவர்களது மகன் மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக்கு வந்தார். அவர் 1689இல் அவர் இறந்துவிட்டார். அதனால் 1689 முதல் 1706 வரை மங்கம்மா ஆட்சி செய்தார்.[190]

17ஆம் நூற்றாண்டில் மதுரையில் ஆட்சி செய்த முத்துவீரப்ப நாயக்கருள் ஒருவரையே கந்தசாமிப்புலவர் குறிப்பிடுகிறார் எனக் கருதலாம்.

கந்தசாமிப் புலவர் வாழ்ந்த காலத்தைக் கணித்துக் கூறுவதற்குத் திருப்பூவணப் புராணத்தில் பாயிரப் பாடல் ஒன்று மிகவும் துணையாய் உள்ளது.

*"அருளுடனே தீர்த்தங்களாடுமாறு மருங்கலியின் வலியை நள னகற்றுமாறுந்*
*திருவிழாவணி பெறச் செய்வித்தவாறுஞ் சிதம்பரநல்லுபதேசஞ் செய்தவாறுந்*
*தருமுலகிற் **சகாத்த மாயிரத்தைஞ்ஞூறு தங்குநாற்பான் மூன்றுதந்த வாண்டிற்***
*பொருவரு நற்புலவோர் சொற்புலமை காட்டப் புட்பவனபுராண மெனப் புகலலுற்றேன்"*
*(பாடல் 230)*

என்ற இப்பாடலில் கந்தசாமிப் புலவர் சகாத்த வருடம் 1543இல் புராணத்தை இயற்றியதாகக் குறிப்பிடுகிறார். சகாப்த வருடத்திற்கும் ஆங்கில வருடத்திற்கும் 78 ஆண்டுகள் வித்தியாசம் உண்டு. இதனால், சகாப்த ஆண்டுடன் 78ஐ கூட்டினால் அந்த சகாப்த ஆண்டிற்கு இணையான ஆங்கில ஆண்டு தெரியவரும். எனவே சகாப்த ஆண்டு 1543 + 78 = 1621ஆம் ஆங்கில ஆண்டு ஆகும். எனவே, கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணத்தைக் கி.பி.1621ஆம் ஆண்டு பாடியுள்ளார் என்பது தெளிவு. இதனால், 387 ஆண்டுகளுக்கு (2008 - 1621 = 387) முன் கந்தசாமிப் புலவர் வாழ்ந்துள்ளார் என்பது உறுதி.

17ஆம் நூற்றாண்டில்வாழ்ந்த திருப்பூவணப் புராணத்தை இயற்றிய கந்தசாமிப் புலவர் 13ஆம் நூற்றாண்டிற்கும் முன் வாழ்ந்த பொன்னனையாளின் மகன் ஆவார் என்ற கூற்று முற்றிலும் தவறானதாகும். 'பொன்னனையாளின் மகன் போன்றவர்' என்பதே உண்மையாகும். திருப்பூவணப் புராணத்தை எழுதிய கந்தசாமிப் புலவர் வாழ்ந்த காலத்திற்குச் சுமார் 110 வருடங்களுக்குப் (1730 - 1620 = 110)பின்னரே சிவகங்கைச் சீமை உருவாகியுள்ளது என்பது தெளிவாகிறது. இதனால் மதுரையை ஆண்ட முதலாம் 'முத்து வீரப்ப நாயக்கரையே' கந்தசாமிப் புலவர் திருப்பூவண நாதருலாவில் குறிப்பிடுகிறார்.

## தொகுப்புரை

பொன்மதில்சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார். திருப்பூவணம் முழுமையும் மூர்த்தி, தலம், தீர்த்தச் சிறப்புகள் பெரிதும் விரவியுள்ளன.

இத்தலத்து இறைவனாகத் திருப்பூவணநாதரும் மின்னம்மையும் அருள் புரிகின்றனர். அறிந்து செய்த பாவம் போக்க உமையம்மை திருப்பூவணம் வந்து பாரிசாதமரம் வளர்த்துத் தவம் செய்தார்.

அம்மரத்தின் அடியிலே பூவண்ணமாகிய சிவலிங்கம் ஒன்று தோன்றியது. அதனை உமையம்மை வணங்க, சிவபெருமான் தோன்றி பார்வதிதேவியார் **வார்த்தைகடந்த** பாவத்தை நீக்கியருளினார்.

சிவலிங்கம் **பூவால் ஆனது - எனவே "பூவணன்"** என்ற காரணப்பெயர் உண்டாது. இறைவி மின்னல்போன்று வடிவும் சக்தியும் உடையவளாய் இருப்பதால் **அழகிய மின்னம்மை** என்னும் பெயர் பெற்றார்.

திருப்பூவணநாதர் தோன்றிய இடம் **திருப்பூவணம்** என்றானது. இவ்விடம் பூஞ்சோலைகள் நிறைந்த இடமானதால் வடமொழியில் "புஸ்பவனம்" என்றும் அழைக்கப்பெறுகிறது. இதனைத் தமிழில் "புட்பவனம்" என்று குறிப்பிடுகின்றனர்.

சூரியன், திரணாசனன், துன்மனன், தருமஞ்ஞன், உற்பலாங்கி, செங்கமலன், திருமகள். சுச்சோதி, நளன் திரணசுச்சோதி ராசனும் வணங்கி வழிபட்டு அடைந்த பேறு எடுத்துக் கூறப் பெற்றுள்ளது.

எல்லாப் பாவங்களையும் அகற்றக்கூடிய தலம் என்றும், நீத்தார்களை முத்தி சேர்க்கும் தலமென்றும், கலியின் வலியை அகற்றக்கூடிய தலம் என்றும் தலத்தின் பெருமை பாடப் பெற்றுள்ளது.

அமிழ்தம் வீழ்ந்த இடமே மணிகன்னிகைத் தீர்த்தமாகியது. மற்றபிற தீர்த்தங்களின் சிறப்புகளும் எடுத்து இயம்பப் பெற்றுள்ளன.

திருப்பூவணத்தில் தானதர்மங்கள் செய்வதால் உண்டாகும் பலன்களும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

திருவிளக்கிடுதல், திருப்பணிகள் செய்தல் ஆகியவற்றினால் உண்டாகும் பலன்களும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

இத்தலத்திற்கு வந்து சேர்தலே மிகவும் புண்ணியமாம். ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் திருப்பூவணநாதரை வணங்குவதாலும், இறைவியை வணங்குவதாலும், அவர்களது பெருமையைப் பாடுவதாலும், பாடுவதைக் கேட்பதாலும் உண்டாகும் பலாபலன்கள் விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

புராணத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை நம்பி மக்கள் வழிபாடுசெய்து வருகின்றனர். நீத்தார்களுக்குக் கருமங்கள் செய்கின்றனர்.

புராணத்தில் கூறப்பட்டுள்ளவாறு பங்குனி உத்திரத்தரவிழாவாகப் பத்துநாட்கள் திருவிழா நடைபெறுகிறது. இவ்விழாவில் ஒன்றான தேர்த்திருவிழாவை மக்கள் அனைவரும் ஒன்றுகூடிச் சிறப்பாக நடத்தி இறைவன் இறைவியை வழிபடுகின்றனர். நளமகாராசன் நடத்திவைத்த தீர்த்வாரி விழா இக்காலத்தில் நடைபெறவில்லை.

மொத்தத்தில் திருப்பூவணத் திருத்தலத்திற்குச் சென்று தீர்த்தமாடி, இறைவனை வழிபட்டுத் தானதர்மங்கள் செய்தால் வாழ்வில் இன்னல்கள் ஒழிந்து இன்பங்கள் வந்து சேரும். நீத்தாரை வேண்டித் தர்ப்பணம் செய்தால் அவர்கள் பெரிதும் மகிழ்ந்து ஆசி கூறுவர். இதனால் இறைவன் திருவுள்ளம் மகிழ்ந்து நீத்தார்களுக்கு மோட்சத்தையும் அவர்களுடைய மக்களுக்கு நல்வாழ்வையும் அளிப்பான் என்று முனிவர்களால் சத்தியம் செய்து கூறப்பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணத்தின் அடிப்படையில், திருப்பூவணநாதர் மற்றும் மின்னம்மையிடம் மக்கள் நிறைந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். வழிபாடுகள் செய்து வருகின்றனர். திருவிழாக்கள் பண்டைப் பழமை மாறாமல் நடைபெற்று வருகின்றன. இதனால் இறையருளால், மக்களிடையே சமூக உணர்வு மிகுந்து மக்கள் வளமுடன் வாழ்கின்றனர்.

*****

சான்றெண் விளக்கம்

141 "சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்" (குறள் 200)

142 திருப்பூவணப் புராணம் பாடல் வரிசை எண் 19

143 மேலது பாடல் எண் 20

144 மேலது பாடல் எண் 21

145 மேலது பாடல் எண் 27, 28

146 மேலது பாடல் எண் 29

147 மேலது பாடல் எண் 30

148 மேலது பாடல் எண் 31

149 மேலது பாடல் எண் 33

150 மேலது பாடல் எண் 38

151 மீனாட்சியம்மைக்கு முலை மூன்று இருந்தது எனத் திருப்பூவணப் புராணம் 963ஆவது பாடலிலும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

152 மதுரை அன்னை மீனாட்சியைக் **'கர்ப்பூரநாயகி'** எனத் திருப்பூவணப் புராணம் பாடல் எண் 1316 குறிப்பிடுகிறது.

153 திருப்பூவணப் புராணத்தில் திருமணத்திற்கு **'வதுவை'** என்ற சொல் 960, 961, 971, 1152 ஆகிய பாடல்களிலே பயன்படுத்தப் பட்டுள்ளது.

154 **'கானை'** என்பது 'கானப் பேர் எயில்' என்று சங்காலத்தில் அழைக்கப்பட்ட 'காளையார்கோயில்' என்ற ஊரைக் குறிக்கும்.

155 திருப்பூவணப் புராணம் பாடல் வரிசை எண் 168

156 மேலது பாடல் எண் 180

157 மேலது பாடல் எண் 185

158 மேலது பாடல் எண் 780

159 மேலது பாடல் எண் 191

160 மேலது பாடல் எண் 152, 762

161 மேலது பாடல் எண் 228, 229, 230

162 "இது கோமூத்திரம், கோமயம், பால், தயிர், நெய் இவை பஞ்ச கவ்வியம் என்று கூறப்படும். கோமூத்திரத்திற்கு வருணனும், கோமயத்திற்கு அக்நியும், பாலிற்குச் சந்திரனும், தயிர்க்கு வாயுவும், நெய்க்கு விஷ்ணுவும் தேவதைகளென்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. பின்னும் செந்நிறத்த பசுவினிடம் கோமூத்திரத்தையும், வெள்ளைப்பசுவினிடம் கோமயத்தையும், பொன்னிறத்த பசுவிடத்துப் பாலையும், நீலநிறத்த பசுவினிடம் தயிரினையும், கருநிறத்த பசுவினிடம் நெய்யினையும் கொள்ளின் நலமெனப்படும். கோமூத்திரம் கோமயம் இரண்டும் ஆறு மாத்திரை எடையும், நெய்யும் பாலலும் மூன்று மாத்திரை எடையும், தயிர் பத்து மாத்திரை எடையளவும் இருத்தல் வேண்டும். இதை மந்தரபூர்வமாகக் கலந்து பிராமணசந்நிதியில் உண்டவன் சகல பாபத்தினின்றும் நீங்கிச் சுத்தமடைகிறான்." **அபிதான சிந்தாமணி** பக்கம் 1007

163 "இது கருப்பஞ்சாறு, தேன், நெய், பால், தயிர் முதலியவற்றைத் தனித்தனிப் பாத்திரங்களில் வைத்து அப் பாத்திரங்களில் கருப்பஞ்சாறிட்ட பாத்திரத்தை இடையினும், தேன் பாத்திரத்தைக் கிழக்கினும், பால் வார்த்த பாத்திரத்தை மேற்கிலும், தயிர்ப் பாத்திரத்தைத் தெற்கிலும், நெய்ப் பாத்திரத்தை வடக்கினும் கீறிய யற்திரத்தில் வைத்து மந்திரத்தாற் பூசித்துத் தேவர்களுக்கு அபிஷேகிப்பது" - **அபிதான சிந்தாமணி** பக்கம் 1011

164 **பதினெட்டுப் புராணங்கள்**

"சைவமார்க் கண்டங் காந்தந் தங்கிய விலிங்கங்கூர்மம்
வையகம் புகழ் வராகம் வாமன மருவு மச்சம்

*பொய்யறு பிரமாண்டஞ் சீர் பொருந்து நற் பவுடிகத்தோ*
*டெய்திய பிரமம் பாற்ப மிசைத்திடு மிவற்றினோடும்* (பாடல் 315)
*காதல் கூர் நார தீயங் காருடம் வயிணவஞ் சூழ்*
*மாதிரம் புகழும் பாகவதத்துடன் மருவு மேத*
*பேத மிலாக்கி நேயம்* **பிரமகைவர்த்தமி** *யாவு*
*மோதிட நின்னாற் கேட்டோ* **மொன் பதிற்றிருபுராணம்"** (பாடல் 316)

165 "*இது சைவர்களால் இஷ்ட காம்யசித்திகளை விரும்பியும், முத்தியை விரும்பியும், செபிக்கப்படும் மகாமந்திரம். இதுபோக பஞ்சாட்சரம் எனவும், முக்தி பஞ்சாட்சரம் எனவும், ஸ்தூல பட்சாட்சரம் எனவும், ஸூக்சும பஞ்சாட்சரம் எனவும் பலவகைப்படும். இவற்றின் அட்சரங்களை மாறிச் செபித்தால் பலன்கள் வேறுபடும். ... ..." அபிதான சிந்தாமணி பக்கம்* 1013

166 அ) *கா. கணநாதன்,* **திருப்பூவணம் பூவணநாதர் சுவாமி கோயில்-**ஆய்வேடு *பக்கம்* 6
ஆ) *கா. கணநாதன்,* **திருமுறைகள் போற்றும் திருப்பூவணம்,** *பக்கம்*1, 2

167 "At the South-east corner of the local Poovannanathaswamy temple there is a holy water called 'Manikarnigai Thirtham' founded by the Sun God. Bones of corpses immersed in this water would become fragrant flowers. According to the Puranas, Dharuma-rajan threw bones of his dead father into the water and was surprised to see the bones transforming into flowers. Hence the place is called Tiruppuvanam after this incident. Even to-day the bones of the dead are taken to this place and buried on the banks of the river Vaigai just opposite the temple" TAMIL NADU DISTRICT GAZETTEERS, RAMANATHAPURAM, 1972, Page No.984

168 *திருப்பூவணப் புராணம் பாடல் வரிசை எண்* 568

169 *மாசி மாதத்தில் மகநட்சத்திரத்துடன் முழுநிலவு சேர்ந்தநாள். இதனை 'மா(பெரிய)மகம்' என்று அழைக்கின்றனர்.*

170 *ஒரு சதுர் யுகம் என்பது நான்கு யுகங்களைக் கொண்டது. நடைபெறும் சதுர் யுகத்திலே, கிருதயுகம்* 17,28,000 *வருடங்களும், திரேதா யுகம்* 12,96,000 *வருடங்களும், துவாபர யுகம்* 8,64,000 *வருடங்களும், கலியுகம்* 4,32,000 *வருடங்களும் கொண்டது. ஆக மொத்தம் ஒரு சதுர் யுகம் என்பது* 43 *லட்சத்து* 20 *ஆயிரம் வருடங்களாகும். (ஆற்காடு கா.வெ. சீதாராமய்யர்* **சர்வமுகூர்த்த பஞ்சாங்கம்** 2006-07, *பக்கம்* -3)

171 *பரஞ்சோதி முனிவர்,* **திருவிளையாடற் புராணம்,** *மதுரைக்காண்டம், தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு*

172 '*சாக' - என்ற சொல்லிற்கு ஆயிரம் எனப் பொருள், சாகயாக பலன் - என்பதற்கு 'ஆயிரம் யாகங்களைச் செய்த பலன்' எனப் பொருளாகும்*

173 *கந்தசாமிப் புலவர்,* **திருவாப்பனூர் புராணம்** *பாயிரம் மூன்றாவது(கடைசிப்) பாடல்*

174 "*திருப்பூவணத்தில் உத்திர கணிகையர் குலத்தில் பிறந்தவள்" என்று அபிதான சிந்தாமணி (பக்கம்* 1215) *குறிப்பிடுகிறது. ஆனால் திருப்பூவணப் புராணத்தில் இவள் திருக்கோயிலில் நடனமாடுபவள் என்று மட்டுமே உள்ளது. இவளது குலம் பற்றிய குறிப்பேதும் இல்லை.*

175 **திருப்பூவணநாதருலா,** *சிறப்புப் பாயிரம் (பழைய பாடல்)*

176 **திருப்பூவணநாதருலா,** *சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு*

177 **திருப்பூவணநாதருலா,** *சிறப்புப் பாயிரம், உ.வே.சா. பதிப்பு,* 1904

178 *இதற்கு நூலாசிரியர் மேற்கோள் எதையும் குறிப்பிடவில்லை.*

179 *வே.இரா.மாதவன்,* **தமிழில் தல புராணங்கள்** *இரண்டாம் பகுதி , பக்கம்* 110

180 *மேலது, பக்கம்* 101

181 *தமிழில் திருப்புகழ், திருப்புகழில் பண்ணாராய்ச்சி நூல்*

182 *த.சுப்பிரமணிய பிள்ளை,* '**சிவஸ்தல மஞ்சரி**, *பக்கம்* 42*ல் உள்ள ஸ்தல அகராதியில் அருணகிரிநாதர் பாடல் உள்ள* 99 *சிவத்தலங்கள் அடங்கிய பட்டியல். இதில்* 213 *வரிசை எண் கொண்ட* '**பூவணம்**' *இடம்பெறவில்லை.*

[183] *அருணகிரிநாதரின் திருப்பூவணப் பாடல்கள் மூன்றும் திருப்பூவணம் தொடர்பான எந்த ஒரு நூலிலும் இடம்பெறவில்லை. இவ்வாய்வாளர் தனது எம்ஃபில் ஆய்வின்போது இப்பாடல்களைத் திரட்டிச் சேர்த்துள்ளார்.*

[184] *திருப்பூவணநாதருலா பாடல் வரிகள் **44,45** மற்றும் **46***

[185] **'*சிவகங்கையை ஆண்ட முத்துவடுகநாத துரை*'** *என்ற இக்கருத்திற்குத் திருமதி ஸ்ரீ.சீதாலெட்சுமி பரத்வாஜ் அவர்கள் மேற்கோள் எதையும் குறிப்பிடவில்லை*

[186] 15.05.2000 *அன்று தம்பதியர் சுதாகர்பாபு, அனுராதா மணவிழா மலராக வெளியிடப் பெற்ற* **திருப்பூவணநாதர் உலா**, *பக்கம்* 67

[187] www.sivaganga.tn.nic.in/history.htm

[188] *மு. பாலகிருஷ்ணன்*, **விடுதலைப் போரின் விடிவெள்ளிகள்**, *பக்கம்* 31

[189] *அபிதான சிந்தாமணி பக்கம்* 1626

[190] *கி. பழநியப்பன்*, **கோயில் மாநகர்(மதுரை மீனாட்ச சுந்தரர் திருக்கோயில் வரலாறு),** *சூன்* 1963 *பக்கம்* 18

# 3. தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி

**முன்னுரை**

பரம்பொருளை உணர்வதற்குக் கருவியாகவும், பக்தி நெறியைப் பரப்புவதற்குச் சாதனமாகவும் திருக்கோயில்கள் விளங்கி வருகின்றன. இந்திய நாட்டில் திருக்கோயில்களின் எண்ணிக்கை மிகுதி. இத்திருக் கோயில்களைக் கட்டும் பணி, ஏசுகிருத்து பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் தொடங்கப் பெற்று விட்டது என்பதைப் பல்வேறு சான்றுகள் எடுத்துக் காட்டுகின்றன. கடல் கொண்ட தென்குமரிக் கண்டத்திலிருந்த **தென்மதுரை** என்ற நகரத்தில், நகரமனைய திருக்கோயில் இருந்ததைப் புறநானூறு பேசுகிறது. குமரியாறு கடல் கொள்ளப்படுவதற்கு முன்னும் தென்குமரி நாட்டில் பஃறுளியாறு கடல் கொள்வதற்கு முன்னும் எழுந்த பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. பாண்டியன் *பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி* பஃறுளியாறு கடல்கொள்ளப்படுவதற்கு முன் தமிழகத்தை ஆண்டவன். முக்கட் பெருமான் என்னும் முழுமுதற் கடவுளொருவருக்கே இம்மன்னன் வணக்கம் காட்டும் இயல்பினன் என்றும், அக்கடவுள் முனிவர்களால் பரவப் பெறுபவர் என்றும், அப்பெருமானுக்கு ஒரு நகரத்தைப் போல அகன்று உயர்ந்து அமைந்த திருக்கோயில் அவ்வளவு பழங்காலத்திலேயே இருந்தது என்றும், ***முதுகுடுமிப் பெருவழுதி***யைப் பற்றி வருகின்ற புறப்பாட்டில்,

*"பணியிய ரத்தைநின் குடையே! முனிவர்*
*முக்கட் செல்வா நகர்வலஞ் செயற்கே!"* - *புறம் 6*

என்று *காரிக்கிழார்* என்னும் நல்லிசைப் புலவர் இதனைக் கூறுகிறார். இத்தகைய திருக்கோயில்கள் சமுதாயத்தின் மையமாக அமைந்த மக்களின் அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்யத் தக்கவகையில் இயங்கியும் வந்தன.

இறைவனுக்குப் பூசைகள் செய்து வழிபட ஏதுவாய் அத்தலத்தில் காலங்காலமாய் விளங்கும் தாவரத்தைத் தலவிருட்சம் என்றும் அழைக்கின்றனர். பல

தலங்களில் தலவிருட்சத்தின் இலைகள் மற்றும் பிற பாகங்கள் இறைவனது பிரசாதமாகப் பக்தர்களுக்கு வழங்கப்படுகின்றன. இவை மனித உடலின் நோய்களைத் தீர்க்கவல்ல ஆற்றல் பெற்றவையாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்க சிறப்பாகும்.

# 3. தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி

*"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்*
*வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"*
- எனத் தாயுமானவர் பாடியுள்ளார்.

மூர்த்தி என்பது இறைவனைக் குறிக்கும். தலம் என்பது அந்த மூர்த்தி உறையும் இடத்தைக் குறிக்கும். தலத்தில் உள்ள நீர்நிலைகள் தீர்த்தமாகும். அத்தலத்திலுள்ள தாவரங்களில் இறைவனுடன் தொடர்புடைய மரம் விருட்சம் எனப்படும்.

திருப்பூவணத்தில் சிவலிங்கம் தோன்றிய வரலாற்று அடிப்படையில் கணித்தால், முதலில் தலமும், பின்னர் அத்தலத்தில் உண்டான தீர்த்தங்களும், அதன்பின்னர் அத்தீர்த்தங்களுக்கு அருகே முளைத்த விருட்சங்களும் சிறப்புற்றுத் திகழ்ந்திருக்கின்றன. இச்சிறப்புக்களின் அடிப்படையிலேயே பார்வதிதேவியாரிடம் வேறுதலங்களை ஈசன் குறிப்பிடாமல் திருப்பூவணத்தைக் குறிப்பிட்டுக்கூறி அங்கே சென்று தவம் இயற்றுமாறு கூறியருளினார். இதனால், இத்தலத்திற்குப் பார்வதிதேவியார் வருவதற்கு முன்பே ஈசனிடம் திருப்பூவணம் சிறப்புப் பெற்று விளங்கியுள்ளதை அறியமுடிகிறது. பார்வதிதேவியார் இங்கு வந்து பாரிசாதத்தை நட்டுவைத்து அதன் நிழலிலே தவம் செய்ய அங்கே சிவலிங்கம் தோன்றி அருளியது. இக்காரணங்களினால் பூவணத்தின் பெருமைகள் 1)தலம் 2) தீர்த்தம் 3)விருட்சம் 4) மூர்த்தி என்ற வரிசையில் அவற்றின் சிறப்புகள் இருப்பிடம் தோன்றக்காரணம் வணங்கியோர் அடைந்த பலன்கள் ஆகியன இப்பகுதியில் கூறப்படுகின்றன.

## 3.1.தலம்

தமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்குவகையாகப் பிரித்து இலக்கணம் செய்துள்ளனர். முல்லையும் குறிஞ்சியும்

தம்மியல் திரிந்து பாழடையும் போது அதனைப் 'பாலை' என ஐந்தாவது வகையாக இலக்கணம் வகுத்துள்ளனர்.

*"மாயோன் மேய காடுறை யுலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"* [191]

என்று தொல்காப்பியர் நிலங்களின் பிரிவுகளையும் அவற்றிற்கான தெய்வங்களையும் கூறுகிறார். சிலப்பதிகாரத்தில் முல்லையும் குறிஞ்சியும் முறைதிரிந்து நல்லியல்பு இழந்து நடுங்கு துயருற்றுப் பாலை என்பதோர் படிவம் கொள்ளும் என 'பாலை' நிலத்தின் தன்மை குறித்து இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். திருப்பூவணத் தலம் வைகையாற்றின் வடகரையில் உள்ள பாரிசாத வனத்தில் உள்ளதாகும். இத்தலத்தைச் சுற்றிலும் நீர்நிலைகளும் வயல்களும் சூழப் பெற்றுள்ளன.

### 3.1.1.தலத்தின் பெயர்

இப்போது இவ்வூர் '**திருப்புவனம்**' (Tiruppuvanam) என்று அழைக்கப்படுகிறது. தமிழித் திருமுறைகளில் இவ்வூவர் '**திருப்பூவணம்**' என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது. திருப்பூவணப் புராணத்திலும், திருப்பூவணநாதருலாவிலும், '**புட்பவனம்**' என்றும் '**பூவணம்**' என்றும் அழைக்கப் பட்டுள்ளது. "**புவனம்**" என்று இலக்கியங்களில் எங்கும் குறிப்பிடப் பெறவில்லை.

### 3.1.2. தலத்தின் பெயர்க்காரணம்

பூவணம், பூவனம், புட்பவனம், புவனம் என்ற பெயர்க்காரணங்கள் இப்பகுதியில் ஆராயப்படுகின்றன.

3.1.2.1. **பூவணம் -** பூவணம் என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில் சுமார் நூற்றுக்கும் அதிகமான இடங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளது. திருப்பூவணத்தில் சிவலிங்கம் '**பூவால் ஆனது**'. பூவால் ஆனதால் '**பூவணன்**' எனக் காரணப் பெயர்

சிவலிங்கத்திற்கு உண்டானது. 'பூவணன்' தோன்றிய இடம் '**பூவணம்**' என்று அழைக்கப்பட்டது.

பூவணத்தரன் (பாடல் 4 மற்றும் 7),
பூவணத்தெம் புனிதன் (பாடல் 5)
பூவணநாயகன் (பாடல் 6)
பூவணத்தான் (பாடல் 10)
பூவணத்தெம் புண்ணியன் (பாடல் 20) என்றும் சிவலிங்கம் குறிப்பிடப் பெற்றுள்ளது. இறைவனையும் இவ்வூரையும் குறிக்கும் இடங்களில் எல்லாம் '**பூவண'ம்** என்ற சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

'பூவணன்' என்ற இறைவனது பெயரே தலத்திற்குமாகி 'பூவணம்' என்று ஆகுபெயரானது. திரு(மகாலெட்சுமி) வந்து வணங்கிய தலம் என்பதால் 'திரு' என்ற அடைமொழி சேர்ந்து, 'திருப்பூவணம்' என்றழைக்கப்படுகிறது. இப்பெயரே தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் உள்ளது.

3.1.2.2. **பூவனம்** - 'வனம்' என்றால் 'காடு'. 'பூவனம்' என்றால் 'பூங்காடு' என்று பொருள். 'பூவணம்' என்ற சொல்லை வடநூலோர் 'பூவனம்' எனப் பொருள் கொண்டு புராணங்களில் 'புஷ்பவனம்' என வடமொழியில் குறிப்பிட்டிருக்க வேண்டும். திருப்பூவணப் புராணத்திலோ வேறுபிற தமிழ் இலக்கியங்களிலோ 'பூவனம்' என்ற சொல்லாட்சி இல்லை.

3.1.2.3. **புட்பவனம் -**

*"வடசொற்கிளவி வடஎழுத்து ஒரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"*[192]

என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்கு ஏற்ப வடமொழியில் '**புஷ்பம்**' என்ற சொல் தமிழில் 'புட்பம்' என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. 'புட்பம்' என்பது மலர்களைக் குறிக்கும். 'வனம்' என்றால் 'காடு'. எனவே 'புட்பவனம்' என்றால் 'மலர்கள் நிறைந்த காடு' எனப் பொருள்.

'புட்பவனம்'[193] என்ற சொல் திருப்பூவணப் புராணத்திலும் திருப்பூவண நாதருலாவிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது.

*"சட்டக மன்னிய சர்ச்சரையைத் திகழ் சாணைக்கட்*
*கட்டழ குற்றிடமற்றைய வும்பர்கடைந் தொப்ப*

*மிட்டனரப்பொடி வீழ்தலு மத்தல மெங்குந்தான்*
***புட்பவனம்*** *பெயர்பெற்றது பாற்கரபுர மென்றே " (பாடல் 653)*

என்று புராணத்திலே 'புட்பவனம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதனைத் தமிழ்த் திருமுறைகள் **'பொழில்'** என்று குறிப்பிடுகின்றன. 'பொழில்' என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில் விரவியுள்ளது. பாடல் எண் 25, 141, 172, 200, 225, 229, 332, 378, 518, 544, 554, 564, 608, 637, 692, 1232, 1244, 1258, 1272, 1292, 1344 ஆகிய பாடல்களில் 'பொழில்' என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

திருப்பூவணப் புராணத்தைக் குறிப்பிடும் கந்தசாமிப் புலவர் **'புட்பவனப்புராணம்'** என்று நூற்பயனைக் குறிக்கும் பாடலிலும், பாயிரத்தின் கடைசிப் பாடலிலும் குறிப்பிட்டுள்ளார்.

*"தந்திமுகன்றம்பியரு ண்நதிதனக்குரைப்பநந்தி சநற்குமாரன்*
*வெந்துயரமறவெடுத்துவிரித்துரைப்பவன் வேதவியாதற்கோதப்*
*புந்தியுணர்ந்தவன்சூதமுநிக்குரைத்த* ***புட்பவனபுராணந்***_தன்னைச்_
*சிந்தைமகிழ்வுறப் படிப்போர் கேட்போர் நல்லிகபரங்கள் சேர்வரன்றே" (நூற்பயன் பாடல் 2)*

*"அருளுடனே தீர்த்தங்களாடுமாறுமருங்கலியின்வலியை நளனகற்றுமாறுந்*
*திருவிழாவணிபெறச்செய்வித்தவாறுஞ் சிதம்பரநல்லுபதேசஞ்செய்தவாறுந்*
*தருலகிற்சகாத்தமாயிரத்தைஞ்ஞூறு தங்குநாற்பான்மூன்றுதந்தவாண்டிற்*
*பொருவருநற்புலவோர் சொற்புலமைகாட்டப்* ***புட்பவனபுராணமெனப்*** *புகலலுற்றேன்" (பாயிரம் - பாடல் 230)*

இவற்றுடன், 57, 236, 243, 281, 286, 287, 299, 400, 653, 726 ஆகிய பாடல்களிலும் 'புட்பவனம்' என்ற சொல்லாட்சியைக் கந்தசாமிப் புலவர் பயன்படுத்தியுள்ளார்.

**3.1.2.4. புவனம் -** என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில் 7, 90, 286, 341, 654, 676, 773, 940, 945, 1151, 1378, 1410, 1435 ஆகிய பாடல்களில் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆனால் இவ்விடங்களில் எல்லாம் இச்சொல், இவ்வூரைக் குறிக்காமல், இவ்வுலகைக் குறிக்கும் வகையில் பயன்படுத்தப் பட்டுள்ளது.

**'புவனம்', 'திருப்புவனம்'** என்ற சொல்லாட்சிகள் கந்தசாமிப் புலவரின் காலத்திற்குப் பின்பே மக்களால் பயன்படுத்தப்பெற்று வருகின்றன என அறியமுடிகிறது.

### 3.1.3. பூவணமும் புட்பவனமும்

பூவணம் என்ற தமிழ்ச் சொல்லை ஓதிய வடமொழி நூலோர், அச்சொல்லை 'பூவனம்' எனப் பொருள் கொண்டு அதனை வடமொழியில் 'புஷ்பவனம்' என்று பெயரிட்டு எழுதியதால் இச்சொல் வடநூல் புராணங்களில் இடம் பெற்றது.

*"வடசொற் கிளவி வடஎழுத்து ஒரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"*[194]

என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்கு இணங்க, வடமொழிப் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடும் போது 'புஷ்பவனம்' என்ற வடமொழிச் சொல்லிற்குப் பதிலாக 'புட்பவனம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

வடமொழியில் இயற்றப்பட்டிருக்கும் தலபுராணங்கள் சிலவற்றில் ஊரின் பெயர் முதலியன விளங்காத இடத்தில், தமக்குப் புரிந்த அளவில் பெயரை வடமொழியில் மொழிபெயர்த்து எழுதியுள்ளனர். அதற்குத் தக்கவாறு கதைகளையும் மாறுபட எழுதியுள்ளனர். "*'ஓய்மான் புலியூர்' என்பது 'ஓய்மான்' என்ற வள்ளல் பெயரால் வழங்கிய 'ஓய்மான்' நாட்டில் உள்ள ஒரு புலியூர். அஃது 'ஓமாம் புலியூர்' என மருவியதும் அவர்கள் ஓமம் வளர்த்த கதையினைக் கட்டிவிடுகின்றனர்"*[195]. *'எறும்பியூர்' - மலையுள்ள நாடு என்று பொருள். இந்த ஊர் 'எறும்பு ஊர்ந்தபுரி' என்று பொருள்படும்படி 'பிபீலிகாபுரம்' என்று எழுதப்பட்டிருக்கிறது".*[196] இதைப்போன்றுதான், 'பூவணம்' என்ற தமிழ் சொல்லிற்குப் 'பூவனம்' எனப் பொருள் கொண்டு அச்சொல்லைப் 'புஷ்பவனம்' என்று வடநூலில் எழுதியுள்ளனர்.[197]

தமிழும் வடமொழியும் அறிந்த கந்தசாமிப்புலவர் பூவணம் மற்றும் புட்பவனம் என்ற இவ்விரு சொற்களையுமே புராணத்தில் பயன்படுத்தியுள்ளார்.

திருப்பூவணத்தில் அடர்ந்த மரங்கள் நிறைந்த வனத்திடையே பாரிசாத மரத்தின் கீழே சிவலிங்கம் தோன்றியது. அங்கு 'புஷ்பவனம்' 'நந்தவனம்' அல்லது 'பூவனம்' ஏதும் இருந்ததாகத் தமிழ் இலக்கியங்களில் குறிப்பேதும் இல்லை. எனவே 'பூவணம்' என்ற தொன்மையான தமிழ்ப் பெயரே உண்மையானதாகும்.

### 3.1.4. திருப்பூவணம் திருப்புவனமானது

*"திருப்பூவணம் என்ற சொல்லில் உள்ள 'ண'கரம் 'ன'கரமாகத் திரிந்து, 'பூக்கள் நிறைந்த காடு' என்னும் பொருள்படத் திருப்பூவனம் என்று மாறிப் பின்னர் திருப்புவனமாக மாறியிருக்க வேண்டும்.*

*திருப்பூவணம் → திருப்பூவனம் → திருப்புவனம்*

*அல்லது ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஊர்ப் பெயர்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட காலத்தில் திருப்பூவணம், திருப்பூவனம் என்ற பெயர்கள் ஆங்கிலத்தில் "Tiruppuvanam" என்று எழுதப்பெற்று பின்னர் வாசிக்கும் காலத்தில் திருப்புவனம் என்று மாறியிருக்க வேண்டும்"*[198] .

### 3.1.5. இதே பெயரில் உள்ள மற்ற ஊர்கள்

திருப்புவனம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. ஒன்று திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. மற்றொன்று கும்பகோணம் அருகில் உள்ளது.

#### 3.1.5.1. தென்திருப்புவனம்

பாண்டியநாட்டின் வடபகுதியில் உள்ள இத்திருப்பூவணம் மூவர்தேவாரமும் பெற்றுச் சிறப்புடன் விளங்கிவருகிறது, இவ்வூரைப் போலத் தங்களது ஊரும் சிறக்கவேண்டும் என்ற எண்ணத்தில் *"தென்பாண்டி நாடெனப்படும் நெல்லை நாட்டில் மற்றொரு திருப்பூவணம் உண்டாயிற்று. திருநெல்வேலிக்கு அருகில் உள்ள இந்த ஊரைத் 'தென்திருப்பூவணம்' என்றார்கள், முள்ளி நாட்டுத் தென்திருப்பூவணம் என்று சாசனத்திற் குறிப்பிடுகின்றனர், இவ்வூர். தென்திருப்புவனம் என்னும் பெயரோடு அம்பாசமுத்திர வட்டத்தில் உள்ளது, இங்குள்ள திருக்கோயிலும் புஷ்பவனேஸ்வரம் என்றே வழங்குவதாகும்"* [199]. இச் செய்தி கல்வெட்டு ஒன்றில் உள்ளது. [200]

#### 3.1.5.2. திருபுவனம்

திருப்புவனம் என்றில்லாமல், திருபுவனம் என்ற பெயரில் கும்பகோணத்திற்கு அருகே ஒரு சிவத்தலம் உள்ளது. இங்கு 'சரபேசுவரர்' வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறது. இவ்வூர் பட்டு நெசவிற்குப் பெயர் பெற்றது.

## 3.1.6. தலத்தின் பரப்பளவு

பண்டைக் காலத்தே திருப்பூவணநகரமே திருக்கோயிலாக விளங்கி உள்ளது. பின்னர் கோட்டை இருந்த இடம் மட்டும் கோயிலிடமாக இருந்துள்ளது.

சிதம்பரத்தைப் போன்று சுமார் நாற்பது ஏக்கர் நிலப்பரப்பிலே இத்தலம் சிறப்புடன் அமைந்திருந்தது. பிற்காலத்திலே வனம், அகழி, கோட்டை மதில்கள் ஆகியன அழிவுக்கு உள்ளாயின. அதன் பின்னர், காலப்போக்கில் மக்கள் குடியிருப்புகள் மிகுதியாகத் தோன்றலாயின. மணிகன்னிகா தீர்த்தத்தில் தற்கொலை இறப்புகள் அதிகமான காரணத்தினால் அந்தத் தீர்த்தமும் மூடப்பெற்றது. அத்தீர்த்தத்திற்கு எதிரே கோயில் கொண்டிருந்த மின்னம்மையை அவளுக்கான தனிக் கோயிலிலிருந்து எடுத்து வந்து, சிவன்கோயில் வளாகத்திலேயே கருவறை அமைத்துப் பிரதிட்டை செய்வித்துள்ளனர்.[201] திருக்கோயிலைச் சுற்றிலும் சுற்றுச்சுவர் எடுத்தமையால், பெருமாள் கோயிலுக்கும் சிவலிங்கத்திற்கும் இடையே இருந்த 'ஆவணவீதி' அடைக்கப்பட்டு விட்டது. இன்ன பிற காரணங்களால் கோயிலின் பரப்பளவு காலப்போக்கில் குறுகிக்கொண்டே வந்துள்ளது. இப்போது, கோயில் 400 அடி நீளமும், 327 அடி அகலமும் கொண்டுள்ளது.

## 3.1.7. தல இருப்பிடம்

அறியாத ஓர் இடத்தை ஒருவருக்குத் தெரிவிக்க வேண்டுமானால், அறிந்த ஓர் இடத்தைக் கூறி அந்த இடத்துடன் இந்த இடத்தைத் தொடர்பு படுத்திக் கூறுவது மரபு ஆகும். அவ்வகையில், உலக மக்கள் அனைவரும் அறிந்த பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையின் சிறப்புக்களைக்கூறி அதனருகில் திருப்பூவணம் உள்ளதெனப் புராணத்திலே கூறப்பட்டுள்ளது.

*"அன்ன திருப்பதிக் கங்கி திக்கினில் யோசனைக்கப்பா லமர்ந்து தோன்று"*
*சின்மயமாஞ் சிவலிங்கஞ் செங்கதிர் வெய்யோன் பூசை செய்யவைகு*
*மன்னு நவமணித்தேரூர் மறுகு தொறுமாளிகை சூளிகை நெருங்கும்*
*பொன்மதில் சூழாலயஞ்சேர் **பூவணத்தின்** வளம் யாவர் புகலற்பாலார்" (பாடல் 166)*

என்று இத்தலம் மதுரைக்கு அக்னித் திக்கில் (தென்கிழக்கே) யோசனை (18 கி.மி.) தூரத்தில் உள்ளது என்றும் அதன்பெயர் பூவணம் என்றும் புராணத்திலே தலத்தின் பெயரும் இருப்பிடமும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

## 3.1.8. தலத்தின் பிற சிறப்புப் பெயர்கள்

*"பூரணமெய்ஞ்ஞானமதுபுந்திகொடுவஞ்சம்*
*வேரறவகழ்ந்திடுநல்வேதியர்கண்மன்னோ*
*வேருறுமானந்தவனமென்றுமெணவொண்ணா*
*வாருயிர்கண்**முத்திபெறுமாச்சிரமமென்றும்** (பாடல் 302)*
*" திக்குலகெலாம் புகழ் **சிதம்பரம** தென்றும்*
*பக்கமுறு **தக்கிணகாசிப்** பதிய தென்றுந்*
*தக்க **சதுர்வேதபுர**மென்று மதுசார்பேர்*
*மிக்க **பிதிர்முத்திபுர**மென்று நனிமேவும் " (பாடல் 303)*

திருப்பூவணத்திற்கு **முத்தியாச்சிரமம்** என்றும், **சிதம்பரம், ரகசிய சிதம்பரம்** என்றும், **தட்சிண காசி** என்றும், **சதுர்வேதபுரம்** என்றும், **பிதிர் முத்தி புரம், பிதிர் மோட்சபுரி** என்றும், **பாஸ்கரபுரம்** என்றும், **பிரமபுரம்** என்றும், **இலக்குமி புரம்** என்றும் பெயர்கள் உண்டு.

### 3.1.8.1. சீவசமாதிகள்

திருப்பூவணத்தில் பதினெண் சித்தர்களில் ஒருவரான 'கோரக்கரின்' சீவசமாதியானது திருக்கோயிலுக்கு வலப்புறத்தே தேர்முட்டிக்கும் சற்று கிழக்கே உள்ளது. இங்கு அன்றாடம் வழிபாடுகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

தேசியநெடுஞ்சாலையில் அரசுமருத்துவமனைக்கு எதிரே 'கத்தரிகாய் சித்தரின்' சீவசமாதி உள்ளது. இவர் கத்தரி வெயிலில் காய்ந்து தவம் இயற்றியதால் இக்காரணப் பெயர் பெற்றார் என்கின்றனர். இச்சித்தரின் சிலைவடிவம், திருப்பரங்குன்றம் 'வெயில்உகந்த அம்மன்' கோயில் வாயிலில் உள்ளது. வழிபாடுகள் இன்றும் நடைபெறுகிறன.

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த ஒரு குருமகா சந்நிதானத்தின்[202] சீவசமாதி அம்மன் சன்னதி தெருவிற்கு அருகே உள்ளது.

*"வெங்கனலாகுதிவேள்விவிரும்பினரொருசாரார்*
***தங்கியயோகசமாதியடைந்தனரொருசாரார்***
*பொங்குதவம்புரிபொற்பின்விளங்கினரொருசாரா*
*ரங்கணரன்றனருச்சனைசெய்குநரொருசாரார் (பாடல் 1169)*

என்ற பாடலில் திருப்பூவணத்தில் யோகசமாதி அடைந்தவர்களைப் பற்றிப் பாடப்பெற்றுள்ளது.

### 3.1.8.2. தொல் பூவணம்

திருப்பூவணமும் திருப்பூவணத்திலே சுயம்பாகத் தோன்றிய சிவலிங்கமும் தொன்மையானவை என்று திருப்பூவணப் புராணத்திலே பல இடங்களில் சுட்டப்பெற்றுள்ளன.

*"அன்ன**தொல்புட்பவனத்**தது நாப்ப ணதி மனோகர மிகவுடைத்தா*
*யுன்னத மொரு நான்கரையதாய்ச் சுற்றும் பாதயோசனை யதை யுடைத்தாய்ப்*
*பன்னு மூவுலகும் பாரிசாத மெனப்பகர்வதாய்ப் பணை பலவுடைத்தாய்*
*மன்னிய பறவை விலங்கு கடம் முள்வருபகை யொழிந்திட வைகும் " (பாடல் 243)*

என்று திருப்பூவணலிங்கம் தோன்றிய இடத்திலிருந்த புட்பவனம் மிகவும் தொன்மையானது என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. மேலும் திருமாலைக் காண வந்த வாலகில்லி முனிவர்கள் மகாலெட்சுமிக்குச் சாபவிமோசனம் கூறும் போது,

*"அன்ன **தொல்பூவணத்தின** லர்ந்த செம்மலர்ப் பூங்கோதை*
*பன்னிரு வருட மந்தப் பண்டை நன் மணிகுண்டத்திற்*
*றன்னிகர் தவஞ்சாரப் பின் சார்ந்தரன் பூசையாற்றி*
*மன்னிய திருவினோடு வைகுண்ட மருவி வாழ்வாய் "  (பாடல் 839)*

என்று கூறுகின்றனர்.

உமைவருசருக்கத்திலே, கைலாயத்திலே சிவபெருமான் உமையம்மையிடம், "நீ திருப்பூவணத்திற்குப் போய்ப் பாரிசாத மரத்தின் நிழலிலே தவம் செய், யாம் அத்தொல் லிங்கத்திற் தோன்றி உனக்கு அருள் புரிவேன்" என்று கூறுகிறார்.

*"அத்த தரு நீழல மர்ந்த லிங்கத்தி னழகுடன் பழமறை விதியிற்*
*பத்தி மிக்குயர்ந்த பூசனை பயிற்றிற் பண்டை நாளண்டர் கண்டறியாச்*
*சுத்தமா மந்தத் **தொல்லிலிங்கத்**திற் றோன்றியா நினக்கருள் புரிதுஞ்*
*சித்திர படம் போற்றிகழ் புறவடி மேற்செஞ் சிலம் பரற்று சீறடியாய் " (பாடல் 1158)*

என்ற பாடல் இதனை எடுத்துரைக்கிறது. இதனால் சிவபெருமானும், மகரிசிகளும் "திருப்பூவணம் தொன்மையானது" என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளமை திருப்பூவணத்தின் தொன்மைக்குச் சான்று பகர்வதாய் அமைந்துள்ளன.

மேலும்,

*"மிக்க வறம் பொரு ளின்பம் வீட ருள்வதாய் மேலாய் விமலமாகித்*
*தொக்க வரும் புண்ணியமாய்த் **தொல்பதியாய்ப்** பிதிர்கள் பவந்துடைப் பதாகித்*
*தக்கனருடவக் கொடி நற்றகுந் திருமால் சதுர்முகன் செங்கதிர் மார்க்கண்டன்*
*றிக்குலகம் வழிபடு மத் திருநகர் சேர்குநர்க் கரிது செப்பினின்றாய் " ( பாடல் 1285)*

என்று தீர்த்தச் சருக்கத்திலும்,

*"பன்னுமிப் புராணந் தன்னைப் படிக்குநர் தம்மை யன்பான்*
*மன்னிய வாசனத்தன் வைத் தருச்சனை செய்வோர்க்குப்*

*பொன் னுலகேத்துந் **தொல் சீர்ப் பூவணத்தரனைப்** பூசை*
*தன்னை நன்கி யற்றினோர் கடாம் பெறும் பலன் களுண்டாம் " (பாடல் 1433)*

என்று சிதம்பர உபதேசச் சருக்கத்திலும், தலமும் மூர்த்தியும் தொன்மையானவை எனச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

மேலும், திருப்பூவணப் புராணத்திலே 723ஆவது பாடலிலே சிவபெருமான் பிரமதேவனிடம் திருப்பூவணலிங்கத்தைப் பற்றிக் கூறும் பாடலிலே

*".... ..... அச்சிவலிங்கத்தன்**பினாயிரஞ்சதுர்யுகங்கள்***
***பூதலமதனிற்பொருந்தி**யாங்கெம்மைப்பொற்புடன்பூசனைபுரியி*
*னீதியின்யாமுநிகழந்துமுன்றோன்றிநினைக்கருள்புரிகுது... ... " (பாடல் 723)*

என்று அச்சிவலிங்கம் ஆயிரம் சதுர்யுகங்களாய்ப் பூமியில் உள்ளதெனக் கூறப்பட்டுள்ளது.

### 3.1.8.3. சிதம்பரத்தினும் சிறப்புடையது

*"செப்புறு மிந்தத் திருநகர் மேலாஞ் சிதம்பரமெனும் பெயர்திகழு*
*மொப்பிலா விதனிலொரு கணமேனு முறைகுநர்க் கானந்த நிருத்த*
*மெய்ப்பட ஞானம் விளங்கிட வளிப்போமென்னலு மிகமகிழ் கூர்ந்து*
*தப்பிலா துயர்ந்த தவமுயன்றரியசஞ்சித வினையறுந் தவத்தோர்" (பாடல் 1364)*

இறைவழிபாடு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அதேயளவு குருஉபதேசம் முக்கியமாகக் கருதப்பெறுகிறது. சிவபெருமான் குருவாக இருந்து உபதேசம் செய்த தலங்கள் சிதம்பரமும் திருப்பூவணமும் ஆகும். முனிவர்கள் இருவருக்கு ஐந்தெழுத்து மந்திரத்தை உபதேசித்ததால் திருப்பூவணம் சிதம்பரத்திலும் மேலாகப் பாடப் பெற்றுள்ளது.

### 3.1.8.4. காசி

பக்தியைப் பரப்பிய இந்திய இலக்கியங்கள் மக்களிடையே பெருமையடைந்தன. பக்தி இலக்கியங்களுள் காசியைக் குறிப்பிடாத இலக்கியமே இந்தியாவில் இல்லை என்னும் அளவிற்குச் சிறப்புடையதாக் காசி திகழ்கிறது.

சூரிய வம்சத்தில் தோன்றிய மன்னன் சகரன். அவன் அசுவமேத யாகம் செய்தான். இதனால் இந்திரன் தனது பதவி பறிபோய்விடும் எனப் பயந்து அசுவமேத யாகக் குதிரையைத் திருடிக் கடும் தவமியற்றி வந்த கபிலர் என்ற மகரிசியின் ஆசிரமத்தில் கட்டிவைத்து விட்டான். குதிரையைத் தேடிவந்த சகரனின் புதல்வர்கள் முனிவரைத் துன்புறுத்தினர். இதனால் கோபம் கொண்ட முனிவர், அந்த

அரசகுமாரர்களையும் அவர்களுடன் வந்த அனைவரையும் தனது கோபப்பார்வையால் எரித்துச் சாம்பல் ஆக்கிவிட்டார். தனது பிள்ளைகள் அனைவரும் ஒட்டுமொத்தமாக இறந்துவிட்டதனால் சகர மன்னன் மனமுடைந்து போனான். அவன் உடனே, அவனது பேரன் **அம்சுமான்** என்பவனுக்கு முடிசூட்டிவிட்டுக் கானகம் சென்று தவம் செய்து முத்தியடைந்தான். அம்சுமானின் அரண்மனைக்கு வந்த மகரிசிகள் அனைவரும் சகரனின் மக்கள் நற்கதி அடைய வேண்டுமானால் எரிந்து போன அவர்களின் சாம்பலைத் தேவர்களின் உலகில் பாய்ந்து செல்லும் **கங்கை நதி**யில் கரைக்க வேண்டும் என்று கூறினர். அவ்வாறு செய்தால் மட்டுமே முனிவரின் சாபத்தால் எரிந்தவர்கள் சாபவிமோசனம் பெற்று நற்கதி அடைய முடியும் என்று கருத்துத் தெரிவித்தனர்.

கங்கையைப் பூமிக்குக் கொண்டுவர அம்சுமானால் முடியவில்லை. அவனது மகன் **அசமஞ்சனாலும்** முடியவில்லை. அசமஞ்சனின் மைந்தன் **பகீரதன்** தனது முன்னோர்களின் ஆன்மாக்கள் முத்தியடையக் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவர வேண்டிக் கடுந் தவம் செய்தான். அவனது தவத்தை ஏற்று கங்காதேவியும் பூமிக்கு வரச் சம்மதித்தாள். சிவபெருமான் தனது திருமுடியில் கங்கையை விழச் செய்தார். பூமிக்கு வந்த கங்கையானது, பகீரதன் நடந்து செல்ல, அவனைப் பின்தொடர்ந்து பூமியிலே நதியாக ஓடியது. பகீரதன் அவனது முன்னோர்களின் அஸ்திகள் நிறைந்திருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். இதனால் அவ்விடத்திலிருந்த அஸ்தி முழுவதும் கங்கையின் நீரில் கரைந்தன. இதனால் சகரனின் மக்களும் அவர்களுக்குத் துணையாகப் போரிட்ட அனைவரும் முத்தி பெற்றனர். இச்சிறப்புக் காரணத்தினால் அந்த இடம் '**காசி**' எனச் சிறப்புற்று விளங்குகிறது. அன்றிலிருந்து அத்தலத்தில் ஓடும் கங்கையில் தங்களது முன்னோர்களின் அஸ்தியைக் கரைத்து அவர்களை முத்தியடைவித்து வருகின்றனர் முன்னோர்கள்.

இச்சிறப்புடைய கங்கையைத் தனது திருமுடியில் தாங்கிய சிவபிரான், மீனாட்சியம்மனைத் திருக்கலியாணம் செய்தற் பொருட்டு மதுரை வந்தார். அப்போது விருந்து உண்டு களித்த குண்டோதர பூதத்தின் தாகத்தைத் தணிக்கத் தண்ணீர் தேவைப்பட்டது. எனவே சிவபெருமான் குண்டோதரனிடம் '**கை-வை**' எனச்

சொல்லித் தனது சடாமுடியிலிருந்த கங்கையைச் சிறிது அவிழ்த்து விட்டார். அந்நாளிலிருந்து கங்கை நதியானது, பாண்டிய நாட்டிலே வைகை நதியாக ஓட ஆரம்பித்தது. குண்டோதர பூதம் வைகை ஆற்றுநீரைக் குடித்து விடுவதால் வைகைநதி கடலில் கலப்பதில்லை.

இதனால் கங்கை நதிக்கரையில் காசி எவ்வளவு சிறப்புடையதோ அதைவிடச் சிறப்புடன் வைகை நதிக்கரையில் திருப்பூவணம் விளங்குகிறது.[203]

### 3.1.8.4.1. காசிக்கு வீசம் கூட

*" காசிகெயையீசனடிகாமர்புனன்மூழ்கி*
*நேசமோடிறைஞ்சினர்கணோர்ந்தபலனெல்லாம்*
*பூசுரர்களாசைதருபூவணமெனும்பே*
*ராசில்பதிவந்தடையுமையமிலையம்மா" (பாடல் 390)*

பிற தலங்களில் செய்த பாவங்களைக் காசியில் தீர்க்கின்றனர்.

*"காசிநகரிற் செய்த கடுங்கொடிய பாவம்*
*பூசுரர் தினம் பரவு பூவணமதிற்போ*
*மோசைதரு பூவண முஞற்றியிடு பாவ*
*மாசரிய பூவணமதன் கணது தீரும்" (பாடல் 402)*

காசியில் செய்த பாவம் பூவணத்தில் தீரும். பூவணத்தில் செய்த பாவம் பூவணத்திலேயே தீரும். இதனால் "பூவணம் காசியிலும் அதிகம்" என்று கூறப்படுகிறது.

*"எண்ணிறைந்தநன்மணிகனிகையினெய்தியாடுதல்*
*கண்ணினண்ணு **பூவணக்காசி** லிங்கதரிசனம்*
*புண்ணியம்புரிந்துளோர்தமக்குநேர்பொருந்திடும்*
*பண்ணுபாதகர்க்கொர்காலமும்பலித்திடாதரோ" (பாடல் 419)*

*"பாசமோசன தீர்த்தமென்பது பண்டுகண்டது கேட்டதாய்க்*
***காசி மாநகரத்தினும் மிது கட்டுரைதிட வொண்ணுமோ***
*பேசின் முன்னமருந்தவஞ்செய் பிதாக்களுங் கதி பெற்றனர்*
*பூசுராதிபர் போற்றுமிப்பதி பூர்வமாமிது புகலிலே" (பாடல் 550)*

*"**காசினியிடத்து மேலாங்** காசிபன்றனக்கு மிக்க*
*வாசிலா வழகு பூத்தவணியிழைய திதியென்பா*
*டேசுற நிவந்துவாளிற் செறியிருள் விழுங்கி யெங்கும்*
*வீசு செங்கதிரோன் றன்னை மேதினி விளங்க வீன்றான்" (பாடல் 630)*

என்றும் புகழ்ந்துரைக்கப் பெற்றுள்ளது.

*"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை"*[204] என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு இணங்கத் திருப்பூவணமானது மிகவும் பெருமைமிகுந்த திருத்தலங்களுடன் ஒப்பிட்டுக் கீழ்க்கண்ட பாடலில்

*"புகலரிய கேதாரமலை காசி மாகாளம் புட்கரஞ்சீர்*
*திகழ் கமலாலயந் தில்லைவனந் தீதில் வேதவனந் திருவெண்காடு*
*மகிழ்தரு தென்மதுரைதனின் மருவு கதியைப் பெறுவான் வைகுவோர்சேர்*
*மிகு பலமானவை யனைத்து மேவுவர் பூவணநகரின் மேவுவோரே " (பாடல் 1287)*

சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளது.

இதனால் திருப்பூவணத் தலமானது, தெட்சிண காசி என்றும் திருப்பூவணக் காசி என்றும் பெயர் பெற்று நிலைத்த புகழுடன் திகழ்கிறது.

### 3.1.8.5. சதுர் வேத புரம்

வேதவியாதன், வசிட்டன், கவுதமன், வாமதேவன், மார்க்கண்டேயன், தீதரன், சதானந்தன், பாரத்துவசன், சவுகன், பாற்கரன் முதலான முனிவர்கள் எல்லாம் வேதங்களை நன்கு கற்றுணர்ந்து திருப்பூவணத்திற்கு வந்து உறைந்தனர். இதனால், பூவணத்தில் "சதுர்மறைமுனிவோர் சதுக்கம்"[205] ஒன்று உண்டானது. அங்கே நான்கு வேதங்களும் முறைப்படி ஓதப்பெற்றன.

*"மேவு நல் வேதவியாதனெண் வசிட்டன் மிக்கசீர்க் கவுதமன் வாம*
*தேவன் மார்க்கண்டனங் கிராத்திகழத்திரிய தீதரன் சதானந்தன்*
*றாவில் பாரத்துவாச னக்கினிபன் சவுனகன் மவுன பாற்கரனோ*
*டோவறுமனைய முனிவர் மாணக் கருடன் மறைமுழுது நன்கோதி (பாடல் 1351)*

*தெரிவருஞ் சீர்மத்தியான காலத்திற் றென் றிருப்பூவணந் தன்னி*
*னொருவரு முள்ளத்துணர்வுடன் றூங்கியுவந்தினிதுறை தருமதனாற்*
*புரையிகந்தோங்கும் புகழ் சதுர்வேதபுரமெனப் புகன்றிடு முலக*
*மருள் பழுத்தின் பத்தழுந்து மாதவவிவ்வருந் தலப் பெருமை யாரறிவார்" (பாடல் 1352)*

*"நிருத்தனுண் மகிழநிருத்தமுஞ் செய்து நீடுநற் கனவதிலின்னுந்*
*திருத்தகு மயன் மாறேடியுங் காணாச் சிவலிங்க தரிசனங்காணுஉ*
*வருத்தியாற் கண்களருவி நீர் பொழிய வாநந்த பரவசனாகித்*
*தரித்திடுஞ் சென்னிக் கரத்தினனாகிச் சதுர்மறைத் துதி படித்தனனால்" (பாடல் 253)*

இதனால் திருப்பூவணம் சிறந்த 'சதுர்வேதபுரம்' என்று பெயர் பெற்றது.

### 3.1.8.6. அகழியும் கோட்டையும்

*"மணி நீரு மண்ணு மலையு மணிநிழற்*
*காடு முடைய தரண்" (குறள் - 742)*

மணிநீரும், மண்ணும், மலைபோன்ற கோட்டையும், மணிநிழற் காடும் உடையது திருப்பூவணம். இங்கே கோயிலைச் சுற்றி காடும் அகழியும் கோட்டையும் இருந்துள்ளன. கோட்டையில் கோபுர வாயில்களும் இருந்துள்ளன. இவற்றைப் போன்றே மதுரை, திருப்புத்தூர், திருக்கானப்பேர்(காளையார்கோயில்) மற்றும்

கொடுங்குன்றம்(பிரான்மலை) ஆகிய திருத்தலங்களிலும் அகழி, கோட்டை, கோட்டை வாயில் என இருந்திருப்பதை ஆய்வாளர் நேரில் சென்று பார்த்து ஆய்வு செய்துள்ளார்.

*"ஆரணநான்கு மங்கமோராறு மளவிடற்கரிய பேரொளியாய்*
*நாரணனவனு நாற்றிசைமுகனுங் கனவினுநண்ணுதற் கொண்ணாக்*
*காரணமாயக் காரணவுருவாங் கண்ணுதலன்று கொண்டருளும்*
*பூரண ஞானச் சுடர்ப்பிழம்பெனவே **பொன்மதின்** மன்னியதன்றே" (பாடல் 180)*

*"நாடுறயார்க்கு நனிசிறந்தோங்கு நற்பொறியுடுத்த பொற்புரிசை*
*மாடுறு சீரார்வாரி சேர்கின்ற வண்மையை யாதெனவகுப்பா*
*நீடு பல்லுலகை நிரப்பி யுன்னதமாய் **நேமிமால்வரை** யதன் பாங்கர்ப்*
*பீடுறமன்னும் பெரும்புறக் கடல்போற் பிறங்கு **பேரகழி** சூழ்ந்திலகும்" (பாடல் 185)*

அந்த அகழியில்

*"கோலமாரகழிற்குளித்திடுகுன்றக்குஞ் சரந்தனைத்திமிங்கலந்தான்*
*சாலும் வெம்பசி தான்றணிந்திட விழுங்கித் தன்னகட்டடக்கிடுந்" (பாடல் 188)*

மேலும்,

*"அன்ன **பேரகழி** கன்னழகொழுகு மங்கண்வானத் துயர்ந் தோங்கு*
*மன்னியதேருர் மணிமறுகின் பால்வயிரவான் றூணிரை நிறுவித்*
*துன்னு செம்பவளப் போதிகை தாங்குஞ் சுடர் மரகதத்துலாஞ் சேர்த்திப்*
*பொன்**மதிலமைத்துப்** புலமணியழுத்திப் பொற் புறச்சித்திரம் பொறித்து (பாடல் 190)*

*தருமொளி பரப்பஞ் சந்திரகாந்தந் தரையெலாஞ் சீர்பெறச் சமைத்துப்*
*புகழ்பெற மிகு செம்பொன்னினால் வேய்ந்து **பொற்சிகரம்** பலவமைத்துத்*
*திகழ்பெறு கமலபீடிகை மருவு திரு**மணிவாயில்** கடோறு*
*மகிழ்தரு மாடகூட மண்டபங்கண் மாளிகை சூளிகை நெருங்கும் " (பாடல் 191)*

இவ்வாறு திருத்தலத்தில் அகழியும் கோட்டையும் கோபுரங்களும் அமைந்திருந்த பெருமைகள் புராணத்தில் கூறப்பெற்றுள்ளன.

அகழி மற்றும் கோட்டை தற்போது இல்லை. கோயிலின் இடப்புறத்தே கோட்டை இருந்த இடம் தற்போது மேடாக உள்ளது. இதனைக் 'கோட்டைமேடு' என்று மக்கள் அழைக்கின்றனர். இப்பகுதியில் தற்போது மக்கள் குடியிருப்புகள் தோன்றியுள்ளன. கோயிலுக்கு உள்ளே செல்வதற்குப் படிகள் கீழிறங்கிச் செல்கின்றன. கோயில் உட்பிரகாரமானது, கோபுரத்தின் தளத்தைவிட உயரம் தாழ்ந்தே இருக்கிறது.

### 3.1.8.7. மாட கூட மண்டபங்கள்

திருப்பூவணத்திலே திருக்கோயிலைச் சுற்றிலும் மாடங்களும், கூடங்களும் மண்டபங்களும் நிறைந் திருந்திருக்கின்றன.

*"சீர்மணிமாடந்தன்னிற்சித்திரகூடந்தன்னி*
*லேர்பெறுமாமியத்தினெழுநிலைமாடந்தன்னிற்*
*றோரணவீதிவாயிற்சுடர்மணிமண்டபத்திற்*
*பூரணகுடநற்றீபம்பொங்குவெங்கதிரிற்பொங்க" (பாடல் 493)*

என்ற பாடலில் மணிமாடம், சித்திரக்கூடம்(சித்திரமண்டபம் 671), எழுநிலைமாடம், தோரண வீதி, சுடர் மணி மண்டபம் ஆகியன குறிப்பிடப்பெற்றுள்ளன. 494ஆவது பாடலிலே நிலாமுற்றம் குறிப்பிடப்பெற்றுள்ளது.

பிரமசபமோசனச் சருக்கத்திலே பிரமதேவன், நாடகம் தினம்பயிலும் மண்டபம் (பாடல் 758) மற்றும்,

*"மன்னுதேரூருர்மணிமறுகுதோறுநீள்*
*பன்னுமெண்ணெண்கலைபயிலுமண்டப*
*மன்னமன்னவர்நடமாடுமண்டபந்*
*தன்னிகர்தரவருதானமண்டபம்" (பாடல் 761)*

ஆகிய மண்டபங்களைக் கட்டுவித்தான் என்று கூறப்பட்டுள்ளது. இம்மண்டபங் களைத் தவிர,

*"அன்னமென்னடையா ராடுமாடரங்குமணிமணிக்கோபுரநிரையு*
*மன்னவர்திறைகளளக்குமண்டபமும் வண்டமிழ்க்கழகமண்டபமு*
*முன்னையாரணங்கண்முழங்கு மண்டபமும் முரசதிருமண்டபமுந்*
*தன்னிகர்தருநற்றான மண்டபமுஞ் சார்ந்தபல்வீதியு நெருங்கும்" (பாடல் 192)*

*"மந்திரமொடுநற்றந்திரம்பயிலும் வைதிகசைவநன்மடமுஞ்*
*சந்ததம் பயிலுஞ்சதுர்மறைமுனிவோர் சதுக்கமும் வணிகர்சந்திகளுஞ்*
*சிந்தையின் மகிழ்ச்சி யோங்குபல்பண்டஞ்சேர்ந்திடுங்கோலமார்தெருவு*
*மந்தமில்குடிகளமர்ந்து வாழ்கின்ற வாவணமெங்கணுநெருங்கும்" (பாடல் 193)*

என்ற பாடல்களில் நடனமாடும்அரங்கு, திறைகள் அளக்கும் மண்டபம், தமிழ்க்கழக மண்டபம், ஆரணங்கள் முழங்கு மண்டபம், முரசதிரும் மண்டபம், தான மண்டபம், தந்திரம் பயிலும் சைவ மடம், முனிவர் சதுக்கம், கடைவீதி ஆகியன குறிப்பிடப் படுகின்றன.

*"மன்னுநல்விசுவகன்மனைக்கருதிவம்மினென்றுகொடுவல்லைகூய்ப்*
*பொன்னினோங்குவளர்புரிசையைந்தினொடுபொற்பினீடுமுயர்கோபுரந்*
*துன்னுகின்றசிகரங்களோடிலகுசோதிமாமணிகொளாலயம்*
*பன்னுமாடமிகுமண்டபங்கள் சிலபண்டுபோற்பரிதிகண்டனன்" (பாடல் 282)*

என்ற பாடலிலே கோபுரங்களையும், மாடம்மிகு மண்டபங்கள் சிலவற்றையும் பண்டைக்காலத்தில் இருந்தது போன்றே சூரியன் கண்டான் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. மேலும் பாடல் 671இல் சித்திரமண்டபம் பற்றிக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

திருப்பூவணநாதருக்குக் குடதிசையில் கூவிளி தூரத்தில் நளமகாராசன் ஆயிரம் தூண்களைக் கொண்ட யாகமண்டபம் ஒன்றை நிறுவி, அங்கே அசுவமேத யாகம் செய்தான் என்று 1320ஆவது பாடலிலே கூறப்பட்டுள்ளது.

இப்போது இம்மண்டங்கள் ஏதும் இல்லை. அவைகளை அகற்றி, அவற்றின் கற்களைக்கொண்டு திருக்கோயில் மதிலை அமைத்துள்ளனர். எனவே இம் மண்டபங்களில் இருந்த கல்வெட்டுகள் சிதையுண்டு கோயிலின் சுற்றுச் சுவர்களில் பகுதிபகுதியாக காணக்கிடக்கின்றன.

3.1.8.8. **வாஸ்து புருடன்**

அண்டத்தின் வடிவத்தை 'விராட புருடன்' (விராட புருஷன் அல்லது வாஸ்து பூதம்) என்று வாஸ்து இலக்கணம் குறிப்பிடும். தாமரை மலர் போன்ற கண்களைக் கொண்ட திருமாலின்(புண்டரீகன்) மனைவியான 'திரு'(மகாலெட்சுமி) பொருந்தியுள்ள திருப்பூவணமானது, விராடபுருடனின் முகமாகும்.

*"அண்ட மோர் விராட்புருடன்ற னங்கமாம்*
*புண்டரீகத் திருப் பொருந்தும் பூவணங்*
*கொண்ட பேரெழில் குடிகொண்டவன் முக*
*மண்டலமாகவே மறைந்து வைகுமால்" (பாடல் 413)*

என்று வாஸ்து இலக்கணப்படித் திருப்பூவணத் திருத்தலத்தின் சிறப்பு பாடப் பெற்றுள்ளது.

## 3.2. தீர்த்தம்

இறைவனது ஆலயத்திற்கு அருகில் அமைந்துள்ள நீர் நிலையே தீர்த்தமாகும். *"நீரின் றமையா துலகு"*[206] என்கிறது திருக்குறள். அதைப் போல், "**தீர்த்தமின்றி மூர்த்தி யில்லை**"[207] என்று கூறுமளவிற்குத் தமிழ் நாட்டில் குளமோ, கிணறோ, ஆறோ, கடலோ தீர்த்தமாக அமைந்திருக்கும் இடத்தில்தான் திருக்கோயில்கள்

அமைந்திருக்கின்றன. சிறு தெய்வங்களும் நீர்நிலைகளின் அருகிலேயே அமைந்திருக்கும்.

தலத்து இறைவனை நீராட்டுவதற்கும், தலத்திற்கு வரும் மக்கள் இறைவனை வணங்கி வழிபடச் செல்வதற்கு முன்னர்த் தங்களது உடலைத் தூய்மை செய்தற்கும், அங்கே விருட்சங்கள் வளரவும், மனிதர்களும் மிருகங்களும் நீர்பருகவும் பூசைக்கு உணவு சமைக்கவும் தீர்த்தங்கள் ஏதுவாக அமைந்துள்ளன.

ஆன்மா செய்த பாவ புண்ணியங்களின் அடிப்படையிலேயே இப்பிறவி அமையப்பெறும் என்ற சித்தாந்தத்தின் அடிப்படையில், பாவங்களைப் போக்கிக் கொள்ளவும் புண்ணியங்களைச் சேர்த்துக் கொள்ளவும் இத்தீர்த்தங்களில் தீர்த்தமாடுதல், வழிபாட்டில் ஓர் நியமமாகக் கொள்ளப்படுகிறது.

*"தீது நீங்கக் கடலாடியும் மாசு போகப் புனல் படிந்தும்"*[208] என பட்டினப் பாலை எடுத்துரைக்கிறது.

சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டம் நீர்ப்படைக்காதையில் மாடலமறையோன் கூற்றாக

*"என்வாய்க் கேட்டோர் இறந்தோர் உண்மையின்*
*நன்னீர்க் கங்கை ஆடப் போந்தேன்*
*மன்னர் கோவே வாழ்க ஈங்கு என"* (109-110)

'கோவலனுக்கும் கண்ணகிக்கும் ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் நான் என் வாயால் கூற, அது கேட்டுப் பலர் இறக்க நான் காரணமாகி விட்டேன். எனவே அந்தப் பாவத்தைப் போக்க வேண்டி, நான் இப்போது கங்கையில் புனித நீராடப் போகிறேன்' என்று மாடலமறையோன் கூற்றாகக் "கங்கையில் தீர்த்தமாடுதல் பாவங்களைப் போக்கும்" என்று கூறப்பெற்றுள்ளது.

*"கோழியும் கூவின குக்கில் அழைத்தன*
*தாழியுனீலத் தடங்கணீர்! போதுமினோ,*
*ஆழி சூழ் வையத்தரவன் ஆடியேத்தக்*
*கூழி நனையக் குடைந்தும் குளிர்புனல்*
*ஊழியும் மன்னுவாம் என்றேலோர் எம்பாவாய்"*[209]

என்ற பாடலில் வைகறை வருணனை, நீராட அழைத்தல், ஆண்டவன் அடி போற்றுதல், குடைந்து நீராடல், போன்றவை சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளன.

*" கனைக்கும் அதிர்குரல் கார்வான நீங்கப்*
*பனிபடு பைதல் விடுதலைப் பருவத்து*

*மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை*
*விரிநூல் அந்தணர் விழவு தொடங்க*
*வெம்பா தாக வியனில வரைப்பென*
*அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்*
*முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்*
*பனிப்புலர் பாடிப் பருமணல் அருவியின்*
*ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்*
*நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்*
*றையன் மகளிர் ஈரணி புலர்த்தர,*
*வையை நினக்கு டைவாய்த் தன்று,*
*மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து*
*பொய்யாட லாடும் புணர்ப்பின் அவரவர்*
*தீயெரிப் பாலும் செறிதவ முன் பற்றியோ*
*தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்*
*நீயுரைத்தி வையை நதி"* [210]

"கறுத்த மேகங்கள் இடிக்கும் குரல் நீங்கப்பனி மிகுதலால் குளிரால் நடுங்குதலை உடைய முன்பனிப் பருவத்தில் சூரிய வெப்பம் தாக்காத கடைமாரியையுடைய மார்கழி மாதத்திலே, நிறைமதி நாளாகிய திருவாதிரையில் ஆகமங்களை உணர்ந்த பூசகர் தெய்வத்திற்குத் திருவிழாவைத் தொடங்கினராக, 'பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக' என்று சொல்லி, அம்பா ஆடலைச் செய்வதற்குக் கன்னிப் பெண்கள் கூடி, சடங்கறிந்த முதிய பார்ப்பனிமார் நோன்பு நோற்கும் முறையைத் தெரிவிக்க, பனியையுடைய அருணோதயத்திலே நீராடி, நீர்வாடை வீசுவதால் கரையில் தங்கி இருக்கும் அந்தணரது வேதாக்கினியை அக்கன்னியர் வணங்கனவராய், அவ்வக்கினியிலே தம் ஈரத்தை உலர்த்தி நிற்க, அவ்வந்தணர் வேள்வித்தீயில் பெய்யும் அவிசானது வையையே! உனக்கு வாய்ப்புடையதாய் இருந்தது. ஓலையைப் பிடித்துப் படிக்கும்இனிய ஆண்மக்களோடு காமக் குறிப்பில்லாத விளையாடும் கூட்டத்தினராகிய அச்சிறுமியர் புலன்களடக்கித் தீ முன்னர்ச் செய்யும் தவத்தை முன் (பிறவிகளில்) அடுத்தடுத்துச் செய்ததனால் போலும் தாய் அருகாக நின்று தவமாகிய தைந்நீராடலை, வையையே! நின்னிடமாக வாய்க்கப் பெறுவாராயினர். இதனை நீ கூறுவாயாக[211] - எனத் திருவிழாத் துவக்கத்தின்போது தைம்மாதம் வையையில் நீராடினர் என்று பரிபாடல் 11இல் ஆசிரியர் நல்லந்துவனார் குறிப்பிடுகிறார்.

### 3.2.1.பூவணத்துப் புண்ணியம்

திருப்பூவணப் புராணக்கதைகளை உள்ளடக்கிய இருபது சருக்கங்களிலும் திருப்பூவணத்தில் உள்ள தீர்த்தங்களைத் தோற்றுவித்தவர், தோற்றுவித்த இடம், தோற்றுவித்த நோக்கம், தீர்த்தமாடுவதற்குச் சிறந்த கால நேரம் மற்றும் தீர்த்தமாடுவதால் கிடைக்கும் பலன் ஆகியன விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன. திரணாசனன் என்பவன் மிகவும் பக்தியுடையோன். அவன் ஒருமுறை உரோமச முனிவரை அணுகி,

*"குருபர வெனக்கு நீயேகூறிடு கதி வேறின்றான்*
*மருவும் யாகாதிகன்ம மா விரதங்கள் சாந்தி*
*யரிய நற் றவந்தானங்களன்றியே யெளிதிற் சேரு*
*முரியதோர் கதிக் குபாயமுண்டெனி னுரைத்தல் வேண்டும்" (பாடல் 361)*

என்று பணிந்து வேண்டினான். அதற்கு அம்முனிவர்,

*"நற்கதிபலவுஞ் சென்று நான்மறை விதிவழாம*
*லற்புத மருவு **தீர்த்தமாதடி** நீயாங் காங்குற்ற*
*சிற்பரமாகி யோங்குஞ் சிவலிங்கங் கண்டு சூழ்ந்தே*
*யுற்ற பேரன்பினோடு முவகை யினுறப் பணிந்து" (பாடல் 365)*

*"மதிவலோய் வாரி சூழு மலர்தலை யுலகம் போற்ற*
*விதிமுறை விசேடித் தன்பின் மிக்க தானங்க ணல்கித்*
*துதிகொடிம் முறையினாற் றிற் றொல்பவ மொல்லை நீங்குங்*
*கதி பெறலாகு மின்றேற் காணலாந் தகைய தன்றே " (பாடல் 366)*

என்று தொன்மையான சிவத்தலங்களுக்குச் சென்று விதிவழுவாமல் தீர்த்தமாடிச் சிவலிங்கத்தை பேரன்பினோடு உவகையிற் பணிந்து வேண்டினால் எளிதில் சிவகதி அடையலாம் என்று அம்முனிவரும் கூறியருளினார்.

திருப்பூவணத்திலுள்ள தீர்த்தங்களின் அருமை பெருமைகளைக் கூறினாலே புராணம் முழுமையையும் கூறியது போலாகும். அவ்வளவிற்குத் தீர்த்தங்களின் பெருமைகள் எடுத்தியம்பப் பெற்றுள்ளன. மேலும் தீர்த்தங்களின் பெயராலேயே சருக்கங்களின் பெயர்கள் அமைத்துப் பாடப் பெற்றுள்ளன. தீர்த்தங்களுக்குத் தனிச்சருக்கம் அமைக்கப்பட்டிருப்பது போன்று தலத்திற்கோ விருட்சத்திற்கோ தனிச்சருக்கங்கள் ஏதும் வடமொழி மூல புராணத்தில் அமைத்துப் பாடப்பெறவில்லை. இதனால் இறைவன் இறைவிக்குச் சமமாகத் தீர்த்தங்களின் சிறப்புகள் உள்ளன என்பது தெளிவு.

## 3.2.2. திசைகள் தோறும் தீர்த்தங்கள்

ஆறு, குளம், குட்டை, வாவி (கிணறு) எனக் கடல் நீங்கலாக அனைத்து விதமான தீர்த்தங்களும் திருப்பூவணத்தில் உள்ளன.

*"உத்தமமா**நவதீர்த்தத்து**ண்மையு*
*மித்தலப்பெருமையுமெடுத்தியம்பொணா*
*தத்துணையெனினுநெஞ்சமைகிலாமையாற்*
*சுந்ததநற்சவுனகதொகுத்ததுச்சொல்லுகேன்" (பாடல் 1339)*

என்ற பாடலில் திருப்பூவணத்தில் நவதீர்த்தங்கள் உள்ளன என்று கூறப்பட்டுள்ளது. அவை, 1) பாவநாச தீர்த்தம், 2) மணிகர்ணிகைத் தீர்த்தம், 3) பிரம தீர்த்தம், 4) விஷ்ணு தீர்த்தம் 5) இலக்குமி தீர்த்தம், 6) சந்திர தீர்த்தம், 7) மார்க்கண்டேய தீர்த்தம், 8) வசிட்ட தீர்த்தம், 9) இந்திர தீர்த்தம் என ஒன்பது தீர்த்தங்கள் உள்ளன. "தீர்த்தங்களே திருப்பூவணம்" என்று சொல்லுமளவிற்குத் திசைகள் தோறும் தீர்த்தங்கள் நிறைந்துள்ளன.

### 3.2.2.1. பாவநாச தீர்த்தம் -

*"சிவபிரான்றனது திருமுன் மேவு நதி தீர்த்த மன்னுமொரு சார்பினி*
*னிவறல் சேர்தருமொரெய்யும் வெங்கணை யெழுந்து சென்று விழுமெல்லை வாய்ப்*
*பவமெனும் பரலையெரி கொளுத்து மிகு **பாவநாசம**தெனும்பெயர்*
*நவையிறீர்த்த மதினாடினர்க் குலகநாடு முத்தியது கூடுமால்" (பாடல் 294)*

மூல லிங்கத்தின் நேர் பார்வையில் ஓடும் வைகையாறே பாவநாச தீர்த்தமாகும். இதற்கு 'வேகவதி' என்ற பெயரும் உண்டு.

*" கேடிலாத கிருட்டிண வேணி நல்*
*வீடு நல்கிடும் **வேகவதி**ம் மிகும்*
*பீடிலங்கு சொற்பே சுப்ரயாணமாஞ்*
*சேட தீர்த்தந் திகழுந் திருநகர் " ( பாடல் 371)*

*"அங்க ணமர்கின்ற சிவலிங்கம தொன்றரசநின தருங் குலத்துப்*
*பொங்கு கதிரோன் பூசை புரிந்திடு பொற்பினதாகிப் போக முத்தி*
*செங்கை குவித்தெரேனுந் தெரிசனஞ் செய்தளவி லருள் செய்வதாய் வெண்*
*சங்குலவும் **வேகவதித்** தடங்கரையின் றென் மேல் பாற்சார்ந்து வைகும் " (பாடல் 1223)*

இவ்விரண்டு பாடல்களிலும் வைகைநதியானது வேகவதி எனப் பாடப் பெற்றுள்ளது.

இந்நதியிலே சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்திலே முழுமதியுடன் கூடிய நாளிலே தீர்த்தமாடித் திருப்பூவணநாதரை வணங்குவோர் நற்கதி அடைவர். சூரிய உதயத்திற்கு முன் இதில் மூழ்கி, சிவராத்திரியிலே தூக்கமின்றி, நான்கு யாமமும்

விழித்திருந்து சிவபூசை செய்து தானங்கள் செய்வோர், இறுதியிலே சிவலோகம் சேர்ந்து வாழ்வர்.[212]

### 3.2.2.2 மணிகர்ணிகைத் தீர்த்தம்

*"அன்ன தொல்சிறப்பி னருந்தவ மிழைக்கு மந்தநற் பொற்கொடி யான*
*கன்னி **தன்முன்னே** கருங்கடற்றோன் றுங்கதிர்க் குலம்பரப்பு மாதவன்றான்*
*பன்னு மான்மாக்கள் பாவத்தை யொறுப்பான் பண்புறத் திரு**மணிகன்னி***
*யென்னு **நற்றீர்த்தமே** மூலகேத்த வெழில் பெறத் தொட்ட தொன்றுண்டால்"*

(பாடல் 240)

மின்னன்னை கோயிலுக்கு(முருகன் கோயிலாகத் தற்போது உள்ளது) எதிரே உள்ள மிகப் பெரிய குளமே மணிகன்னிகா தீர்த்தமாகும். இதற்கு மணிகன்னிகா தீர்த்தம், மணிகுண்டம், தேவி குண்டம் என்ற பெயர்களும் உண்டு. இது சூரியனால் சதுரவடிவில் தோண்டப் பெற்றது.

*"திக்கில கொளிப்பரப்புந் தினகர கேளெமக்கிங்*
*கக்கினி கோணந்தன்னி லரும் பெருந்தீர்த்த மொன்ற*
*மிக்க பூமுகை யவிழ்ந்து வெறிகமழ் தரவிளங்குந்*
*தக்க நின் னாமந்தன்னாற் **சதுர** மதாகத்தந்து" (பாடல் 264)*

இதில்,

*"சித்திரைகொள் சித்திரைமெய் திங்கள் கலைசேர்நாள்*
*வைத்த புகழாதபனன் மந்திர நவிற்றி*
*யுய்த்த மணியோடை யினினுச்சிதனின் மூழ்கி*
*நித்தனை வணங்குநர்கணீடுகதி சேர்வார்" (பாடல் 295)*

இத்தீர்த்தத்திலே விண்ணுலகத்திலிருந்து அமிர்தத்துளி ஒன்று மணியாய் வந்து வீழ்ந்தது.

*"நாமநீர் வையம் போற்று நல்லமிர்தாம் மிசத்தொன்*
*றேமமாம் புட்பமாகி யின்னமுதுருவ மன்னிப்*
*பூமகள் பொருந்தி வாழும் பொழிறிகழ் பூவணத்தின்*
*மா மணிகன்னிகைக் கண்வந்தது வீழ்ந்ததன்றே" (பாடல் 329)*

அதனால் இத்தீர்த்தத்தைப் பருகினோர் மண்ணுலகில் நீடுவாழ்வர். முடிவிலே கைலாயஞ் சேர்வர். அறிந்தோ அறியாமலோ இத்தீர்த்தத்தில் உயிர்நீத்தோர் சுவர்க்கம் சேர்வர். இறந்தோரின் ஓர் அங்கமோ எலும்போ இத்தீர்த்தத்தில் வீழ்ந்தால் அந்த உடலுக்குடையவர் சிவகதியடைவர். இத்தீர்த்தக் கரையிலே நீத்தார்களுக்குத் தர்ப்பணம் செய்தால், நீத்தார்கள் பெரிதும் மகிழ்ந்து தனது சந்ததியினரை

ஆசிர்வதிப்பர். இதனால் சிவபெருமான் உள்ளம் மகிழ்ந்து, நீத்தார்களுக்கும் அவர்களுடைய சந்ததியினருக்கும் நற்கதியை வழங்குவான்.

*"அரியய னுருந்திர னமரர்கோன் கடற்*
*றரைபுகழ் நாரதன் சனகனாதியர்*
*கருடர் கந்தருவர் நற் கபில ரேனையர்*
*திரு மணிகன்னிகைத் தீர்த்தம் வாழ்வரால் (பாடல் 416)*

இத் தீர்த்தத்திலே, அரி(திருமால்), அயன்(பிரமன்), ருத்திரன்(சிவன்), அமரர்கோன்(இந்திரன்). நாரதன், சனகாதி முனிவர்கள், கருடர், கந்தருவர், கபிலர், மற்றும் பல தேவர்களும் முனிவர்களும் இத்தீர்த்தத்திலே வாழ்கின்றனர். இதனால் இத்தீர்த்தம் மிகவும் சிறப்புடையது.

இத்தீர்த்தத்தைப் பிரமதேவன்,

***"தன்கைதரித்ததொர்தண்டதுகொண்டே***
***யன்பொடுகல்லினனங்கைகள்**செய்ய*
*நன்குறுதீர்த்தநயப்பொடுகண்டே*
*பொன்பயிலுந்திருக்கோயில்புகுந்தான்" (பாடல் 731)*

என்று அத்தீர்த்தம் மராமத்து செய்யப்பெற்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு திருப்பூவணத்தில் சிவபெருமானுக்குச் சமமாக மணிகன்னிகா தீர்த்தத்தின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

**தீர்த்தத்தின் இப்போதைய நிலை**

மணிகன்னிகா தீர்த்தத்தின் பெருமைகளைப் புராணம் மிகவும் வெகுவாகப் புகழ்ந்து கூறுகிறது. இதிலே இறந்தால் முத்தி நிச்சயம் என்ற நம்பிக்கையில் அந்திமக் காலத்தில் ஆதரவற்று இருந்த முதியோர் பலர் இத்தீர்த்தத்திலே வீழ்ந்து இறக்கலாயினர்.

*"மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி*
*மறைந்தொழுகு மாந்தர் பலர்"[213]*

என்ற வள்ளுவன் வாக்கிற்கு இணங்க, மனத்தது மாசாக இருந்த பலரும் முத்தியடையும் பொருட்டு இத்தீர்த்தத்திலே வீழ்ந்து இறக்கலாயினர். *"அரசர்களும், அரசபதவிகளில் உள்ளோரும் தீர்த்தமாட வரும்போது தீர்த்தத்திலே வீழ்ந்து இறந்தோரைத் துக்கிச் செல்லும் நிகழ்ச்சிகள் நடைபெற்றதாலும், கோயிலைச் சுற்றி மதில் அமைக்கப்பட்டதாலும் இத்தீர்த்தம் சிறிது சிறிதாக மூடப்பட்டு, அங்கே தென்னை மரங்கள் நடப்பட்டுள்ளன".*[214] தற்போது திருக்கோயில் வளாகத்தின்

உள்ளே அம்மன் சந்நிதி வாயிலிலே உள்ள கிணறுதான் மணிகன்னிகைத் தீர்த்தமாக விளங்குகின்றது.

### 3.2.2.3 பிரம தீர்த்தம்

இது பிரமனால் உண்டாக்கப் பட்டது. திருக்கோயில் வளாகத்திலே, ஈசான்ய திசையிலே, விநாயகர் சந்நிதிக்கு எதிரே, யானை மண்டபத்திற்கு அருகே கிணறாக உள்ளது.

*"பூர்வமுறு மீசனது முன்னமுறு பூர்வத்*
*தோர்தரு மைஞ்ஞூறு வரிவிற் கிடையினுற்ற*
*தேர்கொள் கடிவாச நனியியற்றிய ததற்குப்*
*பேர்**பிரமதீர்த்த**மெனவே யுலகு பேசும்" (பாடல் 394)*

இத்தீர்த்தத்தில் நீராடினால், அறிந்தோ அறியாமலோ செய்த பாவங்கள் அனைத்தும் நீங்கப்பெறும். கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திர தினத்தன்று பிரமதீர்த்தத்திலே நீராடினால் அரக்கர் உருவம் மாறிச் சுந்தரவதனம் பெறுவர். புத்திசுவாதீனம் குறைந்தோர் இத்தீர்த்தத்திலே நீராடினால் அவர்கள் நல்ல புத்தியைப் பெறுவர்.

*"கார்த்திகை நன் மாதமுறு கார்த்திகை நன்னாளிற்*
*றீர்த்தர் தினமும்படி செழும் பிரமதீர்த்தங்*
*கூர்த்தவறிவோயது குளித்திடு களித்தே*
*யார்த்திடு மரக்கவுருவக் கணம் விடுப்பாய்" (பாடல் 397)*

தற்போது இத்தீர்த்தம் வறண்டு காணப்படுகிறது. பெருமழைக்காலங்களில் சிறிதளவு நீர் இருக்கும் என்கின்றனர்.

### 3.2.2.4 விட்ணு தீர்த்தம்

திருப்பூவணேசருக்கு மேலைத் திசையிலே இரண்டம்பு செல்லுந் தூரத்திலே திருமால் தம் பெயராலே ஒரு சிவலிங்கம் பிரதிட்டை செய்தார். ஒரு தீர்த்தமும் உண்டாக்கினார். சித்திரை மாதத்திலே ஞாயிற்றுக் கிழமைகளில் அத்தீர்த்தத்தில் மூழ்கி விஷ்ணு லிங்கத்தை வழிபட்டோர் பாவம் நீங்கிப் பதமுத்தி பெறுவர்.

*"உரைகொண் மாயனுக்குத் தரத் திசை*
*யரை கொளம்பிடு தூரத் தாழ் கிணற்*
*றுருவ மாகியே யோங்கிடும் புகழ்*
*விரவு மந்த நல்**விண்டுதீர்த்தத்தில்** (பாடல் 852)*
*மண்டு காதலின் வந்து மூழ்கியே*
*விண்டு லிங்கத்தைக் கண்டு மேவினோர்*
*பண்டு செய்கொடும் பாவநீங்கியே*
*யெண்டருஞ் சிவலோகத் தேறுவார்" (பாடல் 853)*

என்று புராணத்திலே புகழ்ந்து கூறப் பட்டுள்ளது.

### 3.2.2.5 இலக்குமி தீர்த்தம்

திருப்பூவணம் கோயிலுக்கு இடப்புறமாக, தற்போதைய வைகை ஆற்றுப் பாலத்திற்கு அருகே பொதுநூலகத்திற்குப் பின்புறம் உள்ள குளம்.[215] இந்த இடத்திலிருந்த இரண்டு மருத மரங்களைக் கொண்டு காளையார் கோயில் தேர் செய்யப்பட்டுள்ளது என்பர்.

### 3.2.2.6 சந்திர தீர்த்தம்

மின்னம்மையின் கோயிற் கொடிமரத்தருகே மடப்பள்ளி அருகே இத்தீர்த்தம் கிணறாக உள்ளது. இத்தீர்த்தத்திலிருந்தே மடப்பள்ளிக்குத் தேவையான தண்ணீரைப் பயன்படுத்தி வந்தனர். தற்போது இதில் தண்ணீர் மிகச் சிறிதளவே உள்ளது.

### 3.2.2.7 மார்க்கண்டேய தீர்த்தம்

*"பாலின் வெண்டரளந் தனைத் திரைசுருட்டிப் பந்தெறிந் தேவிளையாடுஞ்*
*சீலமார் வைகைத் திகழ் புனலிடத்துஞ் சேர்ந்ததெள் ளமுததீர்த்ததுஞ்*
*சாலநீள் வானறோய் **சந்திரதடத்துஞ்** சங்கரன் கோயிலினன் பாற்*
*கோலவாளி யிரண்டிட்டதோ ரெல்லை கொண்ட **மார்க்கண்டதீர்த்தத்**தும் "* (பாடல் 1239)

திருக்கோயிலிலிருந்து இரண்டம்பு செல்லும் தூரத்தில் மார்க்கண்ட முனிவரால் தோற்றுவிக்கப்பட்ட மார்க்கண்டேய தீர்த்தம் உள்ளது. தற்போது மாரியம்மன் கோயிலுக்கு அருகில் உள்ள குளமாக இருக்கலாம் என்று யூகிக்கப் படுகிறது.

*"கூடிய பேரன் புள்ளங் கொண்ட மார்க்கண்ட னென்போன்*
*நீடுமச் சிவலிங்கத் தினிகழ்த்து மான்பான்முன்னாட்டித்*
*தேடரு **மர்த்தநாரீசன்** றனைத் தெரிசித் தங்க*
*ணாடருஞ் சீவன் முத்தி நண்ணின னறிக மாதோ "* (பாடல் 1429)

பாலாபிசேகம் முதலான பல்வேறு திருமஞ்சனங்களையும் மார்க்கண்டன் செய்வித்து அர்த்தநாரீசனை வழிபட்டுச் சீவன்முத்தி பெற்றான் என்று சிதம்பர உபதேசச் சருக்கத்திலே கூறப்பட்டுள்ளது.

### 3.2.2.8 வசிட்ட தீர்த்தம்

மிகுந்த தவவலிமை உடையவரும், வேதங்கள் அனைத்தையும் ஓதி உணர்ந்தவரும், அவற்றைச் சூதமுனிவருக்கு உபதேசித்தவருமான வசிட்ட முனிவரால் தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம் இது. இத் தீர்த்தம் சிவலிங்கத்தின் பார்வையில் இரண்டு

கணை செல்லும் தூரத்தில் உள்ளது. இதில் மூழ்குவோர் சிவபெருமானின் திருவடிநீழலில் வாழ்வர்.

*"கொடு மறலி தனையிடறுங் குரைகழற்காங்கவனுயிரைக் கொள்ளை யீந்த*
*கடுவடக்குங் கந்தரத்தெங் கண்ணுதலோன் றிருமு னிருகணையோ மெல்லை*
*நடுவறு நன்மாதவத்து வசிட்ட முனிவன் கண்ட **வசிட்டதீர்த்தம்***
*படிபவர் பண்பாடியறுபதந்துவைக்கும் பங்கயன்றன் பதத்தைச் சேர்வார்"* (பாடல் 1281)

இத்தீர்த்தம் இருந்த இடத்தைப் பலரிடம் கேட்டும், நூல்களைப் படித்தும், நேரில் சென்று பார்த்தும் ஆய்வாளரால் சரியாகத் தெரிந்துகொள்ள இயலவில்லை. ஆற்றின் வடகரையில் ஆடித்தபசு மண்டபத்திற்கு அருகில் முன்பு குளமாக இருந்து தற்போது மூடப்பட்டிருக்கும் என்று யூகிக்கப்படுகிறது.

### 3.2.2.9 இந்திர தீர்த்தம்

*"கனை கதிரோன் கடன்முகட்டேழ் கடும் பரிபூண்டிடுமான்றேர் கடாவும் வேலைத்*
*தினம் பொரு போர்களத்தசுரர் செங்குருதி முடைநாறும் வச்சிரத்தான்*
*மனமகிழ்விற்றரு கிருதமாலை மேலணிந்திலங்கு **மிந்த்ரதீர்த்தந்***
*தனிலுயர் பங்குனி தருமுத்தர மாடினோர் யாகபலத்தைச் சார்வார்"* (பாடல் 1282)

கிருதமால் ஆற்றினை மேல் அணிந்து விளங்கும் இந்திர தீர்த்தம் என்று இத்தீர்த்தம் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இத்தீர்த்தத்தில் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் தீர்த்தமாடினால் யாகபலத்தைச் சார்வர். பனிரெண்டு தினம் மூழ்குவோர் சாகயாக பலத்தைப் பெறுவர். ஒருமாதம் மூழ்குவோர் அசுவமேத யாகபலனைப் பெறுவர். இத் தீர்த்தத்தைப் பருகுவோர் அக்கினி ஹோம பலனைப் பெறுவர். இத்தீர்த்தம் மடப்புரம் செல்லும் வழியில் ஆற்றங்கரையில் கிணற்று வடிவில் உள்ளது. அதனருகே ஓர் விநாயகர் கோயிலும் உள்ளது.

### 3.2.2.10 சந்திர தீர்த்தம்

*"பாலின்வெண்டரளந்தனைத்திரைசுருட்டிப்பந்தெறிந்தேவிளையாடுஞ்*
*சீலமார்வைகைத்திகழ்புனலிடத்துஞ்சேர்ந்ததெள்ளமுததீர்த்ததுஞ்*
*சாலநீள்வானறோய்**சந்திரதடத்துஞ்**சங்கரன்கோயிலினன்பாற்*
*கோலவாளியிரண்டிட்டதோரெல்லைகொண்டமார்க்கண்டதீர்த்தத்தும்"* (பாடல் 1239)

என்ற பாடலிலே சந்திரதீர்த்தம் பற்றிய குறிப்பு உள்ளது. இத் தீர்த்தம், தற்போதுள்ள அம்மன் சந்நிதியின் கொடிமரத்திற்கு அருகே கிணறாக உள்ளது.

தீர்த்தங்கள் தீவினை போக்கும், பிணிதுடைக்கும், மக்கட்பேறு நல்கும், செல்வம்அளிக்கும், வீடுபேறு தரும் எனத் திருப்பூவணத்தில் தீர்த்தமாடலின் பயனைத் திருப்பூவணப் புராணம் எடுத்து இயம்புகிறது.

"*உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்*
*மெள்ளக் குடைந்து நின்று ஆடார் வினைகெடப்*
*பள்ளமும் மேடும் பரந்து திரிவரே*
*கள்ள மனமுடைக் கல்வி இலாரே*

என்கிற திருமூலமொழி எண்ணத்தக்கது"[216] என்று கு.வே.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுவார்.

## 3.3. விருட்சம்

*"ஓர் அரசு ஆலும் வேம்பும்*
*ஒருபத்து புளியும் மூன்று*
*சீருடன் விளவும் வில்வம்*
*மூன்றுடன் சிறந்த நெல்லி*
*பேர் பெறும் ஐந்து தென்னை*
*பெருகு மா ஐந்தும் ஒன்றும்*
*யார் பயில் செய்தாரேனும்*
*அவர்க்கில்லை நரகம் தானே"* - இப்பாடல் 'கார்த்திகை புராணத்திலே' இருக்கிறது[217]. ஒவ்வொருவரும் கார்த்திகை மாதத்தில் வளர்பிறையில் ஓர் அரசு, ஓர் ஆல், ஓர் வேம்பு, மூன்று விளாமரம், மூன்று வில்வமரம், மூன்று நெல்லிமரம், பத்து புளியமரம், ஐந்து மாமரம், ஐந்து தென்னை மரம், ஆகிய ஒன்பது புண்ணிய மரங்களையும் வைத்து வளர்த்தால் அவருக்கு நரகம் இல்லையாம். மரங்கள் பற்றிய பயன்களை இப்பாடல் வைதீக முறையில் விளக்குகிறது.

*"பழங்காலத்தில் மக்கள் மரங்களின் அடியிலேயே தெய்வங்களை வைத்து வழிபட்டனர். பின்னர் களிமண், செங்கல், மரம் இவைகளால் கோயில் சமைத்தனர். மரங்களின் அடியில் ஆதியில் கோயில் ஏற்பட்டதால் அந்த மரங்களைப் புனிதமாகக் கருதி அவைகளைத் தலவிருட்சம் எனப் பெயரிட்டு அழைத்தனர்."*[218] இக்கருத்து தலவிருட்சத்தின் தோற்றம் பற்றிக் கூறுவதாக உள்ளது. இக்கருத்திற்குத் திருப்பூவணமே சிறந்த சான்றாக அமைந்துள்ளது.

வேதம் மற்றும் புராணத்தாக்கங்கள் செல்வாக்குப் பெறுவதற்கு முன்னிருந்த நிலைமையைப் பண்டைத் தமிழ் இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. *"சூர் இருந்த புறவு, 'கடவுள் தங்கிய காடு' என்ற இவ்வரிகள் கடவுள் காட்டில் உறைவதைக் குறிக்கின்றன".*[219] இவ்வாறே திருப்பூவணத்திலும் வைகைஆற்றின் கரையிலே பெருத்த மரங்கள் அடர்ந்த காட்டிலே கடவுள் உறைந்துள்ளார்.

*"எம்மூர் வாயிலில் ஒண்குறைத் தடைஇய*
*கடவுள் முதுமரத்து" (நற்றிணை - 83)*

*"கடவுள் மராத்த முள்மிடை குடம்பை" (அகம் - 270)*

இப் பாடலடிகள், மரங்களில் தெய்வங்கள் உறைவதைப் பண்டைத் தமிழர்கள் அறிந்திருந்தனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன. இவ்வாறே பூவணத்திலும் பாரிசாத மரத்தின் அடியிலே கடவுள் உறைந்துள்ளார்.

*"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்*
*கொழுப்பா எறிந்து குருதிதூஉய்ப் " (அகம் - 309)*

என்ற பாடலடிகள் பருத்த அடிப்பகுதியை உடைய வேம்பில் தெய்வம் உறைந்ததையும், 'கொழுத்த ஆ' பலியிடப்பட்டதையும் குறிப்பிடுகின்றன. திருப்பூவணத்தில் தோன்றியது சிவலிங்கம் என்பதால் பலியிடுதல் இல்லை.

மரத்தின் பருத்த அடிப்பாகம் வழிபாட்டிற்குரிய தகுதியைப் பெற்றிருந்தது. அப்பாகம் 'கந்து' என அழைக்கப்பட்டது. பகைவர் நாட்டிலிருந்து சிறைப் பிடிக்கப்பட்ட பெண்கள் வழிபாடு செய்யப்படும் இந்த இடத்தில் மெழுகிடுதல், விளக்கேற்றுதல் போன்ற பணிகளைச் செய்திருக்கின்றனர். படையெடுப்பின் போது பொதியில் பகுதி அழிக்கப்பட்டது. கந்தில் உறைந்திருந்த தெய்வங்கள் வெளியேறின,

*"கலிகெழு கடவுள் கந்தம் கைவிட ... "* (புறம் -52) என்ற அடிகள் இங்கு குறிப்பிடத்தக்கன. திருப்பூவணத்தில் படையெடுப்புக்களின் போது திருக்கோயில் எவ்விதத்திலும் பாதிப்படைய வில்லை.

பெருந்தெய்வக் கோயில்களில் 'தலவிருட்சங்கள்' இடம் பெற்றுள்ளன. இவைகளைப் புனிதமாகக் கருதும் போக்கும் வழிபாட்டில் இருக்கக் காணலாம். மரம் பட்டுப்போன பின்னரும் அதில் தெய்வம் உறைவதாக தமிழ் மக்கள் நம்பியிருப்பது தெரியவருகிறது. மரத்தைச் சுற்றிலும் பீடம் மாதிரியான அமைப்பும் இருந்திருக்கலாம்.

இச்சூழலிலிருந்து, சிவலிங்க வழிபாடு உருவாகி இருக்கலாம் என அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர்.[220]

உமையம்மை கைலாயத்திலிருந்து எழுந்து தென்திசை நோக்கி வந்து,

*"வாசமலி புட்ப வனத் தெய்தித் - தேசுவளர்*
*செம்**பொற் றருவொன்று** செங்கையால் வைத்துவளர்த்*
*தம்பொற் றருவி னடிநீழற் - கொம்பர்*
*தெருளார் பெருந்தவமுன் செய்ய வெளிப்பட்*
*டருளே திருமேனி யானோன் - ....."[221]*

என்று திருப்பூவணத்தில் சிவலிங்கம் தோன்றிய வரலாற்றைத் திருப்பூவணநாதருலா குறிப்பிடுகிறது. 'பொற்றரு' என்றால், 'பொன்போன்ற தரு' என்று பொருள். இவ்விருட்சத்தைப் பாரிசாதம் என்று புராணம் குறிப்பிடுகிறது. இத்தலவிருட்சம், ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு மரமாக மாறியமைந்து மக்களுக்கு அருளியுள்ளது.

*"..... ..... .... - கோதிலறப்*
*பைங்கூழ் வளர்த்த பசும்பாதி செங்கையான்*
*மங்கா தமைக்க வளர்ந்ததருத் - துங்கமார்*
*ஒருகத்தி லேதருவா யோருகத்தில் வில்லுவமாய்*
*ஒருகத்தில் வன்னியா யோருகத்திற் - சீருற்ற*
*பாரிற் கடவுட் பலாவாய்த் தழைக்கவதன்*
*வேரிற் கிளைத்தமுதல் விண்ணவர்கோன் - .... "*

(திருப்பூவணநாதர் உலா பாடல் அடிகள் 26 - 29)

முதலாம் யுகத்திலே 'தரு' (பாரிசாதம்) தலவிருட்சமாக இருந்தது. இரண்டாம் யுகத்திலே வில்வம் தலவிருட்சமாக இருந்தது. மூன்றாம் யுகத்திலே வன்னி தலவிருட்சமாக இருந்தது. நான்காம் யுகமாகிய இந்தக் கலியுகத்திலே பலா மரம் தலவிருட்சமாக உள்ளது.

*" தேவி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியில்*
*மேவிப் பழுத்த வியன்கனி ... ..."*

(திருப்பூவண நாதர் உலா பாடல் அடி -194)

தேவி வளர்த்த தெய்வப் பலாமரத்தின் அடியிலே 'வேர்ப் பலா' போலச் சிவலிங்கம் முளைத்தது என்று உலாவில் பாடப் பெற்றுள்ளது.

*"தவலருஞ் சிவ நிசிக்கட் சந்நிதி மன்னு தீர்த்தத்*
*தவலமதகலவுன்னியாடியே யன்பின் மிக்க*
*புவன நன்கியாரும் போற்றும் பூவணங் கோயில் கொண்ட*
*சிவபிரான்றனை **வில்வத்திற்** சிறப்புடன் பூசை செய்து " (பாடல் 676)*

என்ற திருப்பூவணப் புராணப் பாடலிலே, சிவலிங்கத்தை வில்வத்தால் பூசை செய்தால் மிகுந்த நன்மையுண்டு என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

*"கா மரமருச்சுநங்காககதுண்ட நீள்*
*பூமிகு குங்குமம் புன்னை **வன்னி** பொற்*
*றேமரு வேல நற்றி கிரி கூவிள*
*மா மலகங் கடம் பார மாதுளம்" (பாடல் 86)*

முதலான மரங்கள் கைலாயத்தில் இருந்தன என்று கைலாயச் சருக்கத்திலே கூறப்பட்டுள்ளது.

*"முதுசுவை தரு மாரமுத விந்துவிற்றான் முளைத்திடுஞ்சுரர் தரு வொன்று*
*துதி பெறு கிரேதாயுகமது முன்னாச் சொற்றகு நான்குகந் தொறுமிப்*
*பதிதனிற் **பாரிசாத மாலூரம்** பன்னரு முயர் புகழ் **வன்னி***
*திதமுறு செம்பொற் **சுனைக் குடக்கனி** சேர் தீம்பலவாகியே திகழும்"* (பாடல் 1361)

என்ற திருப்பூவணப் புராணப் பாடல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாய் உள்ளது.

## 3.3.1. புராணத்தில் தலவிருட்சம்

திருப்பூவணத்தின் தலவிருட்சமான பாரிசாத மரத்தின் தோற்றம், அதன் சிறப்புகள் மற்றும் அது திருப்பூவணத்தில் தோன்றிய வரலாறு ஆகியன இப்பகுதியில் ஆராயப்பெற்றுள்ளன.

பாரிசாதம் என்பதைப் 'பவள மல்லிகை' என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது. "*பாரிசாதம் - பவளமல்லிகை மஞ்சட்பூ இரட்டை விதையிலைத் தாவரம், ஒலியேசியீ என்னும் மல்லிகைக் குடும்பத்தைச் சேர்ந்த நிக்ட்டாந்த்திஸ் என்னும் சாதி. இதில் நிக்ட்டாந்த்திஸ் ஆர்பர் - ட்ரிஸ்ட்டிஸ் (Nyetan thes arbor – tristis) என்னும் ஓர் இனமே உண்டு. சாதிப்பெயர் 'இரவு மலர்' எனப் பொருள் படும். இது இரவின் தொடக்கத்திலே மலர்ந்துவிடும். இது 'இரவு மல்லிகை' என்றும் கலைக்களஞ்சியம் குறிக்கப்படுகிறது[222]*".

அமுதம் வேண்டித் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தனர். முதலில் நஞ்சு தோன்றியது அதனைச் சிவபெருமான் உண்டு திருநீலகண்டர் ஆனார். தாரை, சந்திரன், ஐராவதம் இவையும் தோன்றின. அதன்பின் இலக்குமி தோன்றினாள். பாற்கடலை மேலும் கடைந்தபோது, அமுதம் திரண்டு வந்தது. அமுதம் திரளும்போது சில அமுதத் துளிகள் பூமியிற் சிதறின. அதிலிருந்து பாரிசாதம், கற்பக விருட்சம்[223] போன்ற தெய்வீக மரங்களும் தோற்றம் பெற்றன. பாரிசாதம் தேவலோகத்தில் உள்ள மரமாகும். இது நினைப்பதைத் தரக்கூடிய இயல்புடையது.[224]

தேவலோகத்திலிருந்து பூமிக்கு வரும்போது நாரதர் ஒருமுறை பாரிசாதப்பூ ஒன்றைப் பூமிக்குக் கொண்டு வந்து கிருஷ்ணரிடம் கொடுத்தார். இச் செய்தியறிந்த சத்யபாமா தனக்குப் பாரிசாதமரம் வேண்டுமென்று கேட்கிறாள். அவள் பொருட்டுத் தேவலோகத்திலிருந்த அம்மரத்தைக் கிருஷ்ணர் பூமிக்குக் கொண்டு வருகிறார்.[225] பாரிசாத மரம் கைலாயத்தில் உள்ளது. உமையம்மை தவம்மேற்கொள்ள வேண்டித் திருப்பூவணம் வந்தபோது பாரிசாதத்தின் கிளையைக் கொண்டு வந்து நட்டுவைத்து வளர்த்து அதன் நிழலிலே தவம் செய்தார். இச்செய்தி திருப்பூவணப் புராணத்தில் கீழ்க்கண்ட பாடலில் கூறப்பெற்றுள்ளது.

*"அந்த நல்வனத்தி னாதிகாலத்தி லரி யயன் முதற்கடவுளர்கள்*
*வந்து போற்றிசைக்கு மாண்பினதாகி* ***மலைமகள் வளர்க்கும் வான்றருவாய்ப்***
*புந்திகொள்* ***பாரிசாத*** *மென்றொரு பேர்புனைந்து நீங்காது பொங்கொளியா*
*யிந்திராதியார் சேரெண்டிசாமுகத்து மெங்கணும் பரந்து மிக்கிலகும் "* (பாடல் 237)

இப்பாடலில் "புந்திகொள் பாரிசாதம்" என்று பாரிசாதம் ஓர் அறிவுடைய மரம் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது தாவரவியல் அறிஞர்களின் ஆய்வுக்கு உரிய செய்தியாகும்.

*"அன்ன தொல் புட்பவனத்தது நாப்பணதி மனோகர மிகவுடைத்தா*
*யுன்னத மொரு நான்கரையதாய்ச் சுற்றும் பாத யோசனையதை யுடைத்தாய்ப்*
*பன்னு மூவுலகும் பாரிசாதமெனப் பகர்வதாய்ப் பணைபல வுடைத்தாய்*
*மன்னிய பறவை விலங்குக டம் முள் வருபகை யொழிந்திட வைகும்"* (பாடல் 243)

தொன்மையான வனத்திலே பாரிசாத மரம் உள்ளது. பாரிசாதப் பூவின் மணம், அதனைச் சுற்றிலும் யோசனை(சுமார் 18 கி.மீ.) தூரம் பரவியிருக்கும். இம்மரம் பணை (பருத்த கிளைகள்) பல உடையது. *"பணையே பிழைத்தல் பெருப்புமாகும்"*[226] என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு ஏற்பப் பூவணத்தில் பாரிசாத மரம் பருத்திருந்துள்ளது. இம்மரத்தை அண்டி வசிக்கும் பறவைகளின் மற்றும் விலங்குகளின் உள்ளத்துள்ளே இயற்கையாகவே வரும் பகைமை உணர்வை இம் மரம் ஒழித்திடும். அதனால் இவ்விடத்தில் வாழும் உயிரினங்கள் யாவும் தம்முடைய பகையை மறந்து மகிழ்ச்சியாய் வாழும். பாரிசாதத்தின் சிறப்புகள் திருப்பூவணப் புராணத்திலே மிகப் பலவாய்ச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.[227]

குற்றாலத்துக் கோயிலுக்குத் தலமரம் 'பலா'வாகும். இக்காரணத்தினால், இறைவனுக்குக் 'குறும்பலா ஈசுவரர்' என்று பெயர். மதுரையில் தலவிருட்சம் கடம்பமரமாகும். இதனால் இறைவனுக்குக் 'கடம்பவனேசுவரர்' என்று பெயர். இதே

போன்று பாரிசாதத்தின் அடியிலே திருப்பூவணலிங்கம் தோன்றியதால், திருப்பூவணத்தில் இறைவனுக்குப் 'பாரிசாத வனேசுவரர்' என்ற பெயரும் உண்டு.

திருப்பூவணத்திலே, முதலாம் யுகமாகிய திரேதா யுகத்திலே பாரிசாத மரம்தலவிருட்சமாக இருந்துள்ளது. இரண்டாம் யுகமாகிய கிரேதா யுகத்திலே வில்வமரம் தலவிருட்சமாகவும், மூன்றாம் யுகமாகிய துவாபர யுகத்திலே வன்னிமரம் தலவிருட்சமாகவும், இப்போது நடைபெற்று வரும் நான்காம் யுகமாகிய கலியுகத்திலே பலா மரம் தலவிருட்சமாகவும் உள்ளது. இதனைக் கந்தசாமிப்புலவர்,

*"முதுசுவை தருமாரமுத விந்துவிற்றான் முளைத்திடுஞ் சுரர் தருவொன்று*
*துதிபெறு* ***கிரேதாயுக****மது முன்னாச் சொற்றகு நான்கு கந்தொறுமிப்*
*பதிதனிற்* ***பாரிசாத மாலூரம்*** *பன்னருமுயர் புகழ்* ***வன்னி***
*திதமுறு செம்பொற்சுனைக் குடக்கனிசேர் தீம்* ***பல****வாகியே திகழும்" (பாடல் 1361)*

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும், தலவிருட்சமானது பாதலத்திலிருந்து (deep layer of the earth) முளைத்து வளர்ந்து சிவலிங்க வடிவில் இறைவன் அருள்பொழிகின்றார் என்று அடுத்த பாடலிலே குறிப்பிடுகிறார்.

*"தாதருகுடுத்தசோதிசேர்மடற்பூந்தகட்டுநற்றபனியப்பொகுட்டு*
*மேதகுகமலவேதன்மாலாதிவிண்ணவர்நண்ணரும்பரமப்*
***பாதலத்திடைநின்றெழுந்த****தொர்தாபரமாய்ப்பழவடியார்க்கருள்பொழியுங்*
*காதல்கூர்தலம்போற்கழறுநாண்முன்பின்கருதருங்காட்சியின்மிகுமால்" (பாடல் 1362)*

இதனால் கந்தசாமிப்புலவரது காலத்திற்கு முன்பே பாரிசாதத்திற்குப் பதிலாக பலாமரம் தலவிருட்சமாக விளங்கியுள்ளதை அறியமுடிகிறது.

## 3.4. மூர்த்தி

இந்து சமயம் எவ்வளவு தொன்மையானதோ, அதைப் போன்றே சிவலிங்க வழிபாடும் தொன்மையானது. சிவலிங்க வழிபாடு தோன்றிய இடம் மற்றும் காலம் பற்றித் தீர்க்கமான விடையேதும் கிடைக்கவில்லை. 'சிவம்' என்ற சொல்லின் பொருள் 'மங்களம்', 'மகிழ்ச்சி' என்பனவாகும். *"இலிங்கம் சிவபெருமானின் சின்னம் அல்லது அடையாளம் ஆகும்"*[228]. இலிங்க வழிபாடு எல்லா நாடுகளிலும், எல்லா மக்களின் கலை-கலாச்சாரங்களிலும் இடம் பெற்றுள்ளது. இந்த வழிபாடு பழங்குடி மக்களிடம் இருந்திருக்கக் கூடும். இந்து சமயம் அதைத் தத்தெடுத்துக் கொண்டு அந்த வழிபாட்டைத் தூய்மைப்படுத்திப் புனிதப்படுத்தி உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்து

படைப்பிற்கும் தந்தை-தாய் உறவினைக் காட்டும் உயரிய சமயத் தத்துவமாக அமைத்து ஏற்றுக் கொண்டது! சிவலிங்க வழிபாட்டுக்கு மற்றொரு பொருள் விளக்கமும் உண்டு. வேதத்தில் 'யூபஸ்தம்பா' பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. யூபஸ்தம்பா என்றால் பலி கொடுக்கப்படும் ஆடுகள், மாடுகள் கட்டப்படும் இடம் (தூண்) என்ற பொருளும் உண்டு! இந்து சமயக் கோவில்கள் 'யாகசாலை' உருவத்தில் அமைக்கப்பட்டபோது இந்த யூபஸ்தம்பம் அதில் இடம் பெற்றிருந்தது. இது சிவலிங்கத்தைக் குறிக்கும். இலிங்க வழிபாடு சிந்துவெளி நாகரீக காலத்திலேயே (கி.மு.3000) இருந்தது என்பதற்கு ஹரப்பா - மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் நடத்தப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சியில் கிடைத்த சிவலிங்கச் சிலைகளும் - சின்னங்களும் தக்க சான்றாகத் திகழ்கின்றன! [229]

திருப்பூவணத்தில் தொல்சிவலிங்கம் ஒன்றுள்ளது. தமிழர்கள் திருவுருவ வழிபாட்டில் அசைவிலா நம்பிக்கையுடையவர்களாய் விளங்கி வருகின்றனர். தமிழர்கள் தீவிரமான பக்தி நெறி நிற்பவர்கள் அவர்கள் தாங்கள் விரும்பும் ஒரு பொருளிடத்தில் கடவுளாற்றலைக் கண்டுகொண்டு பக்திமை செய்பவர்கள்.

### 3.4.1 மூர்த்தியின் பெயர்

திருக்கோயிலின் கருவறையில் உள்ள மூல லிங்கத்திற்குத் தனியான பெயர்களும், திருக்கோயில் திருவிழாக்களில் வழிபாட்டிற்கான உற்சவமூர்த்திக்குத் தனிப் பெயர்களும் உள்ளன.

### 3.4.2. மூலவர்

திருப்பூவணநாதர், திருப்பூவணமுடையார், பூவணத்தரன், பூவணத்துப் புனிதன், பூவணநாயகன், பூவணன், பாதளஈசன் (1331), பாதலப்பரன் (1337), பாஸ்கரபுரீஸ்வரர் என்பன திருப்பூவணத்திலுள்ள மூலசிவலிங்கத்திற்கு உண்டான பெயர்களாகும். இதனை வடமொழியில் மொழிபெயர்த்துப் புஸ்பவனேசுவரர், புட்பவனேசுரர் என்ற பெயர்களும் வழக்கத்தில் உள்ளன.

திருப்பூவணத்திலே சிவலிங்கம் முளைத்த வரலாறு, பிரமசாபமோசனச் சருக்கத்திலே சிவபெருமானது கூற்றாக,

*"இன்னமுதங்கான்றிருட்குறும்பெறியுமிந்துவின்மரபினில்வந்த*

*பன்னுசெந்தமிழ்த்தென்பாண்டிநன்னாட்டிற்பயின்றிடும்பதிபலவுளவா*
*மன்னதின்மேலாயறைந்திடுங்கூடலாலவாய்ப்பதிக்குயோசனையின்*
*மன்னிடும்வன்னிதிக்கினோர்தலம்**பூவணமெனுமணிதிகழ்நகரம்*** *(பாடல் 720)*
*உரைசெயுமந்தவோங்கெயின்மூதூரோரொருமூவுலகேத்த*
*மருவிடுமதன்கண்மத்திமைவயங்குவான்முகடணவுவண்பணைசூழ்*
***பரவரும்பாரிசாதமொன்றுண்டப்பராரைமாமரத்திருநீழற்***
***புரிகுழலுமைமுன்புரிதருசெயலாற்பூசைசெயிலிங்கமொன்றுண்டால்*** *(பாடல் 721)*
*அச்சிவிலங்கமருள்வடிவாகியாம்பிலத்தலத்தினின்றளிசேர்*
*முச்சகம்புகழமுளைத்திடுமூவரமுதலுமாய்முழுதுலகிறைஞ்ச*
*நிச்சயப்பொருளாய்நிமலமாய்நிறைந்துநிகழ்ந்துநங்கண்மணிவடிவாய்ப்*
*பச்சைமாமயிலோர்பாதிநின்றிலங்கப்பரம்பொருளாகியேவிளங்கும்" (பாடல் 722)*

எனத் திருப்பூவணத்தில் சிவலிங்கம் தோன்றிய வரலாற்றைச் சிவபெருமான் பிரமதேவனிடம் கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. (படம் - 7)

### 3.4.2.1 மூலவர் பெயரும் பெயர்க்காரணமும்

திருப்பூவணத்தில் உள்ள மூலலிங்கத்திற்குப் பூவணன் என்று பெயர். இப்பகுதியில் பூவணன் என்ற பெயர் உண்டானதற்கான காரணமும் மற்றபிற பெயர்களும் கூறப்பட்டுள்ளன.

'கருப்பு' ஆனவன் 'கருப்பணன்',
'தேவன்' ஆனவன் 'தேவணன்',
'வானம்' ஆனவன் 'வாணன்' (அம்பலவாணன்[230])
'பா' ஆனவன் 'பாவணன்'

இதே போன்று **'பூ' ஆனவன் 'பூவணன்'** என்றானது. திருப்பூவணத்தில் உள்ள மூலலிங்கம் பாரிசாதப் பூவால் ஆனது.

*"செய்யவொண்பட்டினூாலுந்திகழ்ந்தவெண்பட்டினாலுந்*
***துய்யபூங்கதலிபூகமாதியதொங்கறன்னா***
***லைதிகழ்பூவணத்***_தெம்மடிகளையலங்கரித்தோர்_
*பையழகொழுகுந்துத்திப்பன்னகாபரணனாவார் " (பாடல் 680)*

என்ற பாடலிலே, பூங்கதலி (பூந்தார்) சிவலிங்கமாகச் சமைந்திருக்கின்ற (Fossil of Parijatha Flower) செய்தி கூறப்பட்டுள்ளது. திருப்பூவணத்தில், *"சராசரமே, சிவலிங்க வடிவாய் உள்ளது என நாள்களும் கோள்களும் கருதுவ"* என்று பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்திலே கூறப்பட்டுள்ளது.[231]

இதனால், **'பூவால் ஆகிய சிவலிங்கத்திற்குப் பூவணன்'** என்ற காரணப் பெயர் உண்டானது.

**'பூவண்ணன்'** என்ற சொல் 'பூவணன்' என்றானது என்றும் கூறுகின்றனர்.[232]

திருப்பூவணத்தில் உள்ள இறைவன் புனிதத்தன்மை உடையவன் என்ற பொருளில்,

*"பொருவில்பரிபூரணமாம் **பூவணத்தெம்புனிதனை** யாம் போற்றுவாமே " (பாடல் எண் 5)*

*"போர்மேவுமழுவேந்தும் **பூவணத்தெம் புண்ணியன்** பொற்கோயினண்ணுஞ் "* (பாடல் எண் 20)

*" புல்லிய **பூவணத்தெம்புனிதனுக்** கினிதளிப்போர் " (பாடல் 437)*

*"பொங்கு**பூவணத்தெம்புனிதன்**றனக் " (பாடல் எண் 1327)*

'பூவணத்துப் புனிதன்' என்று பாடல் எண் 5, 20, 437, 1327 ஆகிய பாடல்களில் பாடப் பெற்றுள்ளது.

*"பூவுலகும்பணிந்தேத்தும் பூவணநாயகனை நித்தம் போற்றல் செய்வாம்"* (பாடல் 6) "பூவணநாயகன்" என்று 6ஆவது பாடலில் பாடப் பெற்றுள்ளது.

*"நற்பொழிறிகழ் நண்ணிய பூவணன்"* என்று 200 ஆவது பாடலில் பாடப் பெற்றுள்ளது.

அரன் என்றால் சிவப்பு என்று பொருள், சிவந்த திருவடிகளை உடைய பூவணன் என்ற பொருளில் 'பூவணத்தரன்' என்று பாடல் எண் 4, 7, 10, 1261, 1433 ஆகிய பாடல்களில் பாடப் பெற்றுள்ளது.

*"மாமாது வடிவிலங்கமன்னிய **பூவணத்தரன்** றாள் சென்னிசேர்ப்பாம்" (பாடல் எண் 4)*

*"திகழ்தருபூம் பொழில்புடைசூழ் தென்றிருப் **பூவணந்தரன்** றாள் சிந்தை செய்வாம்"*
*(பாடல் எண் 7)*

*"ஆடல்செய்**பூவணத்தரனுக்**கானெய்யாற்" (பாடல் எண் 1261)*

*"பொன்னுலகேத்துந்தொல்சீர்ப் பூவணத்தரனைப் பூசை" (பாடல் எண் 1433)*

"பாரிசாத வனேசன்" என்று 744ஆவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 3.4.2.2. புராதன பூவணநாதர்

**திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கம்** மிகவும் "புராதனமானது" என்று சூரியன் பூசனைச் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

*"பொற்பினீடியதா சிவத்தின் மகிழ் பூவணத்துறை **புராதனர்க்**<br>குற்சவந்தனை நடாத்த வெண்ணி மன்னுவகை பூத்தெழுசுவேச்சையால்<br>வெற்றி யானைமுகனாதி விக்கிரகம் வேறுவேறு மறைவிதியனா<br>லற்பின் மேதகைய செம்பொனா லுருவமைத்து நன்மணி யழுத்தியே" (பாடல் 283)*

என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. திருப்பூவணத்தில் சூரியன் பூசை செய்த வரலாறு மிகவும் தொன்மையானது. அவ்வாறிருக்க அக்காலத்திலேயே அச்சிவலிங்கம் மிகவும் புராதனமாக இருந்துள்ளது.

திருப்பூவணத்தில் இலிங்கமானது நாற்பதாயிரம் சதுர் யுகங்கள்[233] பூமிக்குள்ளே இருந்துள்ளது. இதன் பழமை *"அண்டங் குகை நாற்பதின் னாயிரஞ் சதுர்யுகம் மெய்தினேன்"* என 1398ஆவது பாடலில் கணக்கிட்டுக் கூறப்பட்டுள்ளது. இதனால் திருப்பூவணநாதரின் தொன்மை நன்கு புலப்படுகிறது.

## 3.4.3. சோதிலிங்கம்

இந்தியத் திருநாட்டில் 12 சோதிலிங்கங்கள்[234] இருப்பதாகப் பட்டியலிட்டுக் கூறுகின்றனர்[235].

| | | |
|---|---|---|
| 1 | சோமநாதர் | பிரபாசேத்திரம், கடற்கரையில் துவாரகை அருகில் (குஜராத் மாநிலம்) |
| 2 | ஸ்ரீ மல்லிகார்ஜுனர் | ஸ்ரீசைலம், கர்னூல் மாவட்டம் (ஆந்திரப் பிரதேசம்) |
| 3 | மாகாளேஸ்வரர் | சிப்ராநதிக்கரையில் உஜ்ஜியினி அருகில் (மத்தியபிரதேசம்) |
| 4 | ஓங்காரேஸ்வரர் | மோர்டக் இரயில் நிலையம் உஜ்ஜயினி-காண்டவா பாதை (நர்மதாநதிக்கரை) |
| 5 | வைத்தியநாதர் | பரவி, ஜஸதி-சன்தால் பர்காணா (பீகார் மாநிலம்) |
| 6 | பீமஷங்கரர் | பீம நமதிக்கலையில் நாசிக்கிலிருந்து 120 கி.மீ. (மகாராஷ்டிரா மாநிலம்) |
| 7 | இராமேஷ்வரம் | இராமேஷ்வரம் தீவு, கடற்கரை (தமிழ்நாடு) |
| 8 | நாகேஸ்வரர் | தாருகாவனம் - கோமதி துவாரகையிலிருந்து 15-கி.மீ. (குஜராத் மாநிலம்) |
| 9 | விஸ்வநாதர் | காசி (உத்திரபிரதேசம்) |
| 10 | த்ரயம்பகேஷ்வரர் | பிரமகிரி அருகில் கோதாவரி உற்பத்தி ப ஞ்சவடியிலிருந்து 8-கி.மீ. |
| 11 | கோதாரேஸ்வரர் | கேதார்நாத் ரிஷிகேஷிலிருந்து 132-மைல் |
| 12 | கிருஷ்ணேஸ்வரர் | பேருல்கிராமம் தௌலதாபாத் இரயில் நிலையம் (ஆந்திரப் பிரதேசம்) |

திருப்பூவணப் புராணத்திலே, 'திருப்பூவண நாதரை'ச் சோதிலிங்கம் எனக் கந்தசாமிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

*"இன்னதன்மையனிந்நிலத்தினினென்னின்மேலவரின்றெனா*
*வன்னவந்தணர்தம்மைநீங்கினனாலயந்தனையண்மியே*
*துன்னுநாகர்தலத்ததுநின்றுமொர்**சோதிலிங்காகியே***
*முன்னைநாளின்முளைத்தெழுந்தருண்ஞர்த்தியைத் தொழுதேத்தினான்" (பாடல் 552)*

*தீதிலிந்திரனாதிமேதகுதேவர்நீர்கரிதேர்கெனாச்*
***சோதிலிங்கம**தாகநம்மெதிர்தோன்றுகின்றதழற்குறி*
*யாதியந்தமறிந்துளோரெவராவரேமுதலாவரென்*
*றோதினார்மறையாவுமாசறவோதுகேமெனுஞுமர்போல்" (பாடல் 1392)*

மேலும், சிவபெருமானின் அடிமுடிகாணாத வரலாற்றைக் கூறும் பாடலில்,

*"அற்புதத்தினிரும்புவிகீண்டுகாண்*
*கிற்பனாலெனக்கேழலுருக்கொடு*
*சொற்கடந்தவிச்**சோதிலிங்கந்**திகழ்*
*பொற்பதந்தனைத்தேடிமுன்போயினான்" (பாடல் 1402)*

என்று, திருமாலும் பிரமனும் சிவபெருமானின் அடியையும் முடியையும் காணும் பொருட்டு முறையே பன்றி மற்றும் அன்னப்பறவை அவதாரம் எடுத்துத் தேடிச் சென்றனர். அப்போது சிவபெருமான் 'சோதிலிங்கமாக'க் காட்சியளித்ததாகக் கந்தசாமிப் புலவர் இப்பாடலிலே குறிப்பிட்டுள்ளார்.

### 3.4.3. உற்சவர் (சோமஸ்கந்த மூர்த்தி)

திருப்பூவண உற்சவ மூர்த்திக்கு, அழகியபிரான், அழகியநாயகன், அழகியநாயகர், பொன்னனையான் ஆகிய பெயர்கள் உண்டு.

திருப்பூவணத்தில் உள்ள உற்சவர் திருமேனி தனிச்சிறப்பு மிக்கது. இதனைச் செய்திடத் தேவையான தங்கத்தைத் தயாரித்துக் கொடுத்தவர் மதுரை சிவபெருமான் ஆவார். ஒரு தலத்து இறைவன் மற்றொரு தலத்திற்குத் தேவையான திருப்பணியைச் செய்திருப்பது, எந்தத் திருத்தலங்களுக்கும் இல்லாத சிறப்பாகும்.

திருப்பூவணத்தில் உள்ள உற்சவர் திருவிளையாடற் காலத்திற் செய்யப்பட்டதாகும். அதற்கு முன்னர் இருந்த உற்சவர் பற்றிய குறிப்புகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. பொன்னனையாள் என்பவள் திருப்பூவணம் கோயிலில் நடன மாது. இவளுக்குத் தங்கத்தினால் உற்சவர் செய்ய வேண்டும் என்று விருப்பம் இருந்தது. உற்சவரை உலோகத்தில் வார்த்து எடுக்கும் பொருட்டு மெழுகினால் உருவம் செய்து அதைப் பயன்படுத்தி அச்சு தயார் செய்து வைத்திருந்தாள். உற்சவரைச் செய்திடத் தேவையான தங்கம் அவளிடமில்லை. அவள் கையில் வரும் பொருள் எல்லாம் அடியவர்களுக்கு அன்னதானம் செய்வதிலேயே செலவானது. அவ்வாறு இருக்கும் காலத்தில் மதுரை சிவபெருமான் சித்தர் வடிவில் பொன்னனையாள் மாளிகைக்கு எழுந்தருளி அனைத்து உலோகப் பாத்திரங்களையும் கொண்டுவரச் செய்து அவற்றில் திருநீற்றைச் சிந்தினார். "இவற்றை இன்று இரவு தீயிலிட்டுக் காய்ச்சுங்கள் தங்கம் கிடைக்கும்" எனக் கூறி மறைந்தார். பொன்னனையாள் அவ்வாறே செய்ய தங்கம் கிடைத்தது. அதனைக் கொண்டு திருப்பூவணத்து உற்சவமூர்த்தியை வார்த்து எடுத்தாள். வார்ப்பை உடைத்து உற்சவ மூர்த்தியை வெளியே எடுக்கும் போது மிகவும் அழகாக இருந்தது.

*"மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கியச்சோ*
*அழகிய பிரானோ வென்னா வள்ளிமுத் தங்கொண டன்பிற்*
*பழகிய பிரானை யானாப் பரிவினாற் பதிட் டை செய்து*
*விழவுதேர் நடாத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்*

*நையநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத்திட்ட*
***கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு***
*வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்*
*பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்"*[236]

"அச்சோ அழகிய பிரானோ" என்று அன்பினால் அள்ளி பொன்னனையாள் முத்தங் கொண்டாள். இதனால், அவளது கைநகம் பட்டு இறைவனின் கன்னத்தில் நகக்குறி உண்டானது. இக் குறியை இன்றும் உற்சவர் திருமேனியில் காணலாம். அழகிய பிரானோ! என்று பொன்னனையாள் கூறியது பொருட்டு, உற்சவரின் திருநாமம் "அழகிய பிரான்" "அழகிய நாயகர்" என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறார். இக்கதை 36ஆவது திருவிளையாடற் புராணமாகப் பாடப்பெற்றுள்ளது.

இக்கதைச் செய்தி திருப்பூவணப் புராணத்தில் கடவுள் வாழ்த்தில் அழகிய நாயகருக்கான வாழ்த்துப் பாடலில் பாடப் பெற்றுள்ளது.

*"திங்கடவழ் சடாமௌலித் தென்கூடற் சிவபெருமான் சித்தராகிப்*
*பங்கமுறு கருந்தாது பசும்பொன்னாங் குளிகையருள் பான்மையாலே*
*பொங்கர வவகலல்குற் **பொன்னனையாள்** கண்டுவந்து போற்றுநீரா*
*ரங்கணுலகம் புகழு மழகியநாயகர் பாதமகத்துள் வைப்பாம் " (பாடல் 8)*

உற்சவமூர்த்தி பொன்னால் செய்யப்பட்டதால், "பொன்னனையான்" என்ற காரணப் பெயர் விளங்கிவருகிறது. இத்திருநாமம் 9, 746, 765 ஆகிய பாடல்களில் பாடப் பெற்றுள்ளது.

*"மன்னுமழை தவழ் குழலுமதி தருநன்முகோதயமு மலர்ப் பூங்கையும்*
*பன்னுதமிழ்ப்பால் சுரக்கும் பயோதரமுமறை கொழிக்கும் பவளவாயுந்*
*துன்னுமணி திகழுடையுந் துடியிடையுந் துலங்குறுமைந் தொழிற் கும் வித்தாய்ப்*
***பொன்னனையானி**டத்தமர்ந்த மின்னனையாள் பொற்பாதம் போற்றல் செய்வாம் "*
(பாடல் 9)

*"பொன்னுலகந் திகழ் **பொன்னனையான்**பான்*
*மன்னு செவ்வானிடை வந்தொளிர் கின்ற*
*மின்னென நின்றுவிளங்கு தலாலே*
*மின்னனை யென்று விளம்பினர் மேலோர் " (பாடல் 746)*

*"வன்னியோரைந்துமுன் வளர்த்து நேர்வளி*
*தன்னை யுள்ளடக்கியைம் புலன் கடாங்கியே*
***பொன்னனையானடி**ப் பூசை செய்துபி*
*னுன்னரும் பரசிவ யோகுற்றானரோ " (பாடல் 765)*

### 3.4.4. மின்னன்னை

திருப்பூவணத்தில் அம்மைக்கு மின்னனையாள், மின்னன்னை, மின்னம்மை, அழகியமின்னம்மை, அழகிய நாயகி, பச்சைவளர் நாயகி, திருநயனவல்லி (1279) என்ற திருநாமங்கள் உள்ளன.

*"மன்னுமழைதவழ் குழலுமதி தருநன்முகோதயமுமலர்ப்பூங்கையும்*
*பன்னுதமிழ்ப்பால் சுரக்கும் பயோதரமுமறைகொழிக்கும் பவளவாயுந்*
*துன்னுமணிதிகழுடையுந்துடியிடையுந் துலங்குறுமைந் தொழிற் கும் வித்தாய்ப்*
*பொன்னனையானிடத்தமர்ந்த **மின்னனையாள்** பொற்பாதம் போற்றல் செய்வாம் "*
(பாடல் 9)

*"விடையுகைத்திடு**மின்னனை** பாகன்மேற் " (பாடல் 24)*

*"குன்றமன்ன நற்கொங்கை சுமந்து நேர்*
*மின்றயங்கிடை **மின்னனையாளு**டன்*
*கன்று மான் கரமேந்திய கண்ணுத*
*றென்றமிழ் பயிலுந் திருப் பூவணம் " (பாடல் 171)*

*"செங்கண் மால்விடை யூர் சிவபிரான் றனக்குத் தெக்கிண திக்கதிற்றிகழந்து*
*மங்கல விளைவான் மறை முறைவழாது மன்னிய வத்தலந்தன்னி*
*லங்கண் மாஞால மெங்கணும் புகழு மழகிய **மின்னனையாகி***
*யெங்கணாயகி தானிருந் தவம்புரிந்தே யியைந்திடுமியல்பினெஞ் ஞான்றும் " (பாடல் 239)*

என்ற பாடல்களிலும், 331, 437, 501, 692, 742, 746, 768, 1092, மற்றும் 1324 ஆகிய பாடல்களிலும் மின்னம்மையின் பெயர் இடம் பெற்றுள்ளது. பொற்கொடி என்ற திருநாமம் 745ஆவது பாடலில் இடம் பெற்றுள்ளது.

மின்னம்மை பச்சை வடிவினள் என்றும் 'நாதவதி' என்ற பெயரினள் என்றும் 1317ஆவது பாடலிலும், சுந்தரி' என்று 1407ஆவது பாடலிலும் குறிப்பிடப் பெற்றுள்ளாள்.

#### 3.4.4.1. மின்னனையாள் பெயர்காரணம்

திருப்பூவணத்தில் உறைந்து அருள் வழங்கி வரும் உமையம்மைக்கு மின்னனையாள் என்ற பெயர் ஏற்பட்டதற்கான காரணத்தைக் கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணத்தில்,

*"பொன்னுலகந் திகழ் பொன்னனையான்பான்*
*மன்னு செவ்வானிடை வந்தொளிர் கின்ற*
***மின்னென நின்றுவிளங்கு தலாலே***
***மின்னனை யென்று** விளம்பினர் மேலோர் "*(பாடல் 746) என்று குறிப்பிட்டுள்ளார்.

பூமி மண்ணால் ஆனது. சிவபெருமான் வாழுகின்ற உலகம் (கைலாயம்) பொன்னால் ஆனது. பொன்னாலான உலகத்தில் திகழ்கின்ற சிவபெருமானுக்குப் பொன்னனையான் என்று பெயர். இவர் திருப்பூவணத்திலே எழுந்தருளுகிறார். கார்காலத்தில் மேகங்கள் கருத்து மழை பெய்யும். கோடைகாலத்திலே செவ்வானத்திடையே மின்னல் ஒளி விட இடியோசையுடன் மழை பெய்யும். அவ்வாறு செவ்வானிடை வந்து ஒளிர்கின்ற மின்னல் போன்று, விளங்குகின்ற காரணத்தினால் "***மின்னனையாள்***" என்ற காரணப் பெயர் ஏற்பட்டது என மேன்மை யுடையோர்கள் கூறியுள்ளனர். மின்னல் போன்ற இடையைப் பெற்றவள் என்றும் கூறுவர்.

### 3.4.4.2. மின்னனையாளின் வண்ணம்

திருப்பூவணத்தில் 'மின்னென' மின்னம்மை நின்று அருளுகிறாள். 'மின்' என்பதால் மின்னும் வண்ணமுடையவளாய் மின்னன்னை இருக்க வேண்டும். ஆனால் மின்னம்மையைப் 'பச்சை' நிறத்தவள் எனப் புராணப் பாடல்களிலே கூறப்பட்டுள்ளது. *"பச்சைமாமயிலோர்பாதிநின்றிலங்கப்பரம்பொருளாகியேவிளங்கும்"* என 722ஆம் பாடலிலும், "பச்சை *வடிவோடு முடனாகி வளர்நாதவதி தனையும் வந்தித்தேத்தி"* என 1317வது பாடலிலும், *" பச்சை மாமயிலோர் பாதிநின் றிலங்கும் பரஞ் சுடர்பன்னகாபரணன்"* என 1374வது பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 3.4.5. மூலலிங்கத்திற்கே முதல் வணக்கம்

சிவாலயங்களில் முதலில் அம்மையை வணங்கிய பின்னரே சிவலிங்கத்தை வணங்கும் வழக்கம் உள்ளது. மதுரையில் மீனாட்சியம்மைக்கே முதலிடம். தென்னகத்தில் அநேக கோயில்களில் தெற்குவாயில் வழியே சென்றால் அது நேராக அம்மையின் கருவறைக்குச் செல்லுமாறு கோயிலமைப்பு இருக்கும். கிழக்குத் திசை நோக்கி அம்மன் இருக்குமிடங்களில் பெரிய கோபுர வாயில் அம்மன் சந்நிதியை நோக்கியே இருக்கும். இதனால் முதல் வழிபாடு அம்மனை வணங்குவதாக இருக்கும். திருப்பூவணத்தில் முதலில் அம்மையை வணங்கக்கூடாது, சிவலிங்கத்தை வணங்கிய பின்னரே அம்மையை வணங்க வேண்டும்.

*"பொழிறிகழ்புராதனத்தெம்பூவணங்கோயில்கொண்ட*
*குழகனைத்தொழுமுன்செம்பொற்கொடிதனைக்கும்பிட்டோர்க*
*டொழுதிடுமக்கணத்திற்றொடர்புறுந்தோடந்தன்னால்*
*விழுவர்களகோரமென்னும்வெங்கொடுநிரயந்தன்னுள்"* (பாடல் 332)

அம்மனை முதலில் வணங்கினால் அக்கணமே 'அகோரம்' எனும் சித்தபிரமை ஏற்பட்டு நரகம் புகுவர் எனத் திரணாசனனிடம் நாரதர் கூறியுள்ளார்[237].

*"ஆதலினன்புகூர்ந் தேயரும் பெருங்கலை தெரிந்த*
*மூதறிவுடையோர் முக்கண்* ***மூர்த்தியைத் தொழுக முன்ன***
*மாதலினீதியாலே* ***மங்கையை*** *யங்கைகூப்பிப்*
*பாததாமரையிற்* ***பின்னர்ப்*** *பணிந்திடக் கடவரன்றே"* (பாடல் 333)

திருப்பூவணத்தில் வேறு எங்கும் இல்லாத புதுமையாய் முதலில் சிவலிங்கத்தை வணங்கி வழிபட்ட பின்னரே அம்மையை வணங்க வேண்டும் என்பது அறுதியாகக் கூறப்பட்டுள்ளது.

## 3.4.6. பிற இலிங்கங்கள்

திருப்பூவணத்தில் தானே தோன்றிய மூலலிங்கமான சுயம்பு லிங்கத்தைப் **பூர்வலிங்கம்** (245, 849) என்றும், **சோதிலிங்கம்** (1392, 1402, 1423) என்றும், **தெய்விகலிங்கம்**(728, 732) என்றும், **தொல்லிலிங்கம்**(1158) என்றும் புராணம் குறிப்பிடுகிறது. இச்சிவலிங்கத்தைத் தவிர மற்ற பிற சிவலிங்கங்கள் அனேகம் உள்ளன.

இச்சிவலிங்கங்களில் பூர்வலிங்கத்தைத் தவிர மற்றலிங்கங்கள் புராணத்தில் குறிப்பிடப் பெற்ற இடங்களிலிருந்து நீக்கப்பெற்று திருக்கோயில் வளாகத்திலே ஆங்காங்கே வைத்து வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன.

**சோபன லிங்கம்** (249), **காசிலிங்கம்** (419), **சூரியலிங்கம்**(431), **விண்டுலிங்கம்** (853), சந்திரலிங்கம், காளீச்சுரலிங்கம் ஆகிய சிவலிங்கங்களும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

ஆலமர நிழிலே நான்முகன் பூசித்த இலிங்கம் உள்ளது.

*"கோலமதாமணிகுண்டநனிருதி*
*மூலையினன்பரைமூண்டதலத்தோ*
*ராலநிழற்கணமைத்தொருலிங்க*
*நாலுமுகன்வழிபட்டனனன்றே"* (748)

## 3.4.7. காந்தி நாயகன் (சூரிய லிங்கம்)

சூரியன் தன் பெயரால், **"காந்தி நாயகன்"** என்ற பெயரில் சிவபெருமானை விதிப்படி பிரதிட்டை செய்து வேதங்களை ஓதி பூசை செய்து திருவிழாவை

நடத்திவைத்தான். அதன்பின்னர் சூரியன் தனது சூரியலோகம் சென்று முறைப்படி ஆட்சி செய்யலானான். இதை,

*"கதிரவன் றனது பெயரி னானிலகு **காந்திநாயகனெனும்** பெயர்*
*மதிவயங்க வணி மகுட சேகர நல்வானவன் றனையு மன்றினிற்*
*சதியின்ற்றன்மிகுதாண்டவஞ் செயருடம் பிரான்றனை யளித்து நூல்*
*விதி பதிட்டை செய்து வேத பூசையும் விழாவும் மேத்திட விளக்கினான்" (பாடல் 284)*

என்று திருப்பூவணப் புராணத்தில் "காந்தி நாயகன்" என்னும் சிவலிங்கம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 3.4.8. சந்திரலிங்கம் -

*"அந்தமணற்றந்தசிவலிங்கமதற்காயபுகழ்வாயுதிக்கிற்*
*சுந்தரனுன்றம்புதொடுதூரத்திலிரவினொளிதுதைந்திலங்குஞ்*
*சந்திரன்வந்தருச்சனைசெய்**சந்திரலிங்கம**தொன்றதன்னேரின்றி*
*யிந்தவொருமூவுலகுமெஞ்ஞான்றுமினிதேத்தவிருக்குமாதோ " (பாடல் 1224)*

என்ற பாடலில் சந்திரன் பூசித்த சந்திரலிங்கம் உள்ள இடம் பற்றியும் அதன் அருள் பற்றியும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

## 3.4.9. விண்டு லிங்கம் (ஆதிகேசவ லிங்கம்)

வாலகில்லி முனிவரைக் கேலிசெய்த பாவத்தைப் போக்குவதற்காக இலக்குமிதேவியார் திருப்பூவணம் வந்து தவம் மேற்கொண்டார். தவம்முடித்துப் பாவம் நீங்கப் பெற்ற இலக்குமியை அழைத்துச் செல்லத் திருமால் திருப்பூவணம் வந்தார். அவ்வாறு வந்தவர், மூலலிங்கத்திற்கு மேற்கே இரண்டம்பு செல்லும் தூரத்திலே தன்னுடைய பெயரால் ஓர் இலிங்கமும், அதன் எதிரே தீர்த்தம் ஒன்றும் உண்டாக்கினார்.

*"பூர்வ லிங்க நேர் போற்று பச்சிமத்*
*தேர் கொளம்பிரண்டேகு மெல்லை வாய்ச்*
*சார் பெரும் புகழ்த்தன்றனாமத்தா*
*லோரி லிங்முண்டாக்கி னானரோ " ( பாடல் 849)*

அந்த லிங்கத்திற்கு விண்டு(திருமால்) லிங்கம் என்றும், அத்தீர்த்தத்திற்கு விண்டு (திருமால்) தீர்த்தம் என்றும் பெயர்.

## 3.4.10. காளீச்சுர லிங்கம்

"ஆடலில் சிறந்தவர் யார்?" என்று உமையம்மை வினா எழுப்பினாள்! அதனால், அம்மைக்கும் அப்பனுக்கும் போட்டி ஏற்பட்டது! பெண்கள் வளைந்து நெளிந்து

ஆடுவது போன்று ஆண்களால் ஆட முடியாது என்றும், அதனால் ஆடலில் சிறந்தவர்கள் பெண்களே என்றும் உமையாள் வாதம் செய்தாள். ஆடப் பிறந்தவர்கள் ஆண்களே எனக்கூறினான் சங்கரன். இதனால் போட்டி உண்டானது. இருவரும் தங்களது ஆட்டத்திறனை மெய்ப்பிக்க வேண்டித் திறமையுடன் ஆடினர். முடிவில்லாமல் ஆட்டம் நடைபெற்றுக் கொண்டே இருந்தது. அப்போது, சங்கரனுடைய காதிலிருந்த குழை கீழே விழுந்தது. இருந்தபோதும், சங்கரன் ஆட்டத்தை நிறுத்தாமல், ஆடிக்கொண்டே தனது காலால் அக்குழையை எடுத்துத் தனது காதில் மாட்டிக் கொண்டார். அதனால், சிவபெருமான் ஆடியதைப் போன்றே உமையம்மையும் தனது காலைக் காதுவரைத் தூக்கி ஆடவேண்டிய நிர்ப்பந்தம் உண்டானது. உமையம்மை பெண் என்பதால் தனது காலை மேலே தூக்கி ஆடுதற்கு நாணினாள். மேலும். அவ்வாறு அம்மை ஆடாதிருக்கும் பொருட்டு அவளது சேடியர்களும் அம்மையின் ஆடையைப் பற்றித் தடுத்தனர்.[238] இதனால் உமையம்மை சிவபிரான் போன்று காலைக் காதுவரைத் தூக்கி நடனமாடவில்லை. இதனால், உமையம்மை தர்க்கம் செய்து தோற்றுவித்த போட்டியில் அவளே தோற்றாள். உமையம்மை சிவபெருமானுடன் வாதம் செய்து, போட்டி வைத்து ஆடியது குற்றமாகி அவளைப் பாவமாகப் பீடித்தது. அதனை நீக்கத் திருப்பூவணத்தில் சிவலிங்கம் வைத்து வழிபட்டாள்.

> *"அங்கண னுடன் வாதாடி மாகாளி யாடிய தோட மதகலச்*
> *சங்கரன் றனக்குத் தரதிசை யிரண்டு சார் தரு கூவிளி தூரத்*
> *தெங்கணும் புகழ் **காளீச்சுரலிங்க**மினி தமைத் தருச்சனை செய்து*
> *வெங்கொடும் பவத்தை வேரறுத்திட்ட மேன்மை மூவுலகினும் விளங்கும் " (பாடல் 1369)*

இவ்வழிபாட்டால் காளியின் பாவம் நீங்கப் பெற்றது. காளி வழிபட்ட சிவலிங்கமானது மூலலிங்கத்திற்கு வடக்கே கூப்பிடு தூரத்தில்[239] அமைந்துள்ளது.

காளிதேவி சபதம்கூறி சங்கரனுடன் ஆடிய இடம் தில்லையாகும். தில்லையில் காளிதேவி ஊருக்கு வெளியே தனியாகக் கோயில் கொண்டிருக்கிறாள். அதே போன்று திருப்பூவணத்திலும் ஆற்றிற்கு வடக்கே மடப்புரம் கிராமத்தில் "அடைக்கலம் கொடுத்த ஐயனார்"[240] கோயிலில், காளிதேவி கோயில் கொண்டுள்ளாள். தற்போது, "மடப்புரம் காளி" மக்களிடையே மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்குகிறாள்.

## 3.5. பிற மூர்த்திகள் (தெய்வங்கள்)

திருப்பூவணநாதர், அழகியநாயகர், மின்னன்னை ஆகிய மூல தெய்வங்களை விடுத்து, விநாயகர், முருகன், வயிரவர், சரசுவதி மற்றும் நந்திதேவர் முதலிய தெய்வங்களும் திருப்பூவணப் புராணத்தின் கடவுள் வாழ்த்தில் (பாடல் எண் 8, 9, 10, 11, 12) பாடப்பெற்றுள்ளன. இத் தெய்வங்களுக்கான சிலாவடிவங்கள் இன்றும் திருக் கோயிலில் உள்ளன.

இத் தெய்வங்கள் தவிர **பாதாளநாதர் மற்றும் வளர்நாதவதி** என்ற இரண்டு தெய்வங்களை நளமகாராசன் திருப்பூவணத்தில் முதலில் வணங்கி உள்ளான்.

*"கொடிமாட மதிற்கூடற் குணதிசை யோசனை யெல்லை கொண்டிலங்கும்*
*பொடி மூடுதழ லெனவே பொருந்திய தென்பூவணத்திற் பொருந்தி நாளும்*
*படிநீடுபுகழ் கொண்ட **பாதாளநாதனையும்** பங்கிற் பச்சை*
*வடிவோடு முடனாகி **வளர்நாதவதி** தனையும் வந்தித் தேத்தி " (பாடல் 1317)*

புவனங்கள் ஏழு என 1378ஆவது பாடலிலே குறிப்பிடப்பட்டுள்ளது. *"புவர் உலகம், சுவர் உலகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம், பிரமலோகம் என ஏழு உலகங்கள் உள்ளன".*[241] என்று கந்தபுராணம் கூறுகிறது. *"பூலோகம், புவலோகம், சுவர்லோகம், ஜெனலோகம், தம்லோகம், சத்தியலோகம், மகாலோகம் ஆகிய ஏழும் மேலோகங்கள். அதல, விதல, சுதல, நிதல, தராதல, மகாதல, பாதாள ஆகிய ஏழு கீழ்லோகங்களும் உள்ளன."*[242] இப்பதினான்கு உலகங்களில் ஒன்றான பாதாள உலகத்திலிருந்து திருப்பூவணநாதர் முளைத்தெழுந்துள்ளார்.

*"வேதாகமத்தின்விதியோதுகீர்த்திவீசும்வைகாசிரவியிற்*
***பாதாளவீசன்**மகிழ்வோங்குபூர்வபக்கங்கொள்பக்கமதனி*
*னோதாளியத்தினோரேழ்தினத்தினுறுவேதபாரகர்தமாற்*
*கோதேதுமில்லதொருகோவிலங்குகொடியேற்றுவித்தனனரோ" (பாடல் 1331)*

என்ற பாடலிலே, மூலச்சிவலிங்கத்தைப் பாதாளவீசன் எனப் புலவர் பாடியுள்ளார். இதனால், 'பாதாள ஈசன்' என்பது மூலலிங்கத்தை(திருப்பூவணநாதரை)யே குறிக்கிறது எனக் கருதலாம்.

**பிரமதேவனை,** நான்முகன் என்று 572ஆவது பாடலிலும், திசைமுகன் என்று 658ஆவது பாடலிலும், அன்னவாகனன் என்று 724ஆவது பாடலிலும்,

கந்தமலர்க்கடவுள் என்று 726ஆவது பாடலிலும், 'முளரிவேந்தன்' என்று 755ஆவது பாடலிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

**சரசுவதிதேவியை,** கலைமகள்(73), நாமகள் என்று 572, 729ஆவது பாடல்களிலும், 'வெள்ளை மேனியாள்' என்று 782ஆவது பாடலிலும். போதிமாது என்று 723ஆவது பாடலிலும் பாடப் பெற்றுள்ளது.

**தக்கன் மகளை, மலைமகள்** என்று 237ஆவது பாடலில் பாடப் பெற்றுள்ளது.

**திருமகளை அலைமகள், திருமகள், பூமகள்** என்று 202, 329, 433, 845, 729 ஆகியபாடல்களில் பாடப்பெற்றுள்ளது.

**சித்தரசேனன்** பரதம் ஆடினான் என்று 713ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

**இந்திரன், இந்திராணி** பற்றி 572ஆவது பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ளது.
**சாரங்கபாணி** 1377ஆவது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளார்.

**கார்த்திகேயன்** நந்தியோடு ஒத்தவன் என்று 679ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 3.5.1. நடராசர்

நடராசரின் வடிவத்தைப் பொதுவாகக் கல்லில் வடிப்பதில்லை. மிகவும் பழமையான திருக்கோயில்களில் மட்டும் கல்லினால் ஆன நடராசரைக் காணலாம். மதுரையில் கருவறைக்கு அருகில் உள்ள கல்லினால் ஆன நடராசர் வடிவத்துடன் இயைபு உடைய நடராசரின் சிலாவடிவம் திருப்பூவணத்தில் உள்ளது. மதுரையில் உள்ள நடராசர் இடது காலைத் தரையில் ஊன்றி வலது காலைத் தூக்கி ஆடுகிறார். திருப்பூவணத்தில் வலதுகாலை ஊன்றி இடதுகாலைத் தூக்கி ஆடுகிறார். இவ்விரண்டு திருவடிவங்களையும் கண்ணுற்றால் ஒரே சிற்பியால் செதுக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். இதனால் மதுரைக் கோயில் நடராசரும், திருப்பூவணம் கோயில் நடராசரும் ஒரே காலத்தில் வடிக்கப்பட்டனவாக இருக்கலாம்! என நம்பப்படுகிறது.

### 3.5.1.1. பிரமதாண்டவம்

சிவபெருமான் திருப்பூவணத்தில் ஆடும் திருநடனத்திற்குப் "**பிரமதாண்டவம்**" என்று பெயர். திருப்பூவணத்தில் நடராசன் ஆடிய ஆட்டத்தைத் திருப்பூவணப் புராணத்தில் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார்.

*"கரிமுகன் கந்தவேள் கருணையே பொழி*
*திருமுகமண்டலஞ் சிறந்திலங்க வான்*
*பெரு கொளி பரப்பிடும் **பிரமதாண்டவ***
*மருள் புரிதர வெழுந் தருளு நாயகன்" (பாடல் 759)*

கல்லினால் ஆன சிலா உருவத்துடன் ஐம்பொன்னால் ஆன நடராசர் திருமேனி ஒன்றும் திருப்பூவணக்கோயிலில் வழிபாட்டில் உள்ளது. திருப்பூவணத்தில், சதுர வடிவமான அரங்கினிலே, கங்கை, திங்கள் இவற்றை அணிந்து, வலது கையில் ஒலிக்கும் துடியையும், இடதுகையில் அனலையும் கொண்டு, இடது காலைத் தூக்கி, வலதுகாலை முயலகன் மீது ஊன்றித் திருநடனமாடுகிறார். ஜடா மகுடம், பின்தாழும் செஞ்சடைகள் திருமேனியோடு ஒட்டியுள்ளன. ஒடிவும் வளைவும் இலக்கணப்படியுள்ள அழகான திருமேனி. இந்த ஐம்பொன் சிலை கி.பி. 14-ம் நூற்றாண்டைச் சார்ந்தது.

*"இன்ன நல் **விக்கிரகங்க** ளெண்டிசை*
*துன்னு செங்கதிரொளி துதைந் திலங்கு சீர்ப்*
*பன்னரு நவமணி பயின்று பைம்பொனீள்*
*பொன்னணி மகுடவான் பொருந்து மண்டபம்" (பாடல் 760)*

என்று திருப்பூவணப் புராணத்திலே பாடப் பெற்றுள்ளது. இதனால் அதிகமான விக்கிரகங்கள் திருக்கோயில் மண்டபத்தில் இருந்துள்ளன என அறியமுடிகிறது.

3.5.2. **விநாயகர்** திருப்பூவணத்திலே இருக்கும் பெருமையினால், முக்கண் நிமலனை அருச்சனை செய்து முடித்தான் என்று பாடப் பெற்றுள்ளது.

*"தொக்க வுயிர்கட் கிலகு தொன்ன கரிதன்னுட்*
*டக்க வரமிக் குதவு தந்தி முகவெந்தை*
*யிக் குலவு நற் பதியிரும் பெருமையாலே*
*முக்க ணிமலன் றனை யருச்சனை முடித்தான் " (பாடல் 305)*

திருப்பூவணத்தில் தீர்த்தங்கள் அனேகம் இருந்தன. இக்காரணத்தினால் திருப்பூவணத்தில் அதிகமான எண்ணிக்கையில் விநாயகர் கோயில்கள் உள்ளன.

### 3.5.3. முருகன்

இத்தலத்தில் முருகனுக்குத் தனிக்கோயில் உள்ளது. திருப்பூவணப் புராணத்திலே கடவுள் வாழ்த்தில் "முருகன் துதி" ஒன்று உள்ளது.

*"தலம் புகழ் வச்சிரத் தடக்கை யிந்திரன் றந்தருள் பாவை தன்னோ் வள்ளி*
*நலம்புகழ் செவ்வேளரற்கு ஞான வுபதேச மருண் ஞான மைந்தன்*
*றுலங்கு கிரவுஞ்சகிரி துளைபட வெஞ்சூரனுரங் கிழிய வேலை*
*கலங்கவயில் வேல்விடுத்த கந்தனைப் பந்தனை யகற்றிக் கருத்துள் வைப்பாம் "*

(பாடல் 11)

புராணத்தின் வேறுபிற இடங்களில் முருகனைப் பற்றிய தனிக்குறிப்புகள் ஏதும் இருப்பதாக அறியப்பெறவில்லை.

### 3.5.4. வடுகக் கடவுள்

திருப்பூவணத்தில் திருப்பூவணநாதர், மின்னம்மை, விநாயகர், முருகக் கடவுளுக்கு அடுத்தாற் போல் வைத்து வணங்கப்படுபவராக வைரவர் என்றழைக்கப்படும் வடுகக் கடவுள் உள்ளார். திருப்பூவணப் புராணத்தில் மூலலிங்கத்திற்கு எவ்வளவு சிறப்புகள் சொல்லப்படுகின்றனவோ, அவ்வளவு சிறப்புகள் மணிகன்னிகா தீர்த்தத்திற்கும் சொல்லப்படுகின்றன. தற்போது தீர்த்தம் மூடப்பெற்றுள்ளமையால், வைரவக் கடவுளைத் திருக்கோயிலினுள் உள்ள மண்டபத்தில் நிறுவியுள்ளனர். அத்தீர்த்தத்திற்கு எவ்வளவு சிறப்புகள் சொல்லப்படுகின்றனவோ அவ்வளவு சிறப்புகள் அக்கரையிலிருக்கும் வைரவக் கடவுளுக்கும் சொல்லப்பட்டுள்ளன. இதனால் திருப்பூவணத் திருத்தல வழிபாட்டில் வைரவர் முக்கியத்துவம் பெறுகிறார்.

கடவுள் வாழ்த்தில், வைரவர்கடவுளானவர், அரி பிரமன் ஆகியோரின் அகந்தை கெடுமாறு செய்தவர். வாயில் குருதி கொப்பளிக்க அஞ்சும்படியான தோற்றத்தை உடையவர். திரிசூலத்தைக் கையில் கொண்டவர். அவர் எமைக் காக்க வேண்டுமென்று பாடப்பெற்றுள்ளது.

*"அரிபிரம ரகந்தை கெட வண்டங்க ளுடைந்து மிகு மங்கிகொண்டே*
*யுரிய பல வுலக மெலா மொழிந்திடு நாளவர்கட மதுடன் மேல்கொண்டு*
*குருதிவாய் கொப்பளிப்பக் கூரயின் மூவிலைச் சூலங்கொண்ட திண்டோட்*
*கருவரை நேர்தரு **வடுகக்கடவு** ளெமைக் காப்பக் கை கூப்புவாமே" (பாடல் 12)*

**திரணாசனன் முத்தி பெற்றசருக்கத்தில்,** திரணாசனன் எளிதில் சிவகதி அடையும் பொருட்டு சிவத்தலங்கள் தோறும் சென்று தீர்த்தமாடி சிவலிங்கங்களை வழிபட்டு

வந்தான். அவன் திருப்பூவணம் வந்து சேர்ந்து, மிகுந்த அன்பினோடு முதலில் வடுகக் கடவுளை வணங்கி வழிபட்டாள். பின்னர் மணிகன்னிகா தீர்த்தம் என்றும், தேவிகுண்டம் என்றும், சூரிய புஷ்கரணி என்றும் அழைக்கப்படுகிற மணிகுண்டத்திலே தீர்த்தமாடினான் என்று கூறப்பட்டுள்ளது.

*"காதலுடன் மேவு **வடுகக்கடவு** டன்னைப்*
*பாத கமலங் கண்மிசை சென்று பணிவுற்றே*
*கோதறு நன்னீர் கொண் மணிகுண்டமதின் மூழ்கி*
*யாதரவி னேறின னகன் கரையினம்மா " (பாடல் 381)*

**தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கத்திலே,** தருமஞ்ஞன் தனது தந்தையாரின் அஸ்திக் கலசத்தை எடுத்துக் கொண்டு காசிக்குச் செல்லும் வழியிலே திருப்பூவணம் வந்து சேர்ந்தான் என்றும், வந்தவன் முதலில் வடுகக்கடவுளை வணங்கிப் பின்னர் திருப்பூவணநாதரை வணங்கி அதன்பின்னர் மணிகன்னிகா தீர்த்தத்தை அடைந்தான் என்றும் கூறப்பட்டுள்ளது.

*"புடவி போற்று மப்பூவணங் கோயிலாக் கொண்ட*
*விடையுகைத்திடும் விண்ணவர் கோன்றனை **வடுகக்***
***கடவுடன்** பதங்கண்டு பின் கை குவித்திறைஞ்சி*
*மடல் விரிந்த பூ மாமணி யோடையில் வந்தான் " (பாடல் 543)*

**சர்வபாவமோசனச்சருக்கத்திலே,** சித்திரை மாதம் முழுமதி நாளிலே வடுகக்கடவுளைப் பணிந்து பின்னர் சிவபெருமானை வழிபட்டு அதன்பின்னர் மணிகுண்டத்தில் தீர்த்தமாடியவர்கள் அடையும் பலன்கள் கூறப்பட்டுள்ளன.

*"மேட நற்றிங்கடன் னின்மிக்க புரணையினன் பாற்*
*கூடிய மவுனத்தோடு **வடுகனைப்** பணிந்து கொன்றை*
*சூடிய கடவுடன்னைத் தொழுதிராக் கடையில் விண்ணோர்*
*தேடரு மணிகுண்டத்திற் சேர்ந்தவர் பலத்தைச் சொல்வாம் " (பாடல் 661)*

**தீர்த்தச்சருக்கத்திலே,**

*"நவின்றிடு வர்ணாச்சிரம நன்கடைவு பெறநாளு நாடியுள்ள*
*முவந்து புரிகுற்றனரே லுரைக்கரிய பரமசிவனு ருவமாவார்*
*தவந்தரு மித்தலந்தன்னிற் றகுமிடையூற மூதடையா வகை கணேசன்*
*சிவந்த முருகன் **வடுகனிவர்** பூசை செய்யினி கறீர்ந்து வாழ்வார் " (பாடல் 1286)*

என்று விநாயகர், முருகன் ஆகிய கடவுளருக்கு அடுத்தபடியாக வடுகக்கடவுள் சிறப்புடன் கூறப்பட்டுள்ளார்.

த் திருப்பூவணத்தில் வீற்றிருந்து அருளும் வடுகக் கடவுளின் பெருமைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

### 3.5.5. திருமால் கோயில்

திருப்பூவணநாதர் கோயிலை அடுத்தாற் போல், முருகன் மற்றும் பிள்ளையார் கோயில்கள் உள்ளன. அவற்றிற்கு அடுத்தாற் போல் *'ஸ்ரீ பூமிநீளா ரெங்கநாயகி உடனுறை ஸ்ரீ அழகிய மணவாள ரெங்கநாதப் பெருமாள் (படம்-8) கோயில்'* உள்ளது.

*"காருலவுந் திகழ் கற்பக நீழற்*
*சேர் தருகின்ற தொர் தெய்விக லிங்க*
*நேர்விழி காண்டலு நேரின் மெய்ஞ்ஞான*
***வாரி** படிந்து முயங்கினன் மாதோ" (பாடல் 732)*

இப் பெருமாள் வடக்கு நோக்கித் (திருப்பூவணநாதர் இலிங்கத்தை நோக்கித்) தேவியருடன் நின்ற கோலத்தில் அருளுகிறார். அனைத்துப் பெருமாள் கோயில்களிலும் வடக்குவாசல் மூடியே இருக்கும். 'சொர்க்க வாசல் திறப்பு' அன்று மட்டுமே வடக்கு வாசலைத் திறந்து பெருமாளை எழுந்தருளச் செய்வர். திருப்பூவணத்தில் பெருமாளே வடக்குப் பார்த்து உள்ளார், வடக்குப் பார்த்த பெருமாள் மிகவும் தனிச்சிறப்புடையவர் ஆவார். இங்கு எந்த நாளில் வழிபட்டாலும் சொர்க்க வாசல் திறப்பு அன்று வழிபடும் பலன் கிடைக்கும்.

*"சந்த நான் மறையவர் தம்மை நிந்தை செய்*
*பந்த பாதகமெலாம் பாறல் செய்திடு*
*மெந்தை யெம்பிராட்டி பாலியைந் திலங்கிடு*
*மந்தநற்பதி யரையாண்டு மேவினால் (பாடல் 1341)*

*பூரணை தனின் மணி பொருந்து மோடையி*
*லாரருளுடன் படிந்தண்ணல் சென்னிமேல்*
*வாரி சந்தயங்கு பூமாலை சாத்தினர்*
*நேர்குவ ரத்தின நினைந்த யாவுமே (பாடல் 1342)*

*மேவு பூரணை யுறு விசாகத் தோங்கு தென்*
*பூவணத்திறைக்கு நற் பூம்பட்டீகுநர்*
*பாவ மானவை யெலாம் பற்றறுத்தரோ*
*தாவில் சந்ததியுடன் றரணி தாங்குவார்" (பாடல்1343)*

இலக்குமியானவள், வாலகில்லி முனிவர்கள் குள்ளமாய் இருத்தல் கண்டு எள்ளி நகையாடினாள். அப்பாவம் போக்கத் திருப்பூவணம் வந்து தவம் செய்தாள். அவள் பொருட்டும், சலந்தரனைக் கொல்வதற்குச் சக்கராயுதம் பெறவும், திருமாலையும் திருப்பூவணம் வந்து வழிபட்டார். இலக்குமியும் திருமாலும் வழிபட்ட வைகாசி விசாக நட்சத்திரத்திலே முழுமதி நாளிலே மூலலிங்கத்தை முறைப்படி வழிபட்டால், பாவங்கள் யாவும் பற்றறுந்து விடும். நல்ல சந்ததிகளுடன் அரசராய் வாழ்வர்.

# தொகுப்புரை

மூர்த்தி, தலம், தீர்த்தம், விருட்சம் ஆகியன திருப்பூவணப் புராணத்தில் விரவி உரைக்கப்பட்டுள்ளன. திருப்பூவணத்தில் சிவலிங்கம் தோன்றிய வரலாறு, மூர்த்தியின் சிறப்பு, பல்லோர்க்கும் அருளிய தன்மை மற்றும் மூலமூர்த்திக்கே முதல் வணக்கம் ஆகிய செய்திகள் மிகவும் தெளிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

திருப்பூவணத்திருத்தலம் அமைந்துள்ள இடம், மதுரையிலிருந்து இத்தலம் உள்ள திசை, தொலைவு ஆகியனவும் தெளிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இத்தலம் 'பிதிர்முத்தி' அளிப்பதில் காசியிலும் சிறப்புடைய தலம் என்றும், அறிந்து செய்த பாவங்களை நீக்கவல்ல தலம் என்றும், கலியின் கொடுமையைக் குறைக்கவல்ல தலம் என்றும், குருஉபதேசம் செய்யவும் கேட்டிடவும் சிதம்பரத்திலும் சிறந்த தலம் என்றும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

அமிர்த மயமான தீர்த்தம் இருப்பதால் இத்தலம் கும்பகோணத்திலும் சிறந்த தலம் என்றும், திசைகள் தோறும் இத்தலத்தில் தீர்த்தங்கள் உள்ள செய்தியும், அத்தீர்த்தங்கள் எத்திசையில் எவ்வளவு தூரத்தில் உள்ள தென்ற செய்தியும், அதனைத் தோற்றுவித்தவர்கள், தோற்றுவித்ததற்கான நோக்கம், அத்தீர்த்தங்களில் நீராட வேண்டிய நேரங்-காலம் மற்றும் தீர்த்தமாடுவதனால் உண்டாகும் நன்மைகள் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

திருப்பூவணத்தில் தலவிருட்சமாக உள்ள பாரிசாதம் தோன்றியவரலாறு, அது பூவணத்திற்கு வந்த வரலாறு, அம்மரத்தின் குணநலன்களும் சிறப்புகளும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பாரிசாதப் பூவின் வாசனை சுற்று வட்டாரம் எங்கும் பரவி மணம் கமழும் என்ற செய்தியும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

திருப்பூவணத் தலத்தில் தீர்த்தங்கள் பல உண்டாயின. அத்தீர்த்தங்களுக்கு அருகிலே விருட்சங்கள் பல வளர்ந்தன. அவ்விருட்சங்களிடையே உமையம்மை பாரிசாத மரத்தை வளர்த்து அதனடியிலே கடுந் தவம் செய்தாள். அப்போது, அம்மரத்தின் அடியிலே சிவலிங்கம் முளைத்து அருளியது. இதனால், திருப்பூவணம் தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி என்ற வரிசையில் சிறப்புற்று விளங்கித் தன்னை

நாடிவரும் மக்களுக்கும் மற்றபிற உயிரினங்களுக்கும் நல்லருள் வழங்கி உலகில் ஒப்பற்றதாய் விளங்கி வருகின்றன.

தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி என்பனவற்றுள், இன்றைய நாளில் தலமும் மூர்த்தியும் சிறப்புகள் மாறாமல் உள்ளன. பெரும்பான்மையான தீர்த்தங்கள் பண்டைய பொழிவுடன் இல்லை, வரண்டுவிட்டன. விருட்சங்கள் இருந்த வனங்கள் இன்று இல்லை. ஆற்றோரம் அரச மரம் மட்டுமே உள்ளது. ஆற்றங்கரை நெடுகிலும் இருந்த மிகப் பெரிய மரங்கள் ஏதும் இன்று இல்லை. கோயில் வளாகத்தில் வில்வம், பலா, தென்னை மரங்கள் மட்டும் உள்ளன.

*****

சான்றெண் விளக்கம்

191 தொல்காப்பியம் நூற்பா எண் 226
192 தொல் காப்பியம், எச்சவியல் நூற்பா எண்.884

193 "சொற்புலமை காட்டப்புட்பவன புராணமெனப் புகலலுற்றேன்" - திருப்பூவணப் புராணம் பாயிரம் மூன்றாவது பாடலின் கடைவரி.
194 தொல்காப்பியம், எச்சவியல் நூற்பா எண் 884
195 கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 438
196 அ) கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 438
ஆ) வே.இரா. மாதவன் அவர்கள் தனது **தமிழில் தலபுராணங்கள்** (இரண்டாம் பகுதி) பக்கம் 95
197 வடமொழியில் உள்ள பிரமகைவர்த்த புராணமானது பிள்ளையார்பட்டிக் கோயில் உயர்திரு.பிச்சக்குருக்களிடம் உள்ளது. ஆனால் அதனை வடமொழி அறிந்தவர்கள் கூட எளிதில் படிக்க இயலவில்லை.
198 கி.காளைராசன், திருப்பூவணக் காசி, பக்கம் 14
199 ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், பக்கம் 293 மற்றும் 294 **(No. 475 of the Madras Epigraphical Collection fro 1916 ; T.A.S. Vol. 1Z, P.25)**
பதிப்பகத்தார் - பழனியப்பா பிரதர்ஸ்.

200

**No. 172.**
**(A. R. No. 473 of 1929-30.)**
**Attur, Tiruchchendur Taluk, Tirunelveli District.**
**On a stone in the pavement of the amma shrine in the Somanathesvara temple.**

This inscription dated in the 21st year of Jatavarman Sundara-Cholapandya is damaged at the end. It registers some gift made by Lokaditta-kkuttan of the Bharadvaja-gotra, a resident of Arrur-Sendamangalam for burning a lamp in the temple of Somanathesvara alias Ten-Tiruppuvanamudaiyar at Arrur-Sendamangalam, a brahmadeya in Kuda-nadu, a subdivision of Uttamasola-valanadu. Ten-Tiruppuvanam must have been so named after the god of the same name in the Ramanathapuram district. (Now in Sivaganga district.)
http://www.whatisindia.com/inscriptions/south_indian_inscriptions/volume_14/stones_151_to_175.html

201 சுமார் 18ம் நூற்றாண்டின் துவக்கத்தில் வெள்ளையர்கள் ஆட்சிக் காலத்தில் இவ்வாறு நடைபெற்றிருக்க வேண்டும் என ஆய்வாளரால் யூகிக்கப் படுகிறது.
202 சீவசாமதியில் உள்ள குருமகா சந்நிதானத்தின் பெயர் மற்றும் அவர் எத்தனையாவது பட்டம் என்ற விபரங்கள் ஆய்வாளரால் அறிந்து கொள்ள வேண்டியுள்ளது.
203 கி. காளைராசன், திருப்பூவணக்காசி, பக்கம் 145, 146, 147
204 தொல்காப்பியம் உவமவியல் நூற்பா எண் 1224
205 திருப்பூவணப் புராணம் பாடல் எண் 193
206 "நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு" (குறள் - 20)
207 இது ஆய்வாளரின் கருத்து
208 பட்டினப் பாலை , பாடல் வரி 98-99
209 யாப்பருங்கல விருத்தியின் பாவுரை
210 நல்லந்துவனார், பரிபாடல் 11

211 இரா.வ. கமலக்கண்ணன், திருப்பாவை தெளிவுரை, பக்கம் 16
212 திருப்பூவணப் புராணம் - பாடல் 1278
213 திருக்குறள் 278
214 திருப்பூவணம் பரம்பரை ஸ்தானிகர் தெய்வசிகாமணிப்பட்டர் அவர்கள் 05-04-2006 அன்று கூறியது.
215 தற்போது இக்குளம் சிறிது சிறிதாக மூடப்பட்டு வருகிறது.
216 கு.வே.பாலசுப்பிரமணியன், **தீர்த்தம் திருக்கோயில் அதோமுகதரிசனம்,** திருமந்திர ஆய்வுரைக் களஞ்சியம் 24ஆவது கட்டுரை.
217 இரா.வ. கமலக்கண்ணன், ஞானசாரம் - பிரமேய சாரம் மூலமும் உரையும்
218 தா.ஏ. ஞானமூர்த்தி, யுகந்தோறும் மாறும் தலமரங்கள், ஆய்வுக் கோவை (1991) பக்கம் 766
219 இரா. பாலசுப்பிரமணியன், **புராணவியல்**, பக்கம் 84
220 மேற்கோள் கருத்து கோ. சுப்பிரமணியபிள்ளை, "Tree worship and ophiolatry" சி. சத்தியமூர்த்தி, சிவலிங்க வழிபாடு, பக்கம் 7
221 கந்தசாமிப் புலவர், திருப்பூவணநாதருலா, பாடல் வரிகள் 14 - 16
222 கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்கம் 202
223 "கற்பக விருட்சம் - ஐந்தருக்களில் ஒன்று. தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது. இது விருட்ச உருப்போன்றது, எட்டுக் கிளைகளையுடையது. இதில் படருங்கொடி காமவல்லி, இது விரும்பினதைத் தரும் வலியுள்ளது." அபிதான சிந்தாமணி பக்கம் 381
224 அபிதான சிந்தாமணி , பக்கம் 1095
225 இரா. பாலசுப்பிரமணியன், **புராணவியல். பக்கம்** 80
226 பணை என்றால் பிழைத்தல், பொருத்தல் எனப்பொருளாகும் என்று தொல்காப்பியம் சொல்லதிகாரம் நூற்பா எண் 822ல் கூறப்பட்டுள்ளது.
"பணைத்து வீழ் பகழி" - நற்றிணை 165
"பணைத்தோள்" என்ற சொற்டொடர்களும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கனவாய் உள்ளன.
227 பாரிசாதத்தின் சிறப்புக்களில் சில திருப்பூவணப் புராணத்தின் இப்பாடல்களில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. பாடல் வரிசை எண்கள் - 237, 243, 266, 267, 697, 721, 838, 1159, 1167, 1168, 1234, 1253, 1361, 1424
228 "Shiva lingam is the holy symbol of Lord shiva that is considered quite sacred and worshipped with devotion by the devotees. The sanskrit word *li.ngam* means symbol, so shiva lingam means symbol of shiva. It is considered the foremost sacred symbol for shaivaites and has been worshiped for ages. The *purANa*s like *shiva mahA purANam* discuss about the superiority of li.nga worship. The Indus valley excavation is an example for the presence of this worship in olden times."
**www.shaivam.org**
229 ப. முத்துக்குமாரசாமி, **உலக சமயங்கள் - இந்து சமயம் ,** பக்கம் 93, 94
230 வானத்தை அம்பலமாகக் கொண்டவன் என்பதால் 'அம்பலவாணன்' என்ற காரணப் பெயர் உண்டாகியுள்ளது.(இது ஆய்வாளர் கருத்து)
231 "எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான் கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில் " - 36வது திருவிளையாடல், இரசவாதம் செய்த படலம், பாடல் எண் 3
232 தெ.முருகசாமி, முதல்வர்(ஓய்வு), இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி
எம்.பாண்டி, தமிழ்த்துறைத் தலைவர். அழகப்பா பல்கலைக்கழகம்
நா.வள்ளி, முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி - இவர்கள் 10-6-2008 அன்று ஆய்வாளரிடம் கூறியது.
233 ஒரு சதுர்யுகம் என்று சுமார் 43லட்சத்து 20 ஆயிரம் வருடங்களாகும். எனவே நாற்பதாயிரம் சதுர்யுகம் என்பது

40,000 x 43,20,000 = **1728** *கோடி வருடங்களாகும்.*

[234] *சோதிலிங்கம் பற்றிய புராணச் செய்திகள்* ***ஸ்ரீ சிவமஹா புராணத்திலே*** *கூறப்பட்டுள்ளன.*

[235] *ஆற்காடு கா.வெ.சீதாராமய்யர் சுத்த வாக்கிய சர்வமுகூர்த்த பஞ்சாங்கம்* 2006-07, *பக்கம்* 69,

[236] *பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம்* - 36*ஆவது படலம், இரசவாதம் செய்த படலம்*

[237] *திருப்பூவணப் புராணப் பாடல்கள்* 387, 388

[238] *மதுரையில் கொடிக்கம்பத்தின் அருகில் இந்த ஆடலின் சிற்ப வடிவம் உள்ளது.*

[239] *கூப்பிடுதூரம் என்பது சுமார்* 400*மீ தூரம் இருக்கும்.*

[240] *காளிக்கு அடைக்கலம் கொடுத்து ஆதரவளித்த காரணத்தால் மடப்புரம் ஐயனாருக்கு "அடைக்கலம் கொடுத்த ஐயனார் " என்ற காரணப் பெயர் உண்டானது. இன்றும் இப்பெயராலேயே இந்த ஐயனார் அழைக்கப்படுகிறார்.*

[241] *வித்துவான் தி.பட்டுச்சாமி ஓதுவார், கந்தசாமிபுராணம் (வசனம்), திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு, பக்கம்* 125, 125

[242] *ஆய்வாளரிடம் உள்ள பழமையான ஏட்டுச் சுவடி ஒன்றில் உள்ளது.*

# 4. பூவணப் புராணமும் பூவண இலக்கியங்களும்

**முன்னுரை**

திருத்தலங்கள், தலம் தீர்த்தம் விருட்சம் மூர்த்தி என்ற நான்கு காரணிகளால் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றன. சிறப்புடைய திருத்தலங்களின் பெருமைகளை உலகோர் அறிந்து கொள்ளும் வகையில் எடுத்துக் கூறுவன அத்தலத்திற்கான இலக்கியங்களாகும். இதனால், முதலில் கண்ட நான்கு காரணிகளோடு சிறப்புடைய ஐந்தாவது காரணியாகவும் திகழ்வது இலக்கியமாகும். இறைவனை, "*உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கு*" இலக்கியங்கள் காரணமாக உள்ளன. இதனால், எந்த ஒரு திருத்தலம் இலக்கியவளம் உடையதாக இருக்கிறதோ, அத்தலமே மக்களிடம் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கிறது.

தமிழகத்தில் சிவலிங்கங்கள் சுமார் 6000 ஊர்களில் வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன என அறியப்பட்டுள்ளது. இவற்றுள் திருமுறைகளால் சிறப்புப் பெற்ற திருத்தலங்களும், தலபுராணத்தால் சிறப்புப் பெற்ற திருத்தலங்களும் உண்டு. எனவே திருத்தலங்களைத் திருமுறைப் பாடல்பெற்ற தலங்கள் என்றும், தலபுராணம் பாடப்பெற்றுள்ள தலங்கள் என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

உலக மக்களால் உணர்ந்து ஓதப்படும் தலங்களாகத் திருமுறைப் பாடல்கள் கிடைக்கப் பெற்ற தலங்கள் 274 ஆகும். தலபுராணங்கள் உள்ள திருத்தலங்கள் சுமார் நானூற்றுக்கும் அதிகமாக உள்ளன. திருமுறை பாடல்களும் தலபுராணமும் கிடைக்கப் பெற்றுள்ள திருத்தலங்களில் திருப்பூவணம் குறிப்பிடத்தக்கதாய் உள்ளது.

மூவர் தேவாரம்

பன்னிரு திருமுறைகளில், திருஞான சம்பந்தர் அப்பர் சுந்தரர் இவர்கள் பாடிய திருத்தலங்களைத் "தேவாரப் பாடல் பெற்ற தலங்கள்" என்று ஆன்றோர் அழைக்கின்றனர். இவர்கள் பாடிய அனைத்துப் பாடல்களும் கிடைக்கப் பெறவில்லை என்றாலும், கிடைத்துள்ள பாடல்களில் குறிப்பிடப் பெற்றுள்ள திருத்தலங்கள்



மொத்தம் 274 ஆகும்.

இந்த 274 தலங்களையும் **"பாடல் பெற்ற தலங்கள்"** எனச் சிறப்பித்து அழைக்கின்றனர். பழம்பதியாம் பாண்டிய நாட்டில், 'பாடல் கிடைக்கப் பெற்ற தலங்கள்' மொத்தம் பதினான்கே உள்ளன. இவற்றைப் **"பாண்டிப் பதினான்கு"** என்று சிறப்பித்துக் கூறுகின்றனர். இப்பதினான்கு திருத் தலங்களிலும் மூவர்தேவாரமும் கிடைக்கப் பெற்ற ***ஒரே தலம் திருப்பூவணமாகும்***. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல் கிடைக்கப்பெறாத காரணத்தால், பாண்டியநாட்டின் தலைநகராகச் சிறப்புற்று விளங்கிய மதுரைக்கு இச்சிறப்புக் கிடைக்கப்பெறவில்லை.

| நாடு | பாடல்பெற்ற தலங்களின் எண்ணிக்கை |
|---|---|
| சோழநாடு | 190 |
| பாண்டியநாடு | 14 |
| சேரநாடு | 1 |
| கொங்கு நாடு | 7 |
| நடுநாடு | 22 |
| தொண்டை நாடு | 32 |
| துளுவநாடு | 1 |
| வடநாடு | 5 |
| ஈழநாடு | 2 |
| ஆக மொத்தம் | 274 |

| | |
|---|---|
| மூவராலும் பாடப்பெற்ற தலங்கள் | 94 |
| திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் பாடிய தலங்கள் | 84 |
| திருஞானசம்பந்தர், சுந்தரர் பாடிய தலங்கள் | 8 |
| திருநாவுக்கரசர், சுந்தரர் பாடிய தலங்கள் | 17 |
| திருஞானசம்பந்தரால் மட்டும் பாடப் பெற்ற தலங்கள் | 43 |
| திருநாவுக்கரசரால் மட்டும் பாடப்பெற்ற தலங்கள் | 18 |
| சுந்தரரால் மட்டும் பாடப் பெற்ற தலங்கள் | 10 |
| ஆக மொத்தம் பாடல் பெற்ற தலங்கள் | 274 |

மூவர் முதலிகளாலும் பாடப்பெற்ற சிறப்புடைய இத் திருப்பூவணத் திருத்தலம், மாணிக்கவாசகரின் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது. கரூர்தேவரின் பாடல் பெற்றது. அருணகிரிநாதரின்[243] பாடல் பெற்றது. திருவிளையாடற் புராணத்தில் உள்ள இரசவாதம் செய்த படலம் நடைபெற்ற சிறப்புடையது. மேலும் கழுவேறிய படலத்திலும் பாம்பு எல்லைகாட்டிய படலத்திலும் இத்தலம் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது. கந்தசாமிப் புலவரால், "திருப்பூவணநாதர் உலா, திருப்பூவணநாதர் வண்ணம், மூர்த்தி வகுப்பு, தலவகுப்பு" ஆகிய நூல்களும் பாடப்பெற்றுள்ளன.

திருப்பூவணம் தொடர்புடைய திருமுறைப் பாடல்களின் எண்ணிக்கை மொத்தம் 49 ஆகும். இவற்றில், திருஞானசம்பந்தரின் பாடல்கள் முதலாம் திருமுறையில் 11 பாடல்கள் உள்ளன. மூன்றாம் திருமுறையில் 11 பாடல்கள் உள்ளன. அப்பர் பாடல்கள் 11 உள்ளன. சுந்தரர் பாடல்கள் 8 உள்ளன. கருவூர்த் தேவர் பாடல்கள் 8 உள்ளன. ஆக மொத்தம் 49 பாடல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. திருப்பூவணநாதர் உலா 469 பாடல்அடிகளைக் கொண்டது. திருப்பூவணப் புராணம் 1437 பாடல்களைக் கொண்டது. இவை தவிர திருப்பூவணத்து முருகன் மேல் பாடப்பெற்ற அருணகிரிநாதரின் பாடல்கள் 3 உள்ளன.

திருமுறைகளிலும், புராணங்களிலும் திருப்பூவணம் சிறப்புடன் பாடப்பெற்றுள்ளதால், புராணக் கருத்துக்களையும் திருமுறைப் பாடற் கருத்துக் களையும் ஒப்புநோக்குவது இவ்வியலின் நோக்கமாகும். மேலும் கந்தசாமிப் புலவரே

திருப்பூவணப் புராணத்தையும் திருப்பூவணநாதர் உலாவையும் பாடியுள்ளதால் இவ்விரு இலக்கியங்களையும் ஒப்புநோக்குவதும் இவ்வியலின் நோக்கமாகும். எனவே,

1. திருப்பூவணப் புராணமும் திருஞானசம்பந்தரின் முதலாம் திருமுறைப் பாடல்களும்[244]
2. திருப்பூவணப் புராணமும் திருஞானசம்பந்தரின் மூன்றாம் திருமுறைப் பாடல்களும்
3. திருப்பூவணப் புராணமும் திருநாவுக்கரசரின் பாடல்களும்
4. திருப்பூவணப் புராணமும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல்களும்
5. திருப்பூவணப் புராணமும் மாணிக்கவாசகர் பாடல்களும்
6. திருப்பூவணப் புராணமும் திருவிளையாடற் புராணமும்
7. திருப்பூவணப் புராணமும் கருவூர்த்தேவர் பாடல்களும்
8. திருப்பூவணப் புராணமும் அருணகிரிநாதர் பாடல்களும்
9. திருப்பூவணப் புராணமும் திருப்பூவணநாதர் உலாவும்

என்ற தலைப்புகளில் திருப்பூவணம் தொடர்பான பாடல்கள் திருப்பூவணப்புராணத்துடன் ஒப்பாய்வு செய்யப்படுகின்றன.

## 4.1. திருப்பூவணப் புராணமும் திருஞானசம்பந்தரின் ஒன்றாம் திருமுறைப் பாடல்களும்

திருப்பூவணத் திருத்தலத்தைப் போற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடிய 11 பாடல்கள் முதலாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் தக்கேசி-பண் கொண்டு பாடப்பெற்றுள்ளன.

*திருஞானசம்பந்தர் திருப்பூவணத்தைப் பாடிய வரலாறு*

சமயகுரவர்களுள் முதலாவதாகப் போற்றப்பெறும் இவ்வருளாளர் சோழநாட்டில் சீர்காழியில் சிவபாத இருதயருக்கு மகனாக அவதரித்தார். தனது மூன்றாம் வயதில் ***"தோடுடைய செவியன்"*** என்னும் திருப்பதிகம் பாடித் தனக்கு ஞானப்பால் கொடுத்தருளிய அம்மையையும் அப்பனையும் சுட்டிக் காட்டினார். அதுமுதற் பல திருத்தலங்களுக்கும் சென்று பதிகம் பாடிப்பரவி, அருட்செயல்கள் பல புரிந்து, சைவத்தையும் தமிழில் பக்தி இலக்கியத்தையும் தழைக்கச் செய்தார்.

மதுரை மன்னனைச் சைவசமயத்திற்கு ஆட்படுத்த வேண்டி, மங்கையர்க்கரசியார் திருஞானசம்பந்தப் பெருமானை மதுரைக்கு அழைக்கிறார். அவ்வழைப்பை ஏற்றுத் திருஞானசம்பந்தப் பெருமான் மதுரை செல்லும் வழியில் திருப்புத்தூர் பணிந்து திருப்பூவணத்து வைகையாற்றின் வடகரையை வந்தடைந்தார். ஆற்றினைக் கடந்து தென்கரையிலுள்ள திருக்கோயிலுக்குச் செல்ல முயன்ற போது **வைகையாற்றின் மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்துள்ளன.** எனவே திருஞானசம்பந்தர் ஆற்றின் வடகரையிலிருந்தபடியே தென்கரையில் உள்ள திருப்பூவணநாதரைப் பணிந்து, "**தென் திருப்பூவணமே**" என்று முடியும் பாடல்களைப் பாடி வணங்கினார். திருஞானசம்பந்தருக்குக் காட்சியளிக்க விரும்பிய ஈசன் நந்தியைச் சற்றே சாய்ந்திருக்கும்படிக் கட்டளையிட்டார். நந்தி வலதுபுறமாகச் சற்று சாய்ந்துகொள்ள ஞானசம்பந்தர் இறைவனைத் தரிசித்து வழிபட்டார். இதனால் திருப்பூவணம் கோயிலில் நந்தி மறைப்பதில்லை.



**ஈசனை மறைக்காமல் வலதுபுறம்**
**சற்றே சாய்ந்திருக்கும் நந்திதேவர்**

வைகை ஆற்றின் வடகரையில் இருந்து திருஞானசம்பந்தர் வழிபட்ட இடத்தில் மண்டபம் ஒன்று உள்ளது. இம்மண்டபத்தை 'ஆடித்தபசு மண்டபம்' என்று அழைக்கின்றனர், இப்போதும் இம்மண்டபத்திலிருந்து நந்தி மறைக்காமல், திருப்பூவணநாதரை வழிபடலாம்.

ஒன்றாம் திருமுறையில் உள்ள பாடல்கள், "தென்திருப்பூவணமே" என்று முடியுமாறு பாடப் பெற்றுள்ளன. எனவே, இப்பாடல்கள் ஆற்றின் வடகரையில்(ஆடித்தபசு மண்டபத்தில்), இருந்து தென்திசையில் உள்ள தலத்தைப் பார்த்துப் பாடப் பெற்றிருக்க வேண்டும். மேலும் மூன்றாம் திருமுறையில் உள்ள பாடல்களில், "**அடிதொழ** நன்மையாகுமே" என்றும் "**அடிதொழப்** பீடை இல்லையே"

என்றும் பூவணநாதரின் திருவடியைப் பாடியுள்ளதால் இப்பாடல்கள் அனைத்தும் திருப்பூவணம் திருக்கோயிலில் பாடப் பெற்றிருக்கவேண்டும்.[245]

திருஞானசம்பந்தர் வழியில் மற்ற சமயகுரவர்களும் வைகை ஆற்றின் வடகரையிலிருந்தே தென்கரையில் உள்ள திருப்பூவண நாதரை வணங்கி வழிபட்டுள்ளனர் என்று "புட்பவனநாதர் வண்ணம்" என்ற நூலில் கந்தசாமிப் புலவர் குறிப்பிடுகிறார்.

"*செப்பு மூவர்சொல் தமிழ்த்துதிக்க விருப்பமொடுவந்து* வையை
மணற்சிவ லிங்கமென *மனத்தோணி முன்பு வடகரைக்கவர்*
*நின்று தமிழ்பாடு பொழுதேயிடப மாமுதுகு சாயும்வகையே*
*செய்துமுன் மூவர் தரிசிக்க மகிழ்நேசர்* " - (புட்பவனநாதர் வண்ணம்)[246]

**திருப்பூவணப் புராணமும் திருஞான சம்பந்தர் அருளிய தேவார (ஒன்றாம் திருமுறை) பாடல்களும்**

## 4.1.1. திறையால் ஒளி சேர்ந்தது (பாடல் -1)

*"அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்*
*குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா*
*முறையான் முடிசேர் தென்னர் சேரர் சோழர் கடாம் வணங்குந்*
*திறையா ரொளிசேர் செம்மை யோங்கு தென்றிருப்பூவணமே"*

தென் திசையில் உள்ள சிறப்புமிக்க திருப்பூவணத்தில் எழுந்தருளும் இறைவன், கங்கையையும் கொன்றைமலரையும்[247] திரிசடையையுடைய முடியில் அணிந்துள்ளார். வளர்பிறைச் சந்திரனைச் சூடிக்கொண்டு தன்னுடைய உடலின் ஒரு பகுதியைத் தேவிக்குக் கொடுத்துள்ளார். முறைப்படி அரசாட்சிக்கு வந்த பாண்டியர், சேரர், சோழர் மூவரும் சேர்ந்து தங்களது பரிவாரங்களுடன் திருப்பூவணம் வந்து இறைவனுக்குக் கப்பம் செலுத்தி வணங்குகின்றனர். அவர்கள் கப்பம் செலுத்திய பொருட்செல்வத்தால் ஒளிபொருந்திய செம்மையான நகரமாகத் திருப்பூவணம் விளங்குகிறது.

இப்பாடலில் சிவபெருமானது திருவடிவம் எடுத்துக் கூறப்படுகிறது. அவரை மன்னர்கள் வந்து வணங்கித் திறை செலுத்தினர் என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது.

இச்செய்தியைத் திருப்பூவணப் புராணத்தில்,

*"அறையார் புனல்"* என்ற சொல்லைத் *"திரையார்புனல் .... ...."*(பாடல் 555) என்று கந்தசாமிப் புலவர் குறிப்பிட்டுள்ளார். மேலும், திருநகரச் சருக்கத்தில் உள்ள கீழ்க்கண்ட பாடலில் திருக்கோயிலில் மன்னர்கள் செலுத்திய திறைகளை அளப்பதற்கு என்றே தனி மண்டபம் இருந்ததைக் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார்.

*"அன்னமென்னடையா ராடு மாடரங்கு மணிமணிக் கோபுரநிரையு*
***மன்னவர் திறைக ளளக்கு மண்டபமும்** வண்டமிழ்க் கழக மண்டபமு*
*முன்னை யாரணங்கண் முழங்கு மண்டபமும் முரச திருமண்டபமுந்*
*தன்னிகர் தருநற்றான மணட்பமுஞ் சார்ந்த பல்வீதியு நெருங்கும் " (பாடல் 192)*

*"மருவு மணிமன்று தொறு **மன்னவர்கள்** சேர்வர்*
*தரியலர்கள் வாயிலிடை தகு **திறை யளப்ப***
*ரரிவையா ரங்குதொறு மாடல் பயில்கிற்பார்*
*திருமறுகு தொறு மினிய சிலதியர்கடிரிவார் " (பாடல் 222)*

*திரைபுரள் கோதாவிரி தருதீரஞ் சேர்ந்திடும் பலவளனார்ந்த*
*பொருவரு போகவதி யென வோங்கும் பொற்சுவ ருடுத்த நற்புரியி*
***னரசர்** கணெருங்கி யறு தினந்தத் தமருந் **திறையளந்து** வீழ்ந்திறைஞ்சப்*
*பரவருமகுட மணியொளி பரப்பும் பரிபுர மருவிய பதத்தான் "(பாடல் 1194)*

கோதாவரி ஆறு ஓடும் போகவதி நாட்டை யாளும் அரசர் பல்வேறுவிதமான மணிகளால் கோபுரம் நிறையும் அளவிற்குத் திறை செலுத்தி உள்ளனர். அம்மன்னர்கள் செலுத்திய கப்பத்தின் பொருட்சிறப்பையும் அளவையும் கூறுவதாக உள்ளது.

## 5.1.2 அவுணர் அறணம் எய்தது (பாடல்-2)

*"மருவார் மதின்மூன் றொன்ற வெய்து மாமலை யான்மடந்தை*
*யொருபால் பாக மாகச் செய்த வும்பர் பிரானவனூர்*
*கருவார் சாலியாலை மல்கிக் கழன்மன்னர் காத்தளித்த*
*திருவான் மலிந்த சேடர் வாழுந் தென்றிருப்பூவணமே"*

தங்கம், வெள்ளி, இரும்பு ஆகியவற்றாலான பறக்கும் மூன்று கோட்டைகளை அமைத்துக் கொண்டு அவற்றில் இருந்து கொடுங்கோலாட்சி செய்த மூன்று அசுரர்களையும் சிவபெருமான் அழித்தார். உலகிலேயே மிகவும் உயரமான இமயமலையினை ஆண்ட இமவானின் புதல்வியைத் திருமணம் செய்து கொண்டு தன்னுடைய உடலில் ஒரு பாகமாகும்படி அருளியுள்ளார். நெற்களஞ்சியங்களும், கரும்பு ஆலைகளும் நிறைந்துள்ள திருப்பூவணத்தில், வீரக் கழல் புனைந்த

மன்னர்கள் காத்து அளித்த செல்வத்தை உடையவர்கள் வாழ்கின்றனர். இவ்வாறான சிறப்புகளை உடைய திருப்பூவணமானது சிவபெருமானின் ஊராகத் திகழ்கிறது.

இப்பாடற் கருத்தானது, திருப்பூவணப் புராணத்தில் சிதம்பர உபதேசச் சருக்கத்தில் தாழம்பூவானது சிவபெருமானைப் புகழ்ந்து கூறியதாக உள்ளது. அரியும் அயனும் சிவனின் அடிமுடி காணமுடியாத கதையில், நான்முகன் பொருட்டு, அவன் சிவபெருமானின் முடியைக் கண்டதாகத் தாழம்பூ பொய் சொன்னது. அப்பாவத்தை நீக்கிடவேண்டித் தாழம்பூ, சிவபெருமானை,

*"மிக்கதொரு தக்கனது வேள்வியை யழித்தோ*
*யக்கடலினின்று வரு மாலவிட முண்டோய்*
***மொக்குளினியங் கவுணர் முப்புர மெரித்தோய்***
*திக்குலகொலாம் புரவு திங்களை முடித்தோய் " (பாடல் 1420)*

என்று பலவாறு துதித்து வேண்டியது. அதற்குச் சிவபெருமானும், தாழம்பூவைத் திருப்பூவணம் சென்று வழிபடுமாறு கூறியருளினார்.

## 4.1.3 சீரார் வாரி சேர நின்றது (பாடல்-3)

*"போரார் மதமா வுரிவை போர்த்துப் பொடியணி மேனியனாய்க்*
*காரார் கடலி னஞ்ச முண்ட கண்ணுதல் விண்ணவனூர்*
*பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப் பன்மணி பொன் கொழித்துச்*
*சீரார் வாரி சேர நின்ற தென்றிருப் பூவணமே"*

போரில் ஆர்ப்பரிக்கும் மதம் பொருந்திய யானையின் தோலை உரித்துப் போர்த்தியவனும், திருநீற்றுப் பொடியினை மேனியெங்கும் பூசியவனும், அமுதம் கடையும்போது கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு அனைத்துத் தேவர் மற்றும் அசுரர்களைக் காத்தவனுமாகியவன் சிவபெருமான். பூமியில் ஆர்ப்பரித்து ஓடிக் கடலில் கலக்காத வைகைநதி பல வாய்க்கால்களில் பரந்து சென்று பாய்வதால், நெல்லும் மற்றும் பல மணிகளும் பொன்னாக விளைகின்றன. சீர்மைமிகுந்த பெருமாள் சிவபெருமானுடன் சேர்ந்து திருப்பூவணத்தில் எழுந்தருளி நிற்கிறார். "வாரி" என்ற சொல்லுக்குப் திருமால் என்றும், கடல்[248] என்றும், நீர் என்றும் பொருள் உண்டு. திருப்பதித் திருத்தலத்திலே வேங்கடவனை, "ஸ்ரீவாரி" என்றும் அழைக்கின்றனர். 'சீர்' என்ற தமிழ்ச் சொல்லானது வடமொழியில் 'ஸ்ரீ' என வழங்கப் பெறும். எனவே 'சீரார் வாரி' என்பது 'ஸ்ரீவாரி' என்று பெருமாளைக் குறிக்கும். மேலும், "வாரி சேர **நின்ற**"

என்பதால், திருப்பூவணத்தில், சிவபெருமானுடன் திருமாலும் சேர்ந்து நின்று அருளுகின்றனர் என்பது பொருளாகும்.

சீரார் வாரி சேர்கின்ற திருப்பூவணம் என்ற திருஞானசம்பந்தரின் கருத்தை,

*"நாடுற யார்க்கு நனிசிறந்தோங்கு நற்பெறியுடுத்த பொற்புரிசை*
*மாடுறு **சீரார்வாரி சேர்கின்ற** வண்மையை யாதென வகுப்பா*
*நீடுபல்லுலகை நிரப்பி யுன்னதமாய் நேமிமால்வரையதன் பாங்கர்ப்*
*பீடுறமன்னும் பெரும்புறக் கடல்போற்பிறங்கு பேரகழிசூழ்ந் திலகும் (பாடல் 185)*

*தண்டரளங்கள் வெண்டிரை கொழிக்குந் தடங்கரை மருங்கினி லுடுத்த*
*மண்டிய செல்வப் பெரும்புனற் **சீரார்வாரியின்** வானவ ருலகங்*
*கண்டவ ருள்ளங் களிமிகத் தூங்கக் காண்டகு மாட்சியின்மிகுமா*
*லண்டர் நாடதனி னண்டர் நாடடைந்த தென்பது மற்புதமாமோ" (பாடல் 186)*

என்ற பாடல்களில் கந்தசாமிப்புலவர் பாடியுள்ளார். இதனால் புராண காலத்திலேயே திருப்பூவணத்தில் சிவன் கோயிலும் பெருமாள் கோயிலும் சேர்ந்து இருந்துள்ளன என அறியமுடிகிறது.

சிவபெருமான், **கடலின் நஞ்சை உண்ட** நிகழ்ச்சியானது திருப்பூவணப் புராணத்திலே 556ஆவது பாடலில் "கடல்சேர்விடமுண்டவனே" என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 4.1.4 செடியார் வைகை சூழ (பாடல்-4)

*"கடியா ரலங்கற் கொன்றை சூடிக் காதிலொர் வார் குழையன்*
*கொடியார் வெள்ளை யேறு கந்த கோவண வன்னிடமாம்*
*படியார் கூடி நீடி யோங்கு பல்புக ழாற் பரவச்*
*செடியார் வைகை சூழ நின்ற தென்றிருப் பூவணமே"*

கொன்றை மாலை சூடியவன். ஓர்காதில் வெண்குழையை அணிந்தவன். கோவணம் அணிந்தவன். வெள்ளை நிறக் காளை மாட்டின் மீது விருப்பமுடன் அமர்ந்து வருபவன். மறைகளை ஓதக்கூடியவர்கள், சிவபெருமானின் பல்வேறு புகழ்களையும் பாடிப்பரவுகின்றனர். வைகைநதி சூழ்ந்து உள்ள திருப்பூவணம். அடியார்கள் வைகைநதி போலச் சூழ்ந்து நின்று இறைவனின் பல்வேறு புகழையும் பாடுகின்றனர். இத்தலத்தில். சிவபெருமான் எழுந்தருளியுள்ளார்.

இக்கருத்துக்களை உள்ளடக்கிய பல்வேறு பாடல்கள் திருப்பூவணப்புராணத்தில் உள்ளன.

**கொடியார்** - திருப்பூவணக் கோயிலில் கொடி ஏற்றி பங்குனி உத்திர விழாக்கள் தொடங்கியதை,

*"இடர்ப் பிறப்பிறப்பென் றோதுமிருங் கடற்படிந்து நாளுங்*
*கடைப் படாதுயிர்க் கிரங்கிக் கதி யருள் புரியநீடும்*
*படித்தலம் போற்றுகின்ற பங்குனி யுத்தரத்தின்*
***விடைக்கொடியேற்றி** மிக்க விழாவணி நடந்ததன்றே" (பாடல் 491)*

என்று திருப்பூவணப் புராணம் எடுத்துரைக்கிறது. மேலும்,

*"விண்டலந்தயங்குவெள்ளிமால்வரைபோல்விடைக்கொடிமீதுநின்றலங்க" (பாடல் 498)*

*"அரியயனடிபரவமலாசரணமடல்விடைதருகொடியரனேசரணந்" (பாடல் 558)*

*"விண்ணின்மேற்பொருவல்விடைக்கொடியுயர்த்தவிமலனல்லிமைத்தலின்மூன்று "*
*(பாடல் 872)*

என்ற பாடல்அடிகளிலும் விடைக்கொடி புகழப் பெற்றுள்ளது.

'**செடியார்** வைகை' என்பது குற்றமற்ற வைகை எனப் பொருளாகும். திருப்பூவணம் **வைகையால்** சூழப்பட்டுள்ளதைத் திருப்பூவணப்புராணத்தின் கீழ்க்கண்ட பாடல் எடுத்தியம்புகிறது.

*"இன்ன பரிசெங்கணு மியைந்த முறையாலே*
*பொன்னகரு நாணமிகு பொற்புட னிலங்குந்*
*துன்னு பொழில் **வைகைநதி சூழ் தரவிளங்கு***
***மந்நகரி** தன்னணியை யாரறைய வல்லார் " (பாடல் 225)*

## 4.1.5 தேரார் வீதி (பாடல்-5)

*"கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த*
*போரார் வில்லி மெல்லிய லாளோர் பால் மகிழ்ந் தானிடமா*
*மாரா வன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்*
*தேரார் வீதி மாட நீடு தென்றிருப் பூவணமே"*

கூர்மையான அம்புகளையுடைய சிவபெருமான், அசுரர்களின் நீண்ட மதில்களை மொத்தமாக அழித்தார். மெல்லிய உடலினையுடைய பார்வதிதேவியுடன் திருப்பூவணத்தில் மகிழ்ந்தருளுகிறார். இவர்மீதுள்ள நீங்காத அன்பினால் பாண்டியர், சேரர், சோழர்கள் போற்றி, இசையுடன் பாடிப் பணிந்திடுகின்றனர். தேர் ஓடும் வீதிகளும், மாட மாளிகைகளும் நிறைந்த திருப்பூவணத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார்.

திருப்பூவணத்தில் தேர்த்திருவிழா சிறப்புடன் நடைபெற்றதைக் கீழ்க்கண்ட புராணப் பாடல்களில் காண முடிகிறது.

*"**மாமணித் தேர்** களெங்கு மாட மண்டபங் களெங்குந்*
*தாம நீள் வீதியெங்குந் தக்க பூம்பந்த ரெங்கும்*
*பூமகளுறை யுளெங்கும் பூங்கமுகரம்பை நாட்டிக்*
*காமர் பொன்னகர மென்னக் கடி நகரலங் கரித்தார் " (பாடல் 496)*

*"அத்திரு வீதியி னணி மயிற் புறாத்*
*தத்துவாம் பரிகரிதானை **தேர்** கிளி*
*சித்திரப் பொறியினாற் செய்து தத்த நன்*
*மெய்த் தொழிலியற்றிட விதித்திட்டாரரோ " (பாடல் 980)*

*"தவலருந்தின விழாத் தங்குந் திங்களி*
*னிவறலி னெழுச்சி நன் கியற்று வோரியாண்*
*டவர் மணித் **தேர்விழா** வணி நடத்துவோர்*
*சிவபிரானுடன் சிவபுரியிற் சேர்குவார் " (பாடல் 1264)*

*வருந்தியேயாயினுமாக்கள்பாதலப்*
*பரன்றிருத்**தேர்விழப்பணிதல்**வேண்டுமாற்*
*றிருந்தொருதினந்தரிசித்துளோர்களும்*
*பொருந்துவரழீவிலாப்போகமுத்தியே (பாடல் 1337)*

திருப்பூவணத்தில் தேர்த்திருவிழாவை நடத்துவோர் சிவபிரானுடன் சிவபுரியிற் சேர்ந்து வாழ்வர் என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

## 4.1.6 தென்றல் ஒன்றி (பாடல்-6)

*"நன்று தீதென் றொன்றி லாத நான்மறை யோன்கழலே*
*சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாங்*
*குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர்பொழில் சூழ் மலர்மேற்*
*றென்ற லொன்றி முன்றி லாருந் தென்றிருப் பூவணமே"*

இறைவனுக்கு நன்மை என்றும், தீமை என்றும் ஏதுமில்லை. அவன் நான்கு வேதங்களின் வடிவமாக உள்ளான். இவன் குளிர்ந்த மலர்கள் நிரம்பிய பூவனத்திடையே தென்றல் வீசும் திருப்பூவணத்தில் எழுந்தருளியுள்ளான். அவனிடம் சென்று அவனது திருவடிகளை வணங்கி அவனது புகழைப் பாடி வணங்க வேண்டும்.

திருப்பூவணப் புராணத்தில் தென்றல் பற்றிய குறிப்பு ஒரு பாடலில்,

*"அன்றில்பகை யாழிபகை யாயர் குழலோடித்*
*தென்றல்பகை யென்று சிலர் செப்பியிடுகிற்பார் "*

என்று உள்ளது. திருஞானசம்பந்தரின் மேற்கண்ட பாடற் கருத்திற்கு இசைவான பாடலேதும் புராணத்தில் உள்ளதாக அறியப்பட வில்லை.

### 4.1.7 மேனிநீறுபூசி (பாடல்-7)

*"பைவா யரவ மரையிற் சாத்திப் பாரிடம் போற்றிசைப்ப*
*மெய்வாய் **மேனி நீறு பூசி** யேறுகந் தானிடமாங்*
*கைவாழ் வளையார் மைந்த ரோடுங் கலவியினா னெருங்கிச்*
*செய்வார் தொழிலின் பாட லோவாத் தென்றிருப்பூவணமே"*

வாயில் உள்ள பையில் மிகக் கொடிய நஞ்சினை உடைய பாம்பினைத் தனது இடுப்பினில் அணிந்துள்ளவன். உலகில் முற்றிலும் உண்மையானதும் சத்தியமானதுமான திருநீற்றினைத் தன் உடல் முழுவதும் பூசியுள்ளவன். கைகளில் வளையல்களை அணிந்த இளமகளிர் தம் காதலரோடு நெருங்கிக் கலவி செய்வர். பாடல் இடைவிடாது இசைத்துக் கொண்டே இருக்கும். இச்சிறப்புப் பொருந்திய திருப்பூவணத்தில் சிவபெருமான் எழுந்தருள் செய்கிறான். இதைப்போன்று,

*"விரவியபவங்கள்வேரறுத்திடுநல்வெண்டிரு**நீறுமெய்விளங்கக்***
*கருதிதாயதிகழரையதனிற்கட்டியகச்சுடைவயங்க*
*மருவியவுதரபந்தனமானவாளராமணியொளிவயங்கப்*
*பொருவருகிரணபரிபுரமிலங்குபொற்பதாம்புயங்கவின்பொழிய" (பாடல் 1113)*

திருப்பூவணப் புராணத்திலே 'வெண்திருநீறு மெய் விளங்க' இறைவனின் திருவுருவம் விளங்கிய தன்மை பாடப் பெற்றுள்ளது.

### 4.1.8 மன்னிலங்கை மன்னன் (பாடல்-8)

*"மாட வீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்*
*கூட வென்றி வாள்கொ டுத்தான் கொள்கையி னார்க் கிடமாம்*
*பாட லோடு மாட லோங்கிப் பன்மணி பொன் கொழித்து*
*வோடி நீரால் வைகை சூழு முயர்திருப் பூவணமே"*

மாடமாளிகைகள் நிறைந்த வீதிகளை உடைய இலங்கையின் வேந்தனாகிய இராவணனின் செருக்கை அகற்றிய சிவபெருமான் திருப்பூவணத்தில் எழுந்தருளியுள்ளார். இத்தலத்தில் வைகையாறு ஓடுகிறது. அதனால் பொன் கொழிக்கின்றது. இங்கு, பாடல்கள் நீங்காது ஒலித்துக் கொண்டிருக்கின்றன. இப்பாடல்களுக்கு ஏற்றாற்போல் ஆடல்களும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

இலங்கை வேந்தன் கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்தபோது, இறைவன் தனது கால்விரலை ஊன்றினான். அதனால் பாரந்தாங்காது மலையின் அடியில்

இராவணனது கை மாட்டிக் கொண்டது. அவன் சாமகானம் பாடி இறைவனை வழிபட்டான். சிவபெருமான் தோன்றி அவனுக்கு அருளினார். மேலும் போர்வாள் ஒன்றையும் பரிசாகக் கொடுத்தார். இந்தக்கதையே மேற்கண்ட பாடலில் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணத்திலே,

*"ஒள்ளிதென வேதினமு மொண்டொடி நின்னோடும்*
*வெள்ளிமலை யென்றதனின் மேவியிட மேனா*
*ளெள்ளரு **மிலங்கையி லிராவண னிராதே***
*யள்ளி யகழ்கின்றதனை யாரு மறியாரோ " (பாடல் 1102)*

என்ற பாடலில் இலங்கைவேந்தன் இராவணன் கைலாயத்தைப் பெயர்த்தெடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது. மேலும், திருமகள் சாப விமோசனச் சருக்கத்தில் ராமாவதாரம் மற்றும் ராவணனுடன் யுத்தம் பற்றியும் பாடப்பெற்றுள்ளது.

## 4.1.9 நான்முகனும் நாரணனும் (பாடல்-9)

*"பொய்யா வேத நாவி னானும் பூமகள் காதலனுங்*
*கையாற் றொழுது கழல்கள் போற்றக் கனலெரி யானவனூர்*
*மையார் பொழிலின் வண்டு பாட வைகை மணி கொழித்துச்*
*செய்யார் கமலந் தேன ரும்புந் தென்றிருப் பூவணமே"*

பொய்மையில்லாத வேதங்களை உச்சரிக்கும் நாவினையுடைய பிரம தேவனும், பூமகள் என்றழைக்கப்படும் திருமகளின் நாயகனான திருமாலும் கைகளால் தொழுது சிவபெருமானின் கழல்களைப் போற்றுகின்றனர். மிகவும் அடர்ந்த பூவனத்தில் வண்டுகள் பாட்டுப்பாட, வைகை ஆற்று நீரினால் பொன் மணிகள் கொழிக்கின்றன. வயல்களில் நிறைந்துள்ள கமல மலர்கள் தேன் அரும்புகின்றன. இச்சிறப்பினை உடைய பூவணத்தில் சிவபெருமான் விருப்பமுடன் உறைந்துள்ளான். இப்பாடலுக்கு நேர் பொருள் கொள்ளும்வகையில்,

*"பூமாது மகிழ் துளபப் புயல்வண்ண **நெடுமாலும்** புகழ் வெண்கஞ்ச*
*நாமாதுநடனமிடு**நான்மறைதேர்நான்முகனுநயப்ப** நன்னீர்த்*
*தேமாது செழும்பவளச் சடையிருப்பத்திங்களிருடுரப்பச்சைல*
*மாமாது வடிவிலங்கமன்னிய பூவணத்தரன்றாள் சென்னிசேர்ப்பாம்" (பாடல் 4)*

என்று திருப்பூவணப் புராணத்தில் பூவணநாதர் வாழ்த்துப் பாடல் பாடப் பெற்றுள்ளது.

## 4.1.10 சிலையார் புரிசை (பாடல்-10)

*"அலையார் புனலை நீத்த வருந்தே ரருமன் புசெய்யா*
*நிலையா வண்ண மாய வைத்த நின்மலன் றன்னிடமா*
*மலைபோற் றுன்னி வென்றி யோங்கு மாளிகை சூழ்ந்தயலே*

*சிலையார் புரிசை பரிசு பண்ணுந் தென்றிருப்பூவணமே"*

என்ற திருஞானசம்பந்தரின் பாடலில் "மாளிகை சூழ்ந்தயலே" குறிப்பிடப் பட்டுள்ளது போல் திருப்பூவணப் புராணத்திலும் பாடப்பெற்றுள்ளது.

*"தருமொளி பரப்புஞ் சந்திர காந்தந் தரையெலாஞ் சீர்பெறச் சமைத்துப்*
*புகழ்பெறமிகு செம்பொன்னினால் வேய்ந்து பொற்சிகரம் பலவமைத்துத்*
*திகழ்பெறு கமலபீடிகை மருவு திருமணிவாயில் கடோறு*
*மகிழ் தரு மாடகூட மண்டபங்கண் மாளிகை சூளிகை நெருங்கும் "* (பாடல் 191)

வாயில்களில் உள்ள நிலைகளில் கமலபீடிகை இருக்கும் எனப் பாடப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது .

## 4.1.11 பாடல் வல்லார் (பாடல் 11)

*"திண்ணார் புரிசை மாட மோங்கு தென்றிருப் பூவணத்துப்*
*பெண்ணார் மேனி யெம்மி றையைப் பேரிய லின் றமிழா*
*னண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன*
*பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே"*

மலைபோன்று உயரமான மாட மாளிகைகள் சூழ்ந்துள்ள திருப்பூவணத்தில், பூவனத்திற்கு இடையே பொன்னார் மேனியனாகிய சிவபெருமான் எழுந்தருளுகிறார். இனிய தமிழால் சீர்காழியில் தோன்றிய ஞானசம்பந்தன். இத் திருப்பூவணநாதரின் மீது பண்ணுடைய இசைப்பாடல்களாக மேலே கண்டவாறு பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். இப் பாடல்கள் பத்தினையும் பாடிப்பயில்பவர்கள் வானிடையே விளங்கும் பேற்றினைப் பெறுவார்கள்.

திருஞானசம்பந்தர் வானிடை வாழ்வார் எனக் கூறியுள்ளது போல், புராணத்தைப் படிப்பவர் கயிலையில் வாழ்வர் என்று கீழ்க்கண்ட புராணப் பாடல்களில் பாடப் பெற்றுள்ளது.

*"பரிதி மடுவுறு பான்மையை நாளுமே பரவையுடை திகழ் பார்தனி லோதுவோ*
*ரொருமையுடன் மனனூடதை நாடுவோ ருரிய செவி நுகரூனமின் மேன்மையோர்*
*கருணையுறு மிகு காமருசீர் கொடே கருதியறைகுநர் பூசை செய் காதலோர்*
***மருவு முரு வசிமா முலை மீதரோ வருட மொரு பதினாயிரம் வாழ்வரே "*** (பாடல் 528)

*"உற்ற வித்தலத்திடை யுயிர் மெய்யொத் துறக்*
*கற்றுணர் கலைவலோர் கண்ட மாத்திரை*
*பொற்புடன் பொருந்தினோர் புனித மேனியாய்*
***நற் பெருங்கயிலையி னண்ணி வாழ்வரே"*** (பாடல் 1265)

*"ஒப்பிலாத வுருத்திர சங்கிதை யுற்ற பூவண நற்கதை யோதுவோர்*
*செப்புமாறு செவிக்கொடு மன்னிய சிட்டராய சிறப்புறு தன்மையோர்*
*விப்பிராதி பவித்தக மெய்ம் மொழிமிக்க வேத விதத்துயர் மாதவர்*

*தப்பிலாத தவத்திருமன்னவர்* ***தயாபரன் கயிலைக்கிரி வாழ்வரே*** *" (பாடல் 1436)*

### 4.1.12 கூறியனவும் கூறாதனவும்

திருஞானசம்பந்தர் பாடல்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் திருப்பூவணப் புராணப் பாடல்களிலும் இடம்பெற்ற விபரங்கள் மேலே காணப் பெற்றன. திருப்பூவணப் புராணத்தில் கூறப்பெற்றுள்ள சூரியன் பூசனை, திரணாசனன் வீடுபேறு அடைதல், தருமஞ்ஞன் முத்திசார்தல், பிரமன் சாபவிமோசனம் பெறுதல், உற்பலாங்கி பதியை அடைதல், சுச்சோதி அரசன் அவனது முன்னோர்களுக்குத் தர்ப்பணம் கொடுத்தல், நளமகாராசன் திருவிழாக்கள் நடத்திடுதல் ஆகிய புராணச் செய்திகள் ஏதும் திருஞானசம்பந்தரின் பாடல்களில் குறிப்பிடப் பெறவில்லை.

திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ள மூவேந்தர்களும் திருப்பூவணத்திற் திறை செலுத்தி வணங்கியமை, இலங்கை மன்னனுக்குச் சிவபெருமான் அருளிய தன்மை ஆகியன பற்றித் திருப்பூவணப் புராணத்தில் குறிப்பேதும் இல்லை.

## 4.2. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது

**(3-ஆம் திருமுறை)**
**பண் - காந்தார பஞ்சமம்**

### 4.2.1 மாதமர் மேனியன் (பாடல்-1)

*"மாதமர் மேனிய னாகி வண்டொடு*
*போதமர் பொழிலணி பூவணத்துறை*
*வேதனை விரவல ரரண மூன்றெய்த*
*நாதனை யடிதொழ நன்மை யாகுமே "*

மாதினுக்குத் தன்னுடைய மேனியில் பாதியைக் கொடுத்தவனும், வண்டுகள் மொய்க்கின்ற பூமாலைகளை அணிந்துள்ளவனும், வேதங்களை உரைப்பவனும், அசுரர்களின் மூன்று அரண்களையும் அம்பினால் எய்து அழித்தவனுமாகிய திருப்பூவண நாதரின் அடியினைத் தொழுதால் நன்மையாகும்.

திருப்பூவணப் புராணத்தில் "மாதமர் மேனியன்" என்ற சொற்றொடர் எடுத்தாளப் பெற்றதாக அறியப்படவில்லை. நைமிசாரண்யச் சருக்கத்திலும், சிதம்பர உபதேசச் சருக்கத்தில், தாழம்பூ பொய் சொன்ன பாவம் நீங்கப்பெற்ற கதையிலும் 'நாரிபாகன்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

*"காரின்மல்கியகந்தரந்தந்த காட்சியினாற்*
*சீரிணங்கிய சென்னியிற் றிங்கண் மேவுதலா*
*லேரிணங்கிய மாதவர்க்கின் பமீகையினா*
***னாரிபாகனை** நிகர்ப்பது நைமிசாரணியம்" (பாடல் 27)*

*"நஞ்சட வருதலு **நாரிபாக** னுண்*
*டஞ்ச லென்றமரரை யளித்த தோர் தியாற்*
*றுஞ்சிட வந்த நாட் சொல்லரும் பெரு*
*வஞ்சகம் பொய்யுரை வழங்கலாகுமால்" (பாடல் 1405)*

அரணம் மூன்றெய்த கதையானது திருப்பூவணப் புராணத்தில்,

*"புர மூன்றெரி செய்தருள்வாய் சரணம் பொருமால் விடை மேல் வருவாய்சரணம்"*

(பாடல்555) என்றும்,

*"பொருக்கெனயாமும்போதுதுமென்றான்பொடிபடப் **புரங்கண்மூன்றெரித்தோன்"*** (பாடல் 1117) என்றும் பாடப் பெற்றுள்ளது.

## 4.2.2 ஞானன் (பாடல்-2)

*"வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு*
*தேனணி பொழிற் றிருப் பூவ ணத்துறை*
*யான நல் லருமறை யங்க மோதிய*
*ஞானனை யடி தொழ நன்மை யாகுமே"*

வானம் தனக்கு அணிகலனாக அணிந்துள்ள நிலவினைத் தன் தலைமுடியில் அணிந்தவன். வண்டுகள் மொய்க்கின்ற தேனைச் சொறிகின்ற பூவனத்தில் உறைந்துள்ளவன். அருமைகள் பல பொருந்திய வேதங்களை ஓதுபவன். ஞானவடிவான பூவணநாதரின் அடியைத் தொழ நன்மை உண்டாகும்.

ஞானன் என்ற சொல்லைத் திருப்பூவணப் புராணத்தில்,

*"ரெண்ணரு **ஞான வுருவமாஞ் சிவனை** யிலிங்க மத்தியத் தினி லிருத்தி " (பாடல் 248)*

என்ற பாடலில் புலவர் பயன்படுத்தியுள்ளார்.

## 4.2.3 நந்தி (பாடல்-3)

*"வெந்துய ருறுபிணி வினைக டீர்வதோர்*
*புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை*
*யந்திவெண் பிறையினோ டாறு சூடிய*
*நந்தியை யடி தொழ நன்மை யாகுமே"*

முன்வினைப் பயனாக மனமும் உடலும் நோகும்படியான நோய்கள் உண்டாகின்றன. இந் நோய்கள் அனைத்தும் பூவணத்தில் உறைந்துள்ள, மாலை நேரத்தில் தோன்றும் பிறைச்சந்திரனோடு ஆற்றினையும் சூடியுள்ள நந்தி ஆகிய திருப்பூவணநாதரின் அடியினைத் தொழ நன்மையாக மாறிடும்.

திருப்பூவணப் புராணத்திலே, நந்தி என்ற சொல் நந்தியைக் குறிப்பதாகவே அமைந்துள்ளது.

*"தந்திமுகன் றம்பி யரு **ணந்தி** தனக்குரைப்ப **நந்தி** சநற் குமாரன்*
*வெந் துயரமற வெடுத்து விரித்து ரைப்ப வுவன் வேதவியாதற்கோதப்" (பாடல் 2)*

*"கந்தரனருளு **நந்தி** யம் பெருமான் கைக்கொடு காப்ப தக் கயிலை" (பாடல் 68)*

*"எண் ணரிதாய பாரிடங்க ளோசையுங்*
*கண்ணரு **நந்தி** முன் கணங்க ளோசையும்" (பாடல் 85)*

*"செற்றலு **நந்தி** தன் செங்கை தாங்கிய*
*நற் பிரம்படிபட நண்ணு மாரங்க" (பாடல் 88)*

*"என்ற காலை யெழின் மிகு கந்தவே*
*ணன்று நன்றென **நந்தி** யை நோக்குறா " (பாடல் 95)*

மற்றும் 98, 458, 679, 688, 689, 716, 725, 739, 878, 888, 1015, 1348, 1431 ஆகிய பாடல்களிலும் நந்தி என்ற சொல் நந்தியைக் குறிப்பதாகவே உள்ளது. சிவபெருமானை நந்தி என்று குறிப்பிடும் பாடல்களேதும் திருப்பூவணப் புராணத்தில் இடம் பெறவில்லை.

### 4.2.4 மலர் புனைந்து ஏத்துவார் (பாடல்-4)

*"வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்*
*பூசனைப் பொழி றிகழ் பூவ ணத்துறை*
*யீசனை மலர்புனைந் தேத்து வார்வினை*
*நாசனை யடிதொழ நன்மை யாகுமே"*

மிகுந்த நறுமணம் வீசும் மலர்கள் நிறைந்த மார்பினை உடையவன். திருநீற்றைப் பூசியவன். பூவனங்கள் திகழும் திருப்பூவணத்தில் உறைந்துள்ளவன். அவனுக்கு மலர்களைத் தொடுத்து மாலையாக்கிச் சூட்டியும், அவனது புகழைப்பாடியும், பணிபவர்களது வினைகளை எல்லாம் நாசம் செய்யக் கூடியவன். அவனது அடியைத் தொழ நன்மையாகும்.

*"பரவிடு நைவேத்தியம் பலவளித்துப் பாத்தியாசமனமுங் கொடுத்துத்*
*திருமிகு தூபதீபமுங் காட்டித் திருவெழுத் தஞ்சையுஞ் செபித்தாங்*
*குரியநற் பூசைப் பலனரற் குதவி யோரிரு காலமுஞ் செய்து*
***குருமலர் கொண்டு** பணிந்தெதிர் முக்காற் கும்பிட்டுத் தட்டமுமிட்டு" (பாடல் 252)*

திருப்பூவணப் புராணத்தில் சூரியன் பூசனைச் சருக்கத்தில், சூரியன், *"குருமலர் கொண்டு பணிந்தான்"* என்றுள்ளது.

## 4.2.5 பொழிற் பூவணம் (பாடல்-5)

*"குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை*
*பொருந்திய பொழிற் றிருப் பூவணத்துறை*
*யருந்திற லவுணர்த மரண மூன்றெய்த*
*பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே"*

குருந்தை, மா, அகில், கோங்கு ஆகிய மரங்கள் சூழ்ந்துள்ள வைகை ஆற்றின் கரைதனில் நறுமணம் வீசும் மல்லிகை பொருந்திய பூவனத்தை உடைய திருப்பூவணத்திலே உறைகின்றவன். அசுரர்களின் மூன்று கோட்டைகளையும் அம்பினால் எய்து அழித்த திறமை மிகுந்தவன். பெருமைகள் மிகுந்த திருப்பூவணநாதரின் அடியைத் தொழப் பீடை இல்லை.

*"ஓங்கு பூங் கமுகும் முயர் வாழையுங்*
*தூங்கு பைங் குலைத் தெங்குந் துருக்கமுங்*
*கோங்கு மாரமுங் குக்குலுவும் மனந்*
*தாங்கு செஞ்சந்தனமுஞ் சரணமும்" (பாடல் 198)*

என்று திருப்பூவணத்தில் உள்ள மரங்கள் சொல்லப்பட்டுள்ளன.

*"மிக்க தொரு தக்கனது வேள்வியை யழித்தோ*
*யக்கடலினின்று வருமாலவிட முண்டோய்*
***மொக் குளினியங் கவுணர்முப்புர மெரித்தோய்***
*திக்குலகொலாம் புரவு திங்களை முடித்தோய் (பாடல் 1420)*

என்ற பாடலில் அவுணர்களின் மூன்று கோட்டைகளை எரித்த செய்தி கூறப் பட்டுள்ளது.

## 4.2.6 பொழிற் பூவணம் (பாடல்-6)

*"வெறிகமழ் புன்னை பொன் ஞாழல் விம்மிய*
*பொறியர வணி பொழிற் பூவ ணத்துறை*
*கிறிபடு முடையினன் கேடில் கொள்கைய*
*னறுமல ரடி தொழ நன்மை யாகுமே "*

புன்னை, ஞாழல் ஆகிய மரங்கள் நிறைந்து திருப்பூவணத்திற்கு அணிகலன்களாக விளங்குகின்றன. அங்கே, கேடு ஏதும் இல்லாத கொள்கையை உடைய திருப்பூவணநாதர் எழுந்தருளியுள்ளார். அவரது திருவடியானது நறுமணம் வீசும் நல்ல மலர்களைப் போன்றது. அத்திருவடிகளைத் தொழ நன்மை ஆகும்.

*"காமரமருச்சுநங்காகதுண்டநீள்*
*பூமிகுகுங்குமம் **புன்னை** வன்னி பொற்*
*றேமரு வேலநற்றி கிரி கூவிள*
*மாமலகங் கடம் பார மாதுளம்" (பாடல் 86)*

*"**புன்னை** சம்பகம் பூத வம்பூங் கழை*
*மன்னு சூத மந்தாரம் வருக்கை மேற்*
*பன்னு கின்ற பராரை மரங்களுந்*
*துன்னு தண்டலை சூழ்ந்திடு மெங்கணும் " (பாடல் 199)*

ஆகிய பாடல்களில் திருப்பூவணத்தில் புன்னைமரம் இருந்த செய்தி பாடப் பெற்றுள்ளது. "ஞாழல்" என்ற மரம் புராணத்தில் குறிப்பிடப்பெறவில்லை. இம்மரத்திற்கு மந்தாரை என்று பெயர் இருக்கலாம் என்றும் அறியப்படுகிறது.

## 4.2.7 பறை (பாடல்-7)

*"பறைமல்கு முழவொடு பாட லாடலன்*
*பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை*
*மறைமல்கு பாடலன் மாதொர் கூறின*
*னறைமல்கு கழ றொழ வல்ல லில்லையே"*

பறை, முழவு இவற்றின் இசையுடன் கூடிய பாடலுக்கு ஆடவல்லவன். இவன், பூக்கள் நிறைந்துள்ள திருப்பூவணத்தில் உறைந்திருக்கிறான். வேதப்பாடல்களில் கூறப்பட்டவன். உடலின் சரிபாதியைப் பெண்மைக்குக் கொடுத்தவன். அவனது திருவடியில் உள்ள கழல்களைத் தொழ அல்லல்கள் ஒழியும்.

திருப்பூவணப் புராணத்தில் பறை என்ற இசைக்கருவியும் மற்றும் பிற இசைக்கருவிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

*"பாழிசேர் துடி காகளம் பரந்த வாய்ப் பதலை*
*வாழி மாலொரு கட்**பறை** வயிர் சிறுசின்னந்*
*தாழ்வில் பேரிகை சல்லரி யாதி சாரதங்கள்*
*குழுமாழி யோரேழின தோசை யிற்று வைப்ப " (பாடல் 999)*

சிதம்பர உபதேசச் சருக்கத்திலே, திருப்பூவணத்தில் கடுந்தவமிருந்த முனிவர்களிடம் "நான் உங்கள் இதயக்கமலத்திலே திருநடனஞ் செய்வேன். நீங்கள் தில்லை வந்து எனது திருநடனத்தைக் காணுங்கள்" எனச் சிவபெருமான் கூறிய செய்தி உள்ளது.

*"ஆதலி னிந்த வரு பரணவமா மஞ்செழுத் தருளுபதேசந்*
*தீதற்கொடு நீர் தில்லையிற் சேர்மின் செம் பொனம்பலந்தனில் யாமே*
*காதலி னிருத்தங் காட்டுது மிந்தக் காசி றென்பூவணக்காசி*
*யோதிடு முபதேசத் **துளநடனமுஞற்று** தன் மந்தணமாமால்" (பாடல் 1363)*

## 4.2.8 வல்லரக்கன் (பாடல்-8)

*"வரைதனை யெடுத்தவல் லரக்க னீண்முடி*
*விரற னி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்*
*பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்*
*பரவிய வடியவர்க் கில்லை பாவமே"*

பெருந்தன்மையுடைய இறைவன். வெள்ளை நிறமான திருநீற்றைப் பூசியுள்ளவன். மிகவும் வேகமாகப் பாய்ந்து வருகின்ற கங்கையைத் தன் தலையில் அணிந்தவன். இவனைத் திருப்பூவணத்திற்கு வந்து வணங்கிய அடியவர் களுக்குப் பாவம் என்பது இல்லாமல் போய்விடும்.

சிவபெருமானை மதியாது கயிலாயத்தைப் பெயர்த்தெடுத்தான். இருப்பினும், சிவபெருமான் அவனுக்கும் அருள் செய்தார்.

*"ஒருமைசேர்ந்த மெய்யுணர்வினரிருவினையொழிந்தோ*
*ரருமைமும்மலர்நாற்கரணந்தனையயர்த்தோர்*
*வெருவுமைம்புலப்**பகைஞரை வென்றருள்வீரர்***
*கருதுறாதவெண்ணெண்பெருங்கலைக்கடல்கடந்தோர்" (பாடல் 36)*

என்ற பாடலில் பகைவரை வென்று அவருக்கு அருளுகின்ற சிவபெருமானைப் போன்ற வீரர் உள்ள இடம் என்று நைமிசராணியத்தில் புகழ்ந்துரைக்கப் பட்டுள்ளது.

*"ஒள்ளிதென வேதினமு மொண்டொடி நின்னோடும்*
*வெள்ளிமலை யென்றதனின் மேவியிட மேனா*
*ளெள்ளரு **மிலங்கையி லிராவண னிராதே***
*யள்ளி யகழ்கின்றதனை யாரு மறியாரோ "(பாடல் 1102)*

என்ற பாடலில் இலங்கைவேந்தன் இராவணன் கைலாயத்தைப் பெயர்த்தெடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

இராவணன் கைலாயத்தைப் பெயர்த்தெடுத்த செய்தி முதலாம் திருமுறையில் உள்ள 8ஆவது பாடலிலும்[249], மூன்றாம் திருமுறையில் உள்ள 8ஆவது பாடலிலும் திருஞான சம்பந்தரால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாய் உள்ளது.

## 4.2.9 அடிசேரார் (பாடல்-9 )

*"நீர்மல்கு மலருறை வானு மாலுமாய்ச்*
*சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்*
*போர்மல்கு மழுவினன் மேய பூவண*
*மேர்மல்கு மலர்புனைந் தேத்த லின்பமே"*

நீர் நிறைந்த தடாகங்களில் பூக்கின்ற தாமரை மலரிலுள்ள பிரமதேவனுக்கும், நெடியவனாகிய திருமாலுக்கும் அரியவனாகிய சிவபெருமான் திருப்பூவணத்தில் எழுந்தருளியுள்ளான். அவன் போர்புரியும் போது வெற்றியைப் பெற்றுத்தரும் மழு என்னும் ஆயுதத்தை உடையவன். அவனது திருவடிகளில் மலர்களைத் தூவி அவனது பெருமைகளைப் பாடிப்பணிந்து வணங்குதல் இன்பத்தைச் சேர்க்கும்.

சிவபெருமானின் அடிமுடி காணமுடியாத கதையானது திருப்பூவணப் புராணத்திலே ஆங்காங்கே கூறப்பட்டுள்ளது.

*"திருமாலு மொரு நாலுமறை நாவின் வினையாடு திசைமாமுகப்*
*பெருமா னுமயர் தந்தவரன தடிமுடி தேடு பேராசையா*
*லொரு நாளு முலையாத விருகோடு கொடு மன்னியுறு கோலமு*
*முரமேவு வெண்டூவியமுகாகு மன்ன வுருவும் மாகியே " (பாடல் 1393)*

என்ற பாடலில் தாழம்பூ பொய் சொன்ன பாவம் நீங்கத் திருப்பூவணம் வந்து வழிபட்ட கதையில் பாடப் பெற்றுள்ளது.

## 4.2.10 கபாலம் அணிதல் (பாடல்-10)

*"மண்டை கொண் டுழிதரு மதியி றேரருங்*
*குண்டருங் குணம்பல பேசுங் கோலத்தர்*
*வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணங்*
*கண்டவ ரடி தொழு தேத்தல் கன்மமே"*

கபாலம், கொன்றைமாலை, பிறைச் சந்திரன் இவற்றைத் தலைமுடியில் அணிந்து உள்ளான். பெரிய வயிற்றையுடைய குண்டோதர பூதங்களும் இவனது புகழைப் பேசுகின்றன. வண்டுகள் மொய்க்கின்ற பூக்களைப் பெரிதும் உடைய பூவனம்

நிறைந்துள்ள திருப்பூவணத்தைக் கண்டு கொண்டு அங்கு உறைந்துள்ள இறைவனின் அடியைத் தொழுது அவனது புகழைப் பாடுதல் நன்மை பயக்கும் செயலாகும்.

*"பூதிசாதன முந்திரிசூலமும் பொருதுங்*
*காதில்வெண்குழையுங் கர**கபால**முஞ் செய்ய*
*பாத தாமரைப் பரிபுரமும் படர்சடையு*
*மாது காதலோர்தாபதன் போலிறை வந்தான் " (பாடல் 1069)*

*"புண்ணிய புராண பூரணஞான புனித பொற்பொது வினின்றாடுங்*
*கண்ணுதற் பரம கயிலை நாயக நீள்கடல் விடமுண் டிருள்கண்ட*
*வண்ண நல்லரவிந்தாசனன்றனது மருவிய சிரகர **கபால***
*வுண் ணினைந்ததனை யுரைத்தி நீ யென்னவும்பர் தம் பிரானி மூதுரைப்பான் "*
*(பாடல் 1115)*

என்ற பாடல்களில் சிவபெருமான் கபாலத்தைத் தலையில் அணிந்துள்ள செய்தி கூறப் பட்டுள்ளது.

### 4.2.11 இது சத்தியம் (பாடல்-11)

*"புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை*
*யண்ணலை யடிதொழு தந்தண் காழியு*
*ணண்ணிய வருமறை ஞான சம்பந்தன்*
*பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே"*

மிகவும் புண்ணியம் செய்தவர்கள் மட்டுமே திருப்பூவணநாதரைத் தரிசிக்கும் பேற்றினைப் பெறுவார்கள். பூவணநாதரின் திருவடியைத் தொழுது சீர்காழியில் பிறந்த திருஞானசம்பந்தன் கூறிய அருமையான தமிழ்மறைகளாக விளங்கும் பத்துத் தேவாரப் பாடல்களையும் பாடியவர்களின் தீவினை, பாவங்கள் அனைத்தும் பறந்தோடிப் போகும். நன்மை உண்டாகும்.

திருப்பூவணநாதரை வணங்குவதால் பாவங்கள் நீங்கும் என்று திருஞானசம்பந்தர் உறுதிபடக் கூறுகிறார். இதைப் போன்றே திருப்பூவணப் புராணத்தில் முனிவர்கள், திருப்பூவணத்தை வழிபடுவதால் பலன் உறுதி என்று சத்தியம் செய்து கூறுகின்றனர்.

## 4.3. திருநாவுக்கரசர் அருளிய தேவாரம்

திருநாவுக்கரசரின் திருமுறைகளில் விரிவான திருப்பதிகங்களைக் காண முடிகின்றது. சிவனெனும் ஓசை, இலிங்க புராணம், ஆதிபுராணம், நின்ற

திருத்தாண்டகம், பாவநாசத் திருப்பதிகம், பாவநாசத் திருநற்தொகை, திரு அங்கமாலை, திருமறு மாற்றத் திருத்தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம், சித்தத் தொகை மற்றும் பலப்பலத் திருப்பதிகங்கள் ஒரு பொருளைத் தெளிவாக இனிது விளக்க விரித்துரைக்கின்றன. ஆதலால் பழம் பாடல்களாகிய வேதம், ஆகமம், உபநிடதம் என்பனவற்றின் பொருள்கள் பலவும் நாவரசரது திருமுறைகளிலே இடம் பெற்றுத் திகழ்கின்றன.

திருமுறை மூன்றனுள்ளும் நாவரசர் இயற்றிய **திருத்தாண்டகத் திருமுறையே** நீண்ட அடிகளாலாகிய பெரிய பாடல்களால் ஆனவை. திருத்தாண்டகம் ஏனைய ஆசிரியரது தேவாரத் திருமுறைகளில் இல்லாமையால், இத்திருமுறை தனிச்சிறப்பு உடையதொரு திருமுறையாகும். "இதனால் சேக்கிழாரும் நாவுக்கரசரை, தாண்டகச் சதுரர் எனச் சிறப்பித்துப் போற்றியுள்ளார்". [250]

இங்ஙனமே திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பாடல்கள் விரித்த பொருள்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன. போற்றித் திருத்தாண்டகங்கள், இறைவனது திருவடியின் பெருமைகள் பலவற்றையும் தனித்தனிச் சிறுசிறு தொடர்களால் எடுத்தோதிப் புகழும். திருவடித் திருத்தாண்டகம், இறைவனது திருவுருவின் நிலையை விளக்கும். "தோன்றும்" என்று முடியும் பல தொடர்களாலான திருத்தாண்டகம் திருப்பூவணநாதரின் வடிவினை எடுத்துக்காட்டுவனவாக உள்ளன. கி.பி. 640-670 இவர் பதிகங்கள் இயற்றிப் பாடிய காலமாகும்.

அப்பர் சுவாமிகள் அருளிய பாடல்களில், திருப்பூவணம் தொடர்புடைய பாடல்கள் அனைத்தும் சிவபெருமானின் திருவடிவினை விளக்கும் வகையிலும் அவனது அருளைப் புலப்படுத்தும் வகையிலும் அமைந்துள்ளன. பாடல்கள் ஆறாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. மொத்தம் 11 பாடல்கள் உள்ளன.

### 4.3.1. சிவனின் தோற்றம் (பாடல்-1)

*"வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்*
*வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றுங்*
*கடியேறு கமழ் கொன்றைக் கண்ணி தோன்றுங்*
*காதில்வெண் குழைதோடு கலந்து தோன்று*
*மிடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்று*
*மெழி றிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்*
*பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்*

*பொழி றிகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே"*

பூவனங்கள் நிறைந்த திருப்பூவணத்தில் விளங்குகின்ற புனிதராகிய சிவபெருமானுக்கு, அழகிய சூலமானது விளங்கி மேவும், சடைமுடியின் மீது இளமையான பிறைச் சந்திரன் விளங்கும். கொன்றை மலர்மாலை அணிந்து, காதில் வெண்மையான குழையும் தோடும் விளங்கும். யானையின் தோலானது போர்வையாக விளங்கும். எழில் திகழும் திருமுடியும், திருநீறு பூசிய திருமேனியும் நன்கு விளங்கும்.

திருப்பூவணப் புராணத்திலே சிவபெருமானிடம் உள்ள சூலம், 12, 183, 429, 523, 1069, 1418 ஆகிய பாடல்களிலும், கொன்றை மலர் 3, 574, 661, 692, 705, 827, 848, 914, 950, 1159, 1368, 1692 ஆகிய பாடல்களிலும், சிவபெருமானது சடை 3, 4, 77, 110, 111, 229, 257, 258, 353, 555, 561, 617, 724, 827, 844, 848, 877, 1049, 1052, 1063, 1069, 1076, 1085, 1111, 1187, 1218, 1263, 1330, 1383, 1397, 1408, 1409, 1414 ஆகிய பாடல்களிலும், சிவபெருமான் காதில் குழை அணிந்துள்ள செய்தி, 246, 576, 707, 1032, 1051, 1069, 1156, 1292, 1314, 1418 ஆகிய பாடல்களிலும், சிவபெருமான் பொடியணிந்துள்ள செய்தி 556, 1238, 1317 ஆகிய பாடல்களிலும் இடம் பெற்றுள்ளன.

## 4.3.2. திரிபுரம் எரித்தல் (பாடல்-2)

*"ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்று*
*மடியவர்கட் காரமுத மாகித் தோன்று*
*மூணாகி யூர் திரிவா னாகித் தோன்று*
*மொற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேற்*
*சேணாக வரைவில்லா லெரித்த றோன்றுஞ்*
*செத்தவர்த மெலும்பினாற்செ றியச் செய்த*
*பூணாணு மரைநாஷம் பொலிந்து தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பொழில் திகழும் பூவணத்தில் வீற்றிருக்கும் எம் புனிதராகிய சிவபெருமான், ஆண்பெண் வடிவாகத் திகழ்பவர். அடியவர்களுக்குச் சுவை மிகுந்த அமுதம் ஆகி, இன்பத்தில் திளைக்கச் செய்பவர். உணவு வேண்டி ஊர்தோறும் திரிபவர். ஒற்றைப் பிறைச் சந்திரனை உடையவர். பக்தியுடன் ஏத்தாது பகைத்தவராகிய வித்யுத்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்ற மூன்று அசுரர்களின் பொன், வெள்ளி, இரும்புக்

கோட்டைகளை மேருவை வில்லாகக் கொண்டு எரித்தவர். மாண்டவர்களுடைய எலும்பை ஆபரணமாகக் கொண்டவர்.

திருப்பூவணப்புராணத்திலே திரிபுரம் எரித்த செய்தி 352 மற்றும் 1146 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளது. பூணூல் அணிந்துள்ள செய்தி 667 மற்றும் 1249 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## 4.3.3. மறை உரைத்தல் (பாடல்-3)

*"கல்லாலின் னீழற்க லந்து தோன்றுங்*
*கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று*
*சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்*
*சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்று*
*மல்லாத காலனைமுன் னடர்த்த றோன்று*
*மைவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்*
*பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே"*

பொழில் திகழும் பூவணத்தில் மேவும் எம்புனிதராகிய ஈசன், கல்லால மரத்தின் நிழலில் விளங்கி நின்று, சனகாதி முனிவர்களுக்கு நன்னெறிகளை உணர்த்தியவர். நாகத்தையும் மானையும் கொண்டுள்ளவர். இறைவனின் அடியவர்களின் உயிரைக் கவரும் பொருட்டு அவர்களை அணுகக் கூடாது என்று அறியாதவனாகி, மார்க்கண்டேயரின் உயிரை எடுக்க வந்த காலனை அடர்த்தியவர். ஐவகை ஞான வேள்வியாகிய ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என்பனவற்றால் ஏத்தும் அடியவர்பால் விளங்குபவர். அவர் எலும்பை ஆபரணமாகக் கொண்டு விளங்குபவர்.

சிவபெருமான் கல்லால மரத்தின் கீழிருந்து நால்வருக்கு ஓதுகிறார். இச்செய்தியை, அப்பர் பெருமான் கூறியுள்ள அதே சொல்லாட்சியைப் பயன்படுத்தித் திருப்பூவணப் புராணத்திலே கந்தசாமிப்புலவர் பாடியுள்ளார்.

*"ஞான மீதிலருண் மேனிகொண்டு வரு ஞானதேசிகன தருளினா*
***லால நீழலற நால்வருக் கருளுமண்**ணறன் றிருமுனண்ணியே*
*சீலமோடு திருவஞ் செழுத்தையொரு கால் விதிப்படி செபித்துளோர்க்*
*கேலுமுத்தியஃதைய மென்பதிலை யிரு பிறப்பின் வருமிருடிகாள்" (பாடல் 288)*

சிவபெருமானின் கையில் மான் மற்றும் மறி உள்ளன. இச்செய்தி திருப்பூவணப் புராணத்திலே 14, 65, 171, 347, 571, 872, 952, 1074, 1187 ஆகிய பாடல்களில் பாடப்பெற்றுள்ளது.

*"கோலமன்னு தீர்த்தமாடு குலவு பூர்வமுகமதாய*
*வாலுகந்தனான் மிகுந்த வானிலங்கு வெய்யவன்*
*சீலமோடு செய்யி லிங்கதெரிசனஞ் செய்வோர் கொடுங்*
***காலன் மேனிதானிரண்டு கண்கள் கொண்டு கண்டிடார்**" (பாடல் 417)*

என்று திருப்பூவணலிங்கத்தை தரிசனம் செய்வதால் காலனைக் காணமாட்டார்கள் என்று காலன் பாடப்பெற்றுள்ளான்.

## 4.3.4. பூவணன் கோவணன் (பாடல்-4)

*"படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்*
*பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்று*
*நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்று*
*நான்மறையி னொலி தோன்று நயனந் தோன்று*
*முடைமலிந்த கோவணமுங் கீழுந் தோன்று*
*மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்*
*புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே"*

பொழில் திகழும் பூவணத்தில் மேவும் புனிதராகிய சிவபெருமான் மழுப்படையும் மானும் உடையவர். பன்னிரு கரங்களையுடைய முருகப் பெருமானை மைந்தராக உடையவர். இடபத்தைக் கொடியாகவும் வாகனமாகவும் உடையவர். நான்கு மறையின் ஓதப்பெறும் ஒலியாக விளங்குபவர். திருவிழிகள் மூன்று உடையவர். கோவண ஆடை உடையவர். மண்டையோட்டினை மாலையாக அணிந்தவர். பூதப் படைகள் சூழ விளங்குபவர்.

*"மாவணங்குற்றசாபமாண்டிடவேண்டியந்தப்*
*பூவணங்கோயில்கொண்டபொருவிடைப்பாகன்றன்னைக்*
***கோவணவுடையினானைக்**கோதிலாக்குழகன்றன்னைத்*
*தீவணச்சடையினானைச்சிவலிங்கந்தனிற்பூசித்தான்" (பாடல் 844)*

*"பன்னக மிகுந்திலகு பைம் பொன்னியார்*
*முன்னிலொரு **கோவண முடுப்பது** புலித்தோ*
*றன்னிகர் பொருங்கரட தந்தியுரி போர்வை*
*சென்னி திகழ்கின்றது சிறந்த தலையோடே" (பாடல் 1099)*

சிவபெருமான் கோவணஆடை உடையவர் என்ற செய்தி திருப்பூவணப் புராணத்திலே மேற்கண்ட இரு பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## 4.3.5. நஞ்சணி கண்டன் (பாடல்-5)

*"மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்று*
*மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்று*
*மியல்பாக விடுபிச்சை யேற்ற றோன்று*
*மிருங்கட னஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றுங்*
*கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை*
*யாயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும்*
*புயல் பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பொழில் திகழும் பூவணத்தில் மேவும் சிவபெருமான், அன்பின் மிக்க அடியவர்களுக்கு அருள் புரிபவர். சடை முடியில் சந்திரனைச் சூடியவர். பலியேற்பவர். கடல் நஞ்சினை உண்டதால் கரிய கண்டத்தை உடையவர். ஆற்றல் மிக்க கங்கையைத் தரித்தவர். விரித்து மேவும் சடை முடியுடையவர்.

திருப்பூவணப் புராணத்திலே சிவபெருமான் கடல்நஞ்சை உண்டு தனது கண்டத்தில் நிறுத்தி வைத்த செய்தி,

*"அடைவார்வினைதீர்த்தருள்வாய்சரணமருளாலறியும்பொருளேசரணங்*
***கடல்சேர்விடமுண்டவனே**சரணங்கமலன்றருகங்கையனேசரணஞ்*
*சுடர்சேர்சுடலைப்பொடிபூசிடுநற்சுகரூபமதையுடையாய்சரணஞ்*
*செடிசூழ்மிகுகற்பகநன்னிழலிற்றிகழ்பாற்கரபுரசிவனேசரணம்" (பாடல் 556)*

*"அலைகட லன்றெழுந்த வந்த **நஞ்சுண்ட கண்ட***
*னிலவு தோன்றிட நகைத்து நீண் மறை பாடுவாயான் .. .. .. ..." (பாடல் 1412)*

என்ற பாடல்களில் பாடப்பெற்றுள்ளது. சிவபெருமான் கங்கையைத் தலையில் அணிந்துள்ள செய்தி 236, 245, 257, 279, 292, 420, 537, 556, 696, 697, 729, 1065, 1205, 1208, 1330, 1357, 1408, 1414 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## 4.3.6. தாமரைப் பதத்தான் (பாடல்-6)

*"பாராழி வட்டத்தார் பரவி யிட்ட*
*பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றுஞ்*
*சீராழித் **தாமரையின் மலர்க ளன்ன***
***திருந்தியமா நிறத்தசே வடிக டோன்று***
*மோராழித் தேருடைய விலங்கை வேந்த*
*னுடல் றுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று*
*போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தின் மேவும் சிவபெருமான், பூவுலகில் திகழ்பவர். பல்வகையான நறுமண மலர்களைச் சூடி விளங்குபவர். செந்தாமரை போன்ற சேவடியுடையவர். கயிலை மலையைப் பெயர்த்தெடுக்கத் துணிந்த இராவணனுக்கு இடர்கொடுத்தவர். அவனால் பூசிக்கப் பெற்றவர். திருமாலுக்கு ஆழிப் படையை அருளிச் செய்தவர்.

திருப்பூவணப் புராணத்தில் இறைவனது திருவடியானது தாமரை மலர்களைப் போன்றது என்று,

*"மேவும் பொருவில்லாய் மகமேருப் பொருவில்லாய்*
*சேவின்று வசத்தாய ருடின மொன்று வசத்தா*
*யோவில் லுயிர்க் குயிராய் திருவுருவம் பரமுயிராய்*
*தாவில் சிவபதத்தாய் திகழ் தரு **தாமரைப் பதத்தாய்**"* (பாடல் 256)

என்று பாடப்பெற்றுள்ளது. மேலும் இக்கருத்து, ஐம்பதுக்கும் மேற்பட்ட பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## 4.3.7. மத கரி யுரி (பாடல்-7)

*"தன்னடியார்க் கருள் புரிந்த தகவு தோன்றுஞ்*
*சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று*
*மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்*
*வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த றோன்றுந்*
*துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்*
*தூயமா மதியுடனே வைத்த றோன்றும்*
*பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தில் மேவும் சிவபெருமான், அடியவர்களுக்கு அருள் புரிபவர். பிரமனின் தலையைக் கொய்தவர். உமா தேவியாரைத் திருமேனியில் சரிபாகம் கொண்டுள்ளவர். யானையின் தோலைப் போர்த்தியவர். செஞ்சடையில், கங்கையும் பாம்பும் சந்திரனும் வைத்தவர். பொன் போன்று ஒளிரும் திருமேனியுடையவர்.

சிவபெருமான் மதத்தையுடைய வேழத்தின் தோலைப் போர்த்தியுள்ளதைக் கீழ்க்காணும் இரண்டு பாடல்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

*"மாயாவுருவாரமலாசரணமாலானவர்பாலேலாய்சரணந்*
*தாயாயுலகந்தருவாய்சரணந்**தன்னடியார்கட்கருள்வாய்**சரணம்*
*பேயோடாடும்பெருமான்சரணம்பிரிவருதிவ்வியவுருவாசரணந்*
*தீயேந்திய செங்கரனே சரணந்திகழ்பாற்கரபுரசிவனே சரணம்"* (பாடல் 557)

என்ற பாடலில் சிவபெருமான் தன்னடியார்க்கு அருள்கின்ற தன்மையுடையவன் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

*"புரங்குன்றச் சிலைகுனிந்துப் பொறியரவு நாணாகப் பூட்டி மூவர்*
*தரங்குன்றக் கருதாது தழலெழவே நகைசெய்து தரை மேற்றூங்குங்*
*கரங்குன்றம் படைத்தனைய கரட* ***மத கரி யுரி போர்த்தருளுங்*** *காமர்*
*பரங்குன்றஞ் சார் கூடற் பரமனருளா லோங்கும் பாண்டிநாடு" (பாடல் 112)*

*"பொரு* ***மத கரி யுரி போர்த்தாய்*** *சரணம் பொதுவினி னடமிடு புனிதா சரணம்*
*வெருவால் விட வருள் விகிர்தா சரணம் வேதபராயண நாதா சரண*
*மரியயனடி பரவமலா சரண மடல் விடைதரு கொடியரனே சரணந்*
*திருமணி யுமிழ் கட்செவி யணி மகுடந்திகழ் பாற்கரபுர சிவனே சரணம்" (பாடல் 558)*

## 4.3.8. திரிபுரம் எரித்தோன் (பாடல்-8)

*"செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்*
*திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்று*
*நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்று*
*நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்று*
*மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்று*
*மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும்*
*பொறியரவு மிளமதியும் பொலிந்து தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தில் விளங்கும் சிவபெருமான், கழல் அணிந்த திருவடி தரிசனம் நல்குபவர். முப்புரங்களை எரித்த வில்லுடையவர். ஆகமத்தை உபதேசித்தவர். நெற்றியில் கண்ணுடையவர். மறுபடியும் பிறவாத பேற்றினை அருள்பவர். உமா தேவியருடனும் கங்கையுடனும் விளங்குபவர். அவர் பாம்பையும் சந்திரனையும் சடைமுடியில் கொண்டு திகழ்பவர்.

சிவபெருமான் திரிபுரத்தை எரித்த செய்தி,

*"முருகவிழ் தாமரை முகத்தினான் றனைப்*
*புரி மணமிசையினிற் பொருந்துவான் றனைத்*
***திரிபுர மெரி செய்த சிவபிரான்*** *றனின்*
*மருவிய திருவுரு வயங்கு வான்றனை" (பாடல் 352)*

*"ஒருமானிலகோ ருருவாய் சரணமோதுந் தொழிலைந்துடையாய் சரணம்*
***புரமூன்றெரி செய் தருள்வாய்*** *சரணம் பொருமால் விடை மேல் வருவாய் சரணம்*
*பெருகாரலே பிரியாய் சரணம் பிறைவேணியனேசரணஞ் சரணந்*
*திரையார் புனல் சேர் சடையாய் சரணந் திகழ் பாற்கரபுர சிவனே சரணம்" (பாடல் 555)*

*"அருத்தியினந் தவவியளித் திலனேலம் புயத்த விசினெஞ்ஞான்றும்*
*விருப்புறு மயன் மால் விண்ணவராதி மேவிய பண்ணவர் வெருவத்*
*தருக்குறு தக்கன் சிரத்தினை யறுத்துத் தக்க வவ்வேள்வியைத் தகர்த்தி*
*பொருக் கென யாமும்போதுதுமென்றான் பொடிபடப்* ***புரங்கண் மூன்றெரித்தோன்****"*
*(பாடல் 1117)*

*"உரைத்தலு முயிர் பெற்றுறங்கினன் போல வொல்லை யினெழுந்துள நாணித்*
*தலைத் தலமதனை நோக்கி முன்னின்ற தகர் முகத் தக்கனை மேரு*

*வரைத்தலு வெடுத்து மால்களை தொடுத்து மருவிய **திரிபுர மெரியச்***
*சிரித்தருள் புரிந்த சிவபிரானுனது சிந்தனை தியங்கலை யென்றான்" (பாடல் 1146)*

என்ற பாடல்களில் பாடப்பெற்றுள்ளது.

## 4.3.9. கேழன் (பாடல்-9)

*"அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்*
*மணிகிளரு முருமென்ன அடர்க்குங் **கேழன்***
*மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்று*
*மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்*
*திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்*
*செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்*
*பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தில் மேவும் சிவபெருமான், உமாதேவியைப் பாகம் கொண்டு விளங்குபவர். பன்றியின் கொம்பை ஆபரணமாக உடையவர். அம்பிகை கண்டு மகிழுமாறு திருநடனம் புரிபவர். நவமணிகள் திகழும் வைகையின் அருள் திறமாய் விளங்குபவர். செவ்வானம் போன்ற சோதி வடிவினர். மலை போன்ற உறுதியான தோள்களை உடையவர்.

'கேழ்' என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில், 213, 238, 1034, 1402 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

## 4.3.10. காமனை எரித்தல் (பாடல்-10)

*"ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று*
*தன்முடிமேல லர்மாலை யளித்தல் தோன்றும்*
*பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று*
*பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றுங்*
*கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்முங்*
*குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்*
***பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்***
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தில் மேவும் சிவபெருமான், சண்டேசரின் பூசையை ஏற்று மகிழ்ந்து, தான் சூடிய மாலையை அளித்தருளியவர். திருத்தொண்டர்களின் பிறவிப் பிணியைத் தீர்ப்பவர். வில்வமும் ஊமத்தமலரும் சடை முடியில் அணிந்து விளங்குபவர். அப்பெருமான் மீது பூக்கணை கொண்டு அம்பு தொடுத்த மன்மதனை எரித்தவர்.

*" பதந்தனில்வீழ்ந்திறைஞ்சும்பரிதிவானவனைநோக்கிக்*
*கதங்கொடு* ***காமற் காய்ந்த கண்ணுதல்*** *யாருங்கேட்ப*
*விதங்கொளீரேழ்பொழிற்குமிக்கிறையாயிலங்கி*
*வதிந்துநீவாழ்நாள்காறும்வாழ்கெனவரங்கொடுத்து" (பாடல் 263)*

*"அகிலந்தருகாரணனேசரணம்*
*புகலும்புவனாதிபனேசரண*
***மகிழ்மன்மதவேண்டாண்டேயெரியத்***
*திகழ்வெங்கணனேசிவனேசரணம்" (பாடல் 773)*

*"கழகன் மால்விடை மேல்கொண்டு முன்றோன்றிக் குறுகலுங் கோதிலாத் தவத்தோர்*
*விழுமநன்படிமேல் விழுந்தடி பணிந்த மெய்ம் மயில் பொடித்திடவுள்ளந்*
*தழன் முகங்கண்ட மெழுகெனவுருகிச் சதுர் மறைப் பாடலிற்றுதிப்பக்*
*கழைதரு சிலைக் கைக்* ***காமனைக் காய்ந்த கண்ணுதல்*** *கருணை செய்தருள்வான்"*
*(பாடல் 1355)*

*"கற்பனையில் வந்து பொரு* ***காமனையெரித்தோய்***
*சொற்பரவு நான்மறை துதித்திடு துரங்கா*
*பொற்புற வணிந்திலகு பூடண புயங்கா*
*சிற்பரமஞானிகடினம் பருகு தேறால்" (பாடல் 1419)*

என்ற பாடல்களில் சிவபெருமான் காமனை எரித்த செய்தி பாடப்பெற்றுள்ளது.

## 4.3.11 அரக்கர் கோனை அடர்த்துதல் (பாடல்-11)

*"ஆருவ வுள்குவா ருள்ளத் துள்ளே*
*யவ்வுருவாய் நின்கின்ற வருளுந் தோன்றும்*
*வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை*
*மகிழ்ந் தொருபால் வைத்து கந்த வடிவுந் தோன்றும்*
*நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை*
*நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்*
*போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்*
*பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே"*

பூவணத்தில் மேவும் சிவபெருமான், தன்னை வணங்கும் அன்பர்கள் நினைந்து ஏத்தும் வடிவத்தில் உள்ளிருந்து அருள் புரிபவர். உமாதேவியைத் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு விளங்குபவர். இராவணனை மலையின் கீழ் நெரித்தவர். அவர் போர்த்தன்மையுடைய கொடிய வடிவத்தையுடைய கூற்றுவனை உதைத்தவர்.

திருப்பூவணப் புராணத்தில் இலக்குமி சாபவிமோசனச் சருக்கத்தில் திருமாலின் பெருமைகளைக் கூறுமிடத்து, அவர் ராம அவதாரத்திலே ராவணனை அழித்த செய்தியானது,

*"மாற்றருஞ் சடாயுவுடன் மகிழ்கூர்ந்து மாயமாரீசனை வதைத்துக்*

*கூற்றெனவந்தச் சானகி தன்னைக் கொடிய **ராவணன்** கொடுபோத*
*வேற்றமர்பொருதே யிறந்த பின் றந்தைக் கீறுசெய்கடனிழைத் தளவி*
*லாற்றல் சேர்க வந்தனாருயிர் கொண்டவலை கடலச்சுதானந்தா" (பாடல் 806)*

என்ற பாடலிலே உள்ளது.

சிவபெருமான் தனது காலால் ஊன்றி இராவணனை அடர்த்த செய்தியானது,

*"ஒள்ளிதென வேதினமு மொண்டொடி நின்னோடும்*
*வெள்ளிமலை யென்றதனின் மேவியிடமேனா*
*ளௌ்ளரு **மிலங்கை யிலி ராவண** னிராதே*
*யள்ளியகழ் கின்றதனை யாரு மறியாரோ" (பாடல் 1102)*

என்ற பாடலில் பாடப் பெற்றுள்ளது.

அப்பரது பாடல்களில் சிவபெருமானின் தலை முதல் பாதம் வரை உள்ள அணிகலன்களும், கைகளில் உள்ள ஆயுதங்களும், அவரது வடிவழகும், உள்ளத்தின் அன்பும், பகைவர்களை அழித்த தன்மையும், "தோன்றும்-தோன்றும்" என்று முடியுமாறு திருத்தாண்ட முறையில் திருப்பூவண நாதரைப் பணிந்து பாடப்பெற்றுள்ளன.

இப்பாடல்களில் உள்ள வடிவங்களும் தன்மைகளும் திருப்பூவணப் புராணப் பாடல்களில் விரவி இடம் பெற்றுள்ளன. இதனால் அப்பர் கண்ட இறைவனின் வடிவழகும், நைமிசாரண்யத்தில் முனிவர்கள் கண்ட இறைவனின் வடிவழகும் ஒன்றாகவே உள்ளமை உறுதி செய்யப்படுகிறது.

## 4.4. திருப்பூவணப் புராணமும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல்களும்

**சுந்தரர்**

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் இவர்களுக்கு அடுத்தபடியாகச் சுந்தரர் இடம் பெறுகிறார். "சுந்தரமூர்த்தி சுவாமிகள் கைலாயத்தில் சிவபெருமானுக்குத் தொண்டு புரிந்து வந்த 'ஆலாலசுந்தரர்' என்றும், அவர் அனிந்திதை, கமலினி என்ற இரண்டு தேவியர்களிடம் காதல் கொண்டதால், இம்மூவரையும் 'பூலோகத்திற்குச்

சென்று காதல்புரிந்து நம்தொண்டும் செய்து மீண்டு வாருங்கள்' என்று சிவபெருமான் அருளியுள்ளார்"[251].

சுந்தரர் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் என்னும் திருத்தலத்தில் சடையனார், இசைஞானியார் என்ற அடியோருக்குப் பிறந்தவர். ஆரூரில் பிறந்ததனால் 'ஆரூரர்' என்று பெயர் சூட்டப்பெற்றார்.

இவருக்குத் திருமணம் பேசி முடிக்கப் பெற்றுத் திருமண நாளில் மணமேடையில் இருக்கும்போது, சிவபெருமான் ஒரு வேதியர் வடிவில் எழுந்தருளி அடிமைசாசனம் காட்டி நம்பியாரூரரைத் தனக்கு அடிமை செய்தார். ஆரூரர், இறைவனைப் பித்தன் என்று வன்மொழியால் பேசினமையால், 'வன்தொண்டன்' என்ற பெயர் பெற்றார். மேலும் அச்சொல்லையே முதலடியாகக் கொண்டு, "பித்தா பிறைசூடி" என்ற திருப்பதிகத்தைத் தொடங்கி நிறைவேற்றினார்.

**நடந்த அற்புதங்கள்**

சிவபெருமான் ஏவலால் பூதங்கள் நெல்முழுவதையும் திருவாரூருக்குக் கொண்டு சேர்த்தன, திருப்புகலூரில் செங்கல் பொன்னாக மாறியது. திருமுதுகுன்றர் அருளால் பன்னீராயிரம் பொன் கிடைக்க, அதனைத் திருமணிமுத்தாற்றில் இட்டு, பின்னாளில், திருவாரூர் சென்று அங்குள்ள கமலாலயத்திலிருந்து அப்பொன்னை எடுத்துப் பரவையாருக்கு வழங்கியது, திருக்காவூரில் சிவபெருமான் பிச்சை எடுத்து வந்து தந்த உணவை உண்டது, இறைவன்பால் விண்ணப்பித்து சங்கிலியாரைத் தனக்கு மணம் செய்துவிக்கத் தூது அனுப்பியது, காஞ்சிபுரம் இறைவனைப் பாடி இடக்கண் பார்வை பெற்றது, திருவாரூருக்கு மீண்டும் வந்து இறைவனைப் பாடி வலக்கண்ணையும் பெற்றது, இதுபோன்ற பல அற்புதங்கள் நடைபெற்றுள்ளன.

**திருப்பூவணத்தை வணங்கிய வரலாறு**

மதுரையில் சேரமான் பெருமாளோடு தங்கியிருந்த சுந்தரர், சேர சோழ பாண்டியரோடு திருப்பூவணநாதரைத் தரிசிக்கச் செல்கிறார். தொண்டர்கள் அத்தலத்தைச் சுட்டிக்காட்டுகின்றனர். "உறைபூவணம் ஈதோ" என்று முடியுமாறு பத்துப் பாடல்களைப் பாடியருளியுள்ளார். இவர்பாடிய பத்துப் பாடல்களில் எட்டுப்

பாடல்கள் மட்டுமே கிடைக்கப் பெற்றுள்ளன. இரண்டு பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை.

## சுந்தரர் அருளிய தேவாரம் (ஏழாம் திருமுறை)

*பண் – இந்தளம்*

### 4.4.1. திருவுடையார் (பாடல்-1)

*"திருவுடை யார்திரு மால ய னாலு*
*முருவுடை யாருமை யாளையொர் பாகம்*
*பரிவுடை யா ரடை வார்வினை தீர்க்கும்*
*புரிவுடை யாருறை பூவண மீதோ"*

திருமால் மற்றும் பிரமதேவன் இவர்களைவிடத் திருப்பூவணத்தில் உறைந்துள்ள சிவபெருமான் கூடுதலான செல்வம் உடையவர். உமையம்மையைத் தனது ஓர்பாகமாகக் கொண்ட உருவினை உடையவர். தன்னை அடைந்தவர்களது வினைகளைத் தீர்க்கும் பரிவு உடையவர். தனது மார்பிலே புரிநூலை அணிந்தவர். இச்சிறப்புக்களை உடைய சிவபெருமான் உறைந்திருந்து அருளுகின்ற பூவணம் இதுவோ!

திருப்பூவணப் புராணத்திலே தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கத்திலே, தருமஞ்ஞன் கொண்டுவந்த முன்னோர்களின் எலும்பு இருந்த கலயமானது மணிகன்னிகா தீர்த்தத்திலே வீழ்ந்து, உற்பலமும் தாமரையுமாக மாறியது. இந்த,

*"அற்புதந்தனை யென்சொல்கேன் மிகு மறவிர்காளரிதரிதரோ*
*பெற்றதாதை பிறங்கெலும்பு பெருங் கடத்திலிருந்துதா*
*ளெற்றவிந்த விலஞ்சி நாப்ப ணெழுந்து வீழந்தர விந்தமோ*
*டுற்றபானலதாக யானொரு வேனுமே **திருவுடைமையேன்**"* (பாடல் 549)

என்று தருமஞ்ஞன் கூற்றாக இடம் பெற்றுள்ளது. மேலும், சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கத்திலே, சுச்சோதி மன்னன், திருப்பூவணநாதர் சந்நிதியிலே மிகு திருவுடைமை பெற்றதாகப் பாடப்பெற்றுள்ளது.

*"தகுந்திரு முனிவீர் காணுஞ் சந்நிதி தன்னில் யானு*
*மிகுந் **திருவுடைமைபெற்றேன்** மேலையோர் தம்முன் யாவர்*
*புகுந்துதாம் பொருந்தின் மிக்க புண்ணியந் தன்னாலன்னோ*
*ரகந் தெளிந்தருளி னீடு மறிவினாலும் பராவார்"* (பாடல் 1270)

த் திருப்பூவணப் புராணத்திலே இரண்டு இடங்களிலும் தங்களது முன்னோர்களுக்கு முறைப்படித் தர்ப்பணம் செய்தவர்கள், திருப்பூவணநாதர் சந்நிதியிலே மிகுந்த செல்வத்தைப் பெற்று வாழ்ந்ததாக கூறப்பட்டுள்ளது.

'அடைவார் வினை தீர்ப்பார்' என்ற சுந்தரரின் சொல்லாட்சியானது திருப்பூவணப் புராணத்திலே,

*"**அடைவார்வினைதீர்த்தருள்வாய்**சரணமருளாலறியும்பொருளேசரணங்*
*கடல்சேர்விடமுண்டவனேசரணங்கமலன்றருகங்கையனேசரணஞ்*
*சுடர்சேர்சுடலைப்பொடிபூசிடுநற்சுகரூபமதையுடையாய்சரணஞ்*
*செடிசூழ்மிகுகற்பகநன்னிழலிற்றிகழ்பாற்கரபுரசிவனேசரணம்" (பாடல் 556)*

என்ற பாடலில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

*"சூழ்ந்தவல்வினைத்தொடர்படுகின்ற தொல்பவத்தைப்*
*போழ்ந்தஞானவாட்படையினர் புரிமுந்நூன்மார்பர்*
*தாழ்ந்தநல்லுறிதாங்குகுண்டிகைத் தடக்கையர்*
*வாழ்ந்தவைதிகசைவர்வாழ்நைமிசவனமே" (பாடல் 37)*

'புரிவுடையார்' என்றும், 110ஆவது பாடலிலே "புரிசடைப் பெருமான்" என்றும் திருப்பூவணப் புராணத்திலே கூறப்பட்டுள்ளது.

## 4.4.2. அண்ணல் (பாடல்-2)

*"எண்ணி யிருந்து கிடந்து நடந்து*
*மண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்*
*பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்*
*புண்ணிய னாருறை பூவண மீதோ"*

அடியவர்கள் தங்களது மனத்தில் எண்ணினாலோ அல்லது ஓர் இடத்தில் இருந்து கொண்டு நினைத்தாலோ, அல்லது படுத்துக்கொண்டே நினைத்தாலோ அல்லது நடந்துகொண்டே நினைத்தாலோ போதும். அவ்வாறு தன்னை நினைத்தவர்களின் வினைகளையெல்லாம் தீர்க்கக்கூடியவன். பல்வேறு இசைகளுடன் பாடல்கள் பலபாடித் துதிக்கின்றனர். மிகவும் புண்ணியத்தை உடைய சிவபெருமான் உறைந்திருந்து அருளுகின்ற பூவணம் இதுவோ!

*"**அண்ணல்** வந்தனனா லென்றுட னெழுந்தே யானந்த பரவசனாகி*
*விண்ணின் மேற்பொருவல் விடைக்கொடி யுயர்த்த விமலனல்லிமைத் தலின்மூன்று*
*கண்ணு மான்மழுவுங் கரசரணமு மெய்க் கவினுமே தன்கணேபுகுத*
*மண்ணிடையே வீழ்ந் தெழுந்தனன்றக்கன் வழுத்தினனான் மறை தன்னால்" (பாடல் 872)*

என்ற பாடலிலும், மேலும் 421, 1338, 1342 ஆகிய பாடல்களிலும் சிவபெருமானை 'அண்ணல்' எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. முருகப்பெருமானை 94ஆவது பாடலில் 'அண்ணல்' எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 4.4.3. பூதப் படையோன் (பாடல்-3)

*"தெள்ளிய பேய்பல பூதம வற்றோடு*
*நள்ளிரு ணட்டம தாட ந வின்றோர்*
*புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்*
*புள்ளுவ னாருறை பூவண மீதோ"*

சுடுகாட்டில் ஆடுகின்ற பேய்கள் பலவற்றோடும் இடுகாட்டில் உள்ள பூதங்களுடனும் மிகவும் கடுமையான இருளில் ஆடல் புரிபவன். பொய்யர்களுக்குத் தாமும் பொய்யனாய் விளங்குபவன். இச்சிவபெருமான் உறைந்துள்ள பூவணம் இதுவோ!

சிவபெருமான் பேய்களுடன் நடனமாடுபவர் என்று திருப்பூவணப் புராணத்திலே

*"என்னருந்தவப்பேற்றினாலீன்றமெய்ஞ்ஞானக்*
*கன்னிபாகன்வான்கங்கைமாநதியலையெறிக்கும்*
*பின்னறாழ்ந்திடப்பேயுடனாடியபித்தன்*
*நன்னர்நண்புணர்கின்றதுநன்றெனநக்கான்" (பாடல் 1065)*

என்ற பாடலில் இடம் பெற்றுள்ளது. மேலும், கீழ்க்கண்ட பாடல்களில் சிவபெருமானைப் 'பூதர்' என்றும், 'பூதங்களின் தலைவன்' என்றும் கூறப்பட்டுள்ளது.

*" ... பொருளேயடியார்புகலேசரணம்**பூதப்படையாய்**சரணஞ்சரணந்.. .." (பாடல் 553)*

*" .. ..திரைக்கடலெனவேசொல்லரியபல்லியங்கடுவைத்தார்**பூதர்***
*தன்னருளைக்கைகலந்துதனதுதிருவுளமகிழ்ந்தான்றாணுவானோன்.."(பாடல் 1043)*

*".. .. பொற்பினேறினன்போகலையென்றனர்**பூதர்**.. .." (பாடல் 1076 )*

*".. ..**பூதர்**நீவிர்தாம்போகலையென்றதென்புவிமே.. .." (பாட் 1077)*

*".. ..செங்கமலத்தாட்டிகழ்சிறுசின்னஞ்சேர்ந்தகைச்**சிறுகுறட்பூத***
*மங்கண்ணுதற்சேர்ந்துங்கவீரன்வந்தானெனவேபணிமாற.. .." (பாடல் 1122)*

*".. ..குண்டிகையனநதங்**குறடச்சிறுபூதங்**கொண்டுகைக்குடமுழாமுழக்க .." (பாடல் 1123)*

*".. ..விரைந்துநீகொணர்தியென்னலுமந்த**மேதகுபூதமாங்**குய்ப்பப் .. " (பாடல் 1145)*

*" .. சார்ந்**துபூதங்**கட்குபொறிதணந்துதடுப்பரும்வளியையுந்தடுத்து*
*நேர்ந்தமெய்ஞ்ஞானநிட்டையிற்கூடிநேயமோடுற்றுடனீத்தான் .. " (பாடல் 1202)*

மேலும், சிவபெருமானைப் 'புள்ளுவனார்' என்று புராணத்தில் குறிப்பிடப் பெற்றுள்ளதாக ஆய்வாளரால் அறியப் பெறவில்லை.

### 4.4.4. மான்மறி கையது (பாடல்-4)

*"நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு வேந்தியோர் கையி
லனலுடை யா ரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ"*

நிலவுடன், மான் மறி இவற்றை உடையவன். கையிலே தெய்வக் கனலை ஏந்தியுள்ளவன். ஒரு கையில் போரில் வெற்றியைக் கொடுக்கக்கூடிய பெரிய மழு ஆயுதத்தை உடையவன். அனலை(தீயை) உடையவன். அழகன். புரிசடையுடைய தலையில் புனலை(கங்கையை) உடையவன். இச்சிறப்புக்களை உடைய சிவபெருமான் உறைந்துள்ள பூவணம் இதுவோ!

சிவபெருமானின் கையில் மான் மற்றும் மறி உள்ளன. இச்செய்தி திருப்பூவணப் புராணத்திலே,

*"யான் முயன்று தவஞ்செயு நாளிந்த மட மயிலோடு
**மான் மழுவேந்திய** வெங்கோன் மழவிடைமேல் வந்தருளித்
தான்வரமிக் களித்தனன்பின் சங்கரி சேயாய் நீயென்
பான்மருகனாக வரும்படி யடியேற் கருளென்றேன்" (பாடல் 952)*

என்ற பாடலிலும், மேலும் 14, 65, 171, 347, 571, 872, 1074, 1187 ஆகிய பாடல்களிலும் பாடப்பெற்றுள்ளது.

### 4.4.5. நல்லெருது ஏறுவார் (பாடல்-5)

*"நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி யென்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பிற்
பொடியணி வாருறை பூவண மீதோ"*

நல்ல நடையை உடைய எருது ஏறுபவர். நல்லவர்களின் வீடுகளின் வாயில்களுக்குச் சென்று பிச்சையிடுங்கள் எனக் கேட்டுப் பிச்சை பெறுவார். துடி(உடுக்கை)போன்ற இடையினை உடைய நல்லமடந்தையோடு உள்ளவர். தனது மார்பினில் திருநீற்றுப் பொடியை அணிந்துள்ளவர். இச்சிறப்புகளையுடைய சிவபெருமான் உறைந்துள்ள பூவணம் இதுவோ!

*"மாசுண மருந்து மொருவாயு மலைவுற்றே
வீசியலை யாழியிடு மேருமலை வில்லா
மூசுதலையோடு கலனூர் கொள்பலியாலப்
போசன மிலங்கிட மெய்பூசுதல் வெணீறே" (பாடல் 1098)*

என்ற பாடலில் மேருமலையை வில்லாகக் கொண்டு மூசுதலையோடு வெண்நீறு பூசி சிவபெருமான் காட்சியளித்தார் எனத் திருப்பூவணப் புராணத்திலே தக்கன் வேள்வி அழித்த சருக்கத்திலே பாடப்பெற்றுள்ளது.

### 4.4.6. மின்னனையாள் (பாடல்-6)

*"மின்னனை யாடிரு மேனிவி ளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்னினை யார்புர மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ"*

மின்னனையாள் என்ற திருநாமத்துடன் தேவியார், சிவபிரானுடன் அமர்ந்து விளங்குகிறார். இத்தேவிக்குத் தன்னுடைய உடலில் சரிபாதியை வழங்கியவர் சங்கரன். முன்பு சிவபெருமான் கொடுத்த வரத்தினால் வல்லமை பெற்ற அசுரர்கள், பின்னர் அதனை மறந்து கொடுங்கோலாட்சி செய்தனர். இதனால் அவர்களது மூன்று கோட்டைகளையும் சிவபெருமான் எரியூட்டி அழித்தார். பொன்னான மேனியை உடைய இவர் உறைந்துள்ள பூவணம் இதுவோ!

திருப்பூவணப் புராணத்திலே 'மின்னனை' என்ற அம்மையின் பெயரானது 1, 9, 10, 24, 171, 239, 501, 742, 746, 768, 1092, 1324 ஆகிய பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

### 4.4.7. நெஞ்சம் புக்குறைவான் (பாடல்-7)

*"மிக்கிறை யேயவ னுன்மதியால் விட
நக்கிறை யேவிர லாலிற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வானுறை பூவண மீதோ"*

இறையருள் மிகுதியும் பெற்றவன் இராவணேசுவரன். அவன் தனது துர்மதியினால் தனது வலிமையைப் பெரிது என எண்ணித் திருக்கைலாய மலையைப் பெயர்த்தெடுக்க முயன்றான். அப்போது சிவபெருமான் தனது கால்விரலினால் மலைமீது ஊன்றினார். இதனால் இமயமலையின் அடியில் இராவணேசுவரன் அகப்பட்டு அழுந்தினான். பின்னர் தனது கானத்தினால் கைலாயநாதனைத் துதித்து வரங்கள் பெற்றான். இறைவனையே நினைந்து வணங்குவோரின் நெஞ்சங்களிலே புகுந்து அங்கே உறைகின்றவன் உறைந்துள்ள பூவணம் இதுவோ!

*"படர்புவியிடத் துயிர்க் கருளும் பான்மைசேர்
நடையனை நான்மறை நவிற்றுவான் றனைத்
தடைபடா* ***தருளினாற் சார்ந்த நெஞ்சனை***
*யிடருறு மில்லற மிறப்பிப்பான் றனை" (பாடல் 350)*

*"விடுவிடிங்கெனையென்னவிடையுகைத்தேவரும்விமலன்சடா*

*முடிநின்றுமதுதவறிவீழ்தரலினுயிர்பெற்றுமொழியுமதனா*
*லிடர்நின்றெமைக்காக்கவிஃதிங்ஙனினைகின்றதென **நெஞ்சிடைப்***
*படிறொன்றுரைத்திடப்பங்கயப்பகவனிப்பரிசுன்னினான் " (பாடல் 1399)*

என்ற பாடல்களில் சிவபெருமான் அருள் சார்ந்த நெஞ்சினை உடையவன் என்று பாடப்பெற்றுள்ளது. 'நினைவார் தன் நெஞ்சில் புக்குறைவான்' என்று பொருள்படும்படியான பாடலேதும் புராணத்தில் இடம் பெற்றதாக ஆய்வாளரால் அறியப் பெறவில்லை.

**4.4.8. பாடல்-8 மற்றும் 9** இவ்விரண்டு பாடல்களும் கிடைக்கப் பெறவில்லை.

### 4.4.9. பாவம் அறுப்பர் (பாடல்-10)

*"சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவண*
*மாரவி ருப்பிட மாவுறை வானை*
*யூர னுரைத்த சொன்மாலைகள் பத்திவை*
*பாரி லுறைப்பவர் பாவ மறுப்பரே"*

மிகுந்த சீர்மை பொருந்திச் செல்வச் செழிப்புடன் பொலிந்து திகழுகின்றது திருப்பூவணம். இங்கே மாறாத விருப்பத்துடன் தான் உறைகின்ற இடமாகக் கொண்டு சிவபெருமான் உறைந்துள்ளார். இப்பூவண நாதனை ஆரூரான் என்றழைக்கப்படும் சுந்தரர் உரைத்த சொற்களாலான மாலைகள் பத்தையும் பாரில் உள்ள மக்களுக்கு உரைப்பவர்களின் பாவங்கள் அடியோடு அறுபடும்.

திருப்பூவணப் புராணத்திலே,

*"பன்னுதுமியாமுனது **பாவம**றவீடு*
*முன்னினுலகம்புகழுமோர்புனிததீர்த்த*
*மின்னதெனவேயறிவதெம்மிறைவனன்றி*
*யன்னதனின்மேன்மைதனையாரறியகிற்பார்" (பாடல் 393)*

என்ற பாடலில் மணிகன்னிகைத் தீர்த்தத்தில் நீராடினால் பாவம் போகும் என்று கூறப்பட்டுள்ளது.

*"பார்மிசைபடர்ந்துவரு **பாவமவையாவும்***
*நேர்படுதலாவதொருநிமிடமதினீங்கும்" (பாடல் 401)*

*"காசிநகரிற் செய்தகடுங்கொடியபாவம்*
*பூசுரர்தினம்பரவுபூவணமதிற்போம்" (பாடல் 402)*

*"அந்தலிங்கதரிசனத்தினானன்முத்தியடையுமால்*
*வந்துநாளுநாளுமேவணங்கினோர்கள்யாவரும்*
*புந்தியாற்செய் **பாவமும்புண்ணியம்மதாகுமா***
*லிந்தநீர்மையுண்மையுண்மையென்பதையமில்லையே" (பாடல் 418)*

*"பொங்குலஞ்செய்தபுண்ணியநணணுவர்பொழில்புரி**பாவமுமொழிகுவரன்றே"** (பாடல் 564)*

*"வேதியற்கோறலாதிவெங்கொடும்**பாவமாயப்***
***பாதகமனைத்துமங்ஙன்பாறிடும்**பரிவின்முன்ன" (பாடல் 662)*

*"பண்ணு**பாவமனைத்தும்பாறல்செய்வதாகிப்***
*புண்ணியமாய்மேலாகிப்பொருந்தும்புட்பகானத்" (பாடல் 1254)*

*"பூவணத்திறைக்குநற்பூம்பட்டீகுநர்*
***பாவமானவையெலாம்பற்றறுத்தரோ"** (பாடல் 1343)*

ஆகிய பாடல்களிலும் பாவம் நீங்கப் பெறும் என்று கூறப்பெற்றுள்ளது. மேலும் தாழம்பூ பொய் சொன்ன பாவத்தை நீக்கத் திருப்பூவணத்திற்குச் செல்லுமாறு சிவபெருமான் கூறியதாகத் திருப்பூவணப் புராணத்திலே பாடப்பெற்றுள்ளது.

*"ஆங்கதுகாலையிற்கைகையடியேனையஞ்சலெனவருள்வாயென்னாத்*
*தேங்கியவத்திறனறிந்துதிரிந்தமுகந்தெரிந்துதிருவுளந்துணிந்து*
*பாங்கின்மலர்ப்பரமேட்டிதனக்காநீ**பொய்யுரைத்தபாவம்பாறும்***
*பூங்கமலத்திருமருவுபூவணத்தினமைப்பூசைபுரிதியன்றே" (பாடல் 1422)*

## 4.5 திருப்பூவணப் புராணமும் மாணிக்கவாசகர் பாடல்களும்

**திருவாதவூரர்**

திருப்பூவணத்திற்கு வடக்கே சுமார் 18 கி.மீ. தூரத்தில் உள்ளது திருவாதவூர். இவ்வூரில் பிறந்தவர் மாணிக்கவாசகர், அதனால் அவருக்குத் திருவாதவூரர் என்னும் பெயர் அமைந்தது. அவருடைய கல்வி, கேள்வி, ஒழுக்கம், அறிவு, ஆற்றல் ஆகிய சிறப்புக்களைப் பற்றிக் கேள்வியுற்ற பாண்டிய மன்னன் அவரைத் தனது தலைமை மந்திரியாக நியமனம் செய்தான். அவரது ஆட்சித் திறமையைக் கண்டு 'தென்னவன் பிரமராயன்' என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கினான்.

சோழநாட்டுக் கடற்கரையில் நல்ல அரபிக் குதிரைகள் விற்பனைக்காகக் கொண்டு வந்து வைக்கப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்ட பாண்டிய மன்னன் அவைகளை வாங்கிவரும்படிப் பொருள் கொடுத்து திருவாதவூரரை அனுப்பி வைத்தான். குதிரை வாங்கச் சென்ற வழியில் திருப்பெருந்துறையில் (இப்போது இவ்வூர் ஆவுடையார் கோயில் என்று அழைக்கப்படுகிறது) சிவதீட்சை பெற்றார். குதிரை வாங்க வைத்திருந்த செல்வத்தையெல்லாம் அவர் சிவசேவைக்குச் செலவு

செய்து விட்டார். செய்தியறிந்த மன்னன், "குதிரைகள் எங்கே?" என்று வினவினான். ஆவணி மூலத்தன்று குதிரைகள் வந்து சேருமென்று வாதவூரர் கூறினார். அவரது கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் சிவபெருமானே குதிரைகளுடன் வந்தார். ஆனால் அன்று இரவே குதிரைகள் எல்லாம் நரிகளாய் மாறின. மாணிக்கவாசகர் பொருட்டு இறைவன் நேரில் எழுந்தருளி நரிகளைப் பரிகளாக்கியும், பின்னர் பரிகளை நரிகளாக்கியும் திருவிளையாடற் புரிந்தருளினார்.

## 4.5.1. மாணிக்கவாசகப் பெருமான் கீர்த்தித் திருவகவலில்

*"இந்திரஞாலம் காட்டிய இயல்பினாய் போற்றி*
*உத்தரகோச மங்கை வித்தக வேடா போற்றி*
***பூவண மதனிற் தூவண மேனி காட்டிய தொன்மையோய் போற்றி***
*வாதவூரில் பாதச் சிலம்பொலி காட்டிய பண்பா போற்றி*
*திருவார் பெருந்துறை செல்வா போற்றி"*

என்று திருப்பூவணநாதரின் தொன்மைகளையும் அருளும் தன்மையையும் பாடியுள்ளார்.

## 4.5.2. "அரனே போற்றி, அந்தணர்தம் சிந்தையானே போற்றி" - என்று

ஆரம்பிக்கும் திருமுறைத்திரட்டில்,

*",,, ,,,*
*வெண்காட்டில் உறைவா போற்றி*
*விடைகாட்டும் கொடியா போற்றி*
***சக்கரம் மாலுக்கு ஈந்தாய் போற்றி***
***சலந்தரனைப் பிளந்தாய் போற்றி***
*பாலொடு நெய்தயிர் பலவும் ஆடுவாய் போற்றி*
*,,, ,,,"*

*"தேவார்ந்த தேவர்க்கும் தேவே போற்றி*
***திருமாலுக்கு ஆழி அளித்தாய் போற்றி***
*சாவாமே காத்து என்னை ஆண்டாய் போற்றி"*

*"மைசேர்ந்த கண்டம் உடையாய் போற்றி*
***மாலுக்கும் ஓர் ஆழி ஈந்தாய் போற்றி***
*பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி"*

*"விண்ணுலகம் ஈந்தவிறல் போற்றி*

*மண்ணின்மேல் காளத்தி போற்றி கயிலைமலை போற்றி*
***சதுர்முகன் தந்தைக்குக் கதிர்விடு கடவுள்***
***ஆழி கொடுத்த பேரருள் போற்றி"***

***"சலந்தரன் தடிந்த தண்டம் போற்றி***
*தாதையை எறிந்த வேதியச் சிறுவற்குப் பரிகலம்*
*கொடுத்த திருவுளம் போற்றி"*

*"சிறுவனுக்கு அழியா வாழ்நாள் அளித்து அருள் செய்தி போற்றி*
***சலந்தரன் உடல் கீண்ட சக்கரப் படையாய் போற்றி***
***வலம்தரு அதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி***
*அலர்ந்த செங்கமலப் புத்தேள் நடுச் சிரம் அரிந்தாய் போற்றி"*

என்று திருப்பூவணநாதர் பெருமாளுக்குச் சக்கராயுதம் வழங்கிய செய்தியைப் பாடியுள்ளார்.

இச்செய்தி, திருப்பூவணப் புராணத்திலே, சிதம்பர உபதேசச் சருக்கத்திலே கீழ்க்கண்ட பாடல்களிலே விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளது.

*"பொருதிரைக் கடல்சூர் புடவியிற் பூர்வம் பொருந்து மீறுவருடஞ்சூழ்*
*வருகிரகங்கள் வக்கிரமுறலால் வான்முகின் மழை வறந்திடவே*
*தரை வளந்தணப்பச் சலந்தருவடிவச்* ***சலந்தரன்றா னொர் மண்டுகமா***
*யருமணங் கமழுமலர் தருமலரியடியினாங் கமர்ந்தினி திருந்தான்" (பாடல் 1370)*

*"அப்புனற் சீதமடைதலி னலரியரிய நெட்டிலையுட னரும்பித்*
*துப்புறழ் சடிலச் சோதிதன்முடிமேற் சூட்டிடக்கண்டு முன்றோன்றித்*
*தப்பற வந்தச் சலந்தரன்றனக்குத் தலம் புரந்தரு* ***ளரசளித்துத்***
*திப்பியமுற மாலயன் முதலேனோர் சிதைக் கரும்****வாழ்வு மீந்தனனால்****" (பாடல் 1371)*

*மேதகுவரத்தான் மிடலுடன் றோன்றி மிக்குயர்விரிஞ்சன் மால் விண்ணோ*
*ராதிபுத்தெளிர்க் ககந்தையே விளைப்ப வாங்கவர் வெருவியேயந்த*
*வாகையைச் சுமப்பான் வலிபெறாமையினான் மங்கை பங்கொளிர்ந்திடு மெங்கோன்*
*பாததாமரையிற் பணிந்* ***தவனுயிரைப் பறித்திடல் வேண்டு மென்றிரந்தார்****" (பாடல் 1372)*

*ஆயது காலை மாயவன் கரததினாயிரஞ்செங்கதிர்பரப்பு*
***மீயுயர்கோடி வெய்யவ ரொளியை விளக்கிடுஞ் சக்கரமளித்துத்***
*தீயுமிழ் நெற்றிச் செங்கணாற் கன்னற் செஞ்சிலைக் காமனைச் செற்றுத்*
*தாயுமாயுயிர்க்குத் தண்ணளி சுரப்போன்* ***சலந்தர னுடறடி வித்தான்"*** *(பாடல் 1373)*

*அச்சலந்தரனுக் கருச்சனைக் கேற்ற வாய் மலரளித்திடும் பலத்தா*
*னிச்சயம் பெற நீடாழிசூ ழுலகினெடிய மாலயன ரிவரிதாம்*
*பச்சை மாமயிலேர் பாதி நின்றிலங்கும் பரஞ்சுடர்பன்ன காபரணன்*
*முச்சகம் புகழுமிக்க பூவணத்தின்* ***முத்தியை யளித்தனனன்றே"*** *(பாடல் 1374)*

*"பொலங்கலன் சுமந்த பொற்கொடியிடமாம் புண்ணியன் பொற்பதந் தன்னி*
*லலர்ந்த நற்செந்தாமரை மலரொடு கண்ணரு மரிட்ருச்சித்துச்*
***சலந்தரனுடலந் தடிந்திடு மிந்தச் சக்கரந் தன்னைமால் பெற்றா***

***னலந்திகழ்ந் தோங்கு நானிலம் புகழுநற்றமிழ்ப் பூவணநகர் ..." (பாடல் 1375)***

### 4.5.3. போற்றித் திருவகவலில்,

*"... ... ...*
*திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி!*
***பொருப்பமர் பூவணத்தரனே போற்றி!***
*அருவமும் உருவமும் ஆனாய் போற்றி!*
*... ... ..."*

என்று திருப்பூவணநாதரைப் போற்றி வணங்கியுள்ளார்.

## 4.6. திருப்பூவணப் புராணமும் திருவிளையாடற் புராணமும்

தமிழில் பாடப்பெற்றுள்ள திருவிளையாடற் புராணத்திலும், வடமொழிப் புராணத்திலும் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ள திருத்தலங்களாக அறியப்படுவன மதுரையும் திருப்பூவணமும் ஆகும். திருப்பூவணம், தமிழ் மொழியில் உள்ள 36ஆவது திருவிளையாடற் புராணத்திலும், வடமொழியில் உள்ள பிரமகைவர்த்த புராணத்திலும் இடம் பெற்றுள்ளது. மதுரை சொக்கர் நடத்திய 64 திருவிளையாடல்களுள் 36ஆவது திருவிளையாடலான, 'இரசவாதம் செய்த படலம்' திருப்பூவணத்திலே நடைபெற்றதாகும். இப்பகுதியில், திருவிளையாடற் புராணச் செய்திகளும், திருப்பூவணப் புராணச் செய்திகளும் ஒப்புமை செய்து ஆராயப்பெற்றுள்ளன.

### 4.6.1. திருவிளையாடற் புராணத்தில் திருப்பூவணம்

திருவிளையாடற்புராணம் என்ற நூல், மதுரையில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுள் தன்னுடைய அடியவர்களுக்கு அருள்புரிந்த சிறப்புக்களை எடுத்துக் கூறுகிறது. திருவிளையாடற்புராணக் கதைகளைப் 'பெரும்பற்றப் புலியூர்நம்பி' என்ற புலவரும், 'பரஞ்சோதி முனிவர்' என்ற புலவரும் பாடி யுள்ளனர். இதில் 36 ஆவது படலமாகிய இரசவாதம் செய்த படலத்திலும், 49 ஆவது படலமாகிய திருவாலவாயான படலத்திலும், திருப்பூவணம் தொடர்பான செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## 4.6.2. 36ஆவது திருவிளையாடல் - இரசவாதம் செய்த படலம்

திருப்பூவணத்திலே வசித்த பொன்னனையாள் என்ற நடனமாதிற்குச் சொக்கநாதர், சித்தர்வடிவிலே நேரில் வந்து அருள்புரிந்த தன்மையும், அவர் திருப்பூவணத்து உற்சவமூர்த்தியைச் செய்திடத் தேவையான தங்கத்தை இரசவாதம் செய்து அருளிய செய்தியும் இப்படலத்தில் கூறப்பெற்றுள்ளன.

### 4.6.2.1. அன்னமிட்ட கை

முன்பு திருப்பூவணத்தில் **பொன்னனையாள்** என்ற சிவபக்தை இருந்தாள். இவள் சிறந்த நடன மாது. நாட்டிய இலக்கணப்படித் தினமும் இறைவன் முன் நடனமாடுவது இவளது வழக்கம். தனக்குக் கிடைக்கும் வருமானத்தை எல்லாம் அன்னதானத்திற்குச் செலவு செய்தாள். தினமும் சிவனடியார் பலரும் வந்து உணவருந்திச் செல்வதைக் கண்டு மகிழ்ந்தாள்.

*"திருத்தர் பூவண வாணரைச் சேவித்துச் சுத்த*
*நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்*
*கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவறுசுவையூண்*
*அருத்தி யெஞ்சிய தருந்துவா ளமுதவ ணியமம்"* [252]

அவ்வாறிருந்த அவளுக்குத் திருப்பூவணம் கோயிலில் வைத்துப் பூசிப்பதற்கு இறைவனின் திருமேனியைத் தங்கத்தில் செய்து கொடுக்க வேண்டும் என்று பேராவல் பூவணநாதரின் அருளாசியினால் உண்டானது. ஆனால் கிடைக்கும் பொருள் எல்லாம் அன்னதானத்திற்கே செலவானது.

*"அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்*
*வடிவு காண்பதெப் படியென்று* ***மடியிலச் செழியற்***
***கொடிவில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்***
*பிடிய னாளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்"* [253]

**குலபூடண பாண்டியனுக்கு** எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியை வழங்கிய மதுரை சோமசுந்தரக் கடவுளை மனதில் நினைந்து வேண்டினாள்.

### 4.6.2.2. சித்தர் வடிவில் சிவபெருமான்[254]

இந்த பக்தையின் விருப்பத்தை அறிந்த **மதுரை சோமசுந்தரப் பெருமான்.** அதனைப் பூர்த்தி செய்யத் திருவுள்ளம்கொண்டு சித்தர் வடிவில் திருப்பூவணத்தில். பொன்னனையாள் வீட்டிற்கு எழுந்தருளினார்.

*"துய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட*
*கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்*
*பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்*
*செய்ய வேணிய ரங்கொரு **சித்தராய் வருவார்**"* 255

அன்னதானம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. தாதியர்கள் உணவு உண்ண வாருங்கள் எனச் சித்தரையும் அழைத்தனர். அதற்கு சித்தர் பெருமான், உங்களது தலைவியை இங்கே அழையுங்கள் எனக் கூறினார். பொன்னனையாள் வந்தாள். சித்தரது பாதங்களில் தனது தலை பதியுமாறு பணிந்து உணவு உண்ண அழைத்தார். அதற்குச் சித்தர், "உனது முகம் வாட்டத்துடன் காணப்படுகின்றதே! உனது மனக் கவலைதான் என்ன?" என்று கேட்டார். பொன்னனையாளும், "எங்கள் தலைவனாம் திருப்பூவணத்து இறைவனது திருவுருவினைச் செய்வதற்கு உள்ளத்தில் பெருவிருப்பம் கொண்டு மெழுகினால் கருக்கட்டி வைத்துள்ளேன். அதனைப் பொன்னினால் செய்து முடிக்கக் கருதிய எனக்கு நாள்தோறும் கையில் வரும் பொருள் முழுவதும் அடியார்களுக்கு அன்னம் இடுவதிலேயே செலவாகி விடுகின்றது. நான் என்ன செய்வேன்?" என்று தனது கவலையை கூறினாள்.

அதற்குச் சித்தரும், நீ தானத்துள் சிறந்த தானமாகிய அன்னதானத்தை நாள்தோறும் செய்து வருகின்றாய். உன் பெயருக்கு ஏற்றவாறு அழிவில்லாத இறைவனின் திருவுருவத்தைத் தங்கத்தினால் செய்யப் பெறுவாயாக என வாழ்த்தினார். பின்னர், அனைத்து உலோகப் பாத்திரங்களையும் கொண்டு வரச்செய்து, திருநீற்றினைத் தூவினார். இவற்றைத் தீயிலிட்டுக் காய்ச்சுங்கள் தங்கம் கிடைக்குமெனக் கூறி அருளினார். பொன்னனையாள் அச்சித்தர் சுவாமியை வணங்கி இன்றைய இரவு இங்கேயே தங்கித் திருவமுது செய்து இரசவாதம் செய்து முடித்தபின்னர் அதிகாலை எழுந்து செல்லலாம் என வேண்டினாள்.

*" .... அங்க யற்கணா டனைப்பிரி யாரதற் கிசையார்*
*சிறந்த மாடநீண் மதுரையிற் **சித்தர்யா மென்று***
*மறைந்து போயினார் ... ...* "256

மீனாட்சி அம்மையைப் பிரியாத சோமசுந்தரரே சித்தர் வடிவில் வந்துள்ளதால் அவர் "***யாம் மதுரையில் விளங்கும் சித்தராவோம்***" எனக் கூறி மறைந்தார். சித்தர் கூறிய சொற்களும், மறைந்தருளிய தன்மையையும் கண்ட பொன்னனையாள், வந்தவர் மதுரை வெள்ளியம்பலத்தில் கால்மாறி ஆடியருளும் அம்பலவாணரே எனக் கண்டு பக்தியால் நெகிழ்ந்து, தனது கவலையை இறைவனே நேரில் வந்து நீக்கினார் எனக் களிப்புற்றவளாகிச் சித்தர் கூறியபடியே செய்ய உலோகப் பாத்திரங்களைத் தீயிலிட்டுப் புடம் செய்தனள். ஆணவமலம் கெட்டு இறைவனின் திருவடியை அடைந்தவர் சிவமாக விளங்குதல் போல உலோகங்களின் களிம்பு நீங்கிப் பொன்னாக மாறின. அப்பொன்னைக் கொண்டு இறைவனுக்குத் திருவுருவம் வார்ப்பித்தாள்.

### 4.6.2.3 அச்சோ அழகிய பிரானோ இவன்

கிடைத்த தங்கத்தைக் கொண்டு வடிவே இல்லாத இறைவனின் திருவுருவத்தைச் செய்திட்டாள். இறைவனின் அழகான திருவுருவத்தைக் கண்டு ***"அச்சோ! அழகிய பிரானோ இவன்"*** என்று இறைவனின் கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டாள். அதனால் இறைவனின் திருமேனியில் தழும்பு உண்டானது. இத் திருவுருவத்தை இன்றும் கோயிலில் தரிசித்திடலாம். பொன்னனையாள் இறைவனின் கன்னத்தைக் கிள்ளுவது போன்ற சிற்பம் கோயில் மகா மண்டபத்தில் உள்ள கல்தூணில் செதுக்கப்பட்டுள்ளது.

*"நையுநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட*
*கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு*
*வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகிநாலாம்*
*பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்"* [257]



**பொன்னனையாள் இறைவனின் கன்னத்தைக் கிள்ளி முத்தமிடுதல்**

திருப்பூவணம் கோயில் இறைவனின் திருமேனியைச் செய்திட மதுரை ஈசனே நேரில் சித்தர் வடிவில் வந்து. இரசவாதம் செய்து தங்கம் தயாரித்துக் கொடுத்தது இத்திருத்தலத்தின் தனிச் சிறப்பாகும்.

இறைவனது திருவுள்ளத்தில். அடியவர்களில் ஆள்பவரென்றும் ஆடிப்பிழைப்பவர் என்றும் பேதங்கள் ஏதும் இருப்பதில்லை. இறைவன் மனம் விரும்புவதெல்லாம் அன்பும், தொண்டும், பக்தியும் என்பதை அறியுமாறு கூறப்பட்டுள்ளது. மேலும் சிவனடியார் களுக்கு அன்னதானம் செய்வதால் பாவங்கள் அனைத்தும் ஒழிந்து நமக்கு இறைவன் நேரில் காட்சி தந்து அருளுவான் என்பதும் கூறப்பட்டுள்ளது.



**'அழகிய நாயகர்'**

**(கன்னத்தில் நகக்குறியுடன் உள்ள உற்சவமூர்த்தி)**

பொன்னனையாள் தங்கத்தினால் ஆன இறைவனது திருவடிவத்தைப் பிரதிட்டை செய்து, தேர்த்திருவிழா முதலியன நடத்தி இனிது வாழ்ந்தாள். சிலகாலம் சென்ற பின்னர் வீடுபேறு அடைந்தாள்.

## 4.6.3 திருவிளையாடற் பயகரமாலை

இரசவாதம் செய்த திருவிளையாடற் புராண வரலாறு, திருவிளையாடற்பயகர மாலையில்,

*"மணிதிகழ் மாடமலிமது ராபுரி வாழ்சித்தரேந்*
*துணிவுட னின்னன்பு கேட்டணைந் தோமென்று சொல்லிப் பின்ன*
*ரணிதிகழ் பூவணப் **பொன்னனை யாளுக்**கன் றாணிப் பொன்னைப்*
*பணிவிடைக் கீந்தசொக் கேபர தேசி பயகரனே"*[258]

என்று பாடப்பெற்றுள்ளது.

## 4.6.4 கடம்பவன புராணம்

பொன்னனையாளுக்கு அருள் புரிந்த திருவிளையாடல் கடம்பவன புராணத்திலும்

*"பூவணத்திற் **பொன்னனையாள்** பதியி லாண் முன்*
*புனிதனுருக் கும்பிடு வாள் மெழுகு சாத்தி.*
*மேவணநற் பொருள்பெறாள் சொக்குண டென்று*
*மிகவருந்துங் காற்சித்த ராச்சென் றாண்டு*
*மாவணவல் லிரும்புதரச் சொல்லித் தீயின்*
*மாட்டென்று பரிசனஞ்செய் தொளிந்தான் றந்து*
*பாவணத்தாள் சொலிச் செய்நிறை யுருக்கண்டான்*
*மெய்ப் பத்தியெழில் கண்டள்ளி முத்தங் கொண்டாள்"* [259]

என்று கூறப்பட்டுள்ளது.

### 4.6.5 திருப்பூவணப் புராணத்தில் பொன்னனையாள்

"திங்கடவழ்சடா மௌலித் தென்கூடற் சிவபெருமான் சித்தராகிப்
பங்கமுறு கருந்தாது பசும் பொன்னாங் குளிகை யருள் பான்மையாலே
பொங்கரவலல்குற் பொன்னனையாள் கண்டு வந்து போற்றுநீரா
ரங்கருலகம் புகழுமழகிய நாயகர் பாதம கத்துள் வைப்பாம்" (பாடல்6)

திருப்பூவணப் புராணத்திலே, கடவுள் வாழ்த்துப் பகுதியிலே அழகிய நாயகர் வாழ்த்துப் பாடலிலே, மதுரை சிவபெருமான் சித்தராய் வந்து இரசவாதம்செய்த 36ஆவது திருவிளையாடற் புராணக் கருத்துக்கள் சுருக்கிக் கூறப்பெற்றுள்ளன.

*"மேவியசடிலம் வெண்ணிலா வெறிப்ப விடையுகந் தேறிடும் விமல*
*னாவலர்புகழ் நான்மாட நீள்**கூட நாயகனயந்திடு யெம்பெருமான்***
***பூவுலகேத்தும் பொன்னனையாடன்** பொருவருமனைவரு கமலச்*
*சேவடிமண்மெண்டி சாமுகம் வீசுந் தென்றிருப் பூவணநகரம்" (பாடல் 168)*

என்ற பாடலிலே சிவபெருமான் பொன்னனையாளின் வீட்டிற்கு எழுந்தருளிய செய்தியும், சிவபெருமானின் பாதகமலங்கள் திருப்பூவணத்திலே பட்டதால், அந்நகரெங்கும் சாமுகம் வீசியதென்று திருப்பூவணப் புராணத்திலே திருநகரச் சருக்கத்திலே சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது.

#### 4.6.5.1 அன்றும் இன்றும்

மதுரையில் திருவிளையாடற் புராணக்கதைகள் தொடர்பான விழாக்கள் இன்றும் நடைபெற்று வருகின்றன. அவ்வாறாக நடைபெறும்போது இரசவாதம் செய்த

படலம் நடைபெறும் நாளில், சோமசுந்தரக் கடவுள் மதுரையிலிருந்து திருப்பூவணத்திற்கு எழுந்தருளி வந்தார். பல ஆண்டுகளுக்கு முன்னர், திருப்பூவணம் வந்த சோமசுந்தரக் கடவுளைக் குறிப்பிட்ட நேரத்தில் மீண்டும் மதுரை ஆலயத்திற்குக் கொண்டு சேர்ப்பதில் காலதாமதமாகி விட்டது. இக்காரணத்தினால் அதற்கு அடுத்த ஆண்டுகளில் இத்திருவிளையாடற் தொடர்பான விழாவினை மதுரை திருவாப்பனூர்க் கோயிலிலேயே வைத்து நடத்தி வருகின்றனர். இப்போது வாகன வசதிகளும், நவீன தொலைத்தொடர்பு வசதிகளும் உள்ளதால், முன்புபோல் இப்போது காலதாமதம் ஏற்பட வாய்ப்பில்லை. எனவே இரசவாதம் செய்த படலம் தொடர்பான திருவிழாவினை மீண்டும் திருப்பூவணத்தில் நடத்திடத் தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெற்றுவருகின்றன.[260]

### 4.6.6 திருவாலவாயான படலம்

திருப்பூவணத்தில் **கோட்டை** என்ற பகுதியில் தான் திருக்கோயில் அமைந்துள்ளது. இங்கு தொன்மைக்காலங்களில் உயரமான மதில்களாலான கோட்டை இருந்திருக்கிறது. இதனைப் "பொன்மதில் சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார்"[261] என்று கந்தசாமிப்புலவர் பாடியுள்ளார். இக்கோட்டை தோன்றிய வரலாறு திருவிளையாடற்புராணத்தில் 49 ஆவது படலமான திருவாலவாயான படலத்தில் விரிவாகக் கூறப்படுகிறது.

இப்படலத்தில் நான்மாடக் கூடலான மதுரையைத் திருவாலவாய் ஆக்கிய திருவிளையாடல் கூறப்பட்டுள்ளது. அதுலகீர்த்திப் பாண்டியனுக்கு மகனான கீர்த்தி பூசண பாண்டியன் மதுரையை ஆட்சி செய்யும்போது ஏழுகடல்களும் தமக்குக் காவலாக விளங்கும் கரையைக் கடந்து பொங்கி எழுந்தன. இதனால் எல்லா உலகங்களும் நீரில் மூழ்கின. ஆயினும் மீனாட்சியம்மை திருக்கோயிலின் இந்திரவிமானம், பொற்றாமரைக் குளம் மற்றும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலில் தோன்றிய இடபமலை, பசுமலை, யானைமலை, நாகமலை, பன்றிமலை என்பன அழியாது விளங்கின.

ஈசன், பிரளயம் வற்றிய பின்னர் மீண்டும் உலகங்களும் உயிர்களும் உண்டாகுமாறு செய்தார். அப்போது சந்திரனது குலத்தில் பாண்டியர்களைத் தோற்றுவித்தார். அப் பாண்டியவம்சத்தில் வங்கிய சேகர பாண்டியன் தோன்றினான். ஒருநாள், வங்கிய சேகர பாண்டிய மன்னன்,

*"இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்*
*பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே*
*வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்*
*அத்தமற் றதனையின் றறியக் காட்டென ..."*[262]

இறைவனிடம் வேண்டி நின்றான். மன்னனது விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு வானில் இருந்து ஒரு விமானத்தில் இறங்கிய சோமசுந்தரக்கடவுள், ஒரு சித்தமூர்த்தியாகி அற அருட்கடலாகித் தோன்றினார். பாம்பினால் அரைஞாணும் கோவணமும் அணிந்திருந்தார். பிளவுடைய நாக்கையுடைய பாம்பினையும் குழையும் குண்டலமும், காலில் சதங்கை கோர்த்த கயிறும் கை வளையும் உடையவராகத் திகழ்ந்தார். அவ்வாறு வந்த சித்தமூர்த்தியானவர், தனது கையில் கட்டியிருந்த நஞ்சுடைய பாம்பை ஏவி நீ, இம் மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டு எனக் கட்டளையிட்டார்.

## 4.6.7 பாம்பு எல்லையைக் காட்டுதல்

கண்டவர்களுக்கு அச்சத்தினை உண்டாக்கும் படியான அப்பாம்பும் விரைந்து சென்றது. கிழக்குத் திசையில் திருப்பூவணம் சென்று வாலை நீட்டிப் பெரிய அம்மாநகர்க்கு வலமாக நிலத்தில் படிந்து உடலை வளைத்து, வாலைத் தன் வாயில் வைத்துப் பெரிய வளையமாக்கி அதன் உட்புறப் பகுதியே மதுரை நகரின் பழைய எல்லையென பாண்டிய மன்னனுக்குக் காட்டியது.

*"சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினார் செழியன்*
*பைத்த வாலவாய் கோலிய படிசுவர் எடுத்துச்*
*சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து*
*வைத்த தாமென வகுத்தனன்...."*[263]

பாண்டிய மன்னன்.

### 4.6.8 கோட்டை வாயில் அமைத்தல்

கிழக்கு எல்லைகாட்டிய இடத்தில் மன்னன் இவ்வெல்லையின் வாயிலில் சக்கரவாள மலையை அடியோடு தோண்டி எடுத்து வைத்தது போன்று முகில் தவழும்படியான பெரிய மதிலை அமைத்தான். மதுரைக்குக் கிழக்கில் சோலைகள் சூழ்ந்த திருப்பூவண நகரானது எல்லையாக இருக்கும்படி அம்மதில்களை அமைத்தான். அந்த உயரமான, நீண்ட மதிலை ஆலவாய் மதில் என்று கூறுவர். நான்கு பெரிய வாயில்களுக்கும், தெற்கில் திருப்பரங்குன்றமும், வடக்கில் ஆனைமலையும், மேற்கில் திருவேடகமும், கிழக்கில் சோலைகள் சூழ்ந்த பூவண நகரம் எல்லைகளாக இருக்கும்படி அம்மதில்களை அமைத்தான். ஆலத்தை தனது வாயிற் கொண்ட அந்தப் பாம்பு சித்தர் வடிவில் தோன்றிய இறைவனின் பாதங்களை வணங்கி இனி இந்த நகரமானது தன்னுடைய பெயரால் 'ஆலவாய்' என்று விளங்கவேண்டுமென விண்ணப்பஞ் செய்தது. சித்தராய்த் தோன்றிய இறைவனும் அவ்வாறே ஆகுக என்று வரமருளினார். இதனால் மதுரை மாநகரம் 'திருவாலவாய்' என்ற பெயரில் விளங்குவதாயிற்று[264]. பின்னர் அப்பாம்பானது இறைவனுடைய திருக்கரத்தில் கங்கணம் ஆனது. திருப்பூவணத்தில் மதுரைமாநகரக் கிழக்கு வாயிலாகக் கோட்டை அமைக்கப்பட்டது. அன்று கோட்டை இருந்த இடமே இன்று பெயரளவில் கோட்டை என்று அழைக்கப்படுகின்ற பகுதியாகும். இதனால் மதுரை நகர் புனர்நிர்மாணிக்கப்படுவதற்கு முன்பே திருப்பூவணம் சிறப்புடன் விளங்கி வந்துள்ளமை தெளிவாகிறது. இதனால் திருப்பூவணத்தின் பழைமை நன்கு விளங்கப்பெறுகிறது.

*"அன்ன திருப்பதிக் கங்கிதிக்கினில் யோசனைக் கப்பாலமர்ந்து தோன்றுஞ்*
*சின்மயமாஞ் சிவலிங்கஞ் செங்கதிர் வெய்யோன் பூசை செய்யவைகு*
*மன்னு நவமணித் தேரூர் மறுகு தொறு மாளிகை சூளிகை நெருங்கும்*
*பொன் மதில்சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார்" (பாடல் 166)*

என்று திருப்பூவணத்தில் ஆலயத்தைச் சுற்றிலும் மதில் இருந்த செய்தி புராணத்திலே பாடப்பெற்றுள்ளது.

திருப்பூவணத் தலபுராணம், திருவிளையாடற் புராணம், திருவிளையாடற் பயகரமாலை, கடம்பவன புராணம் ஆகிய புராணங்களில் திருப்பூவணத்திருத் தலத்தின் பெருமைகள் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

## 4.7. திருப்பூவணப் புராணமும் கருவூர்த்தேவர் பாடல்களும்

கருவூர்த் தேவர் கொங்குநாட்டில் உள்ள கருவூரில் பிறந்தவர். ஊர்ப்பெயரை இணைத்து இவர் கருவூர்த் தேவர் என்று அழைக்கப்படுகிறார். இவரது இயற்பெயரும் இளமைக் கால வாழ்க்கை வரலாறும் அறியப்படவில்லை. இவரது காலம் பத்து - பதினோறாம் நூற்றாண்டுகளாகும்.

தஞ்சை மன்னன் இராசராசசோழன் (கி.பி. 985-1014) தன்னுடைய ஆசைமுழுவதையும் செலுத்திப் பெருவுடையாருக்கு ஆலயம் எழுப்பினான். பெருவுடையாருக்கு அட்டபந்தன மருந்து கொண்டு சாத்திய போது சிவலிங்கம் ஆவுடையுடன் சேராமல் நின்றது. இதனால் மன்னன் மனம் வருந்தினான். கருவூர்த் தேவர் தமது குருவின் ஆணைப்படி தஞ்சைக்கு வந்து, ஒருமகானுடைய சிரிப்போடு தனது வாயில் குதப்பிக் கொண்டிருந்த வெற்றிலைத் தாம்பூலத்தையே மருந்தில் உமிழ்ந்தார். உடனே மருந்து நெகிழ்ந்து உருகி இலிங்கத்தை ஆவுடையோடு இணைத்துவிட்டது. நன்றிப் பெருக்கினால், ஆனந்தக் கண்ணீர் வடித்த இராசராச சோழன் அதே கோவிலில் இந்தச் சித்தருக்கும் சிலை எழுப்பி ஒரு தனியான சந்நிதியை அமைத்துள்ளான்.

கருவூர்த்தேவர் தனது இறுதிநாட்களைச் சொந்த ஊரான கருவூரிலேயே கழித்தார். அங்கு ஆனிலை (பசுபதீசுவரர்) ஆலயத்தை அடைந்து கருவறையில் இருந்த சிலையோடு ஒன்றினார் என்று வரலாறு கூறுகிறது.

**கருவூர்த் தேவரின் பாடல்கள்**

கருவூர்த்தேவர் இயற்றிய திருப்பதிகங்கள் பத்தாகும். அவை ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. "இந்தப் பத்துப் பதிகங்களும் கோயில், அதாவது 1) சிதம்பரம், 2)திருக்களந்தை(திருக்களந்தையாதித்தேச்சுரம்), 3)திருக்கீழ்க் கோட்டூர் (திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம்), 4)திருமுகத்தலை, 5)திரைலோக்கிய சுந்தரம்,

6)கங்கைகொண்ட சோழேச்சரம், 7)திருப்பூவணம், 8)திருச்சாட்டியக்குடி, 9)தஞ்சை, 10)திருவிடைமருதூர் ஆகிய பத்துச் சிவத்தலங்களிலும் எழுந்தவை"[265].

கருவூர்த்தேவர் திருப்பூவணத்திற்கு வந்து திருப்பூவணநாதரை வணங்கிப் பாடிய கடைசிப் பாடலில் "கருவூரான் உரைத்த பாவணத் தமிழ்கள் ***பத்தும்*** வல்லார்கள் பரமன துரவமா குவரே" என்று பாடியுள்ளார். அவற்றில் மொத்தம் எட்டுப் பாடல்களே கிடைக்கப் பெற்றுள்ளன. இப்பாடல்கள் அனைத்தும் "ஆவண வீதிப் பூவணம் கோயில் கொண்டாயே" என்று முடிவடைகின்றன. இப்பாடல்களில் திருப்பூவணப் பெருமைகளும் திருப்பூவணநாதரின் பெருமைகளும் விளக்கப்பட்டுள்ளன.

## ஒன்பதாம் திருமுறை
## பண் - பஞ்சமம்

### 4.7.1 பாடல்-1

*"திருவருள் புரிந்தா ளாண்டு கொண் டிங்ஙன்*
*சிறியனுக் கினியது காட்டிப்*
*பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்*
*பெருமையிற் பெரியதொன் றுளதே*
*மருதர சிருங்கோங் ககின்மரஞ் சாடி*
*வரைவளங் கவர்ந்திழி வைகைப்*
*பொருதிரை மருங்கோங் காவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

மருது, அரசு, கோங்கு, அகில் போன்ற மரங்கள் நிறைந்துள்ள பூவனம் மிகுந்த வையைக் கரையில் உள்ள திருப்பூவணத்தில் கடைகள் நிறைந்த வீதியில் கோயில் கொண்ட பூவணநாதனே! நீ, திருவருள் புரிந்து அம்மையுடன் இங்கு ஒன்றாக இருந்து ஆட்சி செய்கிறாய். சிறியவனாகிய எனக்கும் இனியது காட்டிப் பெரிதாக அருள் புரிந்து ஆனந்தமே தருகிறாய். இதைவிடப் பெரிய பெருமை ஒன்றும் இல்லை.

### 4.7.2 பாடல்-2

*"பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர்*
*பன்னெடுங் காலநிற் காண்பா*
*னேம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த*
*வெளிமையை யென்றுநான் மறக்கேன்*

*தேம்புனற் பொய்கை வானளவாய் மடுப்பத்*
*தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்*
*பூம்பணைச் சோலை யாவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

தேன், ஆறுபோல் ஓடுகின்ற அளவிற்குப் பூக்கள் தேனைச் சொரிகின்றன. பூக்களிலிருந்து ஒழுகும் மதுவானது பாய்ந்து ஓடுகின்றது. பூஞ்சோலைகள் நிறைந்த பூவணத்தில் கடைவீதியில் கோயில் கொண்ட பூவணநாதரே! பாம்பினை அணையாகக் கொண்டு அதன்மீது படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் திருமாலும், அயன் என்றழைக்கப்படும் பிரமனும் நெடியகாலம் முயற்சித்தும் நின்னைக் காணமுடியாமல் ஏங்கித் தவித்துள்ளனர். நீயோ, எனது உள்ளத்தினுள் புகுந்து என்னை ஆட்கொண்டுள்ளாய். இந்த உனது எளிமையை நான் என்றும் மறக்க மாட்டேன்.

### 4.7.3 பாடல்-3

*"கரைகட லொலியிற் றமருகத் தரையிற்*
*கையினிற் கட்டிய கயிற்றா*
*லிருதலை யொருநா வியங்கவந் தொருநா*
*ளிருந்திடா யெங்கள்கண் முகப்பே*
*விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல்*
*வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த*
*புரிசடை துகுக்கு மாவணவீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

கடைகள் நிறைந்த வீதியில் பூவணத்தில் கோயில் கொண்ட இறைவனே! எப்போதும் அலைகளால் ஓசை எழுப்புகின்ற கடலைப்போல் உனது கையில் கயிற்றினால் இணைக்கப்பட்டுள்ள துடியானது (உடுக்கையானது) ஓசையை எழுப்பிக்கொண்டே உள்ளது. அதன் ஒருகயிறானது இரண்டு பக்கங்களுக்கும் சென்று இயக்கி ஓசையை இடைவிடாது எழுப்புகின்றது. அவ் ஒலியுடைய உடுக்கையுடன் கூடிய பரமசிவனே. மிகவும் சிறப்பாகத் திருவிழாக்கள் நடைபெறும்போது பின்னால் செல்வோர் உனது புகழைப் பாடல்களாகப் பாடுகின்றனர். அப்பாடல்களைக் கேட்கும் ஆசையில் வீழ்ந்தபோது, உனது புரிபோன்று விளங்கும் சடை முடியானது விரிந்து பரந்து தோன்றும்.

### 4.7.4 பாடல்-4

*"கண்ணியன் மணியின் குழல்புக் கங்கே*
*கலந்துபுக் கொடுங்கினேற் கங்கு*
*னுண்ணியை யெனினு நம்ப நின்பெருமை*
*நுண்ணிமை யிறந்தமை யறிவன்*
*மண்ணியன் மரபிற் றங்கிருண் மொழுப்பின்*
*வண்டினம் பாடநின் றாடும்*
*புண்ணிய மகளி ராவண வீதிப்*
*பூவணங் கோயில் கொண் டாயே"*

பூக்களில் மொய்க்கும் வண்டினங்கள் பாடுகின்றன. அப்பாடல்களுக்கு ஏற்ப அப்பூக்களை அணிந்துள்ள மகளிர் நின்றாடுகின்றனர். இப்புண்ணிய மகளிர் நிறைந்த கடைவீதியில் கோயில் கொண்டுள்ள பூவணநாதரே! கண்மணியே, நீ, இறைவனோடு கலந்த மையம் என்பது நுட்பமான அனுபவ ஞானமாகும். "அவன் என் கண்ணுளானே" என்றும், "கண்ணுள் மணியே" என்றும் இன்னும் பலவாறாகவும் இந்த ஒளிநுட்பத்தை, ஞானத்தைப் பெரியோர்கள் மொழிந்துள்ளனர். அதனினும் நுட்பமானது உனது பெருமையாகும்.

### 4.7.5 பாடல்-5

*"கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர்*
*கள்ளரை மெள்ளவே துரந்து*
*னடியிணை யிரண்டு மடையுமா றடைந்தே*
*னருள்செய்வா யருள்செயா தொழிவாய்*
*நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க*
*நிலைவிளக் கலகில்சா லேகம்*
*புடைகிடந் திலங்கு மாவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

நெடிய நிலை மாடங்களில் இருளை விரட்டுகின்ற வகையில் நிலைவிளக்குகள் (நந்தாவிளக்குகள்) ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன. ஒளிபொருந்திய கடைவீதியில் கோயில் கொண்டுள்ள பூவணநாதரே! கடுமையான பாவச் செயல்களால் பாசம் என்ற கடலில் தத்தளிக்கின்றனர். ஐம்புலன்களை அடக்கி, இக்கடலைக் கடந்து, கல்போன்று மிகவும் இறுகிய எனது மனக்கதவை மெள்ளத் திறந்து உனது திருவடிகள் இரண்டையும் அடையுமாறு செய்வித்தாய். நானும் உனது திருவடிகளை அடைந்து

விட்டேன். இப்பொழுது, நீ எனக்குத் திருவருள் வழங்குவாய், அல்லது வழங்கா திருப்பாய். அது உனது திருஉள்ளம், நான் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டேன். இதில் மாற்றம் இல்லை.

## 4.7.6 பாடல்-6

*"செம்மனக் கிழவோ ரன்பு தாஎன்றுன்*
*சேவடி பார்த்திருந் தலச*
*வெம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானா*
*ரென்னுடை யடிமைதானி யாதே*
*யம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள*
*வரிவைய ரவிழ்குழற் சுரும்பு*
*பொம்மென முரலு மாவண வீதிப்*
*பூவணங் கோயில் கொண் டாயே"*

நீயும் வீதிகளில் எழுந்தருளிப் பிச்சை கேட்டுப் பெறுகின்றாய். அப்போது அரிவைப் பருவ மகளிரின் சுருண்ட கருங்கூந்தல்கள் அவிழ்ந்து சுருள்கள் திரிந்து திரிகின்றன. அவ்வாறான பெண்கள் உள்ள வீதியில் கோயில் கொண்ட பூவண நாதனே! மனம் செம்மையான சான்றோர்கள் உன்னுடைய அன்பினை வேண்டி உனது திருவடிகளைப் பார்த்தபடி ஏங்கி நிற்கின்றனர். நீயோ எனது மனத்தினுள் குடிகொண்டுள்ளாய். இப்பேற்றினைப் பெறுவதற்கு நான் தகுதியுடையவன் இல்லையே! நான் உனக்கு அடிமை அல்லவா!

## 4.7.7 பாடல்-7

*"சொன்னவின் முறைநான் காரண மு ணராச்*
*சூழல்புக் கொளித்தநீ யின்று*
*கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்*
*கருணையிற் பெரியதொன் றுளதே*
*மின்னவில் கனக மாளிகை வாய்தல்*
*விளங்கிளம் பிறைதவழ் மாடம்*
*பொன்னவில் புரிசை யாவண வீதிப்*
*பூவணங் கோயில்கொண் டாயே"*

சொற்களை நவில்கிற முறை என்பது கட்டளைப்படி ஓதுகின்ற முறைமையாகும், "அப்படி ஓதுகின்ற நான்கு வேதங்களும் உணரமுடியாதவனாகிய நீ, கல்மனத்தானாகிய

எனது கண்வலையில் பிடிபட்டாய்! மின்னலை ஒத்த ஒளியைக்கொடுக்கும் தங்க மாளிகைகள் நிறைந்த இளம்பிறை தவழுகின்ற மாடங்கள் நிறைந்த பொன்னான புரிசடையை உடையவனே! நீ ஆவண வீதியில் பூவணத்தில் கோயில் கொண்டாயே!

4.7.8 பாடல் 8 மற்றும் 9 - இவ்விரண்டு பாடல்களும் கிடைக்கப் பெறவில்லை.

## 4.7.9 பாடல்-10

*"பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட*
*புனிதனை வனிதை பாகனை வெண்*
*கோவணங் கொண்டு வெண்டலை யேந்தும்*
*குழகனை யழகெலா நிறைந்த*
*தீவணன் றன்னைச் செழுமறை தெரியு*
*திகழ்கரு வூரனே னுரைத்த*
*பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்*
*பரமன துருவமா குவரே"*

பூவணத்தில் கோயில் கொண்டு என்னை ஆண்ட புனிதனே, வனிதையைத் தன் உடலில் ஓர்பாகமாகக் கொண்டவனே, மண்டையோட்டை ஏந்தியுள்ளவனே, கையில் பிச்சையெடுத்துத் திரிபவனே, அழகனே, தீயின் நிறத்தை ஒத்தவனே, பூவணத்துறைந்துள்ள ஈசனே! வேதங்கள் கற்றறிந்த கருவூரான் உரைத்த இப்பத்துப் பாடல்களையும் இசையுடன் கூடிப் பாட வல்லார்கள் சிவபிரானது உருவமாக மாறுவர்.

## 4.7.10 ஆவணவீதியில் தீவணன்

கரூர் தேவரின் பாடல்கள் அனைத்தும் "*ஆவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே*" என்று முடியுமாறு பாடப் பெற்றுள்ளன. இதனால் திருப்பூவணத்தில் உள்ள ஆவணவீதி மிகவும் பெருமை பெற்றது. மேலும் கடைசிப் பாடலில், "*.. .. அழகெலா நிறைந்த தீவணன் றன்னை ... ..*" என்று குறிப்பிடுகிறார். 'ஆவணம்' என்ற சொல்லும் 'தீவணன்' என்ற சொல்லும் திருப்பூவணப் புராணத்திலே,

*"ஆவணத் தணி திகழ லங்கனாற்று பூங்*
*காவணங் கற்பகக் காவினீழல் செய்*
*தீவண மிலங்கு செஞ்சடில சேகரன்*
*பூவணத் தணி சில புகலுவாமரோ" (பாடல் 163)*

என்ற பாடலிலே இடம் பெற்றுள்ளன. மேலும், கருவூர்த்தேவர் குறிப்பிடும் சிவனது பண்புநலன்கள் அனைத்தும் திருப்பூவணப்புராணத்திலே விரவிக் குறிப்பிடப் பெற்றுள்ளன.

## 4.8. திருப்பூவணப் புராணமும் அருணகிரிநாதர் பாடல்களும்

தமிழகத்தில் சமயப்புரட்சி செய்து மன்னர்களையும் மக்களையும் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றியவர்கள் சமயகுரவர்கள். இவர்களுக்கு அடுத்தபடியாகத் தமிழகத் திருத்தலங்கள் அனைத்திற்கும் சென்று அங்கு எழுந்தருளும் முருகப் பெருமானைப் பாடிப் பரவிப் பக்தியைப் பரப்பியவர் அருணகிரிநாதசுவாமிகள். இசையுடன் கூடிய தமிழ்ப் பாடல்களைத் தமிழ்க் கடவுளாம் முருகவேல் மீது இயற்றி தமிழகத்தில் சைவத்தையும், முருக வழிபாட்டையும், இசையையும், தமிழையும் தழைத்து வளர்த்த பெருமை இவரையே மிகுதியும் சாரும். இவ்வடியார், திருப்பூவணத் திருத்தலத்திற்கு வந்து இறைவனை வணங்கிப் பாமாலைகள் பாடிப் பணிந்துள்ளார்.

### 4.8.1 அருணகிரிநாதர் வரலாறு

திருக்கைவேல் அழகிய பெருமானையே தெய்வமாகக் கொண்டு வழிபட்டுப் பேறுபெற்றவர் 'அருணகிரிநாதர்', தமிழிற் சந்தப் பாக்களை இயற்றுவதில் சிறப்பானவர். இவர் திருவண்ணாமலையில் இருந்தவர். கி.பி.1450 ஆம் ஆண்டில் ஆட்சிசெய்த பிரபுடதேவமகாராசர் காலத்தவர்.

இவர் இளமையிலேயே தேவாரம், திருமந்திரம், திருமுருகாற்றுப்படை, திருக்குறள், காரிகை ஆகிய தமிழ் நூல்களிற் புலமை பெற்றவர். உலா, ஊசல், கலம்பகம், கோவை, சிந்து, தூது, பரணி, மடல், மாலை எனப்படும் நூல் வகைகளிற் பயின்றவர். காம சாத்திர நூல்களை ஆய்ந்தும் புலமைவாய்ந்து கவிபாடும் திறம் உடையவராயிருந்திருக்க வேண்டும்.

இறைவனது திருக்கோலத்தைத் தனக்குக் காட்டியருள வேண்டுமெனப் பிரபுடதேவ மகாராசன் அருணகிரி நாதரிடம் வேண்டினான். அருணகிரிநாதர், கந்தக் கடவுளைத் தியானித்து வணங்கினார். அடியாருக்கு எளியராம் அண்ணலும் ஒரு

நொடிப்பொழுதில் திருக்கை வேல் விளங்க மயில் மீது வந்து சபையோர்க்குக் காட்சி தந்து மறைந்தார்.

இங்ஙனம், தமது வேண்டுகோளினை ஏற்று, அரச சபையிற் தோன்றி அருளிய முருகப்பெருமான் எழுந்தருளும் திருத்தலங் களுக்கெல்லாம் அருணகிரிநாதர் சென்று சந்தப் பாக்களால் பாடிப் பணிந்து வழிபட்டார்.

அருணகிரிநாதர் திருத்தலங்கள் தோறும் சென்று வணங்கும்போது, திருப்பூவணத்தின் பெருமைகளை அறிந்து இத்தலத்திற்கு வந்து திருப்புகழ் இயற்றிப் பாடிப் பரவியுள்ளார். "திருப்பூவணப் பெருமாள் மீது பாடப் பெற்ற பாடல்கள், திருப்புகழ் தொகுப்பில் 550, 551, மற்றும் 552 ஆகிய வரிசை எண்களில் உள்ளன" [266].

இப்பாடல்களில் முருகப் பெருமான் வள்ளி மற்றும் தேவசேனையை மணந்தது பற்றியும், பத்மாசுரனை வதம் செய்து தேவர்களைக் காத்தது பற்றியும் சிறப்பித்துக் கூறுகிறார். மேலும் திருப்பூவணத் திருத்தலம் சிறந்த முத்தி அளிக்கக் கூடிய திருத்தலம் என்றும், எப்பொழுதும் அன்னதானம் நடைபெறக் கூடிய திருத்தலம் என்றும், சங்கத்தமிழ் ஓதிட சமணர்கள் ஒருகோடிப் பேர் கழுவேறினர் என்ற செய்தியும், பெருமாள் தங்கச் சக்கராயுதம் பெற்ற செய்தியும் கூறப்படுகின்றன.

## 4.8.2 திருப்புகழ் பாடல் எண். 550

*தனத்தான தத்தத் தனதானா*
*தனத்தான தத்தத் தனதானா*

*அறப்பாவை அத்தற் கருள்பாலா*
*அளித்தாது வெட்சித் திருமார்பா*
*குறப்பாவை அற்பிற் புணர்வோனே*
*குலத்தேவ வர்க்கப் பரிபாலா*
*மறப்பாத கத்துற் றுழல்வேனோ*
*மலர்த்தாள்வ ழுத்தக் க்ருபையீவாய்*
*சிறப்பான முத்திக் கொருவாழ்வே*
*திருப்பூவ ணத்திற் பெருமாளே*

சிறப்பான முத்தியை அளிக்கக் கூடிய பூவணத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே! முருகா! நீ அறப்பாவையான தேவசேனையின் இனத்தைச் சார்ந்த தேவர்களுக்கு அருளுகின்றவன். எப்போதும் வெற்றியை அளிக்கக்கூடிய வெட்சி மாலையை மார்பினில் அணிந்தவன். குறப்பாவையாகிய வள்ளியின் அன்பிற்கு அடிமையானவன். தேவர்களின் குலம் பெருக பரிபாலனம் செய்வோன். இவ்வளவு

உயரிய நீ, மிகக் கொடிய பாவங்கள் செய்து மாபாதகத்துள் உழலும் என்னைக் காத்து மலர் போன்ற உனது தாளை வணங்கிட அருள் செய்வாய்.

## 4.8.3. திருப்புகழ் பாடல் எண். 551

*தானனதான தானனதான தானனதான தனதான*

*வானவராதி யோர்சிறைமேவ மாவலியேசெய் திடுசூரன்*
*மார்பிருகூற தாய்விடவாரி வாய்விடவேலை விடுதீரா*
*கானவர்பாவை காதலனான காசணிபார தனமார்பா*
*காலனைமோது காலகபால காளகளேசர் தருபாலா*
*தேனமர்நீப மாலைவிடாத சேவகஞான முதல்வோனே*
*தீயகுணாதி பாவிநினாது சேவடிகாண அருள்வாயே*
*போனகசாலை யாதுலர்வாழ வீதிகடோறும் நனிமேவு*
*பூவணமான மாநகர்வாழு நாதகுகேச பெருமாளே*

(காளகளேசர் = விசத்தைக் கண்டத்திலுடையவர், போனகம் = அன்னம்)

வானவர்கள் அனைவரும் பத்மாசுரனால் சிறையில் அடைக்கப்பட்டனர். மிகவும் வலிமை பொருந்திய இந்த அசுரனின் மார்பினை இரண்டு கூறாக ஆக்கிடுமாறு வேலைவிடுத்த தீரனாகிய முருகப் பெருமானே! கானகத்தின் குறமகளான வள்ளியின் காதலுக்கு அடிமையானவனே! எமனை எதிர்த்து காலங்களையெல்லாம் கடந்து ஆலகால விசத்தையுண்ட பரமேசுரனின் மைந்தனே! தேன் உதிரும் வாடாத மாலையை எப்பொழுதும் அணிந்து சேவக ஞான முதல்வனாய் விளங்குபவனே!

தீயகுணங்களைக் கொண்ட பாவியாகிய நான் உனது சேவடிகளைக் காண நீ அருளவேண்டும். வீதிகள் தோறும் அன்னதானம் நடைபெறும் சிறப்புப் பெற்ற திருப்பூவணமான மாநகரில் வாழும் நாதகுகேசப் பெருமானே நீ எனக்கு அருளவேண்டும்.

## 4.8.4 திருப்புகழ் பாடல் எண். 552

*தந்தத்தத் தானன தானன*
*தந்தத்தத் தானன தானன*
*தந்தத்தத் தானன தானன தனதானா*

*பந்தப்பொற் பாரப யோதர*
*முந்தச்சிற் றாடைசெய் மேகலை*
*பண்புற்றுத் தாளொடு வீசிய துகிலோடே*

*பண்டைச்சிற் சேறியில் வீதியில்*

*கண்டிச்சித் தாரொடு மேவிடு*
*பங்குக்கைக் காசுகொள் வேசையர் பனிநீர்தோய்*

*கொந்துச்சிப் பூவணி தோகையர்*
*கந்தக்கைத் தாமரை யாலடி*
*கும்பிட்டுப் பாடிசை வீணையர் அநுராகங்*

*கொண்டுற்றுப் பாயலின் மூழ்கிய*
*சண்டிச்சிச் சீயென வாழ்துயர்*
*குன்றப்பொற் பாதக்ரு பாநிதி அருள்வாயே*

*அந்தத்துக் காதியு மாகியு*
*மந்திக்குட் டானவ னானவ*
*னண்டத்தப் பாலுற மாமணி ஒளிவீசும்*

*அங்கத்தைப் பாவைசெய் தேயுயர்*
*சங்கத்திற் றேர்தமி ழோதிட*
*அண்டிக்கிட் டார்கழு வேறினர் ஒருகோடி*

*சந்தத்திக் காளுநி சாசரர்*
*வெந்துட்கத் தூளிப டாமெழ*
*சண்டைச்சொற் றார்பட வேவயில் விடுவோனே*

*தங்கச்சக் ராயுதர் வானவர்*
*வந்திக்கப் பேரரு ளேதிகழ்*
*தம்பப்பொற் பூவண மேவிய பெருமாளே*

வேசியர்களின் அழகில் மயக்கமுற்று வாழ்நாளையெல்லாம் வீணே இழந்தேன், என்னைக் காத்து அருள வேண்டும் பெருமாளே! சமணர்களுடன் திருஞானசம்பந்தர் வாது செய்து அதில் வெற்றி பெற்றார். அதனால் சமணர்கள் ஒருகோடிப் பேர் தாங்கள் முன்னமே நியமித்துக் கொண்டபடி கழுவேறித் தங்களை மாய்த்துக் கொண்டனர். இதனை "*அங்கத்தைப் பாவை செய் தேயுயர் சங்கத்திற் றேர்தமி ழோதிட அண்டிக்கிட் டார்கழு வேறினர் ஒருகோடி*" என்று அருணகிரிநாதர் சுவாமிகள் பாடியுள்ளார். சமணர்கள் கழுவேறிய இடம் 'கழுவர்படைவீடு' என்று அழைக்கப்பட்டது. இப்பொழுது பெயர் மறுவிக் 'கழுகேர்கடை' என்று அழைக்கப்படுகிறது. இவ்வூர் திருப்பூவணத்திற்கு அருகே உள்ளது. இவ்வூர் திருவிளையாடற்புராணத்திலும், திருப்புகழிலும் திருப்பூவணத்துடன் இணைத்தே பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். மேலும், திருப்பூவணத்தில் பத்துநாள் திருவிழாவில் கழுவேறுதல் ஆறாம்நாள் திருவிழாவாகக் கொண்டாடப்படுவதும் கருத்திற் கொள்ள வேண்டியதாய் உள்ளது.

அருணகிரிநாதர் பாடல்களில் திருப்பூவணத்தில் மலர்கள் நிறைந்த வனத்தின் இடையே முருகன் எழுந்தருளும் தன்மையும், திருப்பூவணத்து வீதிகள் தோறும் அன்னதானம் நடைபெறும் நிகழ்ச்சியும், சமணர்கள் கழுவேற்றப்பட்ட வரலாறும் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன. மேலும் திருப்பூவணத் திருத்தலம் முத்தியளிக்கக்கூடிய சிறப்புடையது என்ற செய்தியும் கூறப்பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணத்திலே,

*"இசையநான்மறையின்னிசை பாடலாற்*
*கசட றுங்கலைமங்கைகலத்தலா*
*னசையுட**னன்னதானநணுகலாற்***
*றிசைமுகன்னிகருந்திருப்பூவணம்"* ***(பாடல் 177)***

என்ற பாடலில் திருப்பூவணத்தில் நான்கு திசைகளிலும் அன்னதானம் நடைபெறுவதால், திசைமுகனை ஒத்தது திருப்பூவணம் எனக் கூறப்பட்டுள்ளது. மேலும், 1267ஆவது பாடலிலே, திருப்பூவணத்திலே, அந்தணர்க்கு அறுசுவை அடிசில் பல்வகையான பேறுகள் உண்டாகும் எனக் கூறப்பட்டுள்ளது.

"*வானவராதி யோர் சிறைமேவ **மாவலி**யேசெய்திடு சூரன்*" என்று அருணகிரிநாதர் 'மாவலி' என்ற அசுரனை முருகன் தனது வேலால் இருகூறாகப் பிளந்த செய்தியைப் பாடியுள்ளார். திருப்பூவணப் புராணத்தில் 799 ஆவது பாடலில் "*வாமனவுருவமாகி **மாவலி**யை வன்சிறை வைத்திடும் வள்ளால்*" என்று திருமாலைப் புகழ்ந்து பாடுகிறது.

11, 161, 790 ஆகிய பாடல்களிலும் 'சூரர்'கள் பாடப்பெற்றுள்ளனர். எமனை உதைத்தது 554ஆவது பாடலிலே பாடப்பெற்றுள்ளது.

## 4.9. திருப்பூவணப் புராணமும் திருப்பூவணநாதர் உலாவும்

திருப்பூவணப் புராணம் கந்தசாமிப் புலவரால் இயற்றப் பெற்றது. இவர் இயற்றிய மற்ற நூல்கள் திருப்பூவணநாதருலா, புட்பவனநாதர் வண்ணம், திருப்பூவணத் தலவகுப்பு, மூர்த்தி வகுப்பு, திருவாப்பனூர் புராணம் ஆகியனவாகும். இவற்றுள், திருப்பூவணம் தொடர்பான திருப்பூவணப் புராணமும், திருப்பூவணநாதருலாவுமே

ஆய்வாளருக்குக் கிடைக்கப் பெற்றுள்ளன. எனவே இவ்விரண்டு பக்தி இலக்கிய நூல்களும் இவ்வியலில் ஒப்பு நோக்கப்பெற்றுள்ளன.

## 4.9.1 திருப்பூவணநாதர் உலா

**அறிமுகம்** - உலா என்பது தமிழிலுள்ள பலவகைப் பிரபந்தங்களுள் ஒருவகை நூல். ஒரு தலைவன் பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகிய ஏழுபருவ மாதர்களும் தன்னைக் கண்டு, காதல்கூற வீதியிற் பவனி வந்தார் என்பதைக் **கலிவெண்பாவாற்** கூறப்பட வேண்டுமென்பது இந்நூலுக்குரிய இலக்கணமாகும். இங்கே பாட்டுடைத் தலைவன் திருப்பூவண உற்சவராகிய **அழகிய நாயகன்** ஆவார். இத்தல வுலா "*திருப்பூவை யுலா*" எனவும் வழங்கும்.

**காப்பு** - இந்நூலில் காப்புச் செய்யுளில் விநாயகர் துதி உள்ளது. இத்துதியில் '*தந்தி வண்ணன்*' என்று விநாயகரைக் குறிப்பிடுகிறார்.

இச்சொல் திருப்பூவணப் புராணத்தில் இரண்டாவது பாடலாக நூற்பயன் கூறுவதில் '*தந்தி முகன்*' என்று குறிப்பிடப்பெற்றுள்ளது.

## 4.9.2 பேதை முதல் பேரிளம் பெண்கள் வரை

திருப்பூவணநாதருலாவில் பேதை முதல் பேரிளம் பெண்கள் ஈறாக அனைத்துப் பருவ மகளிரும் திருப்பூவணநாதர் உலாப் போந்ததைக் கண்டு களித்து வணங்கி மகிழ்கின்றனர். திருப்பூவணப் புராணத்திலே இவ்வனைத்துப் பருவ மகளிரும் குறிப்பிடப்பெற்றுள்ள இடங்கள் இப்பகுதியில் ஆராயப் படுகின்றன.

**பேதை( 5 - 7 வயது)** பேதை என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில் 105, 925, 960 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**பெதும்பை(8 - 11 வயது)** "*பேசுமுலாவிற் பெதும்பை புலி*" என்பது ஔவையார் வாக்கு. பெதும்பை என்ற சொல் திருப்பூவணப் புராணத்தில் எங்கும் இடம் பெற்றுள்ளதாக ஆய்வாளரால் அறியப்பட வில்லை.

**மங்கை (12 - 13 வயது)** திருப்பூவணப் புராணத்திலே பல்வேறு இடங்களில் 'மங்கை' என்ற சொல்லாட்சி உள்ளது. இச்சொல் இறைவியைக் குறிக்கும் வகையில் இடம் பெற்றுள்ளது. 116, 134, 229, 356, 456, 605 ஆகிய பாடல்களில் இச்சொல் இடம் பெற்றுள்ளது.

கலைவாணியைக் 'கலை மங்கை' என்று 177ஆவது பாடல் குறிப்பிடுகிறது. மகாலெட்சுமியைச் 'செங்கமல மங்கை' என்று 210ஆவது பாடல் குறிப்பிடுகிறது. 'புத்தேள் வாடு நுண்ணிடை சேர்கின்ற மங்கை' என்று 227ஆவது பாடல் வள்ளுவர் கூறும் 'புத்தேளிர் உலகு' டன் ஒப்புமை செய்து பாடப்பெற்றுள்ளது. **'கோயின் மங்கை'** என்று தேவதாசியரைக் குறிக்கும் சொல் 204ஆவது பாடலில் உள்ளது.

457ஆவது பாடல் 'மது நுகர்ந்திருமங்கை' என்றும், 483ஆவது பாடல் 'கற்புடைய மங்கை'யையும், 497ஆவது பாடல் 'தலையுலக மங்கை'யரோ! என்றும், 533- ஆவது பாடல் 'மைத்தடங்கண்மங்கை' என்றும், 540ஆவது பாடல் 'வடங்கொள் பூணனி மங்கை' என்றும் பல்வேறு மங்கையர்களைக் குறிப்பிடுகின்றன. 457ஆவது பாடலிலிருந்து அக்காலத்தில் பெண்களில் சிலர் மதுஅருந்தும் பழக்கம் உடையவராய் இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

735, 855, 951, 966, 968, 972, 985, 994 ஆகிய பாடல்களிலும் 'மங்கை' என்ற சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

**மடந்தை** (14 - 19 வயது), இச்சொல் 60, 72, 292, 601, 609, 964, 1209, 1226, 1424 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**அரிவை (20 - 25 வயது)** பருவ மகளிர் 222ஆம் பாடலிலே இடம் பெற்றுள்ளாள்.

**தெரிவை (26 - 31 வயது)** பருவமகளிர் திருப்பூவணப் புராணத்திலே **475ம்** பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளாள்.

**பேரிளம்பெண் ( 32 - 40 வயது)** 19, 345, 633, 814, 823, 831, 837, 1014, 1057, 1108 ஆகிய பாடல்களில் இடம் பெற்றுள்ளனர்.

### 4.9.3 நான்கு யுகங்களிலும் தலவிருட்சங்கள்

கிரேதாயுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம் என யுகங்கள் நான்காகும். திருப்பூவணத்தில் நான்கு யுகங்களிலும் தலவிருட்சம் மாறி மாறி இருந்துள்ளன. முதலாம் யுகத்திலே பாரிசாதமும், இரண்டாம் யுகத்திலே வில்வமும், மூன்றாம் யுகத்திலே வன்னியும் தலவிருட்சமாக இருந்துள்ளன. "இப்போது நான்காவது யுகமாகிய கலியுகம் நடைபெற்று வருகிறது"[267]. இந்த யுகத்திலே பலா தலவிருட்சமாக விளங்குகிறது.

இச்செய்தி திருப்பூவணநாதருலாவிலே,

" .... .... .... - துங்மார்
ஒருகத்தி லேதருவா யோருகத்தில் வில்லுவமாய்
ஒருகத்தில் வன்னியா யோருகத்திற் - சீருற்ற
பாரிற் கடவுட் பலாவாய்த் தழைக்கவதன்
வேரிற் கிளைத்தமுதல் விண்ணவர்கோன் ...." (பாடல் அடி 27, 28)

என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. இச் செய்தி, திருப்பூவணப்புராணத்திலே,

*"முதுசுவை தரு மாரமுத விந்துவிற்றான் முளைத்திடுஞ்சுரர் தரு வொன்று*
*துதிபெறு கிரேதாயுகமது முன்னாச் சொற்றகு நான்குகந் தொறுமிப்*
*பதிதனிற் பாரிசாத மாலூரம் பன்னரு முயர்புகழ் வன்னி*
திதமுறு செம்பொற் சுனைக்கு டக்கனி சேர் தீம்பலவாகி யேதிகழும் " (பாடல் 1361)

என்று பாடப் பெற்றுள்ளது. நான்கு யுகங்களிலும் நான்கு விருட்சங்கள் அமைந்திருந்த செய்தியானது திருப்பூவணப் புராணத்திலும், திருப்பூவணநாதருலாவிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### தொகுப்புரை

திருமுறைகளில் திருப்பூவணம் தொடர்பாகக் கூறப்பெற்றுள்ள கருத்துக்களும், அருணகிரிநாதரின் பாடற் கருத்துக்களும், திருவிளையாடற் புராணங்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்களும் திருப்பூவணப்புராணத்திலே விரவிப் பாடப்பெற்றுள்ளன. மேலும், திருப்பூவணநாதருலாவிலே கூறப்பட்டுள்ள பருவப்பெண்டிரும் புராணத்திலே பல பாடல்களில் இடம் பெற்றுள்ளனர்.

பிரமகைவர்த்த புராணத்திலே கூறப்பெறாத மிகமுக்கியமான கருத்துக்களான இரசவாதம் செய்த படலம், எல்லைகாட்டிய படலம் ஆகியவற்றை நகரச் சருக்கத்திலே கந்தசாமிப்புலவர் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். மேலும் திருமுறைப்பாடல் அடிகளை முடிந்த அளவிற்கு அப்படியே அடிபிறழாமல் திருப்பூவணப் புராணத்திலே பயன்படுத்தியுள்ளார். இதனால், திருப்பூவணம் தொடர்பான அனைத்து இலக்கியங்களுக்குள்ளும் மிகநெருங்கிய தொடர்புடைய சொற்றொடர்களை அமைத்து அவற்றைச் சொல்லாலும் பொருளாலும் ஒற்றுமைப்படுத்திச் சிறப்புடையதாகச் செய்துள்ளார் கந்தசாமிப்புலவர்.

*****

சான்றெண் விளக்கம்

243 த.சுப்பிரமணிய பிள்ளை, **சிவஸ்தல மஞ்சரி**, பக்கம் 42ல் ஸ்தல அகராதியில் திருப்புகழ் பாடல் பெற்ற 99 தலங்களைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அப்பட்டியலில் திருப்பூவணத்தைக் குறிப்பிடவில்லை.

244 குறிப்பு - தேவாரப் பாடல்களில் பாடபேதங்கள் அறிஞர்களால் கூறப்பெற்றுள்ளன. எனவே இவ்வாய்வில் உள்ள தேவாரப் பாடல் வரிகள் திருப்பூவணப் புராணப் புத்தகத்திலிருந்தபடியே இங்கு எடுத்தாளப்பெற்றுள்ளன.

245 இவை ஆய்வாளரின் கருத்துக்கள்

246 சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள திருப்பூவணநாதருலாவில் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

247 ஆத்திமலர் என்றும் பொருள் கொள்ளலாம்.

248 "நாரிஇடபாகனுக்கு நஞ்சளித்த பாவியென்று **வாரியிடம்** சேராத வைகை" என்று வைகை நதி கடலில் கலக்காததைப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில் பாடியுள்ளார்.

249 பத்தி எண் 5.1.8 இங்கே குறிப்பிடப்பெற்றுள்ளது.

250 பெரியபுராணம் குங்குலியக் கலயர் - 32

251 கி.வா. ஜகந்நாதன் (பதிப்பு ஆசிரியர் கே, சுப்பிரமணியப் பிள்ளை). சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரப் பதிகங்கள் - தலமுறை. கலைமகள் பதிப்பகம். சென்னை. வருடம் 1971. பக்கம் XIV -முதல் XX முடிய.

252 திருவிளையாடற் புராணம் -இரசவாதம் செய்த படலம் பாடல் எண் 7

253 திருவிளையாடற் புராணம், இரசவாதம் செய்த படலம், பாடல் எண் 1865

254 தமராக்கியான். தினபூமி. ஆன்மிகபூமி. 21-06-2002 நாளிட்ட இதழ், பக்கம் 10 (இவ்வாய்வாளர், 'தமராக்கியான்' என்ற புனைப்பெயரில் எழுதிய கட்டுரை)

255 பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம், இரசவாதம் செய்த படலம், பாடல் எண் 1866

256 மேலது, பாடல் எண் 1881

257 மேலது, பாடல் எண் 30

258 திருவிளையாடற் பயகரமாலை, பாடல் எண் 45

259 கடம்பவன புராணம், இரவாதஞ் செய்த படலம், பாடல் எண் - 39

260 கி.காளைராசன், **திருப்பூவணக் காசி**, பக்கம் 69

261 கந்தசாமிப்புலவர், திருப்பூவணப் புராணம், திருநகரச் சருக்கம், நான்காம் பாடல்

262 திருவிளையாடற் புராணம், திரு ஆலவாய்க் காண்டம், பாம்பு எல்லைகாட்டிய படலம், பாடல் வரிசை எண் 2339

263 மேலது, பாடல் எண் 2345

264 பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், திருவாலவாயக் காண்டம், பாடல் எண்- 2347

265 அ) அபிதான சிந்தாமணி பக்கம் 336,
ஆ) மீ.ப. சோமு (சோமசுந்தரம்) சித்தர் இலக்கியம் - மூன்றாம் பகுதி. ஆய்வுநூல். அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, பதிப்பு 1992.

266 கந்தசாமிக் கவிராயர், மு.ரா. அருணகிரி நாதர் அருளிச் செய்த திருப்புகழ், வருடம் 1933.

267 திருப்பூவணப் புராணம் பாடல் எண் 1014

# 5. புலவரின் புலமைத் திறன்

**முன்னுரை**

"தோன்றிற் புகழொடு தோன்றுக"[268] என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க 'கருவிலே திருவுடையோர்' புலவர் பெருமக்கள். அவர்களது பூதவுடல் அழிந்து விடினும் புகழுடம்புடன் மக்களது உள்ளங்களிலே வாழ்ந்து வருகின்றனர். பெருங்கவிஞர் ஹோமர் வாழ்ந்த பண்டைக் கிரேக்க அரசியலுலகம் அழிந்து விட்டது. அவருடைய கவிதை இன்றும் உயிர்ப்புடன் உலவி வருகிறது. உரோம் நாட்டின் பழம் பெருஞ் சிறப்பெல்லாம் மறைந்து போயிற்று எனினும், வர்ஜில் என்பவரின் கவிதைகள் இந்நாளிலும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. எந்த உஜ்ஜயினி மாநகரம் கவிச்சக்கரவர்த்தி காளிதாசரால் அணி செய்யப் பெற்றதோ, அந்த உஜ்ஜயினி நகரம், இன்று நிலை குலைந்து தளர்ந்து விட்டது. காளிதாசர் கண்ட கற்பனைக் கனவுகள், உயிருடைய ஒருவனின் குரல் ஒலியைப் போலக் கவிதைகளாக இன்றும் மக்களைக் கவர்ந்து நிற்கின்றன. இடைக்காலப் பெருவேந்தர்கள் பலரும் இறந்து போனார்கள். தாந்தேயின் கவிதைகள் இன்றும் விரும்பிப் பயிலப் பெறுகின்றன. ஆங்கில அரசாட்சிகள் நிலைகுலைந்து போனாலும் சேக்ஸ்பியர் காரணமாக, எலிசபெத் அரசியாரின் காலம் ஆங்கில மொழி நிலைத்துள்ள அளவும் பாங்குற நினைத்துப் பாராட்டப் பெறும். இவ்வாறு ஒரு மொழியில் வல்ல நூலாசிரியரின் அழியாத் தன்மையைப் போற்றியுரைப்பர் அறிஞர் டாக்டர்.எஸ். இராதாகிருஷ்ணன்.[269]

இந்நிலையில் தமிழ்ப் புலவோர் பலரும் இன்றும் நினைத்துப் போற்றத் தக்கோராய் உள்ளனர். ஆட்சி செலுத்திய அரசர்கள் பெயர்களெல்லாம் நிலைத்து நிற்பதில்லை. சங்கப் புலவோர் பலரும், வள்ளுவரும், இளங்கோவும், கம்பரும், காலந்தோறும் நினைக்கத்தக்கவர்களாக உள்ளனர். தமிழில் தொல்காப்பியர் திருவள்ளுவர் முதலான பெரும் புலவர்கள் வாழ்ந்த காலங்களில் உடன் வாழ்ந்தவர் பெயரேதும் இன்று இல்லை. பாரி, ஓரி, காரி போன்ற வள்ளல்களும், கபிலர், ஔவையார் மற்றும் திருவிளையாடற் புராணத்தில் வரும் தருமி போன்ற புலவர்களும் இன்றும் மக்களது மனத்தில் நிலைத்து வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். இவ்வாறு ஒரு மொழியில் வல்ல நூலாசிரியரும், அவரால் பாடப்பட்டோரும் அழியாத் தன்மை உடையவர்களாய் இருக்கின்றனர்.

இவ்வகையில் தமிழ்த்தலபுராணங்களை இயற்றியளித்துள்ள ஆசிரியர்கள் இவண் குறிப்பிடத்தக்கவர்களாவர். இருநூறுக்கும் மேற்பட்ட தலபுராண ஆசிரியர்களைப் பற்றி அறிய முடிகின்றது. தமிழ் நாட்டில் தலங்கள் உள்ள வரையில், அத்தலங்களில் கோயில்கள் உள்ள வரையில், தலங்களையும் கோயில்களையும் பற்றிய இலக்கியங்கள் உள்ள வரையில், அவ்விலக்கியங்களைக் கற்றுச் சுவைத்து மகிழ்ந்து போற்றும் மனமுடைய மக்கள் உள்ள வரையில் இந்தத் தலபுராண ஆசிரியர்கள் புகழுடம்புடன் வாழ்வர் என்பது திண்ணம்.

திருப்பூவணப் புராணத்தை எழுதிய கந்தசாமிப் புலவர், "பாண்டிநாட்டுத் திருப்பூவணத்துச் சைவர். இவர் செய்த நூல்கள் திருப்பூவணப் புராணம், திருப்பூவணநாதருலா, திருவாப்பனூர் புராணம் முதலியன. இவர் காலம் சற்றேறக்குறைய நூறு வருடங்களுக்கு மேலிருக்கலாம்"[270] என்று அபிதான சிந்தாமணியில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

இவ்வியலில் கந்தசாமிப் புலவர் 1) இயற்றிய நூல்கள், 2) அவரது புலமைத் திறன் 3) புராணங்களை இயற்றியதற்கான காரணம் 4) அந்நூல்களால் மக்களுக்கு உண்டாகும் பயன் ஆகியவை குறித்து ஆராயப்படுகிறது.

## 5.1. எழுதிய நூல்கள்

கந்தசாமிப்புலவர் 1)திருப்பூவணப் புராணம் 2)திருப்பூவணநாதர் உலா 3)திருப்பூவணநாதர் வண்ணம். "திருப்பூவணம் புஷ்பவனநாதர் வண்ணம், இவர் தரும் கவியின்பம் யாரறிவார் என ஏங்குகிறது"[271]. 4)திருப்பூவணத் தலவகுப்பு 5)திருப்பூவணநாதர் மூர்த்தி வகுப்பு. 6) திருவாப்பனூர் புராணம் 7)திருப்புனவாயிற் புராணம்[272] திருப்பூவணவாயிற் புராணம்[273] என்ற நூல்களை எழுதியுள்ளார் என்று அறியமுடிகிறது.

மேற்கண்ட நூல்களுள் திருப்பூவணப் புராணமும், திருவாப்பனூர்ப் புராணமும் வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துப் பாடப்பெற்றுள்ளன. 'திருப்பூவண நாதருலா' கிடைக்கப்பெற்றுள்ளது. மற்றைய நூல்கள் கிடைப்பது அரிதாய் உள்ளது.

திருப்புனவாயிற் புராணம், திருப்பூவணவாயிற் புராணம் என்ற இரண்டு நூல்களும் இவரால் எழுதப்பெற்றது என்பதற்குப் போதுமான சான்றாதாரங்கள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை.

## 5.2. புலமைத் திறன்

திருப்பூவணப் புராணத்தையும், திருவாப்பனூர் புராணத்தையும் கந்தசாமிப் புலவர் வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்துப் பாடியுள்ளார். இதனால் அவர் வடமொழியிலும் தமிழ் மொழியிலும் புலமை பெற்றிருந்தமை தெள்ளெனப் புலப்படுகிறது.

### 5.2.1. தமிழ்ப் புலமை

கந்தசாமிப் புலவர், திருப்பூவணப் புராணத்தில் நளன்கலிமோசனச் சருக்கத்தில் நளமகாராசனின் பண்பு நலன்களாகத் திருக்குறள் அதிகாரத்தின் பெயர்களை எடுத்துக் கூறியிருக்கிறார். இது ஒரு சிறந்த உத்தியாக உள்ளது. இதனால் புராண ஆசிரியர் திருக்குறள் மீது கொண்டுள்ள பற்றினை அறியமுடிகிறது. வள்ளுவம் வகுத்த வாழ்க்கை இலக்கணத்திற்கு ஒப்ப வடநாட்டு அரசனான நளமகாராசனின் பண்புநலன்கள் விளங்கின என்று பாடியுள்ளார்.

*"அடன்மிகு வெம்படை காத்த லமைச் சரணட்புடனூக்க மறிவஞ்சாமை*
*தொடைபெறு நல்லியற் கல்வி தூங்காமை தூய்மை துணிவுடைமை வாய்மை*
*யுடனுரிய குடி புறங்காத்தோம்பல் பகையொடுக்க லிவை யுடைமை பூண்ட*
*கொடைமடம்பட்டிடுகோதில் குவலயங் கொள் குங்குமப் பொற்குவவுத் தோளான் "*

(பாடல் 1293)

வெம்படை காத்தல், அமைச்சு(64), அரண் (75), நட்பு (79), ஊக்கமுடமை (60), அவையஞ்சாமை (73), கல்வி (40), தூங்காமை, துணிவுடைமை, வாய்மை (30), குடிசெயல்வகை (103), புறங்காத்தல், ஓம்பல் (9), பகைஒடுக்கல், கொடை எனத் திருவள்ளுவர் கூறும் அதிகாரத் தலைப்புக்களைக் கொண்டே மன்னனின் பண்புநலன்களைக் கந்தசாமிப்புலவர் பாடியுள்ளது அவரது தமிழ்ப்பற்றையும் புலமையையும் வெளிப்படுத்துகிறது.

*"பொறிவாயில் **ஐந்தவித்தான்** பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்" (குறள் - 6)*

***"ஐந்தவித்தான்** ஆற்றல் ஆகல்விசும்பு ளார்கோமான்*
*இந்திரனே சாலுங் கரி" (குறள் - 25)*

என்ற திருக்குறள்களில் உள்ள 'ஐந்தவித்தான்' என்ற சொல்லைத் திருப்பூவணப் புராணத்தில்,

*"மருவியகாசிவாசமக்கண்மிக்குடல்வருந்தும்*
*பொருவிறென்பூவணந்தான்பொருந்திடாமெய்வருத்த*
*மரியனபொருளொன்றில்லையாதலா**லைந்தவித்தீர்***
*கருதிலப்பூவணந்தான்காசியிலதிகமாகும்" (பாடல் 441)*

என்ற பாடலில் புலவர் எடுத்தாண்டுள்ளார்.

மேலும், 'புத்தேளிர்' என்ற திருக்குறள் சொல்லை, திருப்பூவணப் புராணத்தில்

*"மிகுபுகழ்வேந்தர்விண்ணோர்மிண்டியவீதியின்கண்*
*மகுடநன்மணியின்குப்பைவயின்வயினலகிட்டெங்கும்*
*புகழ்பெறத்தெளித்தவாசப்புனிதநீரொ**டுபுத்தேளிர்***
*மகிழ்வொடுபொழிமந்தாரமாமலர்வாசம்வீச" (பாடல் 495)*

என்ற பாடலிலும் 1075ஆவது பாடலிலும் புலவர் எடுத்தாண்டுள்ளார்.

### 5.2.1.2 எதுகையும் மோனையும்

பாடல்கள் நிலைத்த பெருமையுடன் நீண்ட காலம் அழிவில்லாமல் மக்களிடம் போற்றப் பெறுவதற்குக் காரணங்கள் பல உண்டு. அவற்றுள் **எதுகை, மோனையுடன்** கூடிய பாடல்கள் மக்களது உள்ளங்களில் எளிதே பதிந்து நீங்காத இடத்தைப்

பெற்றுவிடுகின்றன. எதுகை மோனை சிறப்பாக அமையப் பெற்ற பாடல்கள் திருப்பூவணப் புராணத்தில் மிகவும் உள்ளன.

பாடல் 25 ***திருத்த**கம் பொழிற்றென்றிருப்பூவண*
***நிருத்த**மாடியநின்மலன் காதையை*
***யருத்**தியாலுலகம் புகழ்காரிகை*
***விருத்த**யாப்பினெடுத்து விளம்புகேன்*

பாடல் 29 ***நான்முக**ங்களுநான்மறைநவிற்றுதலானு*
***நான்முக**ந்தருநாயகி நண்ஷதலானு*
***நான்முக**ங்களுநன்குறப்படைத்திடலானு*
***நான்முக**ன்றனை யொத்தது நைமிசாரணியம்*

பாடல் 233 ***உன்றனக்கிணை**யிலையுலகளுன்றினு*
***முன்றனக்கிணை**யிலையுரைக்குங்காலையி*
***லுன்றனக்கிணை**யுனையரைக்குமாதலா*
***லுன்றனக்**கொன்றுளதுரைசெய்வாமரோ*

பாடல் 287 ***யாதொர்**புட்பவனவத்தலத்தினரனஞ்செழுத்தையருள்செய்தனன்*
***யாதொர்**செங்கதிர்தனக்குமந்திரவெழுத்தினிற்பலமேய்ந்டும்*
***யாதொர்**நற்றலமதென்பதொன்னுற்றுதற்குநேர்புகலலாவதோ*
***யாதொர்**நற்றலமதுண்டெனப்புகறலாவதோர் தலமுமில்லையே*

பாடல் 449 ***சேனுலாவிய**திங்கடருங்குடைசேருமாமதன்றன்றணைவென்றதோ*
***ரேனுலாவிய**வின்பசுகம்பெறுமேசிலாவருடந்திடுமந்தணீர்*
***மானுலாவிய**மண்டலமெண்டகுமாசிலாமணிகுண்டமடைந்தசீர்*
***பானுலாவிய**செஞ்சொல்பகர்ந்தவர்பாகசாதனன்றன்பதிதங்குவார்*

பாடல் 254 *சுகரன்புடையானேதுதிசொல்வார்பு**டையானே***
***யிகல்**சார்படையானேகுறளெகுசூழ்ப**டையானே***
***திகழ்**கண்படையானேயுறுசெனனம்ப**டையானே***
***புகழ்**மன்றுடையானேபொருபுலித்தோலு**டையானே***

பாடல் 255 ***அண்டங்**கரியானேயரியயர்கட்கரி**யானே***
***விண்டங்**கொளியானேசதுர்வேதத்தொளி**யானே***
***பண்டங்**கிசையானேயுறுபவமொன்றிசை**யானே***
***கண்டங்**கரியானேநுதற்கண்டங்கரி**யானே***

எதுகையும் மோனையும் சிறப்பாகப் பாடப்பெற்றுள்ள புராணப் பாடல்கள் அனைத்தும் கந்தசாமிப் புலவரின் தமிழ்ப்புலமையை பறைசாற்றுகின்றன.

திருஞானசம்பந்தர் "தென் திருப்பூவணமே" என்று முடியுமாறு பதிகம் பாடியருளியுள்ளார். அப்பர் பெருமான் "பூவணத் தெம் புனிதனார்க்கே" என்று முடியுமாறு பதிகம் பாடியுள்ளார். சுந்தரர், "பூவணமீதோ" என்று முடியுமாறு பாடியுள்ளார். கருவூர்த்தேவர் "ஆவண வீதிப் பூவணங் கோயில் கொண்டாயே" என்று முடியுமாறு பதிகம் பாடியுள்ளார். இவ்வருளாளர்களைப் போன்றே, கந்தசாமிப் புலவரும் 553ஆம் பாடல் முதல் 560ஆம் பாடல் முடிய உள்ள பாடல்களைப் "பாற்கரபுர சிவனே சரணம்" என்று முடியுமாறு பாடியுள்ளார்.

### 5.2.1.3 யாப்பு

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனத் தமிழ்ச்செய்யுள் வடிவங்களை வகைப்படுத்தியுள்ளனர் புலவர் பெருமக்கள். திருக்குறளானது குறள்வெண்பா வடிவில் பாடப்பெற்ற நீதி நூலாக உள்ளது. திருப்பூவணப் புராணம் காரிகை மற்றும் விருத்தயாப்பு வடிவில் பாடப் பெற்றுள்ளது.

*"திருத்தகும் பொழிற் றென்றிருப் பூவண*
*நிருத்த மாடிய நின்மலன் காதையை*
*யருத்தியா லுலகம் புகழ் காரிகை*
***விருத்த யாப்பி னெடுத்து விளம்புகேன்"** (பாடல் 25)*

திருப்பூவணப் புராணத்தை 'காரிகை விருத்த யாப்பில்' எடுத்துக் கூறுகிறேன் என்று கந்தசாமிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

"*எழுத்தெண்ணிப் பாடப்பெறும் ஒருவகைக் கலியாப்பினைக் காரிகை என்று கூறும் மரபு உண்டு*"[274]

"*நேரசை முதலாகிய காரிகை ஒற்று நீங்க ஓரடிக்கு எழுத்துப் பதினாறு, நிரையசை முதலாகிய காரிகை ஒற்று நீங்க ஓரடிக்கு எழுத்துப் பதினேழு*"[275] என ***எழுத்தெண்ணிப் பாடும் மரபு உண்டு.***

"*வடமொழியாப்பினுள் ஒன்றினைப் பெண்ணைக் குறிக்கும் காயத்திரி என்ற பெயரினால் வழங்குதல் போல், தமிழ் யாப்பினுள் ஒன்றாகிய கட்டளைக் கலித்துறையினையும் காரிகை என்னும் பெண்பாற் பெயரினால் சுட்டினர் என்று கருதலாம். முதல்முதல் கட்டளைக் கலித்துறைக்கு உரிய இலக்கணத்தை நூற்பா வடிவில் வகுத்தவர் புத்தமித்திரர் ஆவர்.*"[276]

*"இயற்சீர் நான்கினால் அமைந்த அடி நேரில் தொடங்கின் 11 எழுத்தும், நிரையில் தொடங்கின் 12 எழுத்தும் கட்டளையாகப் பெற்ற பாடல்களைக் கட்டளைக் கலிப்பாவாகக் கருதுதற்கு உரியது.*[277] *குறுந்தொகைக் கலிவிருத்த யாப்பின் பரிணாமமே கட்டளைக் கலிப்பா எனலாம்.*"[278]

"காரிகை விருத்த யாப்பி னெடுத்து விளம்புகேன்" என்று குறிப்பிடும் மேற்கண்ட திருப்பூவணப் புராணப் பாடல் (பாடல் எண் 25) எழுத்தெண்ணிப் பாடப் பெற்றதாகும்.

**பாடல் எண் 48**

*பின்னியபின்னல் பிறங்கவிரித்தோன்*
*மன்னியநல்லரைவற்கலையாத்தோ*
*னன்னியமத்தொழினாளுமிழைப்போன்*
*பன்னியதீவினை பற்றறவிட்டோன்*

**பாடல் எண் 53**

*இருந்தருள்காலையிருந்தவவாணர்*
*சுரந்தருண்மாதவசூதனை நோக்காப்*
*பொருந்தியகை நனிகூப்பினர் போற்றித்*
*திருந்துரையின்னன செப்புதலுற்றார்*

**மேலும் திருப்பூவணப் புராணத்தில் பாடல் எண் 48 முதல் 52 முடிய, மற்றும் 54 முதல் 58 முடிய உள்ள பாடல்களின் வரிகள் 11 எழுத்துக்களால் பாடப் பெற்றுள்ளன. 53ஆவது பாடல் வரிகள் 12 எழுத்துக்களால் பாடப் பெற்றுள்ளன.**

**பாடல் எண் 309**

*இந்தனத்திடைசெந்தழல்வந்தபோலிந்தநற்பதிமுந்தவியந்ததோ*
*ரந்தநற்சிவலிங்கம்விளங்கவேயந்தரத்தவர்செங்கதிர்கண்டசீர்*
*தந்தவிக்கதைகண்டுபுகன்றுளோர்தங்குநற்செவிகொண்டுபுகழ்ந்துளோர்*
*புந்தியிற்கொடுவந்துபுகழ்ந்துளோர்பொங்குமுத்தியின்வந்து பொருந்துவார்*

**பாடல் எண் 528**

*பரிதிமடுவுறுபான்மையைநாளுமேபரவையுடைதிகழ்பார்தனிலோதுவோ*
*ரொருமையுடன்மனனூடதைநாடுவோருரியசெவிநுகனுனமின்மேன்மையோர்*
*கருணையுறுமிகுகாமருசீர்கொடேகருதியறைகுநர்பூசைசெய்காதலோர்*
*மருவுமுருவசிமாமுலைமீதரோவருடமொருபதினாயிரம்வாழ்வரே*

**309ஆவது பாடல் வரிகள் 22 எழுத்துக்களால் ஆனவை. 528ஆவது பாடல் வரிகள் 26 எழுத்துக்களால் ஆனவை. 628வது பாடல் வரிகள் 22 எழுத்துக்களால் ஆனவை. 406 ஆவது பாடல் 24,24,25,24 எழுத்துக்களால் ஆன வரிகளால் ஆனது. 566ஆவது பாடல் 23,24,24,24 எழுத்துக்களால் ஆன வரிகளால் ஆனது. இவைபோன்று எழுத்தெண்ணிப் பாடப்பெற்ற பாடல்கள் திருப்பூவணப் புராணம் முழுவதும் விரவியுள்ளன.**

**இதனால் காரிகை யாப்பில் பாடல்களைப் பாடுவதில் கந்தசாமிப் புலவர் புலமை பெற்றிருந்தார் என்பது நன்கு புலப்படுகிறது.**

### 5.2.1.4 புராணத்தில் வடமொழிச் சொற்கள்

திருப்பூவணப் புராணத்தை வடமொழியிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்துப் பாடியுள்ளதாலும், கந்தசாமிப் புலவர் வடமொழியில் நன்கு புலமை பெற்றிருந்ததாலும் திருப்பூவணப் புராணத்தில் பல்வேறு இடங்களில் வடசொற்களைப் புலவர் பயன்படுத்தியுள்ளார்.

*"நைமிசாராணியந்தன்னி னற்றவத்தின் மிக்க சிவஞானவேட்கைச்*
*சவுநகாதிய முனிவர் கணங்களானோர் **தர்க்கமோ டுத்தரங்கள்** சாற்றித் **தாபித்***
***துவ**மனிலாமாதவன்றன் மைந்தன் மைந்தரொருமையுடனிருண்*
*மலந்தீர்ந்திருந்தங்கோர்நாட்*
*சிவனடியை யடையும் வகை தெரிக்குங் காதை சேர்ந்தவர் கடாந்"* (பாடல் 47)

*"சுத்தமாமிதயகமலத்தினன்றுஞ்சுழுமுனாமார்க்கத்தினாலே*
*சித்தநேர்நிறுவித்**துவாதசாந்தத்திற்**சோந்துறுசிறந்தமந்திரத்தா*
*லத்தகு**பிராணவாயு**வால்வாங்கியலர்தருகரத்தினிலமைத்துச்*
*சத்தியோடுரியசதாசிவமூர்த்திதன்னையே நன்குறநிசித்து" (பாடல் 247)*

***"தாபனஞ்**செய்தபின்றகுசந்நிதானஞ்சந் நிரோதனந்தந்து*
*மாபரன்னறக்கச்**சுவாகதார்க்கியமும்**வழங்கியே காளகன்னிகையுஞ்*
***சோபன**விலிங்கமுத்திரையுடனேதுலங்குகைகூப்புமுத்திரையுந்*
*தூபமுமலிங்குதீபமுங்கொடுத்துச்சுகந்தநன்மஞ்சனமாட்டி" (பாடல் 249)*

***"நைவேத்தியம்"** (பாடல் 252), **"தரிசனம் "** (பாடல் 253), **"பிரமசாரி"** (பாடல் 432), **"வியோகம்"** (பாடல் 438), "அபகரித்து" (பாடல் 456), **" பஞ்சாங்கமாய்"** (பாடல் 613), **"பாக்கியவதி"** (பாடல் 616), **"அநுட்டித்து"** (பாடல் 621), **"உத்தியாபனம் "** (பாடல் 624),* சத்தியம் (பாடல் 311, 440, 488, 655, 783, 859, 891, 1005, 1090, 1360), ப்ரமகத்தி (பாடல் 457), திவசஞ்செய்தல் (பாடல் 465), தூர்த்தர்(பாடல் 487), திரோதம்(பாடல் 490), புண்டரீகம்(பாடல் 544), கிலேசம்(பாடல் 603), செகம்(பாடல் 652), அனுக்கிரகம் (பாடல் 652), உபவாசம் (பாடல் 655), சௌமியவாரம் (பாடல் 664), உபதேசம் (689), வாம(இட)பாகம் (பாடல் 713), சகம் (பாடல் 722), சஞ்சலம்(பாடல் 716) முதலான வடசொற்கள் அதிகமான அளவில் எடுத்தாளப் பெற்றுள்ளன. புராணத்தில் உள்ள இருபது சருக்கங்களில் திருப்பூவணநாதரை வழிபடுவதைக் குறிப்பிடும் பாடல்களிலேயே வடசொற்கள் அதிகமான எண்ணிக்கையில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

### 5.2.1.5 புராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள தானங்கள்

திருப்பூவணப் புராணத்தில் தானங்கள் செய்தால் தீவினைகள் நீங்கப் பெறும் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. பரிகாரத்தலமாகத் திருப்பூவணம் விளங்குவதால் இங்கு செய்ய வேண்டிய பலவிதமான தானங்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன.

கன்னிதானம் (பாடல் 474, 599), தினைதானம்(பாடல் 420), கணிப்பருந்தானம் (பாடல் 541), மெய்த்தானம் (பாடல் 655), இயைந்த தானம்(பாடல் 665), பெருந்தானம் (பாடல் 669), இயன்ற தானம் (பாடல் 1306) ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன. பீடுறுதானமளிப்போர் பற்றி 1187, 1188, 1189, 1255 ஆகிய பாடல்களில் பாடப்பெற்றுள்ளது.

### 5.2.1.6 புராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள நதிகள், ஊர்கள், மனிதர்கள்,பெயர்கள், மனிதர்கள், தெய்வங்கள், விக்கிரகங்கள்

திருப்பூவணப் புராணத்தில் கந்தசாமிப்புலவர் பாண்டியநாட்டுப் பாடல் பெற்ற தலங்கள் பதினான்கையும் மற்ற பிற தலங்களையும் குறிப்பிட்டுள்ளார். சில நதிகளையும் ஊர்களையும் மனிதர்களின் பெயரையும் குறிப்பிட்டுள்ளார்,

**நதிகள் -** திருப்பூவணப் புராணத்திலே வைகை, கிருதமால், தாமிரபரணி காவிரி முதலான தமிழ்நாட்டில் பாயும் ஆறுகளும், கங்கை முதலான வடநாட்டில் பாயும் ஆறுகளும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

**வைகை** நதியானது, 100, 110, 115, 116, 225, 238, 250, 373, 1157, 1239, 1316 மற்றும் 1326 ஆகிய பாடல்களிலே குறிப்பிடப் பெற்றுள்ளது. **பொருநை** நதியானது 100, 104, 105, 106, 108, 109, 110, 111 மற்றும் 530 ஆகிய பாடல்களிலே பாடப் பெற்றுள்ளது. **கிருதமால்** நதியானது 238, 582, 1282 ஆகிய பாடல்களிலே பாடப்பெற்றுள்ளது. **காவேரி** என்று 372ஆவது பாடலிலும் காவிரி என்று 1315ஆவது பாடலிலும் குறிப்பிடப் பெற்றுள்து.

**கங்கை** நதியானது 236, 245, 257, 279, 292, 420, 537, 556, 696, 697, 729, 1065, 1205, 1208, 1330, 1357, 1408 மற்றும் 1414 ஆகிய பாடல்களிலே குறிப்பிடப் பெற்றுள்ளது. கங்கையை, **பகீரதி** என்று 877 மற்றும் 1110ஆவது பாடல்களில் புலவர் குறிப்பிட்டுள்ளார். **யமுனை** 632ஆவது பாடலிலே சூரியனுக்கும் யதிதிக்கும் பிறந்ததாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. **கோதாவரி** 1194ஆம் பாடலிலே குறிப்பிடப்

பெற்றுள்ளது. **துங்கபத்திரை** நதியானது 617ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது. **காளிந்தி** நதியானது 937, 941 மற்றும் 1314ஆவது பாடல்களிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

**ஊர்கள்** - திருப்பூவணப் புராணத்திலே **மதுரை** 18, 117, 165, 1157, 1234 மற்றும் 1287 பாடல்களில் இடம் பெற்றுள்ளது. **ஆலவாய்** என்ற பெயரில் 539, 720, 1217 ஆகியபாடல்களில் மதுரை இடம் பெற்றுள்ளது. பாண்டிப் பதினான்கும் 117 பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளன. **சிதம்பரம்** 230, 303, 1364 **தில்லை** 1216 ஆகிய பாடல்களிலும், **கும்பகோணம்** 317, 328, 579, 1217 ஆகிய பாடல்களிலும், **காஞ்சி சோனாசலம், கோமுகேசம், முதுகுன்றம், பருப்பதம், விசுவேசம்** ஆகியன 1215ஆவது பாடலிலும், **திருவெண்காடு, வேதனசலம், வயித்தியநாதம், திரிகோடீசம், கோமுத்தீயசம், மத்தியார்ச்சனம்** ஆகியன 1216ஆவது பாடலிலும், **நாகநாதம் பட்டீசம்** 1217ஆவது பாடலிலும், **திருக்காளத்தி, திரிகூடவீசும்** 1214ஆவது பாடலிலும், **திருப்பரங்குன்றம்** 112, 117 ஆகிய பாடல்களிலும், **திருச்சிராப்பள்ளி** 1315ஆவது பாடலிலும் பாடப் பெற்றுள்ளன. இத் தமிழ் நாட்டுத் தலங்களும், அழகாபுரி (883), வேணுநல்வனம் (530), கோலாகலம்(531), **மிதிலை**(803) ஆகிய ஊர்களும், கயிலை, காசி முதலான வடநாட்டுத் தலங்களும் திருப்பூவணப் புராணத்திலே குறிப்பிடப் பெற்றுள்ளன.

*"மன்னியவரித்துவாரந்திகழவந்திமாளவங்காகோலமாநிலகண்டந்*
*தன்னிகரில்சோமேசுரஞ்சிலாதலநீள்சதுர்வேதவீசங்கோமதிதீர்த்தவாரம்*
*பன்னகேசம்பான்மைபகர்பர்ப்பரேசம்பகருமதுகண்டேசுரம்பரவருஞ்சீர்*
*துன்னுமாரணியங்கோமளமருவிநாளுஞ்சூருலவுகின்றகௌமாரகாந்தாரம் (பாடல் 1211)*

*"கதிரொழுகுநாககானம்பீமகானங்காசறுசெழுங்கவுசிகம்புகழ்காளிங்க*
*மதனமகிழ்கூரவருள்பாராவதேசம்வான்முகடுதொடவெழுசிலாசநாகஞ்சே*
*ரதிகநல்வராகமெய்த்துதியமர்கோகன்னமாத்தியேசுரம்வேகதரிசனம்வருஞ்சீர்*
*விதமருவுமங்கிசாலாவனம்விளங்குமேவுமதுவாரணியமிக்கவடகானம்" (பாடல் 1212)*

நாககானம், பீமகானம், கவுசிகம், காளிங்கம், சரவணேசுரம் ஆகியனவும், பிரயாகை (1210) மற்றும் சீசயிலம்(1213), விரூபாக்கம் வசிட்டாச்சரமம் கபிலையீசரம் காளகண்டம காளத்திமலை திரிகூடவீசம்(1214) முதலான திருத்தலங்களும் திருப்பூவணப் புராணத்திலே குறிப்பிடப்பெற்றுள்ளன. 1314 மற்றும் 1315 ஆகிய

இரண்டு பாடல்களிலும் நளமகாராசன் யாத்திரை செய்த திருத்தலங்கள் கூறப் பெற்றுள்ளன. **சேது தீர்த்தம்** 1229ஆவது பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

**தெய்வங்கள் -** முப்பெருந்தேவர்களும், முப்பெருந்தேவியரும் புராணத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளனர். **ஐந்து சக்தி வடிவங்களான** பராசக்தி ஆதிசக்தி இச்சாசக்தி ஞானசக்தி கிரியாசக்தி ஆகியோர் 918ஆவது பாடலிலும், **ஐந்தொழில் புரியும்** அயன் மால் ஈசன் மகேசன் சதாசிவம் ஆகியோர் 919 ஆவது பாடலிலும் குறிப்பிடப்பெற்றுள்ளனர். பிரமாவைப் 'பிதாமகன்' என்று 882, 887 ஆகிய பாடல்களிலே குறிப்பிடப்பட்டுள்ளது. அர்த்தநாரிசுவரைத் 'தேவியார் பங்குறைதெய்வநாயகன்' என்று 757ஆவது பாடலில் பாடப்பெற்றுள்ளது. தருமராசன் என்று 632ஆவது பாடலிலும், யமன் என்று 649ஆவது பாடலிலும் பாடப் பெற்றுள்ளது. 'கோமலவள்ளி 877ஆவது பாடலிலும் குறிப்பிடப் பெற்றுள்ளாள். யதிதி(630), வீரபத்திரன்(1111, 1125), அரம்பை(1043), மேனகை, ஊர்வசி, திலோத்தமை (பாடல் 712), ப்ரபை (பாடல் 633, 645), சாயை (பாடல்638), மநுவேந்தன் என்ற சனியீசன்(பாடல் 639), அருந்ததி(பாடல் 643), மார்த்தாண்டன் (பாடல் 644), காலன்(பாடல் 682) ஆகியோர் குறிப்பிடப் பெற்றள்ளனர். சம்பூதி, நாரி, பிருதியூற்சை, யனசூயை, அசுவதை ஆகியயோர் 909ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளனர். தாரகை 910ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளாள். தக்கன் மனைவி வேதவல்லி 943, 944, 945 ஆகிய பாடல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளாள்.

**முனிவர்கள் -** சவுனகர், சூதர், நாரதன்(416, 700, 889, 891, 894, 896, 898, 899, 903, 905), வாலகில்லி(813), காலவமுநி (612), மாத்தியாந்தினர்(1353, 1356), பிருகுமுனி(908) முதலான முனிவர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

> "*மேவுநல்வேதவியாதனெண்வசிட்டன்மிக்கசீர்க்கவுதமன்வாம*
> *தேவன்மார்க்கண்டனங்கிராத்திகழத்திரியதீதரன்சதானந்தன்*
> *றாவில்பாரத்துவாசனக்கினிபன்சவுனகன்மவுனபாற்கரனோ*
> *டோவறுமனையமுனிவர்... ... "* *(பாடல் 1351)*

என்ற பாடலில் வியாதன், எண்வசிட்டன், கவுதமன், வாமதேவன், மார்க்கண்டன், தீதரன், சதானந்தன், பாத்துவாசன், அக்கினிபன், சவுனகன் மற்றும் மவுன பாற்கரன்

முதலானோர் தங்களது மாணாக்கர்களுடன் திருப்பூவணம் வந்து வேதம் ஓதியதாகக் கூறப்பட்டுள்ளது.

*"அறையுமத்தலத்தின் முறைவியாதன்பாலருளுபதேசநன்கடைந்து*
*செறிசடாடவியிற்சிறுபிறைமுடித்தசிவபிரான்றன்னைநேர்நோக்கி*
*மறையினற்றுறைடோ**மாத்தியந்தின**னுமருவிய**தியானகாட்டனுஞ்சீ***
*ருறுமுயர்நிலைசேரும்பராண்டொருநூறுரைக்கருந்தவமுழுந்தார்கள்" (பாடல் 1353)*

என்ற பாடலில் மாத்தியந்தின முனிவரும் தியானகாட்டமுனிவரும் நூறு தேவவருடம் திருப்பூவணத்திலே தவம் செய்தார்கள் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. இவர்களுடன் காசிபன்(630, 1379), பிரிகுமாமுனி, மரீசி(1379), புலத்தியன், புலகன், வசிட்டன், அத்திரி முதலானோர் 908ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

தசரதன், ராமச்சந்திரன், தாடகை, சடாயு, கைகேகி, குகன் (800) முதலான இராமாயண மாந்தர்கள் இலக்குமி சாபமோசனச் சருக்கத்திலே குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

**மனிதர்கள் -** நளன்(1209), தமயந்தி(1307), சுச்சோதி முதலான அரசர்களும், தருமஞ்ஞன் (536), துன்மனன், கோபாலன்(570) உற்பலாங்கி, வேதசன்மா (533) சூரர் (பாடல் 790) முதலான மானிடர்களும் குறிப்பிடப் பெற்றுள்ளனர். தேவவன்மா(1198) என்ற அரசனின் மனைவி தருமசீலை 1203ஆவது பாடலிலே குறிப்பிடப்பெற்றுள்ளாள். சுச்சோதி நீதிமுன் வதானியன் தேவமித்திரன் ஆகிய நால்வரும் தேவவன்மாவின் நான்கு மகன்களெனக் குறிப்பிடப்பெற்றுள்ளனர்.

**விக்கிரகங்கள் -** கரிமுகன், கந்தவேள் மற்றும் பிரம தாண்டவர் ஆகிய உற்சவ விக்கிரகங்கள் பிரமதேவனது ஆணையின்படி தேவகம்மியனால் செய்யப்பட்டு திருப்பூவணத்தில் வழிபாட்டிற்கு வைக்கப்பட்டுள்ளன.

*"கரிமுகன்கந்தவேள்கருணையேபொழி*
*திருமுகமண்டலஞ்சிறந்திலங்கவான்*
*பெருகொளிபரப்பிடும்பிரமதாண்டவ*
*மருள்புரிதரவெழுந்தருளுநாயகன்" (பாடல் 759)*

*"இன்னநல்**விக்கிரகங்களெ**ண்டிசை*
*துன்னுசெங்கதிரொளிதுதைந்திலங்குசீர்ப்*
*பன்னருநவமணிபயின்றுபைம்பொனீள்*
*பொன்னணிமகுடவான்பொருந்துமண்டபம்" (பாடல் 760)*

இச் செய்தி மேற்கண்ட பாடல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 5.2.1.7. புராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள மரங்கள் மற்றும் பூக்கள்

திருப்பூவணப் புராணத்தில் பலவகையான மரங்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன. திருக்கைலாயத்திலும், திருப்பூவணத்திலும் உள்ள மரங்களின் பெயர்கள் பல பாடல்களில் இடம் பெற்றுள்ளன. இவற்றில் பாரிசாதமரம் பற்றிய செய்திகள் பல பாடல்களில் விரவி வந்துள்ளன.

**மருது** 131, 138, 142, 152, 1012 ஆகிய பாடல்களிலும், **கோங்கு** 198, 362, 930, 1056, 1155ஆகிய பாடல்களிலும், **அகில்** 773ஆவது பாடலிலும், **புன்னை** 86, 199 ஆகிய பாடல்களிலும், **வன்னி** 86, 1361ஆவது பாடல்களிலும், **மந்தாரமரம்** 87, 199, 152, 495, 1162 ஆகிய பாடல்களிலும், **சண்பகமரம்** 87, 199, 143 ஆகியபாடல்களிலும், **வெள்ளெருக்கு** 1100ஆவது பாடலிலும் இடம் பெற்றுள்ளன.

இம் மரங்களைத் தவிர, குங்குமமரம், வேலமரம், கூவிளமரம், கடம்பமரம், மாதுளமரம் ஆகியன 86ஆவது பாடலிலும், பலாமரம், பிப்பிலமரம், சந்தனமரம் ஆகியன 87ஆவது பாடலிலும் இடம் பெற்றுள்ளன.

பாரிசாதம்(237), உற்பலம்(548), அலரி(1370), தாமரை(548, 1375). தாழை(1376), அல்லி மலர் 833ஆவது பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

### 5.2.1.8. புராணத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள திசைகளும் தூர அளவுகளும்

**திசைகள் -** திசைகள் எட்டு (82), நான்கு பெருந்திசைகள் (1133), குடதிசை (531, 1319), வடதிசை (534), உத்திரத்திசை (538, 852, 1160, 1369), குணதிசை (1161,1317, 1222), புகழ்த்திசை (1053), தெக்கிண திக்கு (239, 530), அங்கி திக்கு(166, 236, 331), வாயுதிக்கு (1224), பூர்வதிக்கு (1157), நிருதிதிக்கு (748, 847, 1254), வன்னிதிக்கு (720), குணதிக்கு (730), தாரதிக்கு (751) ஆகிய திசைகள் திருப்பூவணப் புராணத்திலே குறிப்பிடப்பட்டுள்ளன.

**தூர அளவுகள் -** யோசனை தூரம் என்பது 63, 166, 243, 720, 1157, 1222, 1317ஆகிய பாடல்களிலும், அம்பு தூரம் (1224), கூவிளி தூரம் (1369), கணைபோம் எல்லை (1281) ஆகியனவும் புராணத்திலே குறிப்பிடப்பட்டுள்ளன.

தருமஞ்ஞன், துன்மனன், உற்பலாங்கி முதலானோரைக் குறிப்பிடும் இடங்களில் அவர்களது தாய்தந்தையர்களது பெயர்களும், அவர்களது ஊர்ப் பெயர்களும் அவர்களது குலப் பெயர்களும் இடம் பெற்றுள்ளன.

**பறவைகள் மற்றும் விலங்குகள்** - மயில் (638, 1357) இரண்டு பாடல்களில் இடம் பெற்றுள்ளது. பிரமதேவனை அன்னமாகவும்(862), திருமால் பன்றியாகவும்(862), இந்திரன் குயிலாகவும்(1132) வடிவமெடுத்தனர் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. கொக்கு(1100) இறகையும், புலி(1099)த்தோலையும் சிவபெருமான் அணிந்துள்ள செய்தி கூறப்பட்டுள்ளது. சலந்திரன் என்ற மண்டுகம்(தவளை) 1370ஆவது பாடலிலும், நகுடன் என்னும் பாம்பு நளமகாராசனைக் கடித்தது பற்றி 1308ஆவது பாடலிலும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

**இசைக்கருவிகள் -** துடி, பதலை, பறை, பேரிகை, அதிசாரங்கள், முழவு ஆகிய இசைக்கருவிகள் 999ஆவது பாடலில் குறிப்பிடப் பெற்றுள்ளன. குடமுழா 1123ஆவது பாடலில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 5.2.1.9. புராணம் கூறும் அறங்கள்

மணிகன்னிகைத் தீர்த்தத்தின் சிறப்புக்களை எடுத்துக் கூறும் இடத்திலே பல்வேறு விதமான தீவினைகளைக் குறிப்பிட்டு இவற்றை நீக்கவல்லது மணிகன்னிகைத் தீர்த்தம் எனப் பாடப்பெற்றுள்ளது. இவற்றில் தந்தைதாயாரிடத்துச் செய்யும் குற்றங்களே முதலாவதாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன. மற்றைய தீவினைகள் வரிசையாகப் பாடப் பெற்றுள்ளன.

1. தந்தை தாய் இவர்களுக்கு இழைத்த கொடுமைகளும்
2. வேறொரு மாதர் தோள் அணைந்த செயலும்
3. தனக்கு மூத்தோரை நிந்தனை செய்தலும்
4. வேதியர்களை கேலி செய்தலும்
5. மாடங்களின் பொருளை கையாடுதல் செய்தலும்

மிகுந்த தீய பயனை அளிக்கும் செயல்களாகும் எனப் பின்வரும் பாடல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

*"தந்தைதாய்தமக்கிழைத்ததணிவில்பாதகங்களும்*
*பந்தமாற்றுகின்றதோர்பராபரன்றுரோகமுஞ்*
*சுந்தரங்கொள்வேறொர்மாதர்தோளணைந்ததோடமும்*
*முந்தையோரைநிந்தைசெய்தமுடிவிலாதபாவமும் (பாடல் 422)*

*வேதியர்க்குவெகுளிசெய்தன்மிசைதலல்லமிசைதல்வெம்*
*பாதகங்கண்மாடபத்தியங்களாதிபாதக*
*மோதுகோள்களாதிபாவமொழியுமாலிப்பூவணந்*
*தீதிலன்பினோடுவந்துதெரிசனஞ்செயளவினில" (பாடல் 423)*

**இத் தீவினைகளைச் செய்தோர் திருப்பூவணத்திற்கு வந்து மணிகன்னிகையில் தீர்த்தமாடிச் சிவலிங்கத்தை வணங்கினால் இத்தீவினைகள் நீங்கப் பெற்று மறுமையில் நற்குடியில் பிறந்து வளமுடன் வாழ்வர் எனக் கூறப்பட்டுள்ளது.**

*"ஆங்கதுகாலையிற்கைதையடியேனையஞ்சலெனவருள்வாயென்னாத்*
*தேங்கியவத்திறனறிந்துதிரிந்தமுகந்தெரிந்துதிருவுளந்துணிந்து*
*பாங்கின்மலர்ப்பரமேட்டிதனக்காநீ**பொய்யுரைத்தபாவம்**பாறும்*
*பூங்கமலத்திருமருவுபூவணத்தினமைப்பூசைபுரிதியன்றே" (பாடல் 1422)*

**என்ற பாடலிலே பொய்யுரைத்தல் பாவம் என்றும், அது திருப்பூவணத்தில் வழிபாடு செய்தால் நீங்கப் பெறும் என்றும் பாடப் பெற்றுள்ளது. மேலும் திருப்பூவணப் புராணத்தில் பாடல் 455 முதல் 467 முடிய உள்ள 13 பாடல்களில் அந்தணர் பொருளை அபகரித்தல், பொய்க்கரி, கன்னிகைதனைப் பழித்தல், மதுநுகர்ந்திடும் மங்கை, ப்ரமகத்தி, பொன்பறித்தல் முதலான பல தீவினைகள் பட்டியலிடப் பெற்றுள்ளன.**

**குன்மநோய் - திருப்பூவணப் புராணத்திலே, துன்மனன் முத்தியடைந்த சருக்கத்திலே, அவனது தீயகுணங்களைக் குறிப்பிடும் பாடலிலே வெண்குட்டம்(குஷ்டம்) என்று அழைக்கப்படும் நோயைப் பற்றி குறிப்பிடப் பெற்றுள்ளது.**

*"சீர்த்திகளகன்றவேதத்திறங்கள்யாவுந்திறம்பி*
*யார்த்தநல்லறிவிழந்தேயறந்தருஞ்செயன்மறந்து*
*கூர்த்த**வெங்குன்மநோயாற்**கொலைபுரியெயினரோடுந்*
*தூர்த்தர்களோடுங்கூடித்தொன்னெறிமுறைதுறந்தான்" (பாடல் 480)*

**வாத பித்தம்** பற்றி 1304ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

**கனவு பலன்கள் -** 1305, 1306, 1307 மற்றும் 1308 ஆகிய பாடல்களிலே கூறப் பெற்றுள்ளது. பகற்கனவு பலித்திடும் என்று 1303ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

## 5.3. வடநூற் புலமை

கந்தசாமிப்புலவர் எழுதிய நூல்களுள் திருப்பூவணப் புராணமும், திருவாப்பனூர்ப் புராணமும் வடமொழிப் புராண நூல்களிலிருந்து தமிழில் மொழி பெயர்த்து எழுதப் பெற்றுள்ளன. அவை முறையே 18 புராணங்களுள் உள்ள பிரமகைவர்த்த புராணம் மற்றும் சைவ புராணம் என்ற வடநூற்களிலிருந்து எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

*"சாற்றிய புராண மோர்ஆறு மூன்றுட சைவத்திற் சேத்திர காண்டத்*
*தேற்றிய வேகா தசவுருத் திரசங்கிதையின ல்ஈறிலான் அருளால்*
*தோற்றிய இடப புரியின்மான் மியத்தைச் சொற்சுவை பொருட்சுவை தோன்ற*
*ஆற்றிய தவத்தீர் சொல்லுகேன் உலகம் அறம் பொரு ளின்பம்வீ டடைய"*[279]

"தவத்தினைச் செய்து முடித்த முனிவர்களே. சொல்லப்பட்ட பதினெட்டு புராணங்களுள் ஒன்றாகிய *சைவ புராணத்திலே ஏகாதச உருத்திர சங்கிதையின் உட்பிரிவாகிய சேத்திர காண்டத்திலே* கூறப்பட்ட அழிவில்லாதவராகிய சிவபெருமானது திருவருளால் உண்டாகிய இந்நந்தி நகரத்தின் பெருமையை சொல்நயம், பொருள்நயம் தோன்றவும், தருமம், அர்த்தம், காமம், மோட்சம் ஆகியவற்றை அடையவும் கூறுகின்றேன்" என்பது இப்பாடலின் பொருளாகும். எனவே வடமொழியில் உள்ள **சைவ புராணத்திலே ஏகாதச உருத்திர சங்கிதையின் உட்பிரிவாகிய சேத்திர காண்டத்திலே** சூதகமுனிவாரால் கூறப்பெற்ற கருத்துக்களே கந்தசாமிப் புலவர், திரு ஆப்பனூர் புராணமாகப் பாடியுள்ளார் என்பது தெளிவு.

இதனால் கந்தசாமிப் புலவர் வடமொழியில் உள்ள 18 புராணங்களிலும் தேர்ச்சி பெற்று விளங்கி உள்ளார் என்பது தெளிவு. அவற்றிலும் சைவம் மற்றும் பிரமகைவர்த்தம் என்ற இரண்டு புராணங்களில் புலமை பெற்று இருந்திருக்கிறார் என்பது உறுதி.

## 5.4. சோதிடம் மற்றும் வானியற் புலமை

திருப்பூவணப் புராணத்தில் வானியல் தொடர்பான சில செய்திகள் இடம் பெற்றுள்ளன.

1) **பூமி உருண்டை** என்ற செய்தியானது 'நிலவலயம்' என்று 622ஆவது பாடலில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

*"அலர்கதிர்வெய்யோன்றீர்த்தத்தங்கணன்றனருளதனலாடலாலே*
***நிலவலயந்****தனிற்செய்தநீண்டகொடும்பாதகமுநீங்காநின்று*
*மலிபுகழ்சேரித்தீர்த்தமான்மியத்தினான்மிகுமங்கலமுமாகு*
*முலகமெலாம்பணிந்தேத்தவுயர்தவநீபுரியும்வகையுரைப்பக்கேண்மோ" (பாடல் 622)*

2) **பூமி ஏழுகடலால் சூழ்ந்தது** என்பதை 1203ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

3) **'புதன்'** எனும் கோள் பற்றிய செய்தி,

*"வீடுற்றந்தவிளங்கிழையுந்திகழ்வெய்யோனுங்*
*கூடுற்றன்பின்முயங்கு****புதன்****பதிகொண்டேய்வா*
*னாடுற்றன்பினனாகதலத்திடைநண்ஷங்காற்*
*றேடுற்றங்கணடைந்தனர்பண்ணவர்திரளோடும்" (பாடல் 651)*

என்ற பாடலில் உள்ளது.

4) **மருத்துவர் இருவர் -** சோதிடத்தில் செவ்வாய் கிரகமானது அறுவைச் சிகிச்சைக்கும் புதன் கிரகமானது மருந்துக்கும் குறிப்பிடப்படுகின்றன. எனவே இவ்விரு கிரகங்களையும் மருத்துவர் எனக் குறிப்பிடுவர். இது பற்றிய செய்தி 649ஆவது பாடலிலும், இடபராசி பற்றி 664ஆவது பாடலிலும், வைகாசி விசாகம் பற்றி 666ஆவது பாடலிலும், மந்திரி (வியாழ கிரகம்) சிம்மராசியில் உள்ளது பற்றி 669ஆவது பாடலிலும், தநுர் மாதம் பற்றி 670ஆவது பாடலிலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

5) **அருந்ததி** - விண்மீனை 'வடமீன்கற்பின்' என்று 887ஆவது பாடலிலே குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

6) கோள்கள் தங்களது சுற்றுப்பாதையில் சூரியனை ஒரு குறிப்பிட்ட திசை வேகத்தில் சுற்றி வருகின்றன. பூமியிலிருந்து பார்க்கும் போது, சில நேரங்களில், குறிப்பாகச் சூரியனுக்கு எதிர்திசையில் கோள்கள் வரும்போது, அக்கிரகங்கள் வேகமாக முன்நோக்கிச் செல்வது போன்று தோன்றும் இதனை 'அதிசாரம்' என்று கூறுவர். சில நேரங்களில் கோள்கள் பின்நோக்கி நகர்வது போன்று தோன்றும் இதனை 'வக்கிரம்' என்பர். சோதிட பஞ்சாங்கத்தில் இவைகள் கணிக்கப்பட்டு அதற்கான பலன்கள் கூறப்பட்டிருக்கும்.

*"பொருதிரைக்கடல்சூழ்புடவியிற்பூர்வம்பொருந்துமீரறுவருடஞ்சூழ்*
*வரு****கிரகங்கள்வக்கிரமுறலால்****வான்முகின்மழைவறந்திடவே*

*தரைவளந்தணப்பச்சலந்தருவடிவச்சலந்தரன்றானொர்மண்டுகமா*
*யருமணங்கமழுமலர்தருமலரியடியினாங்கமர்ந்தினிதிருந்தான்" (பாடல் 1370)*

என்ற பாடலில் கோள்கள் வக்கிரமாகச் சென்றதால் மழை பொய்த்தது எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

7) பூமி தனது அச்சில் 23½ கோணத்தில் சாய்ந்து சுற்றுகிறது. இதனால் பூமியிலிருந்து சூரியனைப் பார்க்கும் போது வருடத்தில் ஆறுமாதகாலம் சூரியன் வடக்கு நோக்கிச் செல்வது(உத்தராயணம்) போன்றும், மறு ஆறுமாதகாலம் சூரியன் தெற்கு நோக்கிச் செல்வது (தட்சினாயணம்) போன்றும் தோன்றும். இவற்றைத் திருப்பூவணப் புராணத்தின் 1345ஆவது பாடலிலே புலவர் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

8) 'அண்ட பகிரண்டம்' (nepulas) பற்றிய குறிப்பு 912ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

9) நவக்கிரகங்களின் நாயகனாகச் சூரியன் உள்ளது பற்றிச் சூரியன் பூசனைச் சருக்கத்திலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

10) சந்திரகிரகணம் பற்றி 1280ஆவது பாடலிலே குறிப்பிடப் பெற்றுள்ளது.

## 5.5 புராணங்களை இயற்றியதற்கான காரணம்

கந்தசாமிப்புலவர் திருப்பூவணப் புராணத்திலும், திருவாப்பனூர்ப் புராணத்திலும் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதியதற்கான காரணத்தைத் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார்.

### 5.5.1திருப்பூவணப் புராணம்

கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணத்தில்
*"அற்றமில் கலையி னுண்ணறிவின் மேலையோர்*
*பொற் றிருப்பூவணப் புராண மாண்புற*
*முற்பகர் **வடகலை மொழிபெயர்த்து நீ***
*நற்றமிழான் முறை நவிற்று கென்னவே" (பாடல் 21)*

கலையிற் சிறந்த நுண்ணறிவுடைய மேன்மை மிகுந்தோர், கந்தசாமிப்புலவரை நாடிச் சென்று அவரிடம் திருப்பூவணத் திருத்தலத்தின் பெருமைகளை அனைவரும் அறியும் வகையில் தமிழில் பாடவேண்டும் என வேண்டிக் கொண்டனர். அவர்களது

வேண்டுகோளுக்கு இணங்கியே கந்தசாமிப் புலவர் திருப்பூவணப் புராணத்தைத் தமிழில் எழுதியுள்ளார்.

### 5.5.2 ஆப்பனூர்ப் புராணம்

திருப்பூவணப் புராணத்தை நுண்ணறிவின் மேலையோர் கேட்டுக் கொண்டதற்கு இணங்கத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடுகிறேன் என்று குறிப்பிட்டுள்ளது போலத் *"திருவாப்பனூர் தலத்திற்கு உரிய ஆதி சைவர் வழிவந்தோரும் மற்றும் மதுரையை ஆண்ட மன்னன் இறைகுலசேகர வழுதியின் வழித்தோன்றினோரும் வடமொழியில் உள்ள திருவாப்பனூர்ப் புராணத்தை எல்லோரும் எளிதில் அறியும்படி தென்மொழியில் சொல்வாய் என்று கட்டளையிட அதைத் தடுத்துச் சொல்ல இயலாமல் சொல்ல ஆரம்பித்தேன்"* [280] என அப்புராணத்தின் பாயிரத்தில் கந்தசாமிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

## 5.6. ஒப்பற்ற புலவன்

திருப்பூவணம் தொடர்பான தமிழ் இலக்கியங்களை உருவாக்கிய பெருமை கந்தசாமிப் புலவருக்கு மட்டுமே உரியது. கந்தசாமிப் புலவர் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்த சமகாலப்புலவர்கள் "கந்தசாமிப் புலவன் அன்பிற் செய்த இந்த நூலுக்கு எந்த நூல் இணையாகும்?" என்று பாடியிருக்கின்றனர்.

*"பூவணத்தெம் புண்ணியனமுன் பொன்னனையா ளுக்காக்கொள்*
*தூவணத்த பொன்மேனிச் சுந்தரன்மேற் - பாவணத்த*
*கந்தசா மிப்பேர்க் கவிஞனன்பிற் செய்யிந்நூற்*
*கெந்தநூ லாகு மிணை" (திருப்பூவணநாதருலா, சிறப்புப் பாயிரம்)* [281]

இதனால், கந்தசாமிப்புலவர் இயற்றிய நூல்கள் அவர் காலத்திலேயே கற்றோர் மத்தியில் சிறப்புப் பெற்று விளங்கியமையும் மற்றைய புலவர்கள் அந்நூல்களைப் பெரிதும் மதித்துப் போற்றியுள்ளமையும் தெளிவு.

## 5.7. நந்தி சாய்ந்து காட்சியளித்த வரலாறு

சைவத்தையும் தமிழையும் தழைக்கச் செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் மூவர் முதலிகள். இவர்கள் முறையே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என வரிசைப் படுத்தப்பட்டுள்ளனர். இவர்கள் பாடியருளிய திருமுறைகள் 'மூவர் தேவாரம்' என்று அழைக்கப்படுகின்றன. இம்மூவர் பாடலும் கிடைக்கப் பெற்ற ஒரே பாண்டியநாட்டுத் திருத்தலமாகத் திருப்பூவணம் விளங்குகிறது. இம் மூவரும் வைகை ஆற்றின் வடகரையிலிருந்தே தென்கரையில் உள்ள திருப்பூவண நாதரை வணங்கி வழிபட்டுள்ளனர் என்றும் அப்போது வைகை ஆற்று மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்தன என்றும் அவர்களுக்குக் காட்சியருள வேண்டித் திருநந்திதேவரைச் சற்றே சாய்ந்திருக்குமாறு சிவபெருமான் பணித்தார் என்றும் "புட்பவனநாதர் வண்ணம்" என்ற நூலில் கந்தசாமிப் புலவர் கூறுகிறார். திருப்பூவணத்தில் நந்திதேவர் சற்றே சாய்ந்திருப்பார்(படம்-9). ஈசனை மறைப்பதில்லை. ஆற்றின் மறுகரையில் திருஞானசம்பந்தர் நின்று பாடிய இடத்திலிருந்தும் வழிபடலாம்.

*"செப்பு மூவர்சொல் தமிழ்த்துதிக்க விருப்பமொடு வந்து வையை*
*மணற்சிவ லிங்கமென மனத்தோணி முன்பு வடகரைக்கவர்*
*நின்று தமிழ்பாடு பொழுதே யிடப மாமுதுகு சாயும்வகையே*
*செய்துமுன் மூவர் தரிசிக்க மகிழ்நேசர் "*

*-(புட்பவனநாதர் வண்ணம்)*

இப்பாடல் திருப்பூவணநாதர் தமிழ்மீது கொண்டுள்ள விருப்பத்தையும் ஆற்று மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்த தன்மையையும் எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

### 5.7.1 ஆடித் தபசு மண்டபம்

திருஞானசம்பந்தர் திருப்புத்தூரில் ஈசனை வழிபட்டுத் திருப்பூவணத்து வைகையாற்றின் வடகரையை வந்தடைந்தார். ஆற்றினைக் கடக்க எத்தனித்த போது **ஆற்றின் மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்துள்ளன.** எனவே திருஞானசம்பந்தர் ஆற்றின் வடகரையிலிருந்தபடியே தென்கரையில் உள்ள திருப்பூவணநாதரை வணங்குகிறார். 'தென்திருப்பூவணமே' என்று முடியும் பதிகம் பாடிப் பணிகிறார். திருஞானசம்பந்தருக்குக் காட்சியளிக்க விரும்பிய ஈசன் நந்தியை

மறைக்காமல் சாய்ந்திருக்கும்படிக் கட்டளையிட்டார். நந்தி சற்றே வலது புறமாகச் சாய்ந்து கொள்ள திருஞானசம்பந்தர் திருப்பூவணநாதரைத் தரிசித்து வழிபட்டார். இதனால் திருப்பூவணம் கோயிலில் இன்றும் நந்தி மறைப்பதில்லை. வைகை ஆற்றின் தென்கரையில் இருந்து திருஞானசம்பந்தர் வழிபட்ட இடத்தில் ஆடித்தபசு மண்டபம் கட்டி வழிபடுகின்றனர். இப்போதும் இம்மண்டபத்திலிருந்து திருப்பூவணநாதரை வழிபடலாம். நந்தி மறைக்காது.

## தொகுப்புரை

*"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்*
*பொன்றாது நிற்பதொன்று இல்"* (குறள் 233)

என்ற வள்ளுவனின் வாக்கிற்கு இணங்க புகழால் உயர்ந்த புலவர்களே உலகில் என்றென்றும் நிலைத்து நிற்கின்றனர். 18 புராணங்களைக் கூறிய முனிகணங்கள் வாழ்ந்து சுமார் 3000 ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. கந்தசாமிப் புலவர் வாழ்ந்து 388 ஆண்டுகள் ஆகிவிட்டன. இவர்களது பாடல்களும் புகழும் இன்றும் மக்களிடம் நிலைத்து நிற்கின்றன. கந்தசாமிப்புலவரின் வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்ளத் துணையாய்த் திருப்பூவணப் புராணம், திருப்பூவணநாதர் உலா, திருவாப்பனூர் புராணம் ஆகிய நூல்களில் உள்ள பாயிரம் மற்றும் சிறப்புப் பாயிரப் பாடல்களைக் கொண்டே இந்த நூல் ஆசிரியரைப் பற்றி அறிய முடிகிறது.

இவர் பிறந்து வாழ்ந்த காலம் 17ஆம் நூற்றாண்டு. சொந்த ஊர் திருப்பூவணம். பொன்னனையாளின் மகனுக்கு ஒப்பானவராகக் கருதப்பட்டுள்ளார். இவரது தாய் தந்தையர் உடன்பிறந்தோர் பற்றி குறிப்பேதும் கிடைக்கப் பெறவில்லை. வடமொழியிலும் தமிழிலும் நல்ல புலமை பெற்றுத் திகழ்திருக்கிறார். திருக்குறளையும் திருமுறைகளையும் நன்கு கற்றுத் தேர்ந்துள்ளார். இவற்றிலுள்ள சொல்லாட்சிகளைத் தனது நூல்களில் ஆங்காங்கே எடுத்தாண்டுள்ளார். மன்மத வருடம் மாசி மாதம் (கி.பி. 1621ஆம் ஆண்டு) திருப்பூவணப் புராணத்தை எழுதியுள்ளார். திருவாப்பனூர் புராணம், திருப்பூவணநாதர் வண்ணம், மூர்த்தி வகுப்பு, தல வகுப்பு, திருப்பூவணநாதர் உலா ஆகியனவும் இவரால் இயற்றப்

பெற்றுள்ளன. இவர் இயற்றிய நூல்களும் திருப்பூவணப் புராணமும், திருவாப்பனூர்ப் புராணமும் திருப்பூவணநாதர் உலாவும் தற்போது கிடைக்கப் பெற்றுள்ளன. இவரது நூல்கள் இவர் காலத்திலேயே சிறப்புப் பெற்று விளங்கியுள்ளன. அறிஞர்களும் பொது மக்களும் இவரிடம் சென்று தமிழில் புராணங்களைப் பாடுமாறு வேண்டியுள்ளனர். பாண்டிய மன்னர் வழித்தோன்றியோரின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் திருவாப்பனூர்ப் புராணத்தைப் பாடியுள்ளார். பிறர்சொல்லுக்கு மதிப்பளிக்கும் மாண்பினர் என்பது தெளிவு. இவர் காலத்தில், இவர் நூல்களை இயற்றுவதற்கு முன்னரே மக்கள் மற்றும் புலவர் மத்தியில் நன்கு அறியப்பட்டவராக இருந்துள்ளார்.

*****

சான்றெண் விளக்கம்

[268] "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று (குறள் 236)
[269] வே.இரா.மாதவன், **தமிழில் தல புராணங்கள்,** இரண்டாம் பகுதி பக்கம் 100
[270] அபிதான சிந்தாமணி பக்கம் 333
[271] ச.வே. சுப்பிரமணியன், **இலக்கிய வகையும் வடிவும்,** பக்கம் 419
[272] சுதாகர்பாபு, அனுராதா மணவிழா மலராக வெளியிடப் பெற்ற **திருப்பூவணநாதர் உலா,** பக்கம் 7
[273] வே.இரா.மாதவன், **தமிழில் தல புராணங்கள்** இரண்டாம் பகுதி, பக்கம் 110
[274] கந்தசாமி, சோ.ந., **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்,** முதற்பாகம் - முதற்பகுதி, பக்கம் 58
[275] ச. இரபேல், **யாப்பருங்கலக் காரிகை** (மூலமும் வினா-விடையும்), பக்கம் 58
[276] கந்தசாமி, சோ.ந., **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்,** முதற்பாகம் - முதற்பகுதி, பக்கம் 60
[277] மேலது, பக்கம் 736
[278] மேலது, பக்கம் 781
[279] கந்தசாமிப் புலவர், திருவாப்பனூர் புராணம், சூதரை வினாய காதையின் கடைசிப் பாடல்
[280] கந்தசாமிப் புலவர், திருவாப்பனூர் புராணம், பாயிரம்

*"மறைமுழுதும் அளப்பரிய ஆப்பனூர் உடையபிரான் மான்மியஞ்சிற்*
*றறிவுடைய யானளக்குந் தரத்ததோ அத்தலத்தின்* ***ஆதி சைவர்***
***இறைகுலசே கரவழுதி நாமநம்பி மரபுதித்தோர்*** *இன்னூல் தென்னூல்*
*துறைமுறையில் இயற்றெனச் சொலமறுக்க மாட்டாமைத் தொடங்கி னேனால்"*

[281] கந்தசாமிப் புலவர், திருப்பூவணநாதருலா, பதிப்பாசிரியர் **வே. சாமிநாதையர்,** பக்கம் 4

# முடிவுரை

**"திருப்பூவணப் புராணம் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வில், கந்தசாமிப் புலவர் பாடிய திருப்பூவணப் புராணத்திலுள்ள 1437 பாடல்களின் கருத்துக்கள் ஆய்வு செய்யப் பெற்றன. இவ்வாய்விலிருந்து பின்வரும் முடிவுகள் ஆய்வாளரால் பெறப்படுகின்றன.

**திருப்பூவணப் புராணம்**

- 🕮 திருப்பூவணப் புராணம் பிரமகைவர்த்த புராணத்திலுள்ள ஒரு பகுதியின் தமிழ் மொழிபெயர்ப்பாகும்.
- 🕮 இதில் நைமிசாரணியச் சருக்கம், சவுநகர் சூதரை வினவிய சருக்கம், திருக்கைலாயச் சருக்கம், ஆற்றுச் சருக்கம், திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம் நீங்கலாக உள்ள இருபது சருக்கங்களிலே புராணக் கதைகள் கூறப்பட்டுள்ளன.
- 🕮 இதில் மனிதர்களின் கதைகளும், தெய்வங்களின் கதைகளும் கூறப்பட்டுள்ளன.
- 🕮 திருப்பூவணத் திருத்தலச் சிறப்புகள், சிவலிங்கம் தோன்றிய வரலாறு, அதனைப் பூசனை செய்து வரங்கள் அடைந்தோர், வழிபாட்டுப் பலன்கள் ஆகியன திருப்பூவணப் புராணத்திலே கூறப்பட்டுள்ளன.

📖 ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் அச்சருக்கத்தில் கூறப்பட்டுள்ள புராணக்கதையானது பிரமகைவர்த்த புராணத்தின் எத்தனையாவது அத்தியாயத்தில் உள்ளது என்று கூறப்பட்டுள்ளது.

📖 புராணக் கதைகளைப் படிப்போரும் கேட்போரும் அடையும் பலன்கள் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் கூறப்பட்டுள்ளன.

**நூலாசிரியர்**

- திருப்பூவணப் புராணத்தைக் கந்தசாமிப் புலவர் தமிழில் மொழிபெயர்த்துக் கி.பி. 1620-21ஆம் ஆண்டில் பாடியுள்ளார்.
- இவர் இயற்றிய திருப்பூவணநாதர் உலா, திருவாப்பனூர்ப் புராணம் ஆகிய நூல்கள் கிடைக்கப் பெறுகின்றன.
- இவர் இயற்றிய திருப்பூவணநாதர் வண்ணம், திருப்பூவணம் தலவகுப்பு, திருப்பூவணம் மூர்த்தி வகுப்பு ஆகிய நூல்கள் கிடைத்தற்கு அரிதாய் உள்ளன.
- இவர் திருப்பூவணத்தைச் சேர்ந்தவர்.
- திருப்பூவணத்தில் விளங்கும் உற்சவமூர்த்தியான அழகியபிரான் பொன்னனையாளின் புத்திரன் போன்றவர். இவ்வுற்சவ மூர்த்திக்கு இணையாகக் கந்தசாமிப் புலவர் மக்களால் மதிக்கப்பட்டுள்ளார்.
- இவரது முழுமையான வாழ்க்கை வரலாற்றை அறிய இயலவில்லை.
- இவர் வடமொழிநூலறிவும் தமிழ்நூலறிவும் புலமையும் மிகுந்தவர்.

**திருப்பூவணப் புராணத்தைப் படிப்பதாலும் கேட்பதாலும் உண்டாகும் பலன்கள்**

- சூரியன் பூசனைச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் புந்தியில் கொள்வோரும், அவர்கள் திருப்பூவணம் வந்து வழிபட்டு முத்தி யடையும் பேறு கிடைக்கப்பெறுவர்.
- திரணாசனன் முத்தி பெற்ற சருக்கத்தை இசையுடன் பாடுவோரும், இக் கதையைக் கூறுவோரும், பொருள் உணர்ந்தோரும் மற்றும் இக்கதையைச் செவிமடுத்துக் கேட்டோரும் சிவபெரும்பதி சேர்வர்.
- மணிகன்னிகைச் சருக்கக்கதையைக் கூறுவோர் அர்த்தநாரியான சிவபெருமானின் பதியில் தங்குவர்.
- துன்மனன்சருக்கத்தைப் படிப்போரும் அதனை ஓதுவோரும் கேட்போரும் பூசை செய்வோரும், ஊர்வசியைப் போன்ற அழகுடைய பெண்டிருடன் பதினாயிரம் வருடம் வாழ்வர்.
- தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் அரனாகிய சிவபெருமானிடத்து வந்து அவரது அருகில் இருப்பர்.
- உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் கலியின் கொடுமை நீங்கப்பெற்று, வளமையுடன் வாழ்ந்து நற்கதி பெறுவர்.
- பாற்கரபுரச் சருக்கத்தைப் பண்ணொடு பாடுவோர் செவிகொண்டு கேட்டு உள்ளத்தில் கொள்வோர், செல்வம்மிகுந்த நாட்டை அரசாள்வர்.
- சர்வபாவமோசனச்சருக்கத்தை படிப்போரும் அதைக் கேட்போரும் பிறரிடம் கூறுவோரும், மனைவி மக்கள் பேரன் பேத்திகள் சுற்றத்துடன் மங்களமாக வாழ்ந்து, சிவபிரானின் பொற்பாதங்களை அடைவர்.

- பிரமசாபமோசனச்சருக்கத்தைத் தினமும் படிப்போர், அதன் பொருளை உணர்ந்தோர், அதனைப் பிறரிடம் கூறுவோர், அதைக் கேட்போர் அனைவரும் தங்களது வாழ்நாளில் நீண்ட சுவர்க்கத்தில் உள்ள மகளிர் சூழ இருப்பர்.
- இலக்குமி சாபமோசனச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் இலக்குமியின் அருளாலே செல்வம் பெற்று மங்களமாக வாழ்வர். மேலும் இதனால் கிடைக்கும் பலன்களைத் திருநந்தி தேவரே நேரில் வந்து எடுத்துரைத்தாலும் அரிதாகும். அவ்வளவு அதிகமான பலன்கள் கிட்டும்.
- உமாதேவி திருவவதாரச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் சிவபிரான் திருவருளினாலே முத்தியடைவர்.
- திருக்கலியாணச் சருக்கத்தைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் கடுந்துயரங்கள் நீங்கப் பெற்று மங்களம் உண்டாகும். சுப நிகழ்ச்சிகள் நடைபெறும். இவர்கள், இந்திரபோகங்கள் நிறைந்த செஞ்சடிலன் பதத்தில் சேர்வர்.
- தக்கன் வேள்வியழித்த சருக்கத்தை விருப்பத்துடன் படிப்போரும் கேட்போரும், எட்டுத் திசைகளும் புகழ அரசராய் வாழ்வர். சித்தம் மிகும். சுவர்க்க இன்பத்தை நீண்ட காலம் அனுபவிப்பர்.
- உமைவருசருக்கத்தை ஓதுவோரும் அதைக் கேட்போரும், சிவபெருமானது தாமரைமலர்ப் பாத நிழலில் வாழ்வர்.
- சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கத்தைப் படிப்பவர்கள், நல்ல புதல்வர்களைப் பெற்று மேன்மையடைவர். பத்தி மிகுந்திருப்பர், தேக சுத்தமாய் வாழ்ந்து சிவகதி சேர்வர்.
- சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் சிவபிரானது மோன ஞான நன்துதி பொருந்துவர்.
- தீர்த்தச் சருக்கத்தைப் படிப்போரும் கேட்போரும் *"பார்புரந்தருள் பார்த்தி வராகியே பரவரும் பரமுத்தி பொருந்துவார்"*.
- நளன்கலிமோசனச்சருக்கத்தை இசையுடன் பாடி மகிழ்ச்சி அடைவோரின் துன்பங்கள் நீங்கும். கலிகாலத்தின் கொடுமைகள் குறையும்.
- திருவிழாச் சருக்கத்தைப் படிப்போரும் அதை அன்புடன் கேட்போரும் தங்களது துயரமான எண்ணங்கள் நீங்கப் பெற்று பொன்னம்பலத்தைச் சென்று சேர்வர்.
- சிதம்பரவுபதேசச் சருக்கத்தைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் திருப்பூவண நாதருக்கு நல்ல பூசைகள் செய்தால் கிடைக்கும் பலன்கள் அனைத்தும் கிடைக்கும். இவர்கள் நாடிய பொருள்கள் யாவும் கிடைக்கப்பெறுவர்.
- *"புவனம் எங்கும் சீர்போற்றும் பூவண மான்மியத்தை நவிலுறச் செவிக்கு நாளும் நல் விருந்தாக எடுத்துக் கூறுவோர்க்குச் சிவபிரான் அருளினாலே, அவர்கள் விரும்பும் பேர் உவகை கூடும், இது சத்தியஞ் சத்தியம்".*

**தலம்**

- பாண்டியநாட்டின் தலைநகராகிய மதுரைக்குத் தென்கிழக்குத் திசையில் 18 கி.மீ. தூரத்திலே திருப்பூவணம் உள்ளது.
- திருஞானசம்பந்தரும், அப்பரும், சுந்தரரும், மாணிக்கவாசகரும், கரூர்த் தேவரும், அருணகிரிநாதரும் திருப்பூவணம் வந்து இறைவனைப் பாடிப் பணிந்ததைப் போன்றே, வடநாட்டில் வாழ்ந்த முனிவர்கள் தவசிகள் பண்டிதர்கள் பலரும் திருப்பூவணம் வந்து பூவணனை வணங்கிப் பலன் அடைந்துள்ளனர்.
- சமயங்கள் தோன்றியதற்குக் காரணமாக இரண்டு கொள்கைகள் கூறப்படுகின்றன. "காலம் சென்ற முன்னோர்களை வணங்குவதிலிருந்து சமயம் உருவானது". என்றும், "இயற்கை சக்திகளைத் தெய்வங்களாகக் கருதி வணங்குவதிலிருந்து சமயம் உருவானது" என்றும் கூறுகின்றனர். இவ்விரண்டு வழிபாடுகளும் திருப்பூவணத்தில் சிறப்பாக உள்ளன.

**தலத்தின் பெயர்**

- இவ்வூர் 'திருப்புவனம்' (Tiruppuvanam) என்று அழைக்கப்படுகிறது. தமிழ்த் திருமுறைகளிலும் கல்வெட்டுக்களிலும் இவ்வூர் 'திருப்பூவணம்' என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது.
- கந்தசாமிப் புலவரின் திருப்பூவணப் புராணத்திலும், திருப்பூவண நாதருலாவிலும், 'புட்பவனம்' என்றும் 'பூவணம்' என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளது.
- "திருப்புவனம்" என்று எதிலும் குறிப்பிடப் பெறவில்லை. இப்பெயருக்கான காரணகாரியங்களும் இல்லை. இப்பெயர் ஆங்கிலேயர்களது ஆட்சிக் காலத்தில் உண்டானது.
- 'திருப்புவனம்' என்ற பெயரால் இவ்வூரை அழைப்பது தவறாகும் என்பது ஆய்வாளரின் கருத்து.
- திருப்பூவணத்தில் சிவலிங்கம் 'பூவால் ஆனது'. பூவால் ஆனதால் 'பூவணன்' எனக் காரணப் பெயர் உண்டானது. பூவணன் தோன்றிய இடம் 'பூவணம்' என்று அழைக்கப்பட்டது.
- திரு(மகாலெட்சுமி) வந்து வணங்கிய தலம் என்பதால் 'திரு' என்ற அடைமொழி சேர்ந்துத் 'திருப்பூவணம்' என்றழைக்கப்படுகிறது.
- 'பூவணம்' என்ற சொல்லை வடநூலோர் 'பூவனம்' எனப் பொருள் கொண்டு புராணங்களில் 'புஷ்பவனம்' என வடமொழியில் குறிப்பிட்டிருக்க வேண்டும்.
- திருப்பூவணப் புராணத்திலோ வேறுபிற தமிழ் இலக்கியங்களிலோ 'பூவனம்' என்ற சொல்லாட்சி இல்லை.
- 'புஷ்பவனம்' என்ற வடசொல்லைத் தமிழில் 'புட்பவனம்' என்று மாற்றித் திருப்பூவணப் புராணத்திலும், திருப்பூவணநாதருலாவிலும் கந்தசாமிப் புலவர் பயன்படுத்தியுள்ளார்.
- திருப்பூவணத்திற்கு முத்தியாச்சிரமம், சிதம்பரம், ரகசிய சிதம்பரம், தட்சிண காசி, சதுர்வேதபுரம், பிதிர் முத்தி புரம், பிதிர் மோட்சபுரி என்றும் பெயர்கள் உண்டு.
- இத்தலம் கிரேத யுகத்திலே தேவிபுரம் என்றும், திரேத யுகத்திலே இலக்குமி புரம் என்றும், துவாபர யுகத்திலே நான்றலைப்பிரான் நகரமென்றும் பெயர் பெற்றது. நான்கவதும் கடைசியுமான இக்கலியுகத்திலே, பாற்கரபுரம் எனப் பெயர் பெற்றது.

**கல்வெட்டுக்கள்**

- நடனமாடும்அரங்கு, திறைகள் அளக்கும் மண்டபம், தமிழ்க்கழக மண்டபம், ஆரணங்கள் முழங்கு மண்டபம், முரசு அதிரும் மண்டபம், தான மண்டபம், தந்திரம் பயிலும் சைவ மடம், முனிவர் சதுக்கம், கடைவீதி, யாகமண்டபம், சித்திரமண்டபம் ஆகியன முன்காலத்தில் கோயில் அருகே இருந்திருக்கின்றன.
- இப்போது இம்மண்டபங்கள் ஏதும் இல்லை. அவைகளை அகற்றி, அவற்றின் கற்களைக்கொண்டு திருக்கோயில் மதிலை அமைத்துள்ளனர். எனவே இம் மண்டபங்களில் இருந்த கல்வெட்டுகள் சிதையுண்டு கோயிலின் சுற்றுச் சுவர்களில் பகுதிபகுதியாக காணக்கிடக்கின்றன.
- மிகப் பழமையான பல கல்வெட்டுக்கள் சிதையுண்டு துண்டுதுண்டு களாகக் கோயில் வளாகத்தில் சிதறிக்கிடக்கின்றன.

**தலத்தின் சிறப்புகள்**

- கங்கை நதிக்கரையில் காசி எவ்வளவு சிறப்புடையதோ அதைவிடச் சிறப்புடன் வைகை நதிக்கரையில், **காசிக்கு வீசம் கூட** என்ற சிறப்புடன் திருப்பூவணம் விளங்குகிறது.
- தருமஞ்ஞன், அவனது பிதிர்களை முத்தியடைவித்துள்ளான்.
- சுச்சோதிராசன் மற்றும் அவனுடன் வழிபட்டோரின் முன்னோர்கள் முத்தியடைந்துள்ளனர். இதனால் திருப்பூவணம், 'பிதிர் முத்தி புரமாகவும்' சிறப்புற்றுத் திகழ்கிறது.
- திரணாசனன் முத்தியடைந்துள்ளான்.
- தில்லையும் திருப்பூவணமும் குருஉபதேசத் தலங்களாகும்.
- திருப்பூவணத்திலே குருவினை வழிபட்டால் மகிழ்ச்சி உண்டாகும்.
- திருப்பூவணம் திருக்கோயில், வடகிழக்குத் திசையை நோக்கிச் சிதம்பரத் திருத்தலத்தைப் பார்த்தபடி அமையப் பெற்றுள்ளது.

- இவ்வமைப்பினால் திருப்பூவணம் கோயில் வாசலில் நின்று கொண்டு, உள்ளே திருப்பூவணநாதரையும் வெளியே சிதம்பரத் திருத்தலத் திசையை நோக்கியும் வணங்க முடியும்.
- கருவறை விமானத்தில் ஐந்து கலசங்கள் உள்ளன. நான்கு கலசங்கள் உருண்டை வடிவில் திசைக்கு ஒன்றாக உள்ளன. நடுவில் உள்ள கலசம் சதுர வடிவில் உள்ளது.

- **பாவம் போக்கும் பூவணம்**
- அறிந்து செய்த தவறுகளால் உண்டான பாவங்கள் என்றும், அறியாமல் செய்த தவறுகளால் உண்டான பாவங்கள் என்றும் மனிதர்களது பாவங்களை இருவகைப் படுத்தலாம். அறியாமல் செய்த பாவங்களுக்குத் தீர்வை (பிராயச்சித்தம்) செய்தால் அப்பாவங்கள் நீங்கிவிடும். அறிந்து செய்த பாவத்திற்குத் தண்டனை உண்டு.
- திருப்பூவணம் அறிந்து செய்த பாவங்களைப் போக்கும் சிறப்புப் பெற்றது.
- பார்வதி தேவியார், இலக்குமி தேவியார், பிரமதேவன் முதலானோர் அறிந்து செய்த பாவங்கள் திருப்பூவணநாதரை வழிபட்டதால் நீங்கின.
- துன்மனன் என்பவன் அறிந்து செய்த பாவங்கள் அனைத்தும் நீங்கப்பெற்று முத்தியடைந்துள்ளான்.
- தாழம்பூ பொய் சொன்ன பாவம் நீங்கப் பெற்றது.

- **தீர்த்தங்கள்**
- திருப்பூவணத்தில் 1) பாவநாச தீர்த்தம், 2) மணிகன்னிகைத் தீர்த்தம், 3) பிரம தீர்த்தம், 4) விட்டுணு தீர்த்தம் 5) இலக்குமி தீர்த்தம், 6) சந்திர தீர்த்தம், 7) மார்க்கண்டேய தீர்த்தம், 8) வசிட்ட தீர்த்தம், 9) இந்திர தீர்த்தம் என ஒன்பது (நவ) தீர்த்தங்கள் உள்ளன.
- **பாவநாச தீர்த்தம்** - மூல லிங்கத்தின் நேர் பார்வையில் ஓடும் வைகையாறே பாவநாச தீர்த்தமாகும். இதற்கு 'வேகவதி' என்ற பெயரும் உண்டு. 'திருவரசன் படித்துறை' என்று இப்போது மக்களால் அழைக்கப்படுகிறது.
- இதில் சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்திலே முழுமதியுடன் கூடிய நாளிலே தீர்த்தமாடித் திருப்பூவணநாதரை வணங்குவோர் நற்கதி அடைவர்.
- சூரிய உதயத்திற்கு முன் இதில் மூழ்கி, சிவராத்திரியிலே தூக்கமின்றி, நான்கு யாமமும் விழித்திருந்து சிவபூசை செய்து தானங்கள் செய்வோர், இறுதியிலே சிவலோகம் சேர்ந்து வாழ்வர்.
- **மணிகன்னிகைத் தீர்த்தம்** சூரியனால் சதுரவடிவில் தோண்டப் பெற்றது. மின்னன்னை கோயிலுக்கு (இப்போது முருகன் கோயில்) எதிரே மிகப்பெரிய குளமாக இருந்துள்ளது.
- விண்ணுலகத்திலிருந்து அமிர்தத்துளி ஒன்று மணியாய் வந்து இத்தீர்த்தத்திலே வீழ்ந்தது.
- இத்தீர்த்தத்தை உண்டால் நோய்கள் நீங்கப்பெற்று நீண்ட ஆயுள் உண்டாகும்.
- மணிகன்னிகைத் தீர்த்தத்தில் நீராடினால் அனைத்துத் தீவினைகளும் நீங்கப் பெறும்.
- இத்தீர்த்தத்திலே அஸ்திக் கலயத்திலிருந்த **எலும்பு பூவாக மாறியது.**
- இதில் நீராடி மின்னம்மையை வழிபட்டால் திருமணம் நடைபெறும். நல்ல கணவன் அமையப் பெறுவர். தீர்க்க சுமங்கலியாய் சுகம் அனுபவிப்பர். நன்மக்களைப் பெற்று வளமுடன் வாழ்வர்.
- மணிகன்னிகைத் தீர்த்தமாடுவோரின் பாவங்கள் நீங்கப்பெறும், இதில் அமங்கலிகள் நீராடினால் அடுத்த பிறவியில் சுமங்கலியாய் வாழ்வர், விரத நற்பலன்கள் உண்டாகும்.
- பெண்களைக் காமக்கண்ணோடு பார்த்தல் முதலான காமத்தினால் உண்டான பாவங்கள் நீங்கப்பெறும்.

- பிறரை அவமதித்துக் கேலிசெய்த பாவம் நீங்கப் பெறும். மற்றும் அனைத்துப் பாவங்களும் நீங்கப்பெறும். இதற்கு மணிகர்ணிகாத் தீர்த்தம், மணிகுண்டம், தேவி குண்டம் என்ற பெயர்களும் உண்டு.
- இத்தீர்த்தத்தில் உயிர்நீத்தோர் சுவர்க்கம் சேர்வர். இறந்தோரின் ஓர் அங்கமோ எலும்போ இதில் வீழ்ந்தால் அந்த உடலுக்குடையவர் சிவகதியடைவர்.
- இத்தீர்த்தக் கரையிலே நீத்தார்களுக்குத் தர்ப்பணம் செய்தால், நீத்தார்கள் பெரிதும் மகிழ்ந்து தனது சந்ததியினரை ஆசிர்வதிப்பர்.
- இதனால் சிவபெருமான் உள்ளம் மகிழ்ந்து, நீத்தார்களுக்கும் அவர்களுடைய சந்ததியினருக்கும் நற்கதியை வழங்குவான்.
- திருமால், பிரமன், உருத்திரன்(சிவன்), இந்திரன், நாரதன், சனகாதி முனிவர்கள், கருடர், கந்தருவர், கபிலர், மற்றும் பல தேவர்களும் முனிவர்களும் இத்தீர்த்தத்திலே வாழ்கின்றனர்.
- இத்தீர்த்தம் பிரமதேவனால் மராமத்து செய்யப்பெற்றுள்ளது.
- **பிரம தீர்த்தம்** பிரமனால் உண்டாக்கப் பட்டது. திருக்கோயில் வளாகத்தில் சிவலிங்கத்திற்கு ஈசானிய திசையிலே ஆடிவீதியிலே விநாயகர் சந்நிதிக்கு எதிரே கிணறாக உள்ளது.
- இத்தீர்த்தத்தில் நீராடினால், அறிந்தோ அறியாமலோ செய்த பாவங்கள் அனைத்தும் நீங்கப்பெறும்.
- கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திர தினத்தன்று பிரமதீர்த்தத்திலே நீராடினால் அரக்கர் உருவம் மாறி, அழகான உருவம் பெறுவர்.
- மனநலம்குறைந்தோர் இதிலே நீராடினால் நல்ல புத்தியைப்பெறுவர்.
- **விஷ்ணு தீர்த்தம்.** திருப்பூவணேசருக்கு மேற்குத் திசையிலே இரண்டு அம்பு செல்லுந் தூரத்திலே உள்ளது. இதன் கரையிலே, திருமால் தனது பெயராலே ஒரு சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்தார்.
- சித்திரை மாதத்திலே ஞாயிற்றுக் கிழமைகளில் அத்தீர்த்தத்தில் மூழ்கி விட்ணு லிங்கத்தை வழிபட்டோர் பாவம் நீங்கி முத்தி பெறுவர்.
- **இலக்குமி தீர்த்தம்.** திருப்பூவணம் கோயிலுக்கு இடப்புறமாக, தற்போதைய வைகை ஆற்றுப் பாலத்திற்கு அருகே பொதுநூலகத்திற்குப் பின்புறம் உள்ளது.
- **சந்திர தீர்த்தம்,** மின்னம்மையின் கோயிற் கொடிமரத்தருகே மடப்பள்ளி அருகே இத்தீர்த்தம் கிணறாக உள்ளது.
- இத்தீர்த்தத்திலிருந்தே மடப்பள்ளிக்குத் தேவையான தண்ணீரைப் பயன்படுத்துவர்.
- **மார்க்கண்டேய தீர்த்தம்,** திருக்கோயிலிருந்து இரண்டம்பு செல்லும் தூரத்தில் உள்ளது. இது மார்க்கண்டேய முனிவரால் உருவாக்கப்பட்டது. மாரியம்மன் கோயிலுக்கு அருகில் குளமாக உள்ளது.
- பாலாபிசேகம் முதலான பல்வேறு திருமஞ்சனங்களையும் மார்க்கண்டேயன் திருப்பூவணத்திலே செய்து அர்த்தநாரீசனை வழிபட்டுச் சீவன்முத்தி பெற்றான்.
- **வசிட்ட தீர்த்தம்.** இது மிகுந்த தவ வலிமை உடையவரும், வேதங்கள் அனைத்தையும் ஓதி உணர்ந்தவரும், அவற்றைச் சூதமுனிவருக்கு உபதேசித்தவருமான வசிட்ட முனிவரால் தோற்றுவிக்கப்பட்டது.
- இத் தீர்த்தம் சிவலிங்கத்தின் பார்வையில் இரண்டு கணை செல்லும் தூரத்தில் உள்ளது. இதில் மூழ்குவோர் சிவபெருமானின் திருவடிநீழலில் வாழ்வர்.
- இத்தீர்த்தம், ஆற்றின் வடகரையில் ஆடித்தபசு மண்டபத்திற்கு அருகில் குளமாக இருந்துள்ளது.
- **இந்திர தீர்த்தம்,** கிருதமால் ஆற்றினை மேல் அணிந்து விளங்குவது.
- இத்தீர்த்தத்தில் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் தீர்த்தமாடினால் யாகபலத்தைப் பெறுவர்.
- பனிரெண்டு தினம் மூழ்குவோர் ஆயிரம் யாக பலத்தைப் பெறுவர்.
- ஒருமாதம் மூழ்குவோர் அசுவமேத யாகபலனைப் பெறுவர்.

- இத் தீர்த்தத்தைப் பருகுவோர் அக்கினி கோம பலனைப் பெறுவர்.
- இத்தீர்த்தம் மடப்புரம் செல்லும் வழியில் ஆற்றங்கரையில் கிணற்று வடிவில் உள்ளது. அதனருகே ஓர் விநாயகர் கோயிலும் உள்ளது.

- **விருட்சம்**
- முதலாம் யுகத்திலே பாரிசாதமரம் தலவிருட்சமாக இருந்துள்ளது.
- இரண்டாம் யுகத்திலே வில்வமரம் தலவிருட்சமாக இருந்துள்ளது.
- மூன்றாம் யுகத்திலே வன்னிமரம் தலவிருட்சமாக இருந்துள்ளது.
- நான்காம் யுகமாகிய இக் கலியுகத்திலே பலா மரம் தலவிருட்சமாக உள்ளது.
- தேவி வளர்த்த தெய்வப் பலாமரத்தின் அடியிலே 'வேர்ப் பலா' போலச் சிவலிங்கம் முளைத்தது என்று திருப்பூவணநாதர் உலாவில் பாடப் பெற்றுள்ளது.
- அமுதம் வேண்டித் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தனர். அதிலிருந்து பாரிசாதம், கற்பக விருட்சம் போன்ற தெய்வீக மரங்களும் தோற்றம் பெற்றன. பாரிசாதம் தேவலோகத்தில் உள்ள மரமாகும். இது நினைப்பதைத் தரக்கூடிய இயல்புடையது.
- பாரிசாத மரம் கைலாயத்தில் உள்ளது. உமையம்மை தவம்மேற்கொள்ள வேண்டித் திருப்பூவணம் வந்தபோது பாரிசாதத்தின் கிளையைக் கொண்டு வந்து நட்டுவைத்து வளர்த்து அதன் நீழலிலே தவம் செய்தார்.
- பாரிசாதம் ஓர் அறிவுடைய மரம்.
- பாரிசாதப் பூவின் மணம், அதனைச் சுற்றிலும் யோசனை தூரம் பரவியிருக்கும்.
- இம்மரம் பணை (பருத்த கிளை) பல உடையது. இம்மரத்தை அண்டி வாழும் உயிரினங்கள் யாவும் தம்முடைய பகையை மறந்து மகிழ்ச்சியாய் வாழும்.
- திருப்பூவணம் கோயிலின் கல்தூண் சிற்பங்களில் பாரிசாத மரம் செதுக்கப்பட்டுள்ளது.
- பாரிசாதம் என்பதைப் 'பவள மல்லிகை' என்று சிலர் குறிப்பிடுவர். இது தவறு.

**சிவலிங்கம்**

திருப்பூவணத் திருத்தலம், பாண்டியநாட்டின் தலைநகராகிய மதுரையைவிடப் பழமையானது. இங்குள்ள சிவலிங்கத்தின் பழமையைக் குறிக்கும் வகையில்,

*"பூமிக்கும் முந்தியவர் பூவணநாதர்*
*ஆற்றுக்கும் முந்தியவ அழகுமீனா"*

என்று மக்கள் வழக்குச் சொல் ஒன்றுள்ளது.

- திருப்பூவணத்திலே பாரிசாதப் பூந்தாரானது பூமிக்குள்ளே புதைந்து படிமமாகிச் சிவலிங்கமாக மாறியுள்ளது. (The Siva Lingam at Tiruppuvanam is a fossile of Parijatha Flower.)
- பாரிசாதத்தின் அடியிலே திருப்பூவணலிங்கம் தோன்றியதால், திருப்பூவணத்தில் இறைவனுக்குப் 'பாரிசாத வனேசுவரர்' என்ற பெயரும் உண்டு.
- திருப்பூவணத்தில் சிவலிங்கமானது பாதாளத்திலிருந்து (deep layer of the earth) முளைத்துள்ளது.
- பூவணன், திருப்பூவணநாதர், திருப்பூவணமுடையார், பூவணத்தரன், பூவணத்துப் புனிதன், பூவணநாயகன், பாதளஈசன், பாற்கரபுரீசுவரர் என்பன சிவலிங்கத்திற்கு உண்டான பெயர்களாகும்.
- வடமொழியில் 'புஸ்பவனேசுவரர்' என்று அழைக்கின்றனர்.
- திருப்பூவணத்தில் உள்ள சிவலிங்கம் மிகவும் "புராதனமானது".
- திருப்பூவணலிங்கமானது நாற்பதாயிரம் சதுர் யுகங்கள் (1728 கோடி வருடங்கள்) பூமிக்குள்ளே இருந்துள்ளது.
- திருப்பூவணத்தில் உள்ளது **சோதிலிங்கம்** ஆகும்.
- திருப்பூவண உற்சவ மூர்த்திக்கு, அழகியபிரான், அழகியநாயகன், அழகியநாயகர் முதலான பெயர்கள் உண்டு.

- உற்சவமூர்த்தி பொன்னால் செய்யப்பட்டதால் இம்மூர்த்திக்குப் "பொன்னனையான்" என்ற காரணப் பெயரும் விளங்கிவருகிறது.
- சோபன லிங்கம், காசிலிங்கம், சூரியலிங்கம், விட்ணுலிங்கம், சந்திரலிங்கம், காளீச்சுர லிங்கம் ஆகிய சிவலிங்கங்களும் திருப்பூவணத்திலே உள்ளன.
- மணிகன்னிகைத் தீர்த்தத்தின் அருகிலே ஆலமர நிழலிலே நான்முகன் பூசித்த இலிங்கம் உள்ளது.
- சூரியன் தன் பெயரால், "காந்தி நாயகன்" என்ற பெயரில் சிவபெருமானை விதிப்படி பிரதிட்டை செய்து வேதங்களை ஓதி பூசை செய்து திருவிழாவை நடத்திவைத்தான்.
- மூலச்சிவலிங்கத்தைப் பாதாளவீசன் என்று புராணத்தில் கூறப்பட்டுள்ளது.
- திருப்பூவணத்தில் சிவபெருமான் ருத்தர மேனியனாய் (ருத்ர விடங்கர்) 'பிரம தாண்டவம்' என்னும் நடனமாடியுள்ளார்.
- பௌர்ணமி நாளில், அன்புடன் பிரமதாண்டவர் மாபூசை செய்வோர் மகேசர் உலோகத்தில் ஒரு பிரமகற்பம் உறைந்து காந்தத்தின் உருத்திரனோடு உற்றுப் பின்றைக்கு குருமணி நல்விமான மேல்கொண்டு சிவலோகம் அடைந்து அதில் குடியாய் வாழ்வார்.

- **அம்மன்**
- அறிந்து செய்த பாவம் போக்க உமையம்மை திருப்பூவணம் வந்து பாரிசாதமரம் வளர்த்துத் தவம் செய்தார்.
- அந்தப் பாரிசாதமரத்தின் அடியிலே பூவண்ணமாகிய சிவலிங்கம் ஒன்று தோன்றியது.
- அதனை உமையம்மை வணங்க, அதில் சிவபெருமான் தோன்றி பார்வதிதேவியாரின் பாவத்தை நீக்கி வரம் அருளினார்.
- திருப்பூவணத்தில் அம்மைக்கு மின்னாள், மின்னனையாள், மின்னன்னை, மின்னம்மை, அழகியமின், அழகிய நாயகி, பச்சைவளர் நாயகி, திருநயனவல்லி என்ற பெயர்கள் உள்ளன. பொற்கொடி, நாதவதி, சுந்தரி என்ற பெயர்களும் உண்டு.
- மின்னம்மை பச்சை வடிவினள்.
- இறைவி, மின்னல்போன்று வடிவும் சக்தியும் உடையவளாய் இருப்பதால் அழகிய மின்னம்மை என்னும் பெயர் பெற்றுள்ளாள்.
- திருப்பூவணத்தில் முதலில் அம்மையை வணங்கக்கூடாது, சிவலிங்கத்தை வணங்கிய பின்னரே அம்மையை வணங்க வேண்டும்.
- அம்மனை முதலில் வணங்கினால் அக்கணமே 'அகோரம்' எனும் மனநலக்குறைவு நோய் ஏற்பட்டு நரகம் புகுவர்.

- **வைரவர்**
- திருப்பூவணத்தில் திருப்பூவணநாதர், மின்னம்மை, விநாயகர், முருகக் கடவுளுக்கு அடுத்தாற் போல் வைத்து வணங்கப்படுபவராக வைரவர் என்றழைக்கப்படும் வடுகக் கடவுள் உள்ளார்.
- திருப்பூவணத் திருத்தல வழிபாட்டில் வைரவர் முக்கியத்துவம் பெறுகிறார்.
- சித்திரை மாதம் முழுமதி நாளிலே வடுகக்கடவுளைப் பணிந்து பின்னர் சிவபெருமானை வழிபட்டால் மிகுந்த பலன்கள் உண்டு.
- தீர்த்தச்சருக்கத்திலே வடுகக்கடவுளின் சிறப்புகள் கூறப்பட்டுள்ளன.

- **திருமால்**
- திருப்பூவணத்தில் பெருமாளே வடக்குப் பார்த்து உள்ளார், வடக்குப் பார்த்த பெருமாள் மிகவும் தனிச்சிறப்புடையவர் ஆவார்.
- இங்கு எந்த நாளில் வழிபட்டாலும் சொர்க்க வாசல் திறப்பு அன்று வழிபடும் பலன் கிடைக்கும்.
- சலந்தரனைக் கொல்வதற்குச் சக்கராயுதம் பெறவேண்டித் திருமால் திருப்பூவணம் வந்து வழிபட்டார்.
- மகாலெட்சுமியும் திருமாலும் வழிபட்ட வைகாசி விசாக நட்சத்திரத்திலே முழுமதி நாளிலே மூலலிங்கத்தை முறைப்படி வழிபட்டனர்.

- அதேநாளில் திருப்பூவணநாதரை வணங்கினால், பாவங்கள் யாவும் பற்றறுந்து விடும். நல்ல சந்ததிகளுடன் அரசராய் வாழ்வர்.

- **புராண அடிப்படையிலான வழிபாடுகள்**
- அம்மன் தவம் இயற்றிய திருத்தலம் என்ற புராணத்தில் கூறப்பட்டுள்ள கருத்தின் அடிப்படையில் '**ஆடித்தபசு விழா**' சிறப்பாக நடைபெற்று வந்துள்ளது.
- நளமகாராசன் அசுவமேத யாகத்தைத் திருப்பூவணத்திற் செய்தான்.
- பங்குனி உத்தரத்திலே திருவிழாக்கள் நடைபெற்றுள்ளன. தேர்த்திருவிழா நடை பெற்றுள்ளது.
- திருவிளக்கு பூசைகள் மற்றும் பல விழாக்கள் இன்றளவும் பண்டைச் சிறப்பு மாறாமல் நடைபெற்று வருகின்றன.
- நளமகாராசன் தீர்த்தவாரி விழா நடத்தியுள்ளான். இத்திருவிழா தற்போது நடை பெறவில்லை.

- **பலன்கள்.**
- திருப்பூவணத்திலே யாகங்கள் செய்தால் அதிகமான பலன்கள் கிடைக்கும்.
- திருக்கோயிலில் விளக்கு ஏற்றுவோர், சிவபுரத்தில் கோடிக்கணக்கிலான தங்களது குலத்துடன் கூடிவாழ்வார்கள்.
- திருப்பூவணநாதருக்குப் பூமாலை சாத்தி வழிபட்டால் எண்ணிய காரியங்கள் நடைபெறும். மிகுந்த செல்வம் பெற்று வாழ்வர். கயிலையில் இனிது வாழும் பேறு கிடைக்கப்பெறுவர்.
- திருப்பூவணநாதரின் முன்புள்ள ஆலயத்தைக் கட்டுவோர்க்கு, அவர்கள் செய்யும் நற்செயல்களுக்கான புண்ணியங்கள் நான்கு மடங்காகக் கிடைக்கும்.
- திருப்பூவணத்திலே தினவிழா, திருவிழா, தேர்த்திருவிழா நடத்துவோர் சிவபிரானுடன் சிவபுரியில் சேர்வர்.
- உயிரும் உடலும் ஒத்துணரத் திருப்பூவண நாதரைக் கற்றுணர்ந்தோரும், திருப்பூவணத்திற்கு வந்து வழிபட்டோரும் புனிதமான உடலைப் பெற்றுக் கயிலையைச் சேர்ந்து வாழ்வர்.
- திருப்பூவணத்திலே, நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தோருக்கு அணு அளவு தானம் செய்தாலும் அது மலையளவு கொடுத்த பலன் உண்டாகும்.
- திருப்பூவணத்திலே பிடியளவு அன்னதானம் கொடுத்தாலும் அது கோடி அந்தணருக்கு அறுசுவை உணவு வழங்கிய பலன் உண்டாகும்.
- திருப்பூவணநாதரை வழிபட்டால் பிணிகள் நீங்கும். நன்மை உண்டாகும்.
- திருப்பூவணநாதரை வழிபட்டோருக்குப் பீடை இல்லை.
- திருப்பூவணநாதரை வழிபட்டோர் சிவனது உருவத்தைப் பெறுவர்.

**புராணம் புகழாதன**

திருப்பூவணப் புராணத்திலே, மனிதர்களால் அறிந்து கொள்ளக் கூடிய கருத்துக்களில் அற்புதங்கள் ஏதும் கூறப்பெறவில்லை. 'ஏடுஎதிரேறுதல்' மற்றும் 'இரசவாதம் செய்தல்' ஆகிய அற்புதங்கள் திருப்பூவணப்புராணத்திலே திருநாட்டுச் சருக்கம் மற்றும் திருநகரச் சருக்கம் ஆகியவற்றிலே கந்தசாமிப் புலவரால் பதிவு செய்யப் பெற்றுள்ளன. ஆனால் திருப்பூவணப் புராணக் கதைகளிலே இவை இடம் பெறவில்லை.

திருப்பூவணத்திலே நந்தி முகுது சாய்ந்துள்ளது. இது திருஞானசம்பந்தருக்குக் காட்சியருள வேண்டிச் சிவபெருமான் ஆணையின் பேரில் நந்தி முதுகு சாய்ந்தது

எனத் 'திருப்பூவணநாதர் வண்ணம்' குறிப்பிடுகிறது. ஆனால் இதுபற்றிய குறிப்பேதும் திருமுறைகளிலோ திருப்பூவணப் புராணப் பாடல்களிலோ இடம் பெறவில்லை.

திருப்பூவணப் புராணத்திலே சுச்சோதிராசன், நளமகராசன் ஆகியோர் வழிபட்டது கூறப்பட்டுள்ளது. ஆனால், திருமுறைகளில் கூறப்பட்டுள்ள 'மூவேந்தர் வழிபாடு' கூறப்பெறவில்லை.

சலந்திரனைக் கொல்வதற்காகத் திருமாலுக்குச் சிவபெருமான் சக்கராயுதம் வழங்கிய செய்தி திருப்பூவணப் புராணத்திலே கூறப்பெற்றுள்ளது. இதை மாணிக்கவாசகப் பெருமான் பாடியுள்ளார்.

'எலும்பு பூவாக மாறுதல்' என்பது ஒரு 'மந்திர தந்திர' நிகழ்ச்சியாகக் கூறப்படவில்லை. உண்மையில் நடைபெற்ற நிகழ்வே கூறப்பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணக் கதைகளில் ஆய்வாளரால் புரிந்து கொள்ளக் கூடிய அனைத்துக் கருத்துக்களும் உண்மையாக உள்ளன. மேலும் அறிவிற்கு அப்பாற்பட்ட கருத்துக்களைப் பொய்யென உறுதிசெய்ய ஆய்வாளரால் இயலவில்லை. எனவே புராணத்தில் கூறப்பட்டுள்ள அனைத்துக் கதைகளும் கருத்துக்களும் பலன்களும் உண்மையானவை என ஆய்வாளர் கருதுகிறார்.

தமிழ் இலக்கியத்தில், புராணம் என்பது மிகவும் சிறப்பான ஒரு பகுதி. வெறும் புனைந்துரை என்று அனைத்தையும் தள்ளிவிடுதல் கூடாது. பெரிய புராணமும், கந்தபுராணமும், திருவிளையாடற் புராணமும் சிறந்த தமிழ் இலக்கியங்கள் என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர். இவற்றால் தமிழ் மக்களின் வாழ்க்கையும் பண்பாடும் வளம் பெற்றிருக்கின்றன.

திருக்குறள் போன்ற நூல்கள் மக்களை நல்வழிப்படுத்தியது போலவே, புராணங்களும் தமிழ்ச்சுவையுடன் திருத்தலக்கதைகள் மூலமாகத் தெய்வபக்தியை ஊட்டி மக்களை நல்வழிப்படுத்தி வருகின்றன.

தமிழர், தமிழ் மொழியினை அடிப்படையாகக் கொண்டவர். தமிழானது பக்திமொழி என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. பக்தியானது தலம், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி இவற்றினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவை அனைத்தும் புராணங்களில் கூறப்பட்டுள்ள பெருமையால் இன்றும் மக்களிடையே மதிப்புடன் விளங்குகின்றன. மக்களால் வழிபடப்பெறுகின்றன.

புராணங்கள் இல்லையேல் நமது வழிபாட்டுத் தலங்களின் பண்டைப் பெருமையை நாம் அறியாமல் போயிருப்போம். இன்றைய உலகில், தமிழர் தம் பெருமையை நிலைநாட்டும் பொருட்டுத் தலபுராணங்கள் அனைத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தாக வேண்டும். அவ்வாறு செய்தால் மட்டுமே உலகினில் இந்தியர்கள் குறிப்பாகத் தமிழர்கள் உயர்ந்த கொள்கைகளை உடையவர்கள் என்பதைப் பறைசாற்ற முடியும். அரசும் அறிஞர்களும் இணைந்து செயலாற்றி செம்மொழியாம் தமிழ் மொழியில் உள்ள புராணங்களை உலகறியச் செய்ய வேண்டும்.

*"புகலரிய கேதாரமலை காசி மாகாளம் புட்கரஞ்சீர்*
*திகழ்கமலாலயந் தில்லை வனந்தீதில் வேதவனந் திருவெண்காடு*
*மகிழ்தரு தென்மதுரை தனின்மருவுகதியைப் பெறுவான்வைகுவோர்சேர்*
*மிருபலமானவை யனைத்து மேவுவர் பூவணநகரின் மேவுவோரே"*

என்று திருப்பூவணப்புராணத்தில் முனிவர்களால் புகழ்ந்து கூறப்பட்டுள்ளது.

முடிவு

*கற்பக விருட்சமான பாரிசாதத்தின் பூந்தாரினாலான திருப்பூவணனின் அருளும் தன்மை அளவிடற்கு அரியது. அவற்றுள் 1) அறிந்து செய்யும் பாவங்களை நீங்குதலும் 2)நீத்தார்களுக்கு மோட்சம் அளிப்பதில் 'காசியைவிட வீசம் கூட' எனச் சிறப்புடன் திகழ்வதும் 3)குருஉபதேசத் தலமாக விளங்குவதும் சிறப்புடையன.*

*கேதாரமலை, காசி, மாகாளம், காஞ்சி, கமலாலயம், தில்லை, வேதவனம், திருவெண்காடு, மதுரை இவ்வூரில் உள்ள திருக்கோயில்களை வழிபட்டுக் கிடைக்கும் ஒட்டு மொத்தப்பலனை விடக் கூடுதலான பலன் திருப்பூவணத்திற்கு வந்து வழிபட்டால் கிடைக்கும் என்று திருப்பூவணப்புராணத்திலே முனிவர்களால் புகழ்ந்து கூறப்பட்டுள்ளது.*

புராணத்தில் கூறப்பெற்றுள்ள வழிநின்று பூவணனையும் மின்னாளையும் மற்றபிற தெய்வங்களையும் வணங்கி வழிபட்டுப் பயனடைவோம்.

*****

# பின்னிணைப்புகள்

| **வரிசை எண்** | பின்னிணைப்பு விபரம் | **பக்கம் எண்** |
|---|---|---|
| 1 | பிரமகைவர்த்த புராணத்தில் பாடப் பெற்றுள்ள சில தலபுராணங்கள் | ii |
| 2 | துணை நூற் பட்டியல் | iii |
| 3 | திருப்பூவண நாதருலா | x |
| 4 | திருவிளையாடற் புராணம்<br>36, இரசவாதஞ் செய்த படலம்<br>49, திருவாலவாய்க்காண்டம் | xxxiv<br>xxxvi |
| 5 | குடமுழுக்கு விழா, திருப்பணிகள், நகரத்தார் திருப்பணிகள் பற்றிய சில குறிப்புகள் | xxxviii |
| 5 | வரைபடங்கள், புகைப்படங்கள், களப்பணிகள் | xxxix |

**திருப்பூவணப் புராணம் (நூல்) தனியாக இணைக்கப்பெற்றுள்ளது.**

**பிரமகைவர்த்த புராணத்தில் இடம் பெற்றுள்ள**

**சில தலபுராணங்கள்**

| | வடமொழி நூல் | தமிழில் மொழிபெயர்த்துப் பாடப் பெற்ற நூல் |
|---|---|---|
| 1 | பிரமகைவர்த்த புராணம் - சிவசேத்திர காண்டம் | கருவூர்ப் புராணம் |
| 2 | பிரமகைவர்த்த புராணம் - உத்தரபாகம் சேத்திர காண்டம - பாரிஜாதவன அகசேகவர மகாத்மியம் | திருவாடானைத் தலபுராணம் |
| 3 | பிரமகைவர்த்த புராணம் | திருவையாற்றுப் புராணம் |
| 4 | பிரமகைவர்த்த புராணம் | மடவார் வளாகம் என்னும் புதுவைத் தலபுராணம் |
| 5 | பிரமகைவர்த்த புராணம் - சேத்திர காண்டம் | மாயூரப் புராணம் |
| 6 | பிரமகைவர்த்த புராணம் | திருப்பூவணப் புராணம் |

# துணை நூற் பட்டியல்


| | | |
|---|---|---|
| 1. | அஞ்சலி தேவி, பா.<br>தொலைதூரக் கல்வி இயக்ககம்<br>அழகப்பா பல்கலைக்கழகம் | காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் அமைப்பும் சிறப்பும், *பதிவு எண்* 200607107 எம்.ஃபில் ஆய்வேடு, ஜூன் 2003 |
| 2. | அதிவீரராம பாண்டியன்<br>பதிப்பித்தவர் சே.கோபாலன் | **கூர்ம புராணம் (மூலம்) உத்தரகாண்டம்,** பதிப்பகம், வெற்றிவேல் அச்சகம், தஞ்சாவூர், 1963, சரசுவதி நூல் நிலைய வெளியீடு எண்-100 |
| 3. | அருணாச்சலனார், மு. | தமிழ் இலக்கிய வரலாறு, 16ம் நூற்றாண்டு, முதல்பாகம், காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம் 1972 |
| 4. | அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி | திருக்கோயில் கருத்தரங்கம் ஆய்வுக் கோவை சனவரி 1997 |
| 5. | இரமா, தி.<br>தமிழ் விரிவுரையாளர்,<br>தனலெட்சுமி சீனிவாசன் கலை அறிவியல் மகளிர் கல்லூரி, பெரம்பலூர் | ஆழ்வார்களின் வழிபாட்டு மரபு, தியாகராசா பதிப்பகம், 1317, வள்ளுவர் நகர் மெயின் வீதி, காரைக்குடி 630 002, செப்டம்பர் 2004 |
| 6. | இரபேல், ச.<br>126, மின்நகர், காஜாமலை, திருச்சி - 620 023 | **யாப்பருங்கலக் காரிகை**<br>(மூலமும், வினா-விடையும்)<br>இரவிவேந்தர் வெளியீடு,<br>திருச்சிராப் பள்ளி 620 023<br>1998 |
| 7. | இராசகோபாலன், ம.<br>தொலைதூரக் கல்வி இயக்ககம்<br>அழகப்பா பல்கலைக்கழகம் | திருவேற்காடு அருள்மிகு தேனுபுரீஸ்வரர் திருக்கோயில், எம்.ஃபில் ஆய்வேடு, *பதிவு எண்* **97410016,** நவம்பர் 1998 |
| 8. | இராச கோபாலன், ஏ.எம்.,<br>ஆசிரியர், குமுதம் ஜோதிடம் வார இதழ், சென்னை | **"பூமணக்கும் பூவணத்துப் புனிதன்"**<br>- சிறப்புக் கட்டுரை, குமுதம் ஜோதிடம் -<br>கீழ்க்கண்ட இரண்டு இதழ்கள்<br>1) ராசி - 5, நட்சத்திரம் 25, 13 அக்டோபர் 2006<br>2) ராசி - 5, நட்சத்திரம் 26, 20 அக்டோபர் 2006 |
| 9. | இராமகிருட்டிணன், இரா.<br>தொலைதூரக் கல்வி இயக்ககம்<br>அழகப்பா பல்கலைக்கழகம் | ஓசூர் அருள்மிகு சந்திரசூடேசுவரர் திருக்கோயில், *பதிவு எண்* 98410015 எம்.ஃபில் ஆய்வேடு. ஜூன் 2000 |
| 10. | இராமநாதன், பதிப்பாசிரியர், | **ஸ்ரீ சிவ மஹா புராணம்,** முதற்பதிப்பு, செப்டம்பர் 2008, பிரேமா பிரசுரம், கோடம்பாக்கம், சென்னை |

| | | |
|---|---|---|
| 11. | இராமலிங்கம், ந.<br>தமிழ்ப் பேராசிரியர், யாதவர் கல்லூரி, மதுரை -14 | **கந்தபுராண ஆராய்ச்சி**, பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பதிப்பு எண் 102, முதற்பதிப்பு 1988 |
| 12. | இராமலிங்கம், டி.எஸ் | அஷ்ட தச புராணங்கள் என்னும் **பதினெண் புராணங்கள்,** நர்மதா பதிப்பகம், முதற்பதிப்பு, பிப்ரவரி 2008 |
| 13. | இராமலிங்கம் பிள்ளை, வெ.<br>நாமக்கல் | திருக்குறள் புதுஉரை<br>இரண்டாம் பதிப்பு, அக்டோபர் 1957<br>மாருதி பிரஸ், இராயப் பேட்டை, சென்னை 14 |
| 14. | உசாராணி, ம.<br>அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி | **கோயிலூர்ப் புராணம்** - ஓராய்வு,பதிவு எண், 036070143, அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, தமிழ்த்துறை, டிசம்பர் 2005 |
| 15. | கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்,<br>பதிப்பாசிரியர், தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சிராப்பள்ளி | **கந்தபுராணம்** (இரண்டாம் பகுதி)(மூலம்)<br>திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்து வெளியீடு, மார்ச் 1958 |
| 16. | கச்சியப்ப முனிவர்,<br>உரையாசிரியர்கள்<br>பேராசிரியர். கந்தசாமியார்<br>செ.ரெ. இராமசாமிப்பிள்ளை<br>பொ.வே. சோமசுந்தரனார். | **தணிகைப் புராணம்**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி<br>1965 |
| 17. | கந்தசாமி, சோ.ந.,<br>தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர். | தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், முதற்பாகம் - முதற்பகுதி<br>தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு 105, சனவரி 1989 |
| 18. | கந்தசாமிக் கவிராயர், மு.ரா. | அருணகிரி நாதர் அருளிச் செய்த **திருப்புகழ்,** வருடம் 1933. |
| 19. | கந்தசாமிப் புலவர்,<br>பதிப்பாசிரியர் - மதுரை இ.இராமசுவாமிப்பிள்ளை | **திருப்பூவணப் புராணம்** (தமிழில்)<br>இந்து தியாலஜிக்கல் அச்சுக்கூடம், 1896ஆம் ஆண்டு மாசிமாதம் |
| 20. | கந்தசாமிப் புலவர்,<br>(உரைச்சுருக்கம் -<br>கி. காளைராசன்,<br>உதவிப்பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்) | **திருப்பூவணப் புராணம்** (தமிழ் மூலமும் உரைச்சுருக்கமும்)<br>பிரிண்ட்டெக் அச்சுக்கூடம், மதுரை, டிசம்பர் 2008 |
| 21. | கந்தசாமிப் புலவர்,<br>பொழிப்புரை - சைவமணி புலவர் நீ.சீ. சுந்தரராமன், மதுரை | **திருவாப்பனூர்த் தலபுராணம்** (தமிழில்),<br>மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரரேசுவரர் திருக்கோயில் வெளியீடு 2005 |

| | | |
|---|---|---|
| 22. | கணநாதன், கா.<br>அழகப்பா பல்கலைக்கழகம்,<br>காரைக்குடி<br>(திருப்பூவணம்) | **திருப்பூவணநாதர் சுவாமி கோயில்,** பதிவு எண் 6002, அழகப்பா பல்கலைக்கழக முதுகலைப் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, தமிழ்த்துறை, ஏப்ரல் 1991 |
| 23. | கணநாதன், கா.<br>தேரடி, கோட்டை,<br>திருப்பூவணம் | **திருமுறைகள் போற்றும் திருப்பூவணம்,**<br>முதற்பதிப்பு, ஜூன் 2008 |
| 24. | கண்மணி, சே.<br>அழகப்பா பல்கலைக்கழகம்,<br>காரைக்குடி | **மயூரகிரி புராணம்** - ஓர் ஆய்வு, ஜீன் 2007, எம்ஃபில் ஆய்வாளர், பதிவு எண் 046070020, |
| 25. | கமலக்கண்ணன், இரா. வ. | **திருப்பாவை** தெளிவுரை, ஜனவரி 2007, திருவேங்கடவன் பதிப்பகம், காஞ்சிபுரம் |
| 26. | கமலை ஞானப்பிரகாசர்<br>பதிப்பு தா.வே.வீராசாமி | **தந்திவனப் புராணம்,**<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>ஜூலை 1981 |
| 27. | கவிதா, க.நா.,<br>தொலைதூரக் கல்வி<br>இயக்ககம்<br>அழகப்பா பல்கலைக்கழகம் | மாயூரநாதர் திருக்கோயில் அமைப்பும் சிறப்பும், *பதிவு எண்* **2002607310,** எம்.ஃபில் ஆய்வேடு, ஜூன் 2003 |
| 28. | காளைராசன், கி.<br>பதிவு எண் 03607018,<br>அழகப்பா பல்கலைக் கழகம்,<br>காரைக்குடி | **திருப்பூவணத் திருத்தலமும் திருப்பூவணநாதர் சுவாமி பெருமையும்,**<br>அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, தமிழ்த்துறை, டிசம்பர் 2004 |
| 29. | காளைராசன், கி.<br>துணைப் பதிவாளர்,<br>அழகப்பா பல்கலைக்கழகம்,<br>காரைக்குடி | **திருப்பூவணக் காசி,**<br>நித்யா பப்ளிசர்ஸ், 10, குருநாதர் கோயில் தெரு, கோட்டையூர் - 630 106,<br>செப்டம்பர் 2007 |
| 30. | குருசாமி தேசிகர், தா.<br>தருமையாதீனப் புலவர் | **தமிழக ஊரும் பேரும்,**<br>மதுரை<br>மார்ச் - 2007 |
| 31. | சண்முகம் ஸ்தபதி, மு.<br>எழுவன் கோட்டை, | கண்கண்ட கடவுள், குமரன் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை 17 |
| 32. | சாந்தி, கி.<br>தொலைதூரக் கல்வி<br>இயக்ககம்<br>அழகப்பா பல்கலைக்கழகம் | ஈரோடு ஐம்பெருங் கோயில்கள் - ஓர் ஆய்வு,*பதிவு எண்* **2002607050,** எம்.ஃபில் ஆய்வேடு, ஜூன் 2003 |
| 33. | சிங்காரவேலு முதலியார்<br>(திருத்தியது) ஆ. சிவப்பிரகாச முதலியார் | **அபிதான சிந்தாமணி**, இரண்டாம் பதிப்பு, ஏசியன் எசுகேஷனல் சர்வீஸஸ், எஸ்.டி.ஏ., புதுதில்லை 110 016 |

| | | |
|---|---|---|
| 34. | சித்பவானந்தர்,(சுவாமி)<br>ஸ்ரீராமகிருஷ்ணா தபோவனம்,<br>திருப்பராய்த்துறை 639 115 | **ஞானயோக விளக்கம்**, (விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தழுவியது), ஐந்தாம் பதிப்பு, 1993 |
| 35. | சிவகங்கை தேவஸ்தானம் | திருப்பூவணத் திருமுறையும் தல வரலாற்றுச் சுருக்கமும், சிவகங்கை தேவஸ்தான வெளியீடு, 1960 |
| 36. | சிவஞான சுவாமிகள்,<br>திருவாவடுதுறை ஆதீனம்.<br>குறிப்புரை- சி. அருணை வடிவேலு முதலியார். | **காஞ்சிப்புராணம்**<br>குமரன் அச்சகம், காஞ்சிபுரம்,<br>1937 |
| 37. | சிவபெருமான், அ.<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | தமிழரின் வானியல் திறன்,<br>முதற் பதிப்பு, டிசம்பர் 1993, திருவருள் நிலைய வெளியீட்டகம்,<br>குகையூர் அஞ்சல் - 606 301 |
| 38. | சுதாகர்பாபு, அனுராதா<br>தம்பதியர் மணவிழா மலர் | திருப்பூவணநாதர் உலா, சென்னை<br>மே -2000 |
| 39. | சுந்தர மூர்த்தி தம்பிரான்<br>தருமை ஆதீனம் | பாண்டிய நாட்டுத் தேவாரத் திருத்தலங்கள்,<br>தருமை ஆதீனம், 05-07-2004 |
| 40. | சுப்பிரமணிய பிள்ளை, த.<br>வடக்குப்பட்டு, | சிவஸ்தல மஞ்சரி, இரண்டாம் பதிப்பு, ஏப்ரல் 1912 |
| 41. | சுப்பிரமணியன், ச.வே. | தொல்காப்பியம் தெளிவுரை<br>முதற்பதிப்பு, மே 1993 |
| 42. | சுப்பிரமணியன், ச.வே. | தமிழ் இலக்கிய வகையும் வடிவும்,<br>தமிழ்ப்பதிப்பகம், பெருங்குடி, சென்னை -96 |
| 43. | சேதுப்பிள்ளை, ரா.பி.<br>சென்னை | தமிழகம் ஊரும் பேரும், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை 14, முதற்பதிப்பு 1946, நான்காம் பதிப்பு 1968 |
| 44. | சோம சுந்தரம், (மீ.ப. சோமு)<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | சித்தர் இலக்கியம் (மூன்றாம் பகுதி) ஆய்வு நூல், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, பதிப்பு 1992 |
| 45. | சோமு, மீ.ப. (சோமசுந்தரம்) | சித்தர் இலக்கியம் - மூன்றாம் பகுதி. ஆய்வுநூல். அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, பதிப்பு 1992. |
| 46. | சூதர் மற்றும் சவுனக முனிகள் | வடமொழியில் - பிரம கைவர்த்த புராணம் (70 முதல் 84 முடிய உள்ள அத்தியாயங்கள்) |
| 47. | ஞானதேவபாரதி,<br>ஞான தேவ பீடம், வைகை மீனாட்சிபுரம்,<br>காணூர் - 630 160 | திருக்குறளில் யோக விளக்கம், முதற் பதிப்பு ஜனவரி 2006 |

| | | |
|---|---|---|
| 48. | தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, கலைக்களஞ்சிய அலுவலகம், பல்கலைக்கழகக் கட்டடம், சென்னை 5 | **கலைக்களஞ்சியம்,** (தொகுதி - 7), முதற்பதிப்பு, 1960 |
| 49. | பட்டுச்சாமி ஓதுவார், தி. திருச்சிராப்பள்ளி | பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம் (உரைநடை) திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து வெளியீடு, ஆகஸ்டு 1995 |
| 50. | பட்டுச்சாமி ஓதுவார், தி. திருச்சிராப்பள்ளி | கந்த புராணம் (வசனம்), திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு, நவம்பர் 1953 |
| 51. | பரஞ்சோதி முனிவர், உரைநடை ஆசிரியர் - பட்டுச்சாமி ஓதுவார், தி. திருச்சிராப்பள்ளி | திருவிளையாடற் புராணம் (உரைநடை) திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு ஆகஸ்டு 1955 |
| 52. | பரஞ்சோதி முனிவர் | திருவிளையாடற் புராணம்<br>36 ஆவது - இரசவாதம் செய்த படலம்<br>49 ஆவது - திருவாலவாய்க் காண்டம் |
| 53. | பரஞ்சோதி முனிவர் | திருவிளையாடற் புராணம்<br>36 ஆவது - இரசவாதம் செய்த படலம்<br>49 ஆவது - திருவாலவாய்க் காண்டம் |
| 54. | பரமசிவன், தொ. தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி, மதுரை | தெய்வங்களும் சமூக மரபுகளும், எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பு வெளியீடு,நியூ செஞ்சுரி புக்கவுஸ், சென்னை, சனவரி 1995 |
| 55. | பல்லவராயன் ராசாமணி குமரேசன், பட்ட மங்கலம், (தேவஸ்தானப் பணியாளர்) | சிவகங்கை சமஸ்தானத் திருக்கோயில்கள் ஸ்தல வரலாறு, சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் |
| 56. | பழநியப்பன், கி. 32, செனாய் நகர், மதுரை 13, திருப்பணிக்குழு உறுப்பினர், மீனாட்சி திருக்கோயில், மதுரை | கோயில் மாநகர் (மதுரை மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் வரலாறு), முதற் பதிப்பு, மே-1963, மீனாட்சி திருக்கோயில் திருப்பணிக்குழுவால் வெளியிடப் பெற்றது. |
| 57. | பாலகிருஷ்ணன், மு. சுரா புக்ஸ் லிமிடெட், சென்னை 40 | விடுதலைப் போரின் விடிவெள்ளிகள், மே 2001 |
| 58. | பாலசாரநாதன், சு. சென்னை | திருத்தலங்கள் வரலாறு (பகுதி - 1). மகாமகோபாத்தியாய டாக்டர்.உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை 600 090, 2000 |

| | | |
|---|---|---|
| 59. | பாலசுப்பிரமணியன், இரா.<br>சந்திரசேகரன், செ.சு.நா.,<br>மாலதி, பி.<br>சொல்லேருழவன், க. | சமயம் இணக்கமும் மேம்பாடும், ஜூன் 2000, தமிழ் சக்தி பதிப்பகம், சுப்பிரமணியபுரம் 2வது வீதி வடக்கு, காரைக்குடி - 2 |
| 60. | பாலசுப்பிரமணியன், இரா.<br>பேராசிரியர், தமிழ்த்துறை,<br>அழகப்பா பல்கலைக்கழகம்,<br>காரைக்குடி | புராணவியல், மார்ச் 2003 |
| 61. | பாலசுப்பிரமணியன், இரா.<br>சந்திரசேகரன், செ.சு.நா.<br>மாலதி, பி.<br>சொல்லேருழவன், க. | சமயம் இலக்கணமும் மேம்பாடும் |
| 62. | பாலசுப்பிரமணியன், கு.வே.,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர் | தீர்த்தம், திருக்கோயில், அதோமுகதரிசனம். கட்டுரை எண் 24. திருமந்திர ஆய்வுரைக் களஞ்சியம், பதிப்பாசிரியர், தயானந்த சந்திரசேகரன், முதற்பதிப்பு, டிசம்பர் 2005 |
| 63. | பொன்னம்பல பிள்ளை, ந.ச.<br>(பொழிப்புரை ஆசிரியர்) | மயூரகிரி புராணம், யாழ்ப்பாணம் சைவப் பிரகாச யந்திரசாலை, பார்த்திப வருடம் ஆவணி மாதம் 1885 |
| 64. | மங்கள முருகேசன், ந.க. | விநாயகர், முதற்பதிப்பு 2005, தென்றல் பதிப்பகம், 11, இரண்டாம் அடுக்கு, இந்திப் பிரச்சார சபைத் தெரு, தியாகராய நகர், சென்னை - 600 017 |
| 65. | மதுரை ஆதீனம் "லோக குரு" 292ஆவது குருமகா சன்னிதானம் ஸ்ரீ ல ஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் | மதுரை ஆதீன வரலாறு,<br>மதுரை ஆதீன வெளியீடு.<br>நவம்பர் -2007 |
| 66. | மாதவன், வே. இரா.,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர் - 5 | தமிழில் தல புராணங்கள், இரண்டாம் பகுதி, நவம்பர் 1995 |
| 67. | முத்துக்குமாரசாமி, ப. | உலக சமயங்கள் - இந்துமதம், முதற்பதிப்பு, ஆகஸ்ட் 1996, ஸ்ரீ மீனாட்சி அம்மன் பப்ளிகேஷன், 5, முதல் தெரு, ஜக்கிரியா காலனி, சென்னை - 600 094 |
| 68. | வள்ளி, நா.<br>முதல்வர், இராமசாமி<br>தமிழ்க்கல்லூரி.<br>காரைக்குடி | நகரத்தாரின் அறப்பணிகள்,<br>கிருஷ்ணா பதிப்பகம்.<br>7, லெட்சுமணன் செட்டியார் தெரு,<br>காரைக்குடி 630 001 |
| 69. | விசுவநாதன், அ.<br>பேராசிரியர், தமிழ்த்துறை<br>அழகப்பா பல்கலைக்கழகம் | தமிழ்ச் சிந்தனைகள், மங்கை பதிப்பகம், சுப்பிரமணியபுரம் 9ஆவது வீதி தெற்கு, காரைக்குடி, மூன்றாம் பதிப்பு 1991 |

| | | |
|---|---|---|
| 70. | வெங்கடராம சுவாமிகள், சு.ஏ. | பூக்கள் தரும் புனிதங்கள், அக்டோபர் 1997,<br>ஜெய் ஸ்ரீ அகஸ்தியா பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், 20, டயமண்ட் ஜூபிளி கட்டிடம்,<br>மயிலம், திருச்சி 8 |
| 71. | வெங்கடாசலம் செட்டியார், ராய.சோ.க.வெ.சித.வெ.(தமிழ்க்கடல்). காரைக்குடி | திருத்தலப் பயணம் 1966 |
| 72. | வைரம், கா.கா.<br>கணநாதன், கா. | திருப்பூவணம் வட்டாரத் தொழிற்களப் பாடல்கள் காட்டும் சமுதாயப் பழக்க வழக்கங்கள், முதற்பதிப்பு, ஜனவரி 2006,<br>காளியப்பா பதிப்பகம், திருப்பூவணம் |
| 73. | லிட்டில் ப்ளவர் கம்பெனி<br>சென்னை | **108 ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவமும் புராண- அபிமான ஸ்தலங்களும்,**<br>நான்காம் பதிப்பு 1994<br>அச்சிட்டோர் ராஜ் ஆப்செட் பிரஸ், சென்னை -14 |
| 74. | Dorai Rangaswamy,<br>University of Madras | The Religion and Philosophy of Thevaram,<br>Book – 1, (Vol. I & II),<br>1958 |
| 75. | Ramaswami, A.,<br>State Editor/ District Gazetteers/ (1961-68) | TAMIL NADU DISTRICT GAZETTEERS, RAMANATHAPURAM,<br>Printed by the Director of Stationery and Printing, Madras, on behalf of the Government of Tamil Nadu, 1972, Pages from 983 to 986 |
| 76. | Sundar raj, M.<br>General Editor,<br>Dr.N. Mahalingam | RG VEDIC STUDIES,<br>Second Edition, 1994,<br>Rukmani Offset Press<br>Coimbatore – 641 018 |
| 77. | Swami Chinmayananda | Awakening Indians to India,<br>By Central Chinmaya Mission Trust, Mumbai,<br>First Edition August 2003 |
| 78. | The Director (Epigraphy), Mysore - 570 005, on behalf of the Director of General Archaeological survey of India | SOUTH-INDIAN INSCRIPTIONS (VOL. V),<br>Miscellaneous Inscriptions in Tamil, Malayalam, Telugu and Kannada, 1986 |
| 79. | www.astrojothi.com. | |
| 80. | www.shaivam.org | |
| 81. | www.theology.com | |
| 82. | www.dinamalar.com | |
| 83. | www.kumudam.com | |
| 84. | www.geocities.com / thirupoovanam | website created and published by K. Kalairajan. |

உ

கணபதி துணை

# திருப்பூவண நாதருலா

**ஆசிரியர்** - **கந்தசாமிப் புலவர்**

**காலம்** - **கி.பி. 1620** (திருப்பூவணப் புராணம் எழுதிய ஆண்டு)

**ஊர்** - **திருப்பூவணம்**

**இயற்றிய பிற நூல்கள் -**

1) **திருப்பூவணப் புராணம்** (தமிழில் மொழி பெயர்த்துப் பாடியது)

2) **திருவாப்பனூர் புராணம்** (தமிழில் மொழிபெயர்த்துப் பாடியது)

3) **திருப்பூவணநாதர் வண்ணம் (புட்பவனநாதர் வண்ணம்)**

4) **திருப்பூவணம் மூர்த்தி வகுப்பு**

5) **திருப்பூவணம் தல வகுப்பு**

## *திருப்பூவணநாதருலா*

**காப்பு**

*சேவையுலாக் கொண்ட திருப்பூ வணர்மேல்வெண்*
*பாவையுலாம் பூவையுலாப் பாடவே - கோவைச்*
*சிரத்ததந்தத் தந்திவண்ணன் செம்மலென வந்த*
*கரத்தந்தத் தந்திவண்ணன் காப்பு*

### நூல்

1. *பொன்பூத்த வுந்திப் பொலந்தா மரையாற்கு*
*மன்பூத்த கஞ்ச மறையவற்கு - மின்பூத்த*

2. *விந்திரற்குந் தேவர்க்கு மியாவர்க்கு மாதவர்க்குஞ்*
*சந்திரற்குஞ் சூரியர்க்குந் தம்பிரா - னந்தமிலாப்*

3. *பல்கோடி யண்டம் படைப்போன் பரிப்போனப்*
*பல்கோடி யண்டம் பரந்தழிப்போன் - பல்கோடி*

4. *நாரணரு நான்முகரு நாளற் றழியினுந்தன்*
*காரண நேத்திரத்தாற் கண்டிருப்போ - னாரணஞ்சொ*

5. *லெல்லாப் பொருளு மிதுபொருளென் றோர்பொருண்மே*
*லில்லாப் பொருளு மியானென்போ - னெல்லாநீ*

6. *யென்னை யாரிடத்தி லென்றுமிரான் மின்னனையா*
*மென்னனை யாரிடத்தி லேயிருப்போன் - முன்ன*

7. *ரிமகிரிக் கெய்திமணந் தெம்பெரு மாட்டி*
*யுமைதழுவச் சின்னா ளுறைந்து - சிமையக்*

8. *கயிலைமலைக் கெய்தியங்குக் காமுற் றுறைநாட்*
*குயிலை மலைக்கரசன் கொம்பைப் - பயில்வொரீஇ*

9. *யீசன் வெகுளவுமை யேதென்ன நீ தக்க*
*னாசமகம் பார்க்க நடந்தநாட் - பேசியவெம்*

10. *வார்த்தை யவமதித்தாய் மாதே யறிந்துசெயு*
*மார்த்தகொடும் பாவமீ தாகையாற் - றீர்த்தலரி*

11. *தெற்குரியை யல்லைநீ யேகுழியே கென்னவுமை*
*தற்குரிய நாதனிரு தாடுதிப்ப - நற்கருணை*

12. *வள்ள றிருவாய் மலர்ந்தருளிப் பாண்டிநாட்*
*டுள்ளநுகர் பூவணமென் றோர்நகருண் - டொள்ளிழையே*

13. *யத்தலத்தி லல்லா* ***லறிந்து செயும்பாவ***
*மெத்தலத்துந் தீராதங் கேகென்னக் - கைத்தலத்தா*

14. *லீசனைப் போற்றியெழுந்தருளித் தென்றிசையில்*
*வாசமலி* ***புட்ப வனத்*** *தெய்தித் - தேசுவளர்*

15. *செம்பொற் றருவொன்று செங்கையால் வைத்துவளர்த்*
*தம்பொற் றருவி னடிநீழற் - கொம்பர்*

16. *தெருளார் பெருந்தவமுன் செய்ய வெளிப்பட்*
*டருளே திருமேனி யானோன் - பிரியா*

17. *வொருபதம் வேண்டிமணி யோடைகண்ட வெய்யோற்*
*கிருபதங் காட்டியரு ளீந்தோன் - பெரியசத*

18. *பத்திர வேதன்முன்கைப் பற்றி வருஞ்சாப*
*மத்திர மாக வருள் செய்தோன் - மெத்தத்*

19. *தருக்கு திரு ணாசனனார் தம்மருக்க ராக*
*வரக்க வுருவொழித்த வம்மான் - புரக்கு*

20. *முருமே னிவந்தமா யோனைத் தவஞ்செய்*
*திருமேனி தீண்டவருள்செய்தோன் - கருமேனி*

21. *மாமுகவ ரர்ச்சிக்க வானோர்க்கு மேனோர்க்கும்*
*தாமுதன்மை யாகுந் தலையளித்தோன் - காமர்*

22. *செழுந்தமிழ் மாமுனிவன் றெண்கடனீ ரெல்லா*
*முழுந்தமிழ்நீ ராக்க வுவந்தோன் - றொழுந்தருமன்*

23. *காளிசுச் சோதிகன்மார்க் கண்டன் வசிட்டனிந்த்ரன்*
*வாளிமக ரன்பூசை வாஞ்சித்தோன் - றோளிற்*

24. *றழைக்கும் படிகொணள சக்ரவர்த்தி முன்பட்*
*டுழைக்குங் கலிதீர்த் துவந்தோன் - மழைக்கு*

25. *ளொருநாட் பகுந்துண்ட வுப்பிலாக் கீரைக்*
*கருமாப் பதவி யளித்தோன் - விரிநீர்ச்செம்*

26. *போதத் திருவுருவாம் பொன்னனை யாட்கிரத*
*வாதத் திருவுருவாய் வந்துதித்தோன் - கோதிலறப்*

27. *பைங்கூழ் வளர்த்த பசும்பதி செங்கையான்*
*மங்கா தமைக்க வளர்ந்ததருத் - துங்கமா*

28. *ரோருகத்தி லேதருவா யோருகத்தில் வில்லுவமா*
*யோருகத்தில் வன்னியா யோருகத்திற் - சீருற்ற*

29. *பாரிற் கடவுட் பலாவாய்த் தழைக்கவதன்*
*வேரிற் கிளைத்தமுதல் விண்ணவர்கோன் - னேரா*

30. *மதித்த கயிலை வரையா னடக்க*
*மதித்த கயிலை வரையான் - றுதித்தார்க்கு*

31. *வாய்த்திடத்தா னீப வனத்தினா னான்மறைசொல்*
*வாய்த்திடத்தா னீப வனத்தினான் - சாத்தியகை*

32. *நந்த னிறைவிருத்த னாகத்தான் வீற்றிருந்தா*
*னந்த னிறைவிருந்த னாகத்தான் - முந்தரங்க*

33. *வூரவரம் பெற்றமா யூரத்தான் கண்டோன்மீ*
*தூரவரம் பெற்றமா யூரத்தான் - றேரிற்*

34. *படங்கொண்ட வல்குற் பராபரைமின் னம்மை*
*யிடங்கொண் டுறைபூவ ணேச - னடங் கொண்டு*

35. *சேவிக்குந் தெய்வத் திருப்பங் குனித்திருநாண்*
*மேவப் பெருமகிழ்ச்சி மீதூரக் - காவற்*

36. *குருமணிவெள் ளேற்றுக் கொடியேற்றி வீதித்*
*திருவுலாப் போதுந் தினத்து ளொருநாட்*

37. *சகங்காட்டுங் கங்கு றணிய வருணன்*
*முகங்காட்டச் சங்க முழங்கச் - சுகங்காட்டும்*

38. *பொன்மலை வல்லியுடன் பூண்ட திருத்துயினீத்*
*தென்மலை வில்லி யெழுந்தருளி - நன்மைப்*

39. *பருவயிர மாணிக்கப் பல்லக்கின் மீது*
*திருவனந்தற் றெய்வவுலாச் சென்று - பெரிதிருந்து*

40. *தேறத் தகும் பெரிய திவ்யா கமப்படியே*
*கூறத் தகும்பூசை கொண்டதற்பின் - மாறற்ற*

41. *நீணித் திலத்தரள நீல ப்ரவாளவச்ர*
*மாணிக்கச் சித்ரரத்ன மண்டபத்திற் - பேணிக்கொ*

42. *டங்காத னாயகியுந் தாமு மெழுந்தருளிச்*
*சிங்கா தனத்தவிசிற் சென்றிருந்து - நங்கூட*

43. *லூரிற்குண் டோதரற்கா வூட்டத் தனிபிரிந்து*
*பாரிற்செல் வையைப் பகீரதிப் பெண்- பேர்வுற்ற*

44. *நீட்சிப் பிரிவொழிய நேடி மணப்பதெனக்*
*காட்சித் திருவபிடே கங்கொண்டு - மாட்சி*

45. *யலங்கார மாக்கொளத ளாடை யிரண்டும்*
*விலங்காடை யென்ன விலக்கி - நலங்காணு*

46. *மன்போசன்* **முத்து வடுகநா தேந்தரனருள்** [282]
*பொன்போலு மாடை புனைந்தருளித் - தன்போற்*

47. *றிகழ்ந்திடுங்க ணன்றித் திருமுடியுந் திங்கள்*
*புகுஞ்செல்வங் கண்டு பொறான்போல் - மிகுங்கதிர்சூழ்*

48. *செம்பரிதி தானுமொக்கச் சேர்ந்து சுடர்வதென*
*வம்பொன் மணிமகுட மாங்கமைத்து - விம்ப*

49. *நணிமகர மண்டலமா நன்முகத்திற் கேற்ப*
*மணிமகர குண்டலங்கள் வைத்துத் - திணிகொண்*

50. *மணிகண்ட னென்னும்பேர் மற்றிதனா லென்ன*
*வணிமணிக் கண்டிகண்டத் தார்த்துக் - துணிவொன்றி*

51. *யாகம் பவளா சலமென் றவிர்சடைவாழ்*
*மேகம் படிந்த விதமென்ன மோக*

52. *முதிர முதிர முழுதுடம்புந் தேவிக்*
*கெதிரி லவனீந்த தென்ன - மதிநுதலெம்*

53. *பொன்னனை யாட்களித்த போதிரத வாதத்து*
*மன்னுபுகை மேற்பரந்த வண்ணமென - மின்னுறவே*

54. *வெம்மைக்கலிதீர்த்த மேனா ணளன்றந்த*
*செம்மைப் பதக்கமுரஞ் சேர்வித்துத் - தம்மைத்*

55. *திருவரைக்கோ மாட்டி தினந்தழுவுங் கைபோன்*
*மரகதக்கே யூரம் வளைத்துப் - பருநன்*

56. *மணிக்கைவளை யென்ன வரும்பேர்க் கிசைய*
*மணிக்கை வளைகரத்தில் வைத்துத் - துணைக்கமலப்*

57. *பூவிற் கருகுதிக்கும் பூங்கதிர்போ னாமெல்லாஞ்*
*சேவிக்க ரத்னச் சிலம்பணிந்து - மேவுற்ற*

58. *தம்பொற் சடைக்கிடக்குந் தண்கார்மின் னிட்டனைய*
*செம்பொற் றிருவா சிகைசேர்த்தி - யெம்பிரான்*

59. *மேன்மை வடிவமுடி மேற்பெண் டியானிக்கும்*
*பான்மையெனக் கண்ணாடி பார்த்தருளி - நான்மறைநூ*

60. *லோர்ந்தமறை யோர்செ யுபசார மீரெட்டிற்*
*சார்ந்ததிரு வாரா தனைகொண்டு - தேர்ந்தங்*

61. *கெழுதாச் சுருதி யெழுதுஞ் சுருதி*
*செழுமாத் திருச்செவியுட் சேர்த்திக் - குழுமித்*

62. *தருமோசை தேவர் சயசய வென்ன*
*வருமோசை மாமுனிவ ரோசை யிருவர்*

63. *நரம்போசை தெய்வநந்தி நம்பிரான் செங்கைப்*
*பிரம்போசை யோடும் பிறங்க - விரும்போசைச்*

64. *சீர்மணிப்பொற் கோயிற் றிருப்பேர் சுமந்தருள*
*வார்மணிப்பொற் றண்டின் மகிழ்ந்தேறி - நீர்மை*

65. *யுணர்வரும்பஃ றேவ ரொதுங்க வடியார்*
*கணநெருங்கும் வாயில் கடந்து - மணநெருங்குந்*

66. *தென்ற னடந்தினிது சேவிப்பத் தென்பாண்டி*
*யின்றமிழ்நா டுய்ய வெழுந்தருளிக் - கொன்றையளி*

67. *பாடுஞ் சடைக்கணிந்த பாகீ ரதிக்கேறி*
*யாடும் படிபறக்கு மன்னமென - மாடிரட்டு*

68. *நீடு கவரி நிரைதுள்ள மாமணித்தே*
*ரேடு கவரி யுடனேறிச் - சூடியதன்*

69. *பிள்ளைமதி பார்க்கப் பெருமதிவந் தென்னநிலாக்*
*கொள்ள வுயர்வெண் குடையோங்க - விள்ளுங்*

70. *கொடைக்கடவு ணல்லான் குழாம்புக்கு விண்ணின்*
*விடைக்கொடிநின் றாங்கு விளங்கச் - சுடர்க்கடவுள்*

71. *பன்னிருவ ரல்லர்மதி பார்த்திடினே யொன்றன்றா*
*லுன்னி லநேக ருளரென்ன - மின்னுகதிர்க்*

72. *கோலநிறை ரத்னக் குடையும் பருமுத்தின்*
*சீல மணிக்குடையுஞ் சேணிழற்ற - மேலை*

73. *வினைப்பகையார் வம்மின் வினைக்குரியார் போமி*
*னெப்பீலி யாடி யிலங்கப் - பனைக்கைமுகன்*

74. *மூடிகத் தேரேறி முன்னடப்பச் சேய்கலவ*
*நாடகத்தே ரேறி நடந்தருள - வூடணையு*

75. *மன்னத்தே ரேறி யயன்மா றிருக்கருட*
*வன்னத்தே ரேறி மருங்குவரப் - பொன்னொத்த*

76. *வாதித்த ராறிருவ ராறிரண் டேழ்புரவிச்*
*சோதிப்பொற் றேரேறிச் சூழ்போதக் - கோதற்ற*

77. *சீதக் கதிர்முத்தின் றேர்மீதிற் புட்பகத்தேர்*
*மீதிற் பெருந்தோழன் மேவிவரத் - தீதற்று*

78. *வந்தணையும் வெள்ளை மதவயி ராவதத்தே*
*ரிந்திர னேறி யினிதெய்தச் - செந்தழலோ*

79. *னீதி மறலி நிருதிவரு ணன்பவன*
*னாதியீ சான னடலூர்தி - மீதுவரக்*

80. *கூறும் பதினொருவர் கூறருஞ்சாத் தன்வடுக*
*னேறும்பன் ஞாளி யினிற்போத - மாறின்றி*

81. *யேழ்முனிவ ரெண்ம ரிருவ ரொருதனித்தந்*
*தாழ்வில் விமானந் தமிற்செல்லச் - சூழியக்கர்*

82. *கந்தருவர் சித்தர் கருடர் சுரருரகர்*
*வெந்திறற் கின்னரர்சே வித்துவரத் - தந்தைதாய்*

83. *வேணு புரக்கோலம் **வீழி மிழலை**யிடைப்*
*பேணு படிபார்த்த பிள்ளையும் - பூணுமருண்*

84. *மெய்யாக் கயிலைமலை வீற்றிருந்த தன்கோல*
***மையாற்றிற்** கண்டருளென் னப்பனு - மெய்யாம*

85. *லாடிச் சிவக்கு மடியைத்தென் **னாரூரிற்***
*பாடிச் சிவப்பேற்றும் பாவலனுங் - கூடற்கு*

86. *ளாசில் வழுதி யரசற்குச் சம்புவால்*
*வாசி வரவழைத்த மந்திரியும் - வீசுதிரை*

87. *சேர்க்குங் கடற்புவிக்குட் டெய்வச் சிவலோகம்*
*பார்க்க வரவழைத்த பார்த்திபனு - நீர்க்குடிலப்*

88. *பொன்முடிக்கு ளன்றிப் புனையாத் திருக்கொன்றை*
*தன்முடிக்குள் வாங்கித் தரிப்போனு - நன்மை*

89. *யொருவாத தத்தமணி யூர்தியினுஞ் சேமத்*
*திருவாடு தண்டினுமேற் செல்லப் - பிரியாத*

90. *வெப்பற்றுந் தீர்நாற்பத் தெண்ணா யிரவரெனு*
*மொப்பற்ற வேடத் துயர்ந்தோரு - மெய்ப்புற்ற*

91. ***சுந்தரன் பாடுதிருத் தொண்டத் தொகைக்கு***ளொன்பான்
*வந்த திருக்கூட்ட மாதவருஞ் - சந்ததமு*

92. *நாவகத்து மார்பகத்து நற்றிருமுன் னூல்கிடக்கும்*
*பாவகத்த ராம்வேத பாரகரும் - பூவணவன்*

93. *றெய்வத் திருமேனி தீண்டத் தவம் பெற்ற*
***சைவப் பெருமறையோர்*** *தங்கிளையு - முய்விப்போன்*

94. *கண்ணகன் கோயிற் கயிங்கரியஞ் செய்வோரும்*
*பண்ணமர்பாட் டோதும் பரிசனமு - மெண்ணிறந்த*

95. *தீர்க்கத் தபோதனருஞ் சேவிப்போ ருஞ்சைவ*
*மார்க்கப்* ***பதினெண் மடத்தாரு*** *- மேற்கநிறை*

96. *யண்டர் பணியு மழகிய நாயகர்முன்*
*மண்டபஞ்ச பாபதி மண்டபமுங் - கண்டருளிச்*

97. *சித்தங் களிகூர்* ***திருக்கண்ண ராசேந்த்ர***
*வுத்துங்க னுங்குலத்தி லுள்ளோரும் - மத்தற்*

98. *கமைக்குங் கொடிக்கம்ப மண்டபமு மம்பொன்*
*னிமைக்கத் திருமுன் னியற்றி - யுமைக்கு*

99. *முரசதிர் கோயின் முதற்பிர காரத்*
*திருமதிலு* ***மண்டபமுஞ் செய்வித்*** *- தொருதன்*

100. *வரிசைப்பேர் கொள்பூ வணலிங்க மென்னும்*
*முரிமைப்பே ரான்சுற்றத் தோரும் - பெரியமணி*

101. *கன்னிகைத் தீர்த்தக் கரைமதிலு மண்டபமு*
*மன்னுபுடை சுற்றுமாள் வாரியுடன் - முன்னிமுடித்*

102. *தூறுசீர்ப் புண்ணியநீர்க் குள்ளிறங்கி நானஞ்செய்*
*தேறுவார் சொர்க்கத் திருகால்வைத் - தேறப்*

103. *படிகட்டி யன்ன படிபட்டி நாளும்*
*வடிகட் டியதருமம் வாய்த்தோன் - முடிகட்டுந்*

104. *துன்னு நதிமரபிற் றோன்றீ* ***சுரமூர்த்தி***
*யென்னு மவனு மியல்கிளையு - மின்னுங்*

105. *கருத்தொன்றி வந்துசிவ காரியங்கள் செய்யுந்*
*திருத்தொண்டர் தங்க டிரளு -* ***நிருத்தஞ்****செய்*

106. *செம்பொனிதழ்க் கும்பமுலைச் சேனயனப் பால்வயனத்*
*தம்பொனிறத் தேவ ரடியாரும் - பம்புதிரை*

107. *வெள்ள மெனத்திரண்டு வீதிக் கரைபுரள*
*வெள்ளி லிருவ ரியாழ்முரலத் - துள்ளுகணப்*

108. *பானுகம்பன் சங்கம் பரிந்தூத வாணன்கார்*
*மானுங் குடமுழவம் வாசிப்ப - வானாயர்*

109. *மெய்யஞ் செழுத்தால் விரவுங் குழலோசை*
*யையன் செவிக்கின் னமுதூற்றப் - பொய்யன்பில்*

110. ***சம்பந்தர்*** *கைத்தாளந் தாக்கிட நீலகண்ட*
*வெம்பெரும் பாண ரிசைகூட்டப் - பைம்பொன்*

111. ***முருடு தடாரிதக்கை மொந்தை பதலை***
***யிரலை திமிலைமுர சேங்கத்*** *- திரையெறியும்*

112. ***வையை*** *நதித்தீரன் வந்தான் மணிகுண்டச்*
*செய்யநெடுந் தீர்த்தச் சிவன்வந்தான் - றுய்ய*

113. *நலஞ்செய்* ***நவக்கிரக*** *நாட்களிவை நாளும்*
*வலஞ்செய்யு மூருடையான் வந்தான் - பொலஞ்செய்ய*

114. *பொன்பதும மானனைய* ***பொன்னனை யாண்மனைக்கு***
***ளன்பமுது கொண்டவரன்*** *வந்தான் - முன்* ***பிரத***

115. ***வாதஞ் செயுஞ்*** *சித்தன் வந்தான் மதிக்குடைவேள்*
*போதஞ்செயும்போர் பொறான்வந்தான் - மோதுவிடந்*

116. *தண் கழுத்தில் வைத்து நெடுந் தாலிசெழுந் தாமரையின்*
*பெண்கழுத்தில் வைத்த பிரான்வந்தா - னெண்கழிக்குந்*

117. *துங்க வமரர் தொழும்பா வணங்கொடுக்குஞ்*
*செங்கம லச்சரணத் தேவந்தா - னெங்கள்*

118. *பழவினை வேரறுப்பான் வந்தான் பருவெண்*
*மழவிடை யேறுயர்த்தான் வந்தான் - னழகிய* ***மின்***

119. ***மங்கை****க்கு வாய்த்த மணவாளன் வந்தானென்*
*றங்கத் திருச்சின்ன மார்ப்பெடுப்பப் - பொங்கு*

120. *நதிமாதர் கோக நகமாதர் தெய்வ*
*மதிமாதர் நீடுவசு மாதர் - கதிர்மாத*

121. *ரேழ்மாதர் வேலோ னிருமாத ரெண்டிசைக்கே*
*வாழ்மாத ரேழ்முனிவர்* ***மாதர்கள்*** *- சூழ்வானச்*

122. *சுந்தர மாதரெனத் தோன்றிரதி மாதருட*
*னந்தர மாத ரனைவர்களுஞ் - சிந்தைமகிழ்*

123. *கோலங்காட் டித்தான் குனிக்குந் திருக்கூத்தை*
***யாலங்காட் டிற்பார்க்கு மம்மையரு*** *- மூலங்காண்*

124. *சீரிசை யாடிநிழற் செம்ம றனைப்பயந்த*
*பேரிசை* ***ஞானிப் பிராட்டியரு*** *- மேரிசைதென்*

125. *சையத்* ***தமிழ்நாட்டிற்*** *சைவந் தலையெடுப்பச்*
*செய்விக்கும்* ***பாண்டிமா தேவி****யரு - முய்விக்கு*

126. *மந்தண் வயற்பொலிதென் னாரூரி னம்பிக்கா*
*வந்துலகி லுற்பவித்த மங்கையருஞ் - செந்துவரின்*

127. *மின்றழைத்த வேணி விமலனைத் தன்வீட்டி*
*லன்றழைத்த மெய்ப்பொ னனையாரு - நின்றுருகி*

128. *யாரணச் செம்பொ னடிபோற்ற வெம்பெருமான்*
*றோரண வீதிதனிற் றேன்றினனாற் - சேரமரர்*

129. *தட்ப வன****பாரி சாத*** *வனமழையாற்*
***புட்பவன*** *மாம்பேர் புதுக்கினார் - பெட்புமின்னாள்*

### ***குழாங்கள்***

130. *போர்க்கைத் திருமழுவார் புட்ப வனப்புதுமை*
*பார்க்கத் திரண்டகிளிப் பண்பென்னப் - பேர்க்கரிய*

131. *நீலகண்டந் தம்போ னிமலன் படைத்திருந்த*
*கோலநின்று பார்க்குமயிற் கூட்டமெனப் - பாலுகந்த*

132. வாகத் தழகிய**மின் னம்மை** யெழில் பார்க்க
மேகத்தை விட் டுவந்த மின்களென - வேகவொற்றை

133. மான்விட் டதனால் வசஞ்செய்தா னென்றறவோர்
தான்விட்ட மான்கூட்டத் தன்மையென - வான்முட்ட

134. வேங்கக் குயிலைமகத் தீடழித்தா ளென்றுபழி
வாங்கக் குயிறிரண் டு வந்தவென - வாங்கொரனங்

135. காணாப் பழிப்பகலக் கண்டறிவோ மென்றரன்முன்
சேணாட்டி லன்னமெலாஞ் சென்றவெனத் - தாணாட் டு

136. முன்றிலின் மாடமுகப்பினின் மேடையிற்செய்
குன்றினிற் சாளரத்திற் கோபுரத்தில் - மன்றில்

137. றடத்தினின் மண்டபத்திற் சாரரங்கிற் றெற்றி
யிடத்தினில் வீதியினி லெய்தி - மடற்குவளைச்

138. சேயரிக்கண் மின்னார்நந் தெய்வப் **பலாப்பழத்**திற்
கீயினத்தின் மொய்ப்பா ரிருமருங்கு - நேயமிகப்

139. பூத்து மலர்கருணைப் புட்பவனப் பூந்தேனைப்
பார்த்திருகண் வண்டாற் பருகுவார் - தீர்த்தனணி

140. கங்கை தவத்தை வியப்பார் கதிரிமவான்
மங்கை தவத்தை வழுத்துவார் - தங்க

141. டவக்குறையை நோவார் தடந்தோளை நோக்கி
நிவக்கு முலைநோக்கி நிற்பார் - ருவக்கு

142. மிகச்சின்ன நுண்ணிடையார் மெல்லியலாள் வைத்த
**நகச்சின்ன** நோக்கியுள நைவார் - பகைச்சின்ன

143. மாவதென் னென்றிவர்மே லவ்வேளெய் யானென்பார்
பாவங் கொடிதெம் பழியென்பார் - தேவரிவர்

144. வெள்ளிக் கிரிமுலையாய் மேவற் குபாயமிதென்
றள்ளித் திருநீ றலங்கரிப்பா - ருள்ளுறுபொன்

145. வாகார் பசலையிற்கை வன்சிலையாக் கொள்ளுமென
வேகாசம் வீழ வெதிர் நிற்பார் - மாகாதல்

146. வெள்ளத்தை நீத்த விடையோனை நாவாய்கேட்
டுள்ளத்தி னுள்ளே யுருகுவார் - வள்ள

147. றிருமேனிப் பாதியே தெள்ளமுத மற்றை
யொருபாதி யும்விட மென் றோர்வா - ரரன்மேல்

148. விரிபூ மழைபோல் விரியாது தம்மேற்
சொரிபூ மழைநோக்கிச் சோர்வா - ரரிதாய

149. வெம்மருந்தி னாற்சடைமே லிந்து குளிர்ந்திருப்ப
தம்மருந்தைச் சொல்லீ ரடிகளென்பார் - விம்மியமீன்

150. மேல்வலைவீ சிப்பிடித்தீர் மேனாளிந் நாள்விழிமீன்
மால்வலைவீ சிப்பிடித்தீர் வந்தென்பார் - சால்கூடற்

151. செய்க்கரும்பைக் கல்லானை தின்னக் கொடுத்தீர்வேள்
கைக்கரும்பைத் தின்னாதோ காணென்பார் - மெய்க் கரும்பாம்

152. பட்பவள வாயர்முனி பன்னியர்வாழ் தாருவனம்
புட்பவன மாக்கினீர் போந்தென்பார் - புட்பவனங்

153. *காணி யுமக்கோவிற் காமனுக்கோ சொல்லீர்கைப்*
*பாணிமழு வேந்துநீர் பார்த்தென்பார் - தூணிமத*

154. *னாரைத் தடுத்தே யடைவார் வினைதீர்த்த*
*பேரைப் புதுக்கீர் பிரானென்பார் - பாரித்த*

155. *தேரோட வோடப்பின் சென்றோடி யோடிக்க*
*ணீரோட வோடநின்று நெட்டுயிர்ப்பார் - சீரோடு*

156. *மவ்விரத வாதந்தா னன்றுசெய்தா ரின்றுசெய்தா*
*ரிவ்விரத வாத மெமக்கென்பார் - கவ்வைக்*

157. *கிடைவார் கலையு மிழப்பா ருருகி*
*யுடைவா ரிவரு ளொருத்தி - தடமலரோ*

**பேதை**

158. *னட்டதிக்கார் பெண்மை யழகு குடிபுகுத*
*விட்டதொரு மூர்த்தமெனு மென்பேதை - கிட்டுநனை*

159. *கூறும் பொதிமலர்பூங் கொட்டை மதுமணமோ*
*ராறுந்தன் னுள்ளடக்கு மம்புயஞ் - சீறும்*

160. *விழிதாங்கு நாதனைவில் வேளிரதி பண்டைப்*
*பழிவாங்கப் பெற்றனைய பாவை - யெழிறாங்கு*

161. *சங்கை மருவாத் தரள மிரதிபதி*
*செங்கை மருவாச் சிறுகரும்பு - பொங்கநலம்*

162. *பூத்தறியாப் பூங்கொம்பு போகமறி யாப்பைங்கூழ்*
*கோத்தறி யாத குலரத்ன - மேத்த*

163. *விரித்தறியாத் தோகைமயில் வெண்பாலு நீரும்*
*பிரித்தறி யாதவன்னப் பிள்ளை - மரித்தறியா*

164. *மைதிகழு நீலகண்டன் வாழ்கின்ற புட்பவன*
*மெய்திவிளை யாடா விளஞ்சுரும்பு - வைதிகநூ*

165. *னேசன் றிருக்கரத்தி னின்றுந்தென் புட்பவன*
*வாசஞ் செயக்குதித்த மான்கன்று - வீசியவாட்*

166. *போரறி யாத பொலங்குழையாண் மன்மதனூற்*
*பேரறி யாத பிராயத்தாள் - வார்வீழ்த்த*

167. *கொங்கையைச்செப் பென்றுவைத்துக் கொண்டுவிளை யாடமட*
*மங்கையரைக் கேட்டு வருந்துவா - டங்குமனைச்*

168. *செய்யசுவர்ச் சித்திரத்திற் றீட்டுகத லிக்கனியைக்*
*கையிற் கிளியருந்தக் காட்டுவா - ளையமறப்*

169. *பூசைவரக் கண்டோடிப் போயோ வியப்புறவை*
*யாசையுடன் கூட்டி லழைத்தயர்வாள் - வீசுமுன்றில்*

170. *வெள்ளைக் கதிர்நிலவை வெண்பா லெனப்பளிக்கு*
*வள்ளத் தினின்முகந்து வாய்வைப்பாள் - விள்ளும்*

171. *படிசே ரிறாலிற் படுகோது நீக்கி*
*வடியாத தேன்மழலை வாயாள் - கடியாமுன்*

172. *பல்லைவிடப் போகாப் பணிநஞ்சு போலத்த*
*னெல்லைவிடப் போகா விருவிழியாள் - டொல்லபர*

173. *பக்கக் கலைகள் பயப்பயப் போய்த்திரும்ப*
*வொக்க நிறைந்தனைய வொண்ணகையாண் - மிக்கமுத்தி*

174. *நாட்டினுமா ரேர்விரும்பு **நாவலூ ரன்மணம்போற்***
*கூட்டினுங் கூடாத கூந்தலாள் - வீட்டி*

175. *னிறைந்த திருநெடுமா னீள்செவியி னுள்ளே*
*மறைந்த மதுகையிட வர்போற் - பெறும்பிரண*

176. *வத்தி லடங்கு மறைபோற் றதீசிசரீ*
*ரத்தி லடங்குவச்சி ராயுதம்போற் - சூத்திரத்தின்*

177. *மேலொரு நாளொருத்தி மெய்யிற் கனல்வேந்தன்*
*சால வொளித்த தகைமைபோல் - வாலிதனை*

178. *யெய்ய மறைந்த விராமன்போற் றோன்றிவர*
*மெய்யின் மறைந்த வியன்முலையா - டுய்யநிறம்*

179. *துன்னு பளிக்குமுன்றிற் றேன்றுநிழற் பாவைதனை*
*யின்னுயிர்ப் பாங்கி யெனக்கொண்டு - தன்னகத்திற்*

180. *சிற்றி லிழைத்தயருஞ் சேயிழையா ளங்கவளை*
*மற்றொரு கைத்தாய் மடியிருத்தி - முற்றா*

181. *வழுகு தரக்கனிந்த வாரமுதச் செவ்வாய்*
*மழலை மொழிதிருந்தும் வண்ணம் - பழையமறைப்*

182. *பூவண மென்றுநிறை பூவணங்கோ யில்கொண்ட*
*தீவண மேனிச் சிவனென்றுங் - காவணவுந்*

183. *தெய்வப் பலாவென்றுந் **தெய்வப் பலாவடியிற்***
*சைவப் பொருளாந் தவமென்றுந் - துய்யதிரை*

184. ***வையைநதி** யென்று **மணிகர் ணிகை**யென்று*
*மைய னிடம்பிரியா வம்மையென்று - மொய்கயிலைக்*

185. *குன்றி லிருந்தருளுங் கோனென்றுந் **தில்லை**மணி*
*மன்றி னடம்புரிபெம் மானென்றும் - மென்றுவர்வாய்ப்*

186. *பைங்கிளிக்கு மென்சொற் பயிற்றுதல் போற்பயிற்றி*
*யங்கவள்கேட் டுண்மகிழு மவ்வெல்லை - யெங்குமொரு*

187. *தாய்வயிறு காணாத் தருமத் திருவுடம்பை*
*வேய்வயிறு கண்ட வியன்பதியுங் - காவிரிவாய்ச்*

188. *சீருருவப் பேருருவச் செந்தீத் திருவுருவ*
*நீருருவ மாக நிகழ்பதியும் - மோருமையா*

189. *லார்க்குந் தெரியா வருமைத் திருமேனி*
*சேர்க்குந் தழும்பிருந்த சீரூரு - மேர்க்குமறை*

190. *தேற்றுமயன் காணாத் திருமுடியை வையைப்பே*
*ராற்றின் **மணல்கண் டறிபதியும்** - போற்றுநெடு*

191. *மாய னறியா மலர்ப்பாதம் **பொன்னனையா***
*டேய மனையறியுந் தொன்னகரு - மேயபிரான்*

192. *றேவர் நெருங்கத் திருத்தேர்ப் பவனிவர*
*றாவி றிருச்சின்னந் தானிசைப்பப் - பாவையன்னை*

193. *முன்செலப்பின் சென்றுகர முன்குவிக்கப் பின்குவித்து*
*நன்குதுதிக் கத்துதித்து நாடிய - பின்பேதை*

194. *கைத்தா யரைப்பார்த்துக் காண்டகு சோதிதரு*
*மித்தேரி லார்சொல் கெனக்கேட்டா - ளத்தேரிற்*

195. ***றேறி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியின்***
***மேவிப் பழுத்த வியன்கனி**யென் - றாவலுற*

196. *மாது தனக்குரைப்ப மற்றதனைத் தாருமெனக்*
*காதலுடன் கேட்டழுது கண்பிசையப் - பேதைகே*

197. *ளிந்தக் கனியெவர்க்கு மெட்டா நறுங்கனிகாண்*
*முந்தப் பழமறையீ மொய்ப்பதுகாண் - சந்ததமு*

198. *மொன்றாய்ப் பலவா முருவிற் பொருந்தியெங்கு*
*நன்றாய்ப் புறம்புமுள்ளு நண்ணுங்காண் - குன்றாத*

199. *பாவு மலையிற் பசுந்தே னுடன்கலந்தங்*
*கோவில் கருணைரச மூறுங்காண் - மேவுமன்ப*

200. *ருள்ளத் தினிக்குங்கா ணோர்**பொன் னனையாட்**குக்*
*கிள்ளப் பழுத்துக் கிடக்குங்காண் - விள்ளும்*

201. *பெரிய முகுந்தப் பிரமா தியர்க்கு*
*மரிய பழங்கா ணணங்கே பரிவகனீ*

202. *யென்னும்பொழுதி லிரதமேற் கொண்டிருக்கும்*
*பன்னுங் கருணைப் பழமகல - வன்னையரு*

203. *மந்தக் கனிந மகத்தி லிருப்பதென*
*விந்தக் கனியையிற்கொண் டேகினார் - வந்தமத*

204. *னென்றுஞ் சிறியார்க் கினியதுகாட் டாரெனத்தன்*
*வன்றிண் சிலையை மறைத்தகன்றான் - றுன்றுங்*

## *பெதும்பை*

205. *கரையற்ற பெண்மைக் கவின்சிறிது காட்டு*
*முருவப் **பெதும்பை** யொருத்தி - யிருள்போய்ப்*

206. *புலர்ந்தும் புலராப் பொழுதிற் சிறிதே*
*யலர்ந்து மலாரா வரும்பு - கலந்தன்பு*

207. *கூரவருந் தாய்சமைத்த கூற்டிற் கிடவாத*
*தேரு மிழாத சிறுகிள்ளை - சீரியதன்*

208. *கார்க்குஞ் சௌவளர்த்த காகவன் புண்மருண்டு*
*பார்க்கநிறங் காட்டும் பசியகுயி - லேர்க்க*

209. *நிறைந்து விடும்பாலு நீரும் பிரிக்க*
*வறிந்துமறி யாப்பருவ வன்ன - முறைந்துதனி*

210. *மேவி யிருந்தினிமேல் வேண்டு முரைபார்க்கப்*
*பூவின்மத னூற்பாடம் போற்றுவாள் - பாவையுமை*

211. *யார்த்த சரவணத்தி லண்ணலுருக் கூட்டுதல்போற்*
*சேர்த்திகுளை கூட்டுந் திருக்குழலாள் - கூர்ந்து*

212. *வியனீரிற் றாயுடன்போய் மென்மெல நீந்துங்*
*கயல்போற் புடைபெயர்ச்சி காட்டி - யயலவரைத்*

213. *தெட்டும் புரட்டுந் திருட்டும் புகுந்துகொலை*
*மட்டும் புகுதா வரிவிழியா - ளெட்டரியா*

214. *அண்டபகி ரண்ட மளக்கத் திருநெடுமால்*
*கொண்டகுறள் போன்முகங்கொள் கொங்கையா - டிண்டிறல்வேள்*

215. *கூடு மிளம்பருவக் கோலத்தி லேறிவிளை*
*யாடுசிறு தேரனைய வல்குலா - டோடுருவு*

216. *மத்திரக்கண் மங்கையரு மாடவருஞ் செய்கலவி*
*சித்திரத்தி னல்லாற் றெரிந்திடாண் - மெத்தவுறா*

217. *வன்னச் சிறுநடையா லாலிங் கனவனப்பாற்*
*கன்னிக் கொலைசிறிது கைவந்தாண் - மின்னுஞ்*

218. *சுதைநிலா முற்றத்துத் தோழியருந் தானும்*
*புதியகுட நீர்வார்த்துப் போற்றிப் - பதமறிந்து*

219. *தன்னைவளர்க் குஞ்செவிலித் தாய்போ னிதம்பேணி*
*மன்னி வளர்க்க வளர்முல்லை - யன்னதுதான்*

220. *தன்சிறுபற் போலரும்பு தான்படைப்பக் கண்டுசிறந்*
*தன்பு மலர வகமலர்ந்து - முன்பணியுந்*

221. *தாதிய ரேவல் செயத் தாயர் களிதூங்க*
*மேதகு பல்லியம்வாய் விட்டார்ப்பப் - போதவிழுங்*

222. *கோதை புதுவிழாக் கொண்டாடித் தன்பருவ*
*மாதருட னங்ஙன் மகிழ்போதின் - மோதுபனி*

223. *மொய்வந்த தென்னிமய முல்லைக் கொடிபடர்ந்த*
*செவ்வந்தி வண்ணச் சிவக்கொழுந்து - மெய்வரைவிற்*

224. *கோட்டுந் திருப்புயத்திற் கொன்றையொடுஞ் சொன்மாலை*
*பூட்டுந்தே* **வாரப் புலவர்களு** *- நாட்டுபுகழ்த்*

225. *தென்னந் தமிழிற்* ***றிருவா சகப்புலவ***
*னென்னும் பெரியவன்பி னெங்கோனும் - பொன்னலருஞ்*

226. *செந்தா திலங்குந் திருக்கொன்றை வேணியர்மே*
*லந்தாதி பாடியவெண் ணம்மையு - நந்தேவர்*

227. *வீதி யுலாங்கயிலை வெற்பி லரங்கேற்று*
*மாதி யுலாவுரைத்த வன்பனுஞ் - சோதிமலைப்*

228. *பெண்பாகங் கொண்ட பிரான்மெய்ப் பதிதோறும்*
*வெண்பாவி னாற்புகழ்ந்த வேந்தனும் - பண்பாப்*

229. *பிரமனைமுன் னாட்சிரங்கொள் பெம்மானுக் கன்பாய்ப்*
*பரமனை யேபாடு வாரு - மருதிடங்கொள்*

230. *பைம்மணிக் கோவைப் பணியா பரணர்மேன்*
*மும்மணிக் கோவைசொன்ன மூர்த்தியுந் - தம்முருவாய்*

231. *வாழ்வாரும் வாழ்த்தி வருவாரு மெய்யுருகிச்*
*சூழ்வாரு மெம்மருங்குஞ் சூழ்ந்துவரத் - தாழ்வில்லாத்*

232. *தெய்வப் பலாவின் றிருநீழல் வீற்றிருப்போன்*
*சைவத் திருவீதி சாருதலு - மையற்*

233. *செயல்சற் றறிவிழியாள் சேயிழையா ரோடு*
*மியலுற் றெதிர்போ யிறைஞ்சிக் - கயிலைக்*

234. *கிரிக்கு ளமர்ந்தபிரான் கேசாதி பாதப்*
*பரப்பி னழகையெலாம் பார்த்தா - ளொருத்தி*

235. *தபோபலம் வாய்த்தபெருஞ் சாட்சிக் கிருந்த*
*கபோல நகக்குறியைக் கண்டாள் - சுபாவந்*

236. *தெரிந்தமட வீரிந்தத் தேவர் கபோலத்*
*திருந்தகுறி யென்னகுறி யென்றா - டிருந்துகுயிற்*

237. *பிள்ளையே யெங்கடவப் பேறே வரிவளைக்கைக்*
*கிள்ளைநீ யின்னமிது கேட்டிலையோ - தெள்ளுகடல்*

238. *வண்ணனறி யாப்பதமில் வாயில் வரத்தவஞ்செய்*
*பெண்ணமுது கைபடைத்த பேறுகா - ணெண்ணி*

239. *லருவுருவ மில்லா வரனைக் கருணைத்*
*திருவுருவஞ் செய்தாள் செயல்கா - ணிருநயனந்*

240. *துள்ளிமுத்தங் கொள்ளமனந் தூயதிருப்* ***பொன்னனையா***
*ளள்ளிமுத்தங் கொண்டவடை யாளங்கா - ணொள்ளிழையாய்*

241. *கண்டருணீ யென்னவுட் கொள் காதல் புறந்தெரியக்*
*கொண்ட புளகக் குறிப்பெய்த - வண்டூதக்*

242. *கேட்டு மலருங் கிளர்தா மரைமுகைபோ*
*லீட்டிய செவ்வி யெழில்படைத்தாண் - மீட்டிவளைப்*

243. *பார்த்ததும் பாரா ததுவுமாய்ப் பைங்கொன்றைத்*
*தீர்த்தனு மந்தத் தெருவகன்றா - னார்த்த*

244. *சிறுநா ணுறுமடமின் செய்கைதெரி வில்வேள்*
*சிறுநா ணொலிதுலக்கிச் சென்றான் - மறுதெருவிற்*

245. **மங்கை**
*சட்டமிடும் வில்வே ளநா யகப்பட்டங்*
*கட்ட வளர்ந்த கவின்மங்கை - முட்டவசைந்*

246. *தார வளைந்துதுவண் டாடுமிடை யுங்கருத்தும்*
*பார மறிந்த பருவத்தாள் - வீரமிகும்*

247. *வாட்கைக் குமரருக்கு மையற் பிணிகொடுத்து*
*மீட்கத் தெரியும் விழியினாண் - வேட்கைதரும்*

248. *வானிற் சுரபியின்பால் வண்மையுடைக் கற்பகப்பூந்*
*தேனிற் கலந்தனைய செவ்விதழாள் - மேனிற்குங்*

249. *காருலவு தண்ணங் கடல்போ லகன்றுபரந்*
*தாரமுதங் கொப்புளிக்கு மல்குலாள்- சோர்வுதர*

250. *வன்போர் புரிபொருவின் மன்மதன்ற னூலினுக்குப்*
*பொன்போ லுரையறிந்து பூரிப்பா - ளென்பிறவி*

251. *யெண்ணைப் பறித்தெரியு மீசன்போன் மாலானார்*
*கண்ணைப் பறித்தெரியுங் காட்சியாள் - வண்ணத்*

252. *திருமுகத்தெய் வீகநிறச் செந்தா மரையு*
*மருமுகக்குங் கூந்தனிற வண்டுங் - கரியவிழி*

253. *யார்ந்தநீ லோற்பலமு மாம்பல்வாய்க் கிஞ்சுகமுஞ்*
*சார்ந்த திருநிறத்துச் சண்பகமும் - பூந்தரள*

254. *மாலை முலைக்கோங்கும் வாய்ந்த நகைத்தளவுங்*
*கோல மினிய கொழுங்குமிழு - நூலினிடை*

255. *வல்லியுஞ் செங்கை மலர்க்காந் தளுஞ்சரண*
*பல்லவமு மற்றெவையும் பார்த்தருளி - நல்லவர்பாற்*

256. போதுதிரு வுள்ளத்துப் புட்பவனக் கோயிலா
ரீதுமொரு புட்பவன மென்றெண்ணக் - கோதகல

257. மேய திருவழகின் மெய்யு மவயவமுந்
தூய நிறத்திற் றுலங்குவாள் - சாயலிய

258. லொத்த பருவத் துயிர்ப்பா வையர்சூழச்
சித்திரமா மண்டபத்திற் சென்றிருந்து - முத்தமலை

259. விம்மநையு நுண்ணிடையாள் வெண்முத்த மிட்டிழைத்த
வம்மனை வாங்கியெறிந் தாடவவை - தம்ம

260. திருமுகச் செவ்விதிரு டத்திகழ்விண் டிங்கள்
வருவதுவும் போவதுவு மான - விருகை

261. வனச மலர்மாறி மாறிவிளை யாடு
மினியகளி யன்னங்க ளென்னப் - புனைகுழற்குத்

262. தோற்ற முகிறிறையாத் தூமுத்தின் பந்துநிரை
போற்றிவர விட்ட புதுமையென - வேற்றதனைக்

263. கொள்ளா தெடுத்தெறியுங் கொள்கையென விண்முகில்பின்
றள்ளாது மீளத் தருவதென - வள்ளல்பாற்

264. றூதுவிடு மன்னமெனத் தொல்லையனங் காணாத
நாதனென மீளு நலமென்ன - மாதரசி

265. யம்மானை யேந்துகரத் தம்மானை யேபாடி
யம்மானை யாடு மளவிலே - பெம்மான்சூழ்

266. காராழித் தேர் முகுகு காட்டக் கதிர்வெய்யோ
னோராழித் தேரொதுங்கி யோட்டெடுப்பக் - கூராழி

267. பாதலக் கங்கை படியநெடுங் கூவிரம்போய்
மீதலக் கங்கை மிசைப்பொங்கப் - போதருதேர்

268. மேல்வெண் டுகிற்கொடிகள் விண்ணஞ் சுரநதியின்
பால்வெண் டிரைபோற் படிந்தாடச் - சேல்கொண்

269. டுருக்குந் திருக்க ணுமையம்மை பாகத்
திருக்குந் திருப்பூவ ணேசன் - றிருக்கொன்றை

270. மாலை யழகன் வரும்பவனி தானுரைக்கும்
வேலை திரு வம்மனைகை விட்டெறிந்தாள் - சேலை

271. யிடைக்க ளிறுக்கி யெழுந்தாணற் றாயர்
பிடிக்கப் பிழைத்துப் பெயர்ந்தா - டடுக்குஞ்

272. செவிலியர்க்குந் தப்பித் தெருவிற் புகுந்தா
ணவிலியற்கை வாசமலர் நங்கை - சிவபிரான்

273. றெய்வத் திருமார்புந் திண்டோளும் பொன்னனையாள்
கைவைக்குங் கோலக் கபோலமுஞ் - வைசத்

274. திருநீறு சண்ணித்த தெய்வச்செம் மேனி
யருணீர்மை குன்றா வழகும் - பெருவாழ்வு

275. பெற்றதுபோற் கண்டு பெரிதிறைஞ்சிக் கண்பனிப்ப
முற்றுமுடல் பூரிக்க முன்னின்று - நற்றவர்சேர்

276. விண்ணார்ந்த வெள்ளிமலை மேலிருக்குஞ் செந்தேனுக்
கண்ணாந்து பார்த்து ளயர்வுற்றா - டண்ணார்

277. *விதுக்குடி யேறுசடை வேதியன் மோகம்*
*புதுக்குடி யேறுநெஞ்சு பூண்டாண் - மதுக்குமிழி*

278. *செற்றிய வெண்டரளச் செங்கனிவாய் செஞ்சத்து*
*ளூற்றதுயர் பாங்கியருக் கோதினாண் - மற்றவரும்*

279. *பொன்னே கிளியே புதுமயிலே யன்னமே*
*மின்னே மதன விசயமே - யன்னைக்*

280. *கொடியார் தடுத்த கொடுங்சகுன மீதென்*
*றுடனே குயிலுக் குரைத்தார் - மடவரலு*

281. *மற்றதுமெய் யென்று மயங்கி யறிவழிந்து*
*பொற்றொடி வீழப் புலம்புற்றாண் - முற்று*

282. *முரியார் கடைக்கணித்த தூங்குவட் கோ வேட் கோ*
*தெரியா தெனவயிர்க்கச் சென்றாள் - பொருவேண்*

283. *மதுவிருந்த மென்சாப வாளியின் வாய்க்குப்*
*புதுவிருந் தாயினாள் பூவை - மதியா*

284. **மடந்தை**
*ரினத்தைப் பொருவே ளிரதிமேல் வைத்த*
*மனத்தைத் திருப்பு மடந்தை - வனத்தவகி*

285. *லாவி முடித்திளைஞ ராவி முடிக்கவெனச்*
*சீவி முடித்த திருக்குழலாள் - பூவுலகி*

286. *லாற்றுவன் காமுகர்த மாயுணா ளெண்ணியெண்ணிக்*
*கூற்றுவன்பார்க் கப்பார்க்குங் கூர்விழியாள் - சாற்றரிய*

287. *கைசிவக்கக் காமவேள் கண்சிவக்க வாடவர்த*
*மெய்சிவக்க வாய்சிவக்கு மெல்லிதழாண் - மொய்முனிவர்*

288. *சாபம் பறக்கத் தவம்பறக்க மால்பிறக்கச்*
*சோபம் பெறப்பிறக்குஞ் சொல்லினாள் - கோபமதன்*

289. *போர்வளர நாணோசை போய்வளரப் பேராசை*
*வேர்வளர மேல்வளரும் வெம்முளையா - டேர்மலயக்*

290. *கால்வளைய வேள்சிலைவன் கைவளைய வாடவரை*
*மால்வளையப் போய்வளையும் வாணுசுப்பாண் - மேல்வருமன்*

291. *புள்ளூற வாசைகிடந் தூற்றூற வாயூற*
*வள்ளூ றமுதூறு மல்குலா - துள்ளுவிழி*

292. *சுற்றமனஞ் சுற்றமனந் தூயோர்க்கு மாசைதலை*
*சுற்றவுடை சுற்றுந் துடையினாள் - வெற்றிமதன்*

293. *றேர்நடக்க மூன்றுலகுஞ் செங்கோ னடக்கமிகும்*
*போர்நடக்கத் தானடக்கும் பொன்னடியாள் - சீர்நடக்குந்*

294. *தெண்ணிலா முற்றத்திற் சென்றிருப்ப வோர்விறலி*
*யெண்ணிலா நேயத் தெதிர்நின்று - கண்ணிலான்*

295. *கண்பெற்ற தென்னமதன் கைகுவிக்குந் தெய்வமே*
*மண்பெற்ற செல்வ மடந்தையே - பெண்பெற்ற*

296. *பேறே யெனவாழ்த்தப் பெண்ணரசி கொண்டாடி*
*வீறா ரிசையின் விறலியே - யாறார்*

297. *திருக்கங்கை வார்சடையார் தென்பாண்டி நாட்டி*
*லிருக்குந் தலங்கள்பா டென்னப் - பெருக்கந்*

298. *திகழ்பூ வுலகிற் சிவலோக மென்னப்*
*பகர்கூட லாலவாய் பாடி - மிகமால்*

299. *பிறிக்கு மடியார் பிறவிக் கருவேர்*
*பறிக்கும் **புனவாயில்** பாடிக் - குறிக்குமால்*

300. *சங்கந் திகிரி தணந்துமழு மானெடுக்கு*
*நங்கள்**குற் றால** நகர்பாடித் - தங்கொருபாற்*

301. *பெண்மைத் திருக்கோலப் பெம்மா னினிதுறையு*
*முண்மைத் **திருவாப்ப னூர்**பாடித் - திண்மையற*

302. *வாட்டும் பிறவி வழிமறித்து ஞானவழி*
*காட்டுந் **திருவேட கம்**பாடி - நாட்டின்*

303. *விரவுதிரு வெண்ணீற்றின் மெய்யன்பர் கூட்டம்*
*பரவு**திரு நெல்வேலி** பாடிப் - பரவுமுனை*

304. *சேர்திருவி ராகவன்முன் சேனையுடன் கண்டுதொழச்*
*சார்**திருவி ராமேச் சரம்**பாடி - யேர்தருபொற்*

305. *கொம்பரனா டானையொரு கூறிலங்குங் கோலத்து*
*நம்பரனா **டானை** நகர்பாடி - வம்பர்*

306. *புரங்குன்ற வாணகைசெய் பொன்மலைவிற் செல்வன்*
***பரங்குன்ற** மாநகரம் பாடி - யுரங்கொள்*

307. *விடைக்குஞ் சரமுகைப்பார் வீற்றிருக்கக் காணி*
*படைக்குந் **திருச்சுழியல்** பாடிக் - கிடைக்குமகத்*

308. *தாசையுடைச் சிற்சபையி லையன் றிருச்சிலம்பி*
*னோசை யுடைத்**திருப்புத் தூர்**பாடித் - தேசுநலந்*

309. *தாங்குதிருத் தேர்வீதிச் சைவா கமம்வேத*
*மோங்குதிருக் **கானப்பே ரூர்**பாடி - வாங்குந்*

310. *தனிக்கொடுங் குன்றமதன் றன்னை யெரித்தார்*
*பனிக்**கொடுங் குன்ற**நகர் பாடித் - தொனிக்குமறைப்*

311. *பாவணம் பாடும் பரமன் றிருக்கோயிற்*
***பூவணம்** பாடும் பொழுதிலே - நாவணங்கு*

312. *நாதன் புதல்வர் நவினான் மறைபாடக்*
*கீத விசைகின் னரர்பாடக் - கோதிலாச்*

313. *சூழிசை வீணைகொடு தும்புரு நாரதர்தா*
*மேழிசை ராக வியல்பாட - வாழ்முனிவர்*

314. *பன்னியர் பல்லாண்டு பாடத் தருநாட்டுக்*
*கன்னியர் தேவகா னம்பாட - வின்னிசையாற்*

315. *றெய்வப் புலமைத் திருமு தலிமூவர்*
*சைவச் சுருதித் தமிழ்பாட - வுய்விக்குஞ்*

316. *சேணுலவு தெய்வத் திருநீல கண்டயாழ்ப்*
*பாணர் தமிழ்மாலைப் பண்பாடப் - பூணரக்கன்*

317. *கைநரம்பிற் பாடக் கருணைபுரி வள்ளலார்*
*மெய்நிரம்பு மாமறுகின் மேவுதலுஞ் - சொன்னிரம்பு*

318. *பண்ணா ரிசைவிறலி பாடுந் தலமெல்லாங்*
*கண்ணாரக் கண்ட களிகொண்டாள் - பெண்ணா*

319. ரமுதமெதிர் சென்றுசெம்பொ னாலத்தி காட்டிக்
குமுத மலர்மலர்வு கொண்டாள் - விமலரே

320. யென்றா ளுமக்கபய மென்றாள்கண் ணீர்ததும்ப
நின்றாணின் றாடனக்கு நீராளுங் - குன்றாளு

321. மின்னிறத்த கொன்றையந்தா ரீந்தனரோ வென்றயிர்க்கப்
பொன்னிறத்தை யீந்தரனார் போயினார் - பின்னொருத்தன்

322. போடுங் கணைநுழைந்த புண்வழியிற் றென்றலூ
டாடுந் துயருழந்தா ளாங்கொருத்தி - சேடன்

323. **அரிவை**
பகைகொண்டு பண்டு விரித்த படம்போ
லகல்கின்ற வல்கு லரிவை - யுகிர்கொண்டு

324. முன்னொருகோ பத்தான் முடியரிந்த சங்கரற்குப்
பின்னொரு கோபம் பெயர்த்துவரி - னன்னவரை

325. யேவர் தடுப்பரென வெண்ணி யயன்பயந்து
தேவர் பெருமான் றிருவுள்ள - மாவதற்கா

326. மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை யுருக்கிப் புடமிட்டுப் - பின்னையொன்றாய்க்

327. கூட்டிப் பிடித்துக் குழைத்துமதி நுட்பமெலாங்
காட்டித் தனித்திருந்து கைவருந்தப் - பூட்டியமு

328. தூறு பருவத் தொருபெண் ணுருவாக்கிக்
கூறு மழகைக் குடியேற்றி - வீறு

329. நலமுற்ற பெண்க ணலத்திற் றெரிந்து
திலமத் தனையெடுத்துச் செய்த - நிலைபெற்ற

330. பிள்ளைக் குதலைமொழிப் பெண்ணழகு மிவ்வழகுக்
கெள்ளத் தனையு மிலையென்ன - வுள்ளத்திற்

331. கங்கை வெதும்பமலைக் கன்னி கலங்கமற்ற
நங்கையர் சங்கையிலா நாணெய்தத் - திங்களணி

332. முக்கணனார் மேனி முழுவதுங் கண்வேண்டு
மிக்கன் னியைப் பார்க்க வென்றுரைக்க - வக்கணமே

333. வண்ண மலர்வேளும் வாகை தரிக்கவெங்கள்
கண்ணுதன்முன் விட்டனைய காட்சியா - ளெண்ணிறந்த

334. பாங்கியர் நிற்கவுயிர்ப் பாங்கி யுடனேறி
யோங்கிய செய்குன்றி னுள்ளிருத்தி - யாங்கவட்குத்

335. தென்னார் செழுங்களபச் சேறணிந்தா டானணிந்த
பொன்னா பரணமெலாம் பூட்டினாண் - மின்னாடன்

336. பொற்பூர் சரீரத்தைப் புல்லி யகமகிழ்ந்தாள்
கற்பூர தாம்பூலங் கைக்கொடுத்தாள் - பிற்பாடென்

337. னூனா ருயிர்நீயென் னுள்ளக் கருத்தெல்லா
மானே யறியாயோ மற்றென்ன - யானறியப்

338. போமோசொ லுன்கருத்தைப் **பூவணங் கோயில்**கொண்டார்
தாமே யறியத் தகுமென்ன - வாமே

339. யவரறிவ துன்னைக்கொண் டல்லவோ வென்றாட்
கெவரறிவுந் தாமறியு மீச - னவிர்சடையான்

340. *பின்னழகுக் கொப்புரையாப் பேரம் பலவாணன்*
*றன்னழகுக் காருமொவ்வாத் தாணுவீங் - குன்னழகு*

341. *பார்க்கவே நாளைப் பவனிவரு மென்பளவிற்*
*கார்க்குழல்கேட் டுள்ளங் களிப்பெய்தித் - தீர்த்தன்மே*

342. *லாசை யினும்விரிவா வல்குல்பூ ரிப்பமுலை*
*வீசிய விண்ணை வெளியடைப்ப - மாசகலுங்*

343. *கன்னி புளகமுறுங் காலையின் மாலைபெற*
*மன்னிய காமம் வளர்ந்தேற - வந்நேர*

344. *மாலைவரக் கண்டாண் மயங்கி மறலிநிறஞ்*
*சால முழுச்சிவப்போ தானென்றாள் - காலரவம்*

345. *போலவரக் கண்டு பொதியின் மலைப்புலியை*
*வாலுருவி விட்டான் மதனென்றாள் - பாலருவி*

346. *விட்டதுபோல் வெண்ணிலவு வீசுவதை வெண்ணெருப்பாச்*
*சுட்டநெருப் பேதென்று சொல்லினாண் - முட்டக்*

347. *குயில்வாய் விடமிருப்பக் கூற்றுதைத்தா ரென்னே*
*யியல்வேலை நஞ்சுண்ட தென்றாள் - செயன்மாரன்*

348. *றாழை மலரணியாத் தன்பகைவன் மேலெய்யா*
*தேழையெனை யெய்யுமதி யென்னென்றாள் - சூழ*

349. *வுருகு மினத்தோ டுயிர்த்துயிர்த்து நெஞ்சஞ்*
*சருகுபட வாடித் தளர்ந்து - முருகிதழித்*

350. *தாமக் கடவுடிரு வஞ்செழுத்தே தான்புணையா*
*யாமக் கடனீந்தி யேறினாள் - சோமக்*

351. *கடவுட் சடாமவுலி காலைவரு மென்றென்*
*றடர்பொற் பணிதிருத்தி யாடை - யிடையிறுக்கி*

352. *மின்னனையா ளில்கடந்து வீதிவந்தா ளவ்வளவிற்*
*பொன்னனை யாண்மனைக்குப் போயினோன் - றன்னனைய*

353. *நற்றேர் வரக்கண்டா ணாளைவரு மென்றுரைத்த*
*குற்றேவற் பாங்கியைமுன் கும்பிட்டாள் - பிற்றேவர்*

354. *தேவனைக்கும் பிட்டா டிருத்தோ ணலங்கண்டாள்*
*காவிமைக்க ணாற்பருகிக் காமுற்றாண் - மேவுசெக்கர்*

355. *மாலைத் துயரொழிய வஞ்சி வலக்கண்ணாங்*
*காலைக் கதிர்கண்டு கைதொழுதா - ளாலித்துப்*

356. *பையவருந் தென்றற் பகைதீர வெம்பெருமான்*
*செய்யதிரு வாபரணஞ் சேவித்தாண் - மையற்*

357. *கரணாம் புயத்தானை யம்புலிப்போர் நீங்கச்*
*சரணாம் புயத்தலரிற் றாழ்ந்தாண் - முரணார்*

358. *வரிக்குயிலுக் கஞ்சுதொழின் மாற்றப்பெருமான்*
*றிருக்கரத்தைக் கண்டுதரி சித்தாள் - கருப்புவிற்கை*

359. *பூணு மதனடத்தும் போர்தவிரப் புட்பவன*
*வாண னுதற் கண்கண்டு வாழத்தினாள் - பாண்மிழற்றும்*

360. *வண்டார் குழனெருநல் வந்தபகைக் குப்பகைதான்*
*தண்டா வரனுருவிற் றான்கண்டாள் - கண்டோமென்*

361. *றானந்த மூழ்கி யறிவுவரு முன்றிருத்தேர்*
*தானந்த வீதியொரீஇச் சார்ந்ததான் - ஞானந்தான்*

362. **தெரிவை**
*தேற்றமிகப் பேரின்பந் தேடுமவ ராசைக்கு*
*மாற்றமருந் தென்ன வருந்தெரிவை - சாற்றயன்மால்*

363. *கற்பத் திருணிலவோ காய்பகலோ வென்னமிகப்*
*பொற்புற் றிருள்பழுத்த பூங்குழலாள் - கற்பத்துச்*

364. *சீலக் கடல்குளமோ சிற்றோடை யோவெனநீ*
*ணீலப் பெரிய நெடுங்கண்ணாள் - கோலமுந்நீர்க்*

365. *கண்ணற் பவளங் கறுப்போ விளர்ப்போவென்*
*றெண்ணச் சிவந்த விதழினாள் - விண்ணமுதங்*

366. *காறி யுமிழ்புளிப்போ கைப்போவென் றிந்திரன்வா*
*யூறிவரத் தித்திக்கு மொண்சொல்லாள் - வீறியபொன்*

367. *மேருச் சிறுபந்தோ மென்கழங்கோ வென்னமிகப்*
*பாரித் தெழுந்த பயோதரத்தாள் - சீரித்து*

368. *வாய்ந்த விழையுரலோ வன்றூண மோவெனப்போய்த்*
*தேய்ந்து சிறுத்தொழியுஞ் சிற்றிடையா - ளாய்ந்தவைய*

369. *மெல்லாமோர் கையளவோ வில்லையோ வென்னவிண்மேற்*
*செல்லா மணிநிதம்பத் தேரினாள் - வில்லேறும்*

370. *பஞ்சி பரலோ படுநெருஞ்சி யோவெனவுள்*
*ளஞ்சி முகஞ் சேக்கு மடியினாள் - விஞ்சுபுகழ்*

371. *சேர்க்குந்தென் பூவைத் திசைபோல யாவரையும்*
*பார்க்குந்தோ றும்மயக்கும் பண்பினாள் - கூர்க்கு*

372. *மரிவைப் பருவத் தருட்**பூவ ணேசன்***
*கருணைப் பவனிவரக் கண்ட - பரிசினாற்*

373. ***காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி***
***மாலை மலரு மயலினாள்*** [283] *- சாலமணந்*

374. *தைவந்த காவிற் றனித்திருந்தோ ரோவநூல்*
*கைவந் தவனைக் கடிதழைத்து - மெய்வந்த*

375. *பூவண வாணனஞ்சொற் பொன்னனையாட் கன்றிளத்த*
*மாவணக் காதை வகுத்தெழுதி - யோவியத்திற்*

376. *காட்டு கெனநிறைபொன் கைக்கொடுப்ப வோர்படத்திற்*
*றீட்டி யவனவண்முன் சென்றிருந்து - தோட்டலர்மென்*

377. *போதரசு கையாற்செய் பொன்னனையாய் பொன்னனையாண்*
*மாதரசு வாழ்பொன் மனையிதுபார் - கோதை*

378. *புலரியிற் போந்து புனல்வையை கைமேற்*
*பலனுய்க்க மூழ்கும் படிபார் - நலனுய்க்குங்*

379. *கண்மணி பூண்டுமனங் காமுறுவெண் ணீறணிந்து*
*பெண்மணியன் னாளிருக்கும் பெற்றிபா - ருண்மைத்*

380. *தபத்தியானப் பெண்ணரசு தாழ்விலெழுத் தஞ்சுஞ்*
*செபத்தியானஞ் செய்யுஞ் செயல்பார் - சுபத்தியானஞ்*

381. *செய்து சிவனைத் திருவர்ச் சனைமுடித்துக்*
*கைகுவித்து மாதிருக்குங் காட்சிபார் - பெய்வளையா*

382. *ளாயத் தொடும்பூவை யங்கணனைச் சேவிக்கக்*
*கோயிற் புகுந்துநின்ற கொள்கைபா - ரேயத்*

383. *திருத்தஞ்சி லோதி திருமுன்பு* ***சுத்த***
***நிருத்தஞ்*** *செய் கோல நிலைபார் - நிருத்தம்*

384. *புரிந்தங்கு நின்றரிதிற் போந்து மனைக்குட்*
*பரிந்தங் கிருக்கும் படிபா - ரருந்த*

385. *முருந்து நகைமனைக்குண் மொய்த்தீண்டிச் செல்லுந்*
*திருந்துதிருத் தொண்டர் திரள்பார் - வருந்தங்க*

386. *ணாய னடியாரை நண்ணி யெதிரிறைஞ்சித்*
*தூய வமுதருத்துந் தோற்றம்பார் - மேயசிவன்*

387. *றன்னுருவம் பொன்னுருவ மாகச் சமைக்கவிளங்*
*கன்னி சமைத்த கருவுருப்பா - ரன்னந்*

388. *தொடுத்த கருத்தறிந்து சுந்தரப்பே ரண்ண*
*லெடுத்தசித்த வேடத் தெழில்பார் - வடித்தவயி*

389. *லொத்தவிழி மாளிகைமு னுற்றெருபால் யோகபட்டச்*
*சித்தரிறு மாந்திருக்குஞ் செய்கைபா - ரத்தகைமை*

390. *கண்டெதிர் சென்றுமலர்க் கால்பணிந்தன் பென்னுமயல்*
*கொண்டெதிர் நிற்குமவள் கொள்கைபார் - வண்டுளரு*

391. *நெய்ய குழல்வருந்து நின்கருத்தே தென்றெங்க*
*ளய்யர் முறுவ லரும்புதல்பார் - தையலரி*

392. *காணாத் திருவுருவங் காணுங் கருத்தரவப்*
*பூணார்க் குரைக்கும் புதுமைபார் - நீணாகச்*

393. *சித்த ருரைப்படியத் தேமொழியில் லிற்கரும்பொ*
*னத்தனையு முன்புவைத்த வார்வம்பார் - வைத்ததன்மே*

394. *னீற்றைச் சிதறியையர் நேரிழைநீ யித்தையெரி*
*யேற்றப்* ***பசும்பொன்னா மென்பதுபார்*** *- கோற்றொடியுங்*

395. *கட்டுசடைச் சித்தர் கருதுமுறை யேயெரிபெய்*
*தட்டகரும் பொன்செம்பொ னானதுபார் - வட்டமுலைக்*

396. *கொம்பனாள் பூவணத்தெங் கோமானை யாணிதீர்*
*செம்பொனாற் கண்ட திருவுருப்பார் - விம்பவாய்*

397. *வள்ளிமுத்தங் கொள்ளு மகப்பெற்றோன் மேனியைக் கண்*
*டள்ளிமுத்தங் கொள்ளுமவ ளன்புபார் - வெள்ளிவெற்ப*

398. *னன்புக் கிளகியவ ளங்கை* ***நகரேகை***
*தன்பொற் கபோலந் தரித்ததுபார் - வன்பிற்*

399. *பிடித்த விரதப் பெரும்பேறு பாவைக்*
*கடுத்த விசேட மதுபார் - முடித்தகுழன்*

400. *மாதேயென் றோவநூல் வந்தோன் வகுத்துரைக்கும்*
*போதே விரகம் புறம்பொசியக் - காதார்*

401. *குழையாள் குழைந்தறிவு கொள்ளைபோய் நெஞ்சந்*
*தழையாமை நின்று சருகாம் - பொழுதிற்*

402. *றிளைத்தவுமை யம்மை திருக்கையால் வைத்து*
*வளர்த்த தருநிழலில் வாழ்வோன் - கிளைத்துமனப்*

403. *பத்தி மலரவந்நாட்* ***பானு வழிபட்டோன்***
***னத்தி மலர வருள் செய்தோன்*** *- முத்தி*

404. *மலரமலர் புட்ப வனத்தான் பவங்கள்*
*புலரவருந் தேவி புரத்தான் - குலவு*

405. ***நளச்சக்ர வர்த்திகலி நாசஞ்செய் நாத***
*னிளச்சக்ர வர்த்திபணி யெம்மான் - வளைச்சக்ர*

406. *நீளத்தான் காணாத நீளத்தான் றேவிபுக*
*றாளத்தான் சங்கார தாண்டவத்தான் - கேளொத்தான்*

407. *பூவணத்தெங் கோமான் பொலந்தேர் மறுகணைய*
*வேவணக்கண் மின்கேட் டெதிர்சென்றா - டீவணத்தன்*

408. *றெய்வத் திருமேனிச் செஞ்சோ தியுமுகமுங்*
*கைவைத்த வீரமழுக் காட்சியு - முய்வித்த*

409. *காவித் திருநீல கண்டமுங் கொன்றையந்தார்*
*மேவிப் பரிமளிக்கு மெய்ப்புயமுந் - தாவிப்*

410. *பொழியுங் கருணைப் புனிதநதி பொங்கி*
*வழியுந் திருக்கண் மலரு - மொழியுமறைப்*

411. *பண்மணக்குஞ் சீதப் பவளத் திருவாயும்*
*விண்மணக்குங் கங்கை விரிசடையும் - பெண்மணக்குஞ்*

412. *செம்பாதி யும்போய்த் தெரிசித்தாண் மார்பிருக்கும்*
*வம்பார் முலைத்தழும்பை வாழ்த்தினாண் - மொய்ம்பேறுஞ்*

413. *சீல வளைத்தழும்பின் சீர்புகழ்ந்து பொன்னனையாள்*
*கோல நகக்குறியைக் கும்பிட்டா - ணீலமிடற்*

414. *றெந்தையை நோக்கி யிதழித் திருப்புயத்தால்*
*வந்த விரகநோய் மாற்றுதற்குச் - சொந்த*

415. *மருந்தறியீர்* ***வேளூர் வயித்தியரென்*** *றாங்கே*
*யிருந்தபரி சென்னோ வியம்பீர் - திருந்துகையி*

416. *னிற்குந் தொகைவளையை நீர்கொண்டீர் கூடலிலே*
*விற்குந் தொழின்மறந்து விட்டீரோ - நற்கள்*

417. *வழியுமலர்க் கொன்றைதர மாட்டீர்க்கா* ***ரூரின்***
*மொழியும் பெயரென் மொழியீர் - பழியஞ்சு*

418. ***மாட றவிர வறுபத்து மூன்றோ*** *முன்*
*கூட னகராடல் கூறுவீ - ரோடுகண்ணீ*

419. *ரூற்றை மறிக்க வுபாயமறி யீர்**வையை***
*யாற்றை மறிக்க வறிவீரோ - சாற்றீரென்*

420. *றன்னமுரைத் தாளரனா ராகத்* ***தழகியமின்***
*றன்னைநினைத் தஞ்சினார் தார்கொடுக்கப் - பின்னைமதன்*

421. *காவி யொழிந்த கணைகிடக்குந் தூணியெனப்*
*பாவைகிடந் தாணடந்தான் பைந்தாரான் - பூவை*

422. *யுரிய வுடற்குயிருண் டென்ன வுயிர்த்து*
*நிரைவளையார்க் கையத்தை நீத்தா - டெரிவைக்*

423. **பேரிளம் பெண்**
*கடுத்த பருவ மலர்வே ளிரதி*
*யெடுத்தனைய ளாம்பே ரிளம்பெண் - டொடுத்தமத*

424. *னீலவம் பொன் றொழிய நின்றநா லம்புசெயுஞ்*
*சீலமுங்கண் டெவ்வெவர்க்குஞ் செப்புவாள் - சால*

425. *வினைநீடு மன்மதவேள் வேதாந்த சாரத்*
*தனுபோக முற்று மறிந்தா - டனிமூவர்*

426. *கானத் திருமுறையைக் கைவிடாள் பண்ணோடும்*
*பானற் பெருவிழியாள் பாடுவா - ளானையுரித்*

427. *தாரைச் சயிக்கவிரண் டானை தலைகீழாப்*
*பாரப் பெருந்தவஞ்செய் பான்மைபோல் - வாரெேன்*

428. *முகபடா நீக்கி முனிந்தா டவர்மேல்*
*லிகலிக் கிரிவீ ழிபம்போல் - லகமகிழ*

429. *வுந்தி மடுவென் றுரைக்கு மதுபார்க்க*
*வந்த துணைச்***சக்ர வாளம்***போல் - முந்தத்*

430. ***திருப்பனந் தாளிலிங்கந்*** [284]*திண்கலைச்சிக் காக*
*விருப்பினுடன் சாய்ந்த விதம்போற் - பருப்பதம்போ*

431. *லின்னம் பருக்கி லிடைதாங்குந் தாங்காதென்*
*றுன்னி யதுபார்க்க வுற்றதுபோற் - றன்னைவிழை*

432. *மாந்தருக்கு மோக மகோததியைக் கையணைத்து*
*நீந்தக் கவிழ்த்தகுட நீர்மைபோ - னேர்ந்திட்*

433. *டெதிர்த்துவரு வாரையெல்லா மியாஞ்சயித்தோ மென்ன*
*மதித்தலுத்துச் சாய்ந்த வகைபோற் - கதித்திடத்திண்*

434. *கோல்பிடித்த செங்கைக் குடை போற் றலைகீழா*
*மால்பிடிக்க நின்ற மணிவரைபோற் - சால்பகல*

435. *மட்டுண் டடங்காது வம்பிற் றலையிட்டு*
*முட்டுண்டு பின்குனியு மூர்க்கர்போற் - கிட்டும்*

436. *வளநீல ரோம மணிக்கயிறு பூட்டி*
*யிளநீ ரிறக்கு மியல்போல் - லிளைஞோரா*

437. *லாடி விசைபோய்ந் தயர்ந்துவீழ்* ***பம்பரம்****போற்*
*கோடி முகங்கவிழ்ந்த கொங்கையா - ணீடுலகிற்*

438. *றிக்க விசயஞ் செலுத்தி மதனாவம்*
*புக்க விசிகம் புரைகண்ணாண் - மிக்குலக*

439. *நாடுந் திருமா னடனத்தி னாற்றுகைப்புண்*
*டாடும் படம்போலு மல்குலாள் - கூடிய*

440. *மேல்வீசு நள்ளிருளின் மேனிதெரி யாதுநிலாக்*
*கால்வீசும் போதுதெரி காருடல்போ - னான்மாடச்*

441. *செய்யநகர் வேந்தாற் சிறையிற்சின் னாள்கிடந்து*
*மெய்யிளைத்து மீண்டுவரு மேகம்போற்- சைய*

442. *மடந்தை மணவாளன் வாழ்***சேது***க் கைதை*
*குடைந்துவரு வண்டின் குழாம்போன் - மிடைந்துமலர்*

443. *மாலைமரு வாததினான் மாமலர் பூத்துதிர்ந்த*
*சோலையது போலுஞ் சுரிகுழலாள் - சாலமைக்கு*

444. *மேவு மகத்தொழிய வெண்டரள மேலிலையென்*
*றாவலுறத் தோட்கணியா வாரத்தாள் - பூவணத்தெம்*

445. *புத்தமுத வாரியின்மேற் பொன்னனையாள் வைத்தபரி*
*வத்தனையும் வைக்கு மளவினாண் - மெத்தநிலை*

446. *யோங்கு மணிமாடத் துள்ளோ ரரியணையிற்*
*பூங்கவரி கால்வீசப் போயிருந்து - பாங்குறையு*

447. *முற்பருவப் பெண்கட்கு மோகநூ லவ்வவர்தஞ்*
*சொற்பருவங் கண்டுகண்டு சொல்லுங்காற்- பொற்பிற்*

448. *சிலர் கேட்கப் பாடஞ் சிலர்கேட்க வர்த்தஞ்*
*சிலர்கேட்கச் சங்கை தெளிவித் - துலகேழின்*

449. *மன்மதனூல் கைவந்தோர் மற்றிலையென் றாசிரியத்*
*தன்மை செலுத்துந் தறுவாயிற் - றொன்மை*

450. *யவனசை யாம லணுவசையா தென்னும்*
*புவனப் பழமொழிக்குப் புத்தே - ளுவமை*

451. *தெரிக்குந்தெய் வங்கள் சிகாமணி தோன்றி*
*மரிக்குந்தெய் வங்கண் மணாளன் - பரிக்கு*

452. *மயனுக்கு மிந்தரற்கு மங்கேழ் முளரி*
*நயனற்குந் தேவர்க்கு நாயன் - பயனொக்கும்*

453. *வையைநதித் தீரன் மணிகர் ணிகைத்தீர்த்தன்*
*சைவநிறை புட்பவனத் தம்பிரான் - றெய்வமறை*

454. *யார்ப்பவனி யெங்கு மதிரக் கறங்குதிருத்*
*தேர்ப்பவனி வீதிவரல் செப்பினார் - போர்ப்பவனி*

455. *சென்றிளைஞ ராவி செகுத்துண்ணுங் கண்ணார்க்கு*
*மன்றவுரை செய்நூன் மறந்தெழுந்தாள் - முன்றில்*

456. *கடந்தா டிருவீதிகண்டாடேர் முன்னே*
*நடந்தாள் சிவனை நயந்தாள் - டடந்தேரை*

457. *யோடாமை வேண்டி யொருகோடி தண்டனிட்டா*
*ணீடா தரங்கூர நேர்நின்றாள் - வீடாத*

458. *நாமக் கயிலைமலை நாதா புராதனா*
*காமப் பகையையடர் கண்ணாளா - வாமக்*

459. *கவுரி திருக்கணவா கங்கைமண வாளா*
*பவன கவனவிடைப் பாகா வுவமையில்பொற்*

460. *கச்சேற்ற கொம்மைமுலைக் கன்னியரை வீதியிலே*
*பிச்சேற்ற வந்த பெருமானே - மைச்சேற்கட்*

461. *பாவணங் கோசைபயில்* ***பாண்டிப் பழம்பதியாம்***
***பூவணங் கோயில்கொண்ட புண்ணியா*** *- மேவநினைந்*

462. *தானாத மாலை யடுத்துமட லேந்தினேன்*
*றேனார்வா யூறநின்று தேங்கினே - னானாத*

463. *வண்டு விழக்கண்ணீர் மல்கினேன் பொன்பூத்தேன்*
*விண்டலர் தூற்ற வெளிநின்றேன் - மண்டி*

464. *வருமார்வத் துற்றேன் மலர்க்கொன்றை யானேன்*
*றிருமார்வத் துற்றணையச் செய்து - னருடாரா*

465. *யென்றாளை நோக்கி யிடர்நோக்கிச் சம்பரனை*
*வென்றானை யீசன் விலக்கினா - னின்றாளப்*

466. *பேதை முதலாகப் பேரிளம்பெ ணீறாக*
*மாதர் பலர்மயங்க மாதேவன் - சோதிப்*

467. *படர்வார் சடையெம் பரம்பர னென்று*
*மடைவார் வினைதீர்க்கு மம்மா - னடியார்*

468. *குழாமறாச் சந்நிதியெங் கோமா னதிரு*
*குழாவறாக் கோயின் முதல்வன் - விழாவறாத்*

469. *தேருடையா னெங்க* ***டிருப்பூ வணக்காசி***
*யூருடையான் போந்தா னுலா.*

## திருப்பூவணநாதருலா முற்றிற்று

**திருச்சிற்றம்பலம்**

### அழகிய நாயகர் துதி

*தன்னனையார் தந்தையார் தமராரென் றறியாமற் றனித்த வுன்னைப்*
*பொன்னனையார் வயிற்கருவிற் புகுந்ததனான் முத்தமிட்டுப் புதல்வன்போல*
*மின்னையா ரிடம்பிரியா மணவாள னெனப்புரிந்த விதத்தா லன்றோ*
*வென்னனையார் களுந்தரிசித் தேத்தினா பூ வணத்துறைந்தா யெளிதிற் றானே*

### சிறப்புப் பாயிரம்

*திருவால வாயரெலாம் வலசித்த ரீரதவா தஞ்செய் தற்கா*
*வருவாரை வணங்கவவர் மணிமுறுவல் சிறிதரும்பி மலர்க்கணோக்கக்*
*கருவாகிப் பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோர் கந்த சாமி*
*பெருவாய்மைப் பூவையுலாப் பாடியதெம் போலியர்கள் பிழைக்கத் தானே*

(இந்த இரண்டும் பழைய செய்யுட்கள்)[285]

**திருப்பூவணத் தலத்தின் பெருமை**

1856 வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

1857 பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டின்
இரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வையை
மருங்கின னந்தன மலர்ந்தபன் மலர்கடுய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்

1858 எண்ணி லங்குறை சராசர மிலிங்மென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்

**பொன்னனையாளின் தன்மை**

1859 கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயில்
றளியு ளார்தவப் பேறனா டாதுகு பூந்தார்
அளியு ளார்குழ லணங்கனா ளந்தரத் தவர்க்குங்
களியு ளார்தர மயக்குறூஉங் கடலமு தனையாள்

1860 நரம்பி னேழிசை யாழிசைப் பாடலு நடநூல்
நிரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவும்
அரம்பை மாதரை யொத்தன ளறனெறி யொழுகும்
வரம்பி னாலவர் தமக்குமே லாயினாண் மன்னோ

1861 ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவடன்
நேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடாத்தி

1862 திருத்தர் பூவண வாணவரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்

1863 மாத ரிந்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூத லத்திடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத னாயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினார் பூவணத் தையர்

1864 ஐயர் தந்தபே ரன்புரு வாயினாண் மழுமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினாற் கண்டு
மைய கண்ணினாள் வைகலும் வருபொரு ளெல்லாம்
பொய்யிலன்புகொண் டன்பர்தம் பூசையி னேர்வாள்

1865 அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று மடியிலச் செழியற்
கொடிவில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னாளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்

**சிவபெருமான் சித்தர் வடிவம் கொண்டு வருதல்**

1866 தூய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார்

1867 வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி

அந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
துந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார்

1868 அமுது செய்தருந் தவரெல்லா மகலவே றிருந்த
அமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
அமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்கள்
அமுத னாளையிங் கழைமினென் றருளலு மனையார்

1869 முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்கண்
அத்த ரானவர் தமரெலா மமுசெய் தகன்றார்
சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினராய்
இத்த ராதலத் தரியரா யிருக்கின்றா ரென்றார்

**சித்தமூர்த்தி பொன்னனையாளை மெலிந்த காரணம் யாதெனல்**

1870 நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினாள் சுவாகதங் கிலாவன்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள்

1871 எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னாச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பநின் றஞ்சலி முகிழ்ப்ப
அத்தர் நோக்கினா ரருட்கணா லருள்வலைப் பட்டாள்

1872 ஐய உள்ளெழுந் தருளுக வடிகணீர் ரடியேன்
உய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னோக்கியை நோக்கிமீ னோக்கிதன் மணாளன்

1873 வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவிளைத் தனையெனக் கொன்றை
முடியி னானடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்ந்
தடிய னேற்குவே றாயொரு மெலிவிலை யையா

1874 எங்க ணாயகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்கு
கிங்கு நாடொறு மென்கையில் வரும்பொரு ளெல்லாம்
உங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்றாள்

**சித்த மூர்த்திகள் சிவனடியார் பெருமை கூறல்**

1875 அருந்து நல்லமு தனையவ ளன்புதித் திக்கத்
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்குள்
இருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய்

1876 அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய்

1877 உறுதி யெய்தினை யிருமையு முன்பெயர்க் கேற்ப
இறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீயம்
அறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்

1878 ஈயஞ் செம்பிரும் பிரசிதங் மென்பவும் புணர்ப்பாற்
றோயம் பித்தளை வெண்கலந் தராமுதற் றொடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லென வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்

**சித்தமூர்த்திகள் இரசவாதம் புரிதல்**

1879 வைத்த வேறுவே றுலோகமு மழுவுழை கரந்த

சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் பாவித்
தித்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னாம்
அத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார்

1880 மங்கை பாகரை மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றாள்
அங்க யற்கணா டனைப்பிரி யாரதற் கிசையார்

1881 சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினார் மறைந்தபின் சித்தராய் வந்தார்
அறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றாடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென்று அறிந்தாள்

**பொன்னனையாள் உலோகங்களைத் தீயிலிட்டுப் பொன்னாதல்**

1882 மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தில்
நிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினா ரென்னச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்தர்
அறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும்

1883 அழல டைந்தபி னிருண்மல வலிதிரிந் தரன்றாள்
நிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்

**(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)**

1884 மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ
அழகிய பிரானோ வென்னா வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பிரானை யானாப் பரிவினாற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்

1885 நையநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்

**இரசவாதம் செய்த படலம் முற்றிற்று.**

---

## 49.திருவாலவாய்க் காண்டம்

**(வங்கிய சேகர மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டுதல்)**

**சித்தரை மன்னன் பணிந்து வேண்டுதல்**

2338 கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னிந்நிலப்
பொறையது வாற்றுவேற்கு ஈண்டிப் போதொரு
குறையதுண் டாயினது என்று கூறுவான்

2339 இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்
அத்தமற் றதனையின் றறியக் காட்டென்றான்

2340 நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானநின் றெழுந்து மீனவன்
திண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய அருட்கடல் ஆகிப் போதுவார்

**சித்தர் வடிவில் சிவபெருமான் அருள் செய்தல்**

2341 பாம்பி னாற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னாற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னாற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னாற்கர கங்கணம் பரிந்தனர் வந்தார்

2342 வந்த யோகர்மா மண்டப மருங்குநின் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்துகாட்டு என்றார்
அந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும்

2343 பெருமவிந்நகர் அடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலும்
அருண யந்துநேர்ந்து அனையதே யாகெனப் பணித்தான்
உருகெ ழுஞ்சின வுரகமும் ஒல்லெனச் செல்லா

**பாம்பு எல்லையைக் காட்டுதல்**

2344 கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற்கு எல்லை
காட்டி மீண்டரன் கங்கண் மானது கரத்தில்

**மதில் அமைத்தல்**

2345 சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினார் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படிசுவர் எடுத்துச்
சுத்தநேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சுசூ ழிஞ்சி

2346 தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை இடபக்
குன்ற முங்குடக்கு ஏடக நகரமுங் **குணபாற்**
**பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும்**
என்ற நாற்பெரு வாயில்கட்கு எல்லையா வகுத்தான்

2347 அனைய நீண்மதில் ஆலவாய் மதிலென அறைவர்
நனைய வார்பொழில் நகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதெப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினான் பண்டுபோற் கண்டான்

2348 கொடிகள் நீண்மதின் மண்டபங் கோபுரம் வீதி
கடிகொள் பூம்பொழில் இன்னவும் புதியவாக் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான்

2349 பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலா நிரப்பிச்
செல்வ வானவர் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லல் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வருதோன்றல்

**திருவாலவாயான படலம் முற்றிற்று.**

---

வேசமுற விருந்த கழு திரைமுடிந்த வடமின்றும்
பூசுரர்கள் பணிந்தேத்தும் பூவணநன்னகர் மருங்கிற்
காசின் மேல் விளங்கியது கழுவர் படைவீடெனவே
– செல்லிநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி,
– திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்,
– கழுவேறிய திருவிளையாடல் – பா.50

---

## குடமுழுக்கு விழா

1932ம் ஆண்டு இக்கோயிலின் திருப்பணிகள் துவங்கி கும்பாபிஷேகம் நடத்தப்பெற்றுள்ளது. அதன் பின்னர் அரசு மான்யம், பொதுமக்களின் நன்கொடை, கோயில் நிதி இவைகளின் உதவியால் சீரமைக்கப்பட்டு, தேவகோட்டை உ.மு. குடும்பத்தாரால் 1961ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28ம் நாளன்று மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

தற்போது இக்கோயில் ரூபாய் 50இலட்சத்திற்கும் அதிகமான பொருட்செலவில் திருப்பணிகள் நிறைவுற்று 2002ம் ஆண்டு சூன்மாதம் 27ம் நாளன்று அட்டபந்தன மகா கும்பாபிசேகம் சிறப்பாக நடைபெற்றது.

## திருப்பணிகள்

திருக்கண் தேவர் என்பவர் அழகிய நாயகருக்கு முன் மண்டபமும், சபாபதி மண்டபமும் கட்டியவர். பூவணலிங்கம் பிள்ளை என்பவர் கொடிக்கம்பத்தையும் அதன் அருகிலுள்ள மண்டபத்தையும் பொன்னொளி வீசுமாறு அமைத்தவர். மற்றும் அம்பிகை கோயிலின் முதற் பிரகாரத் திருமதிலும் மண்டபமும் கட்டுவித்தார். ஈசுவர மூர்த்தியா பிள்ளை என்பவர் மணிகர்ணிகை தீர்த்தக் குளத்தை மக்கள் சுற்றி வருவதற்கேற்ப நடைபாதை (ஆள்வாரி – ஆளோடி), படிக்கட்டு முதலியன அமைத்தவர்.[286]

திருப்பூவணம் சங்கரலிங்கம் அவர்களது மகன் வழக்கறிஞர் சண்முகநாதன் அவர்கள் சிறிய தேருக்குப் பாதுகாப்புச் செய்யும் திருப்பணிக்கு ரூ.10,000–முன்பணமாக அன்பளிப்பு வழங்கியுள்ளார். திருப்பூவணம் இரங்கநாதன் அவர்கள் மகன் சங்கரன் அவர்கள் சிறிய தேரைப் பாதுகாக்கத் தகரம் உபயமாக வழங்கியுள்ளார்.

கோயம்புத்தூர் தொழில் அதிபரும், கற்பகா பொறியியற் கல்லூரியின் தாளாளருமான திருமிகு.இரா. வசந்தகுமார்,B.E. அவர்கள், திருக்கோயிலின் மேல்தளத்தில் தட்டோடு பதிக்கும் திருப்பணியை 2002ம் ஆண்டு பெரும் பொருட்செலவில் உபயமாகச் செய்து கொடுத்துள்ளார்.

## நகரத்தார் திருப்பணிகள்

***"இத்தலத்தில் உள்ள சிவாலயம், தேவகோட்டை உ.ராம.உ.மு.வால் ரூபாய் நான்கு லட்சத்து ஐம்பதாயிரம் (4,50,000) செலவில் திருப்பணி செய்யப் பெற்றது. வரகாரி தை 23ம் நாள் (4-2-1900) கும்பாபிடேகம் செய்யப்பெற்றது.***



***குறிப்பு - ரூபாய் ஐந்தாயிரம்(5,000) செலவில் பூங்குடி கூ.கண.கண்ணப்ப செட்டியரால் வேதபாடசாலையும், ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் நகரத்தார்களால் வேதாந்த மடமும், ரூபாய் ஐயாயிரம் (5,000) செலவில் உ.ராம.உ.மு.வால் பலமடமும், ரூபாய் ஏழாயிரம் (7,000) செலவில் வ.ராம.கு.மு.வால் திருநந்தவன வனமும் ரூபாய் இருபதினாயிரம் (20,000) செலவில் உ.வீர.சோம.வால் இருதேர்களும் அமைக்கப்பெற்றுள்ளன"***[287].



திருப்பூவணத்தில். தேவகோட்டை உத்தமன் செட்டியாரின் புதல்வர்களான உ.ராம., உ.மு., உ.வீர., குடும்பத்தினர் திருப்பணிகள் செய்துள்ளனர்,[288] இவர்கள் திருக்கோயிலின் பிரகாரங்களை அமைத்துள்ளனர். தேர் செய்து கொடுத்துள்ளனர். திருப்பூவணப் புராணத்தை புத்தகமாகப் பதிப்பிக்க உதவியுள்ளனர்.தேவகோட்டை உத்தமன் செட்டியார் வகையறாவினர் இத்திருக்கோயிலுக்குச் சிறப்பான முறையில் திருப்பணிகள் அதிகம் செய்துள்ளனர். மிகப் பெரிய மரத்தினாலான இரண்டு திருத்தேர்களை உபயமாக வழங்கியுள்ளனர். 1896–ம் ஆண்டு திருப்பூவணத் தலபுராணத்தைப் புத்தகமாக அச்சிட நிதியுதவி அளித்துள்ளனர். 1932 மற்றும் 1961ம் ஆண்டுகளில் குடமுழுக்கு விழாவைச் சிறப்புடன் நடத்தியுள்ளனர்.

கொடிமரம் உள்ள மண்டபத்தில் பெரியநந்திக்கு அருகே நான்காவது தூணில் சந்நிதியை நோக்கியபடி முத்துக்கருப்ப செட்டியார், அவரது மனைவி வசந்தாஆச்சி சதாசேவை புடைப்புச் சிற்பம் உள்ளது. ஐந்தாவது தூணில் சேனா செட்டியார், சிவகாமிஆச்சி சதாசேவை புடைப்புச் சிற்பம் உள்ளது.

நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த திரு. ச.ராம. சங்கர நாராயணன் செட்டியார் (இருப்பு–திருச்சிராப் பள்ளி) அவரது தம்பி இராம. சுப்பையா செட்டியார் (இருப்பு–மதுரை) மற்றும் SD.கண்ணப்பன் செட்டியார் (இருப்பு–மதுரை) ஆகியோரால் ஆடித்தபசு விழா நடத்தப் பெறுகிறது.

திருக்கோயில் கௌரவக் கண்காணிப்பாளராக உள்ள திரு. நெற்குப்பை ந.பழ.சோம.பழ. அழகப்பன் (இருப்பு–மதுரை) அவர்கள் ரூ.1,20,000–செலவில் பெரியதேருக்குப் பாதுகாப்புத் தகரம் அடைக்கும் திருப்பணியை 2007ம் ஆண்டு, ஆகஸ்ட் மாதம் உபயமாகச் செய்து கொடுத்துள்ளார்.




படம் - 1

திருப்பூவணநாதர் கோயில்

ஈசானிய திசையை நோக்கி இருப்பதைக் காட்டும் படம்

| படம் - 2 |
|---|
| |
| பலா மரம் (கலியுகத்தில் உள்ள தலவிருட்சம்) |



## படம் –3
## தில்லையை நோக்கித் திருப்பூவணக் கோயில் அமைந்திருப்பதைக் காட்டும் வரைபடம்




1. திருப்பூவண நாதர்
2. இராசகோபுரம்
3. மொட்டைக் கோபுரம்
4. வைகையாற்றின்குறுக்கே புதையுண்டுகிடக்கும் இலிங்கங்கள்
5. ஆடித்தபசு மண்டபம்
6. சிதம்பரம்(தில்லை) கோயில்

படம் - 4



**பிரமதேவன் ஆணைப்படி தேவகம்மியனால் கட்டப்பெற்ற ஐந்து தங்கக் கலசங்களைக் கொண்ட கருவறை விமானம்**



**படம் – 6**

மாத்தியந்தின முனிவரும், தியானகாட்ட முனிவரும் (சிங்க சித்தர் மற்றும் குரங்கு சித்தர்) திருப்பூவணத்தில் தவம் செய்யும் காட்சி – அம்மன் சந்நிதியின் தீர்த்தத்தொட்டி அருகே உள்ள தூணில் புடைப்புச் சிற்பம் உள்ளது.

**குரங்கு சித்தர், பன்றி சித்தர், சிங்க சித்தர்** ஆகியோர் திருப்பூவணத்தில் தவம் இயற்றிய காட்சி – பெரிய நந்திக்கு அருகே உள்ள தூணில் புடைப்புப் சிற்பம் உள்ளது,

படம் - 7

**பாரிசாத மரத்தின் அடியில் சிவலிங்கம் முளைப்பதைக் காட்டும் சிற்பம்**



படம் – 8



பூதேவி ஸ்ரீதேவி உடனாய அழகிய மணவாள இரங்கநாதப் பெருமாள்

# படம் – 9



முதுகு சாய்ந்த இடபம்

# படம் – 10 (அ)
# திருப்பூவணத் திருக்கோயிலின் வெளியமைப்பு (இன்றைய நிலை)




1 வீதி
2 முருகன் கோயில்
3 பிள்ளையார் கோயில்
4 பெருமாள் கோயில்
5 அடைக்கப்பட்டுவிட்ட தெற்கு வாயில்
6 மணிகன்னிகா தீர்த்தம்
7 அம்மன் சந்நிதி நுழைவாயில்
8 வீதி
9 இராச கோபுரம்
10 மொட்டைக் கோபுரம்

# படம் – 10 (ஆ)
# திருக்கோயிலின் உள்ளமைப்பு




திருக்கோயில் கிழக்கு மேற்காக 400அடியும் வடக்கு தெற்காக 327 அடியும் உள்ளது.

1 மூல லிங்கம் (சுயம்பு)
2 நடராசர் சந்நிதி
3 நவக்கிரகங்கள்
4 நடராசர் சந்நிதி (தற்போது பொருள்வைப்பு அறை)
5 பாஸ்கர தீர்த்தம்
6 பாஸ்கர விநாயகர்
7 பெரிய நந்தி
8 பலிபீடம்
9 கொடிமரம்
10 யானை மண்டபம் இருந்த இடம்
11 இராச கோபுரம்
12 மொட்டைக் கோபுரம்
13 அடைக்கப்பட்டுவிட்ட மேற்கு நுழைவாயில்
14 விஷ்ணு தீர்த்தம்
15 திருக்கலியாண மண்டபம்
16 சௌந்தரநாயகி அம்மன்
17 பள்ளியறை
18 நந்தி
19 கொடிமரம்
20 அடைக்கப்பட்டுவிட்ட தெற்கு நுழைவாயில்
(வடக்கு நுழைவாயிலும் அடைக்கப்பட்டுள்ளது)
21 சந்திர தீர்த்தம்
22 மடப்பள்ளி
23 அம்மன் கோபுர நுழை வாயில்
24 மணிகன்னிகை தீர்த்தம்
25 அம்மன் கோயில் வாயில்

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

சௌந்தரநாயகி மற்றும் பூவணநாதர் திருக்கோயில்கள் (முன்பு இருந்த நிலை)




**படம் - 11**

**புராண காலத்தில் மதுரைக் கோயில் அமைப்பைப் போன்றே திருப்பூவணநாதர் கோயிலும் மின்னம்மை கோயிலும் அமைந்து இருந்ததைக் காட்டும் படம்.**

1. மீனாட்சி அம்மன் சந்நிதி
2. சோமசுந்தரேசுவரர் சந்நிதி
3. பொற்றாமரைக் குளம்
4. சுவாமி கோயில் கிழக்குக் கோபுரம்
5. அம்மன் சந்நிதி கிழக்குக் கோபுரம்

1. முன்பு சௌந்தரநாயகி அம்மன் சந்நிதி (தற்போதைய முருகன் கோயில்)
2. திருப்பூவணநாதர் சந்நிதி
3. இராச கோபுரம்
4. மணிகன்னிகாத் தீர்த்தம் (தற்போது மூடப்பட்டுள்ளது)
5. திருமலைநாயக்கர் காலத்தில் கட்டப்பெற்று முடிக்கப்படாமல் உள்ள மொட்டைக் கோபுரம்

**படம் -12**




**முருகன் கோயில், பெருமாள் கோயில்,**
**மணிகன்னிகைத் தீர்த்தம்**
**இவற்றைக் காட்டும் படம்**

படம் - 13



**திருப்பூவணம் தேர்த்திருவிழா**

**தேரோடும் வீதி மற்றும் தேர்நிறுத்தம்**
**இவற்றைக்காட்டும் படம்**



## களப்பணிகள்

திருப்பூவணப் புராண ஆய்விற்காகப் பாண்டியநாட்டுத் திருத்தலங்கள் பலவற்றிற்கும் மற்றும் பிற தலங்களுக்கும் நேரில் சென்று ஆய்வு செய்யப்பட்டது. அவற்றிலும் குறிப்பாகப் பாண்டிப் பதினான்கு என்றழைக்கப்படும் பாடல் பெற்ற திருத்தலங்களுள் திருச்சுழி நீங்கலாக மற்றைய திருத்தலங்கள் அனைத்திற்கும் நேரில் சென்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

## விரிவாக்கப் பணிகள் (Field Work – Extension Activities)

திருப்பூவணப் புராண ஆய்வின் தொடர்நடவடிக்கையாக 1)ஆடித்தபசு மண்டபத் திருப்பணி 2) ஆற்றின் நடுவே யிருந்த ஆலயத்தை மீண்டும் கட்டும் பணி மற்றும் 3) அன்னதானம் நித்திய அறக்கட்டளை ஏற்படுத்துதல் ஆகியன செயல்படுத்தப் பட்டுள்ளன.

1) **ஆடித்தபசு மண்டப புனர்நிர்மாணப்பணி**

*"குழந்தைவெண்மதிச்சடைக்குழகனுக்குமுன்*
***பழிந்திடுமாலயந்தனையுண்டாக்குநர்க்***
*கெழுந்தவன்புடன்புதியற்றுமன்னதின்*
*வழங்கிடுமதிகநான்மடங்குபுண்ணியம்" (பாடல் 1263)*

எனப் பாடப் பெற்றுள்ளது. எனவே திருப்பூவணநாதருக்கு முன்பு அழிந்திடும் ஆலயம் எது என ஆய்வாளரால் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அப்போது திருக்கோயிலுக்கு எதிரே ஆற்றின் மறுகரையில் 1)ஆடித்தபசு மண்டபம் சிதிலமடைந்த நிலையில் உள்ளதும், 2) ஆற்றின் நடுவே ஒருசிறிய கோயில் ஒன்று இருந்து அழிந்துள்ளதும் ஆய்வாளரால் கண்டறிப்பட்டன.

## படம் - 14

(1) **ஆடித்தபசு மண்டம்** அம்மன் ஆடிமாதம் தவம் செய்த இடம். திருஞானசம்பந்தர் நின்று பதிகம் பாடிய இடம். ஆற்று மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்த இடம். இந்த இடம் திருக்கோயிலுக்கு நேர் எதிரே ஆற்றின் வடகரையில் மடப்புரம் செல்லும் வழியில் இருப்பதைக் காட்டும் படம்.

(2) **ஆற்றின் நடுவே ஆலயம்** ஒன்று அழிந்துகிடப்பதைக் காட்டும் படம்






**படம் - 15 ஆடித்தபசு மண்டபம் சிதிலமடைந்த நிலையில்**



**படம் - 16 ஆடித்தபசு மண்டபம்**
**புனர்நிர்மாணம் செய்யப்பெற்று வருகிறது.**

ஆடித்தபசு மண்டபம் உள்ள இடத்தில் பூர்வகாலத்தில் அம்மன் ஆடிமாதம் தவம் இயற்றியுள்ளாள். இந்த இடத்திற்குத் திருஞானசம்பந்தர் வந்து வணங்கித் "தென்திருப்பூவணமே" என முடியும் பதிகம் பாடித் திருப்பூவணநாதரை வணங்கியுள்ளார். இங்கே முன்னோர்கள் மண்டபம் ஒன்றைக் கட்டி, ஆடிமாதம் அம்மனை எழுந்தருளச் செய்து 'ஆடித்தபசு' விழாவை நடத்திவந்துள்ளனர். அந்த மண்டபம் சிதலமடைந்ததால் இவ்விழா இவ்விடத்தில் நடைபெறுவது நின்றுவிட்டது.

எனவே, ஆய்வாளரின் முயற்சியால், தேவகோட்டை பேராசிரியர் இராம. திண்ணப்பன், பேராசிரியர் இரெ.சந்திரமோகன், திருப்பூவணம் வழக்கறிஞர் ச.சண்முகநாதன் மற்றும் பல அருளாளர்களின் உதவியுடன் ஆடித்தபசு மண்டபம் புனர்நிர்மாணிக்கப் பெற்று பணிகள் முடிவடைந்து குடமுழுக்கு விழா நடைபெறும் நிலையில் உள்ளது.

**2) ஆற்றின் நடுவே அழிந்த நிலையில் ஓர் ஆலயம்**



ஆடித்தபசு மண்டபத்திற்கும், திருக்கோயிலுக்கும் இடையே ஆற்றின் நடுவே அழிந்து கிடக்கும் கற்கோயில். (ஆடித்தபசு மண்டபத்தில் உள்ள ஆலமரம் பின்னால் தெரிகிறது)



சிதைபாடுகளுக்கு இடையே கோமுகம் ஒன்று கிடக்கிறது. இதனால் இங்கு கோயில் ஒன்று இருந்துள்ளது என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

**படம் - 17**

**ஆற்றின் நடுவே ஆலயம் ஒன்று அழிந்து கிடைப்பதைக் காட்டும் படம்**



(3) **அன்னதானம்** - களப்பணியின் போது, பொன்னனையாள் நடத்தி வந்த அன்னதானமானது திருமலைநாயக்கர் காலத்திற்குப் பின்னர் சிறிது சிறிதாகக் குன்றி பின்னர் நின்றுவிட்ட செய்தி ஆய்வாளரால் அறியப்பெற்று, ***மானாமதுரை அருள்மிகு அருள்மிகு பிரித்தியங்கிரா தேவி திருக்கோயில் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமிகளின்*** திருமுன் அவர்களது அருளாசி வேண்டி எடுத்துக்கூறப்பட்டது.

**அருள்மிகு மகா பஞ்சமுக ப்ரித்யங்கிரா தேவி கோயில், வேததர்ம ஷேத்ர டிரஸ்ட் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமி அவர்கள்**



**படம் - 18**

**திருப்பூவணம் திருக்கோயிலில் 17-4-2008, 6-5-2009 ஆகிய நாட்களில் அன்னதானம் நடைபெற்றுள்ளது.**

மதுரை சொக்கநாதர் நேரில் தோன்றி இரசவாதம் செய்தருளிய சிறப்புப் பெற்ற அன்னதானத்தைத் திருப்பூவணம் திருக்கோயிலில் மீண்டும் நடத்திட வேண்டும் என சுவாமிகள் திருவுள்ளம் கொண்டு, அதற்கான முயற்சிகளை மேற்கொண்டார்கள். சுவாமிகளது முயற்சியால், வழக்கறிஞர் ச.சண்முகநாதன் தலைமையில், சுவாமிகளின் மெய்யன்பர்களும், தெய்வீகப் பேரவையினரும், பொதுமக்களும், ஆய்வாளரும் இணைந்து கடந்த 17-4-2008 அன்று அன்னதான விழா திருக்கோயிலில் மீண்டும் சிறப்பாக நடத்தியுள்ளனர்.

அன்னதானத்தைத் தினந்தோறும் செய்யும் நோக்கத்துடனும், ஆற்றின் நடுவே அழிந்துவிட்ட ஆலயத்தை மீண்டும் கட்டும் நோக்குடனும், மானாமதுரை வேதியாரேந்தல் விலக்கு ஸ்ரீபஞ்சமுக பிரத்தியங்கிரா தேவி திருக்கோயில் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகரசுவாமிகளைத் தலைமை அறங்காவலராகவும், பேராசிரியர் இராம.திண்ணப்பன் அவர்களைத் தலைவராகவும் மற்றும் வழக்கறிஞர் ச.சண்முகநாதன் அவர்களைச் செயலாளராகவும் கொண்டு, "திருப்பூவணம் பொன்னனையாள் அன்னதான அறக்கட்டளை" என்ற பெயரில் பேராசிரியர் இரெ. சந்திரமோகன் மற்றும் ஆய்வாளரின் முயற்சியால் அறக்கட்டளை ஒன்று நிறுவப் பெற்றுள்ளது.

சான்றெண் விளக்கம்

[282] இந்நூலை இயற்றிய கந்தசாமிப் புலவர் கி.பி. 1620 ஆம் ஆண்டு வாழ்ந்தவர். அப்போது 'முத்து வீரப்ப நாயக்கர்' என்பவர் மதுரையை ஆண்டு வந்தார். அவரை 'முத்துவடுகன்' என்று இப்பாடலில் புலவர் குறிப்பிடப்பிட்டிருக்க வேண்டும் என க் கருதப்படுகிறது.

[283] திருக்குறள்

[284] 'திண்கலைச்சிக்கற்கா' என்றும் பாடம்.(உ.வே.சா. குறிப்பு)

[285] இது உ.வே.சா அவர்களின் குறிப்பு

[286] திருத்தலங்கள் வரலாறு – பகுதி 1, பதிப்பாசிரியர் – வித்துவான் சு.பாலசாரநாதன், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை – 600 090

[287] பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் 6-10-1952, நகரத்தார் வரலாறு (பாண்டி நாட்டிற் செய்த அறங்கள்) பக்கம் 248, 249

[288] டாக்டர் நா.வள்ளி, நகரத்தாரின் அறப்பணிகள், பக்கம் 261